# பிரிட்டன் வரலாறு

1815—1939



ராபர்ட் எம். ரேனர்








அண்ட் கம்பனி, லிமிடெட்

# பிரிட்டன் வரலாறு

## (1815—1939)

ராபர்ட் எம். ரேனர்

தமிழில் மொழிபெயர்த்தவர்:
சென்னைப் பச்சையப்பன் கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர்
ம. சண்முகசுந்தரம், எம்.ஏ., எல்.டி.



லாங்மன்ஸ்,க்ரீன் அண்ட் கம்பனி, லிமிடெட்
**36-A,** மௌண்ட் ரோட், மதராஸ்
**1946**



## EXTRACT FROM THE PREFACE TO THE ENGLISH EDITION.

* * * * *

The most distinctive feature of the book is the Notes which have been appended to each "Period." They are based on those used by the author in his own classes for many years, with pupils of varying attainments. Every practical teacher knows that some topics are best dealt with by reading matter, others by oral teaching based on such notes. They are not for the most part mere summaries of the narrative, but are complementary to it.

No history text-book can cover all the ground that a teacher would like to cover; but a boy or girl who has mastered the facts and ideas which are here presented in a comparatively small compass should be able to tackle any History paper with confidence. The mechanical part of the task having been thus focused, the teacher will have the more time to develop his own views and methods.

Typical questions have been added to each "Period."

* * * * *

# மொழிபெயர்ப்புக் குறிப்பு

முதனூலாசிரியரது நடையின் திட்ப நுட்பங்களும் தனியழகுகளுங் கூடியவரையில் மொழிபெயர்ப்பிலும் துலங்கும் வண்ணம் முயன்றுள்ளேன். அம் முயற்சி எவ்வளவில் நல்ல பயனை யளித்துள்ள தென்பதை இதைப் படிப்பவர்களே தீர்மானித்துக்கொள்ளவேண்டும். எனினும், முதனூலின் சிறப்பியல்புகளாகிய பிரிவுகளும் அவற்றின் பாகுபாடுகளும் குறிப்புக்களும்மட்டும் இம் மொழிபெயர்ப்பில் எவ்வகையிலுஞ் சிதைவுறாமல் அமைந் திருக்கின்றன.

இதில் வழங்கப்பெற்றுள்ள சரித்திர பரிபாஷை, பெரும்பான்மையும் தம்மைத் தாமே விளக்கிநிற்குந் தன்மையவாய எளிய தொடர்மொழிகளில் அமைந் திருப்பதால், சரித்திர பாடங்களைத் தமிழில் கற்பிக்கும் பொறுப்பினை ஏற்றுள்ள சரித்திராசிரியர்களின் அங்கீகா ரத்தையும் ஆசியையும் பெறுமென்று நம்புகிறேன்.

பச்சையப்பன் கல்லூரி,
சென்னை.

ம. சண்முகசுந்தரம்

# பொருளடக்கம்

## ஒன்பதாம் பகுதி : 1815 - 1867

## பிரிட்டன் ஒரு பெரிய ஆக்கத்தொழில் நாடாகிறது

## பத்தாம் பகுதி : 1867 - 1914

## குடியாட்சியும் பேரரசும்

அத்தியாயம் | பக்கம்

## பின்னுரை: 1914 - 1934

### பெரும் போரும் அதன் பிறகும்

# ஒன்பதாம் பகுதி

## பிரிட்டன் ஒரு பெரிய ஆக்கத்தொழில் நாடாகிறது[1]

## (1815—1867)

இப்பகுதியில், அதுவரை பார்லமெண்டில் செல்வாக்கு பெற்றிருந்த நிலம்படைத்த வகுப்பினர் தங்கள் செல்வாக்கை ஆக்கத்தொழிற் புரட்சியால்[2] செழுமையுற்ற வகுப்பினர்களோடு பங்கிட்டுக்கொள்ளவேண்டியவ ராயினர். தானியச் சட்ட நீக்கத்துடன்[3] முடிந்த முதல் பெரிய சீர்திருத்த இயக்கம் நிலம்படைத்தவர்கள்மீது ஆக்கத்தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் பெற்ற வெற்றியைக் காட்டுகிறது. அதைத் தொடர்ந்து, ஆக்கத்தொழிலிலும் வாணிபத்திலும் கப்பல் போக்குவரத்திலும் பிரிட்டன் மிகுந்த வளமுற்று, அத்துறைகளில் உலக முன்னணியில் இடம் பெறலாயது. அதே சமயத்தில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் சுய ஆட்சிக்கான அடிப்படைகளும் நிறுவப்பெற்றன. இரண்டாம் சீர்திருத்தச் சட்டம்[4] இயற்றப்பட்டதோடு இப்பகுதி முடிவடைகிறது. அதன் பலனுகப் பட்டணங்களிலுள்ள தொழிலாளர் வகுப்பினர் ஓட்டுரிமை பெற்றதனுல் குடியாட்சித்[5] துறையில் ஒரு முக்கிய முன்னேற்றம் ஏற்பட்டது.

---

1. A great industrial Power. 2. The Industrial Revolution. 3. The repeal of the Corn Laws. 4. Second Reform Bill. 5. Democracy.

அறுபத்தொன்றும் அத்தியாயம்

# கஷ்ட காலம்

## (1815—1822)

**§267.** வளமற்ற அமைதி ;—ப்ரான்ஸுடன் மூண்ட பெரும்போர் இருமுறை சிறிது காலம் விட்டு விட்டு 1793-லிருந்து 1815-வரை நடந்தது. அக்காலத்தில், வெளிநாட்டு வியாபாரத்தின் சீர்குலைவாலும், பொருள்களின் விலையேற்றத்தாலும், குறைந்த கூலிகளாலும், வேலையில்லாச் சங்கடத்தாலும், நாட்டினர் மிக்க அல்லற்பட்டனர். போர் முடிந்ததும் நல்ல காலம் பிறக்குமென்று எதிர்பார்த்து அதிலும் ஏமாறினர். போர்களால் விளையும் தீமைகள் அவை முடிந்தும் நீடித்திருக்கும் என்னும் உண்மையை நாம் இப்போது அனுபவத்தில் கண்டறிந்துள்ளோம். போரை நடத்த அபரிமிதமான பணவிரயம் ஏற்படுவதால் நாடு தாங்கமுடியாத கடன் சுமையைப் பெருக்கிக்கொள்ளவேண்டி யிருக்கிறது. அதைத் தீர்க்க எவ்வளவோ கால மாகும். அதோடு போர்ச் சமயத்தில் சீர்குலையும் வெளிநாட்டு வியாபாரம் மீண்டும் சீர்பட எத்தனையோ ஆண்டுக ளாகும்.

ஆகவே, 1815-ல் போர்நிறுத்தம் ஏற்பட்டதன் பிறகும் நாட்டு மக்கள் பெரிதும் துன்புற்றனர். போர்க்காலத்தில் துரைத்தனத்துக்கு ஏராளமான உணவுப்பொருள்களும் ஆடைகளும் போர்த்தளவாடங்களும் தேவையாக இருந்ததால், அப்போது ஆக்கத்தொழிற் புரட்சிக்கு ஒரு பெரிய தூண்டுத லேற்பட்டிருந்தது (§252-3). போர் நின்றதும் துரைத்தனத்தார் அப்பொருள்களை நாடவில்லை;

தங்களிடம் எஞ்சியிருந்தவைகளை விற்கவும் தலைப்பட்டனர். போரினால் ஏழ்மை யடைந்த யூரோப்பிய நாடுகள் பிரிட்டிஷ் ஆக்கப்பொருள்களை வாங்கச் சக்தியற்றவைகளாயின. அதனால் வெளிநாட்டு வியாபாரமும் மீண்டும் தலையெடுக்காமல் தாழ்வுற்றது. போர்க்காலத்தில் பிரிட்டனே கடலாதிக்கம்[1] பெற்றிருந்ததால், அப்போது பிரிட்டிஷ் வியாபாரிகள் உலகெங்கும் தங்கள் பண்டங்களை அனுப்பி விலையாக்கிக்கொண்டிருந்தனர்; போர் நின்றதும் அவ்வனுகூலமும் குறைந்துவிட்டது. மேலும், படைகள் கலைக்கப்பட்டதால் ஆயிரக்கணக்கான பழைய போர்வீரர்களும் மாலுமிகளும் தொழிலாளர்களோடு போட்டியிட்டுக் கூலிகளை மிகக் குறைந்த அளவுகளுக்குக் கொண்டுவந்துவிட்டனர்; அதனால் எங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் பரவலாயிற்று (கு. 189).

§ 268. பார்லமென்ட் தொல்லைகளை அதிகமாக்குகிறது:—இவை தடுக்க முடியாத தொல்லைகள்; போரில் இறங்கும் எந்த நாடும் இவற்றை அனுபவித்துத் தீரவேண்டும். ஆயினும், பார்லமென்ட் சில மூடத்தனமான சட்டங்களை இயற்றித் தொழிலாளர்களின் இன்னல்களை மேலும் பெருக்கினர். போர் நடந்துகொண்டிருந்தபோது வெளிநாடுகளிலிருந்து தானியம் தருவிக்கமுடியவில்லையாதலால், புதிய நிலங்களைச் சாகுபடியின்கீழ்க் கொண்டுவருமாறு உழவர்கள் தூண்டப்பெற்றனர். அதற்காக அவர்களுள் பலர் தேவையான முதலைக் கடனாக வாங்கியிருந்தனர். போர் முடிந்ததும் வெளிநாட்டுத் தானியத்தின் போட்டித் திரும்பிவந்துவிட்டதால் அவர்களுக்குப் பெருநஷ்டம் ஏற்படும்போலிருந்தது. பார்லமென்டில் உயர் குடிப்பிறப்பினராகிய நிலம்படைத்தவரின் செல்வாக்கு

1. Command of the sea.

இன்னும் அதிகமாகவே இருந்தது. உழவர்கள் கொடுக்கும் குத்தகைப் பணமே அவர்கள் வருமானத்தின் பெரும் பகுதி. ஆகவே, பார்லமெண்ட் தானியச் சட்ட[1] மொன்றை அவசரமாக இயற்றியது (1815). அதன்படி, தானியத்தின் விலை தூக்காகவே இருப்பதற்காக இறக்குமதியாகும் தானியத்தின்மீது வரி சுமத்தப்பட்டது. தானியமே ஏழை மக்களின் முக்கிய உணவாகையால் அது மலிவாகக் கிடைக்காததால் அவர்கள் நிலை மிகவும் கஷ்டமாய்விட்டது.

மற்ருேர் அறிவற்ற செயலையும் பார்லமெண்ட் செய்தது. 1798-ல் பிட்[2] வருமான வரியை[3] ஏற்படுத்திய போது (§ 246) அது போர் நடக்கும் காலம் வரையில் தான் இருக்குமென்று உறுதிகூறியிருந்தார். நேர்முகமான எல்லா வரிகளையும்[4] போல் அது பெரும்பாலும் பணக்காரர்களையே பாதித்தது. ஆயினும், அவர்கள் பார்லமெண்டில் செல்வாக்கு பெற்றவர்களா யிருந்ததால், பிட்டின் உறுதிமொழிப்படியே போர் முடிந்ததும் வருமான வரியை ரத்துசெய்துவிடவேண்டு மென்று வற்புறுத்தினர். இதன் விளைவாகத் துரைத்தனச் செலவுகளுக்கு வேண்டிய பணத்தை (போர்க்கடன்களுக்கு வட்டி கொடுக்கவேண்டியிருந்ததால் அச் செலவுகள் இன்னும் அதிகமாகவே இருந்தன) மறைமுகமான வரிகளை[5] (முக்கியமாக, இறக்குமதிப் பொருள்கள்மீது விதிக்கப்பட்டுள்ள சுங்கங்களை[6]) அதிகப்படுத்திச் சம்பாதிக்கவேண்டியதாயிற்று. இதனால் எல்லா வகுப்பினர்க்கும் குடும்பச்செலவுகள் அதிகமாயின; முக்கியமாக, ஏழைமக்களே இவற்ருல் பெரிதும் இடர்ப்பட்டனர்.

§ **269.** அடிப்படையான மாறுதல்களை விரும்பியவர்கள்[7] :—சிலர் துரைத்தனமே இதற்கெல்லாம் காரண

---

1. Corn Law. 2. Pitt. 3. Income tax. 4. Direct taxes. 5. Indirect taxes. 6. 'Duties'. 7. The Radicals.

மென்று பழித்தனர் ; பார்லமென்டில் தொழிலாளர் வகுப்பினர்க்குச் செல்வாக்கு ஏற்படுமானல் இதற்குப் பரிகாரம் தேடத் துரைத்தனம் வற்புறுத்தப்பெறும் என்று நினைத்தனர். நாட்டுமக்களில் பெரும்பான்மையோருக்கு ஓட்டுரிமை இல்லாத நிலையில் அவர்கள் தேவைகளையும் உரிமைகளையும் பார்லமென்ட் கவனிப்பது அரிது. ஆகவே, அடிப்படையான மாறுதல்களை விரும்பிய இந்தக் கிளர்ச்சிக்காரர்கள்[1] (இவர்கள் 'ராடிகல்ஸ்' எனப்பட்டனர்) உயர்குடி மக்களுக்குமட்டுமன்றிப் பொதுவில் நாட்டுமக்கள் அனைவருக்குமே பார்லமென்டில் உண்மைப் பிரதிநிதித்துவம் ஏற்படும்படியான சீர்திருத்தமொன்றைக் கோரினர். இவர்களுள் முக்கியமானவர்கள் 'பெரும்பேச்சாளர்' ஹன்டும்[2] வில்லியம் காபெட்டும்[3] ஆவர். ஹன்ட் மாபெருங் கூட்டங்களைக் கூட்டிக் கேட்பவர்களுக்கு ஆவேசமும் ஆத்திரமும் உண்டாகும்படி பேசினர் ; காபெட் 'போலிடிகல் ரேஜிஸ்டர்'[4] என்னும் வாரப்பத்திரிகை யொன்றை நடத்தி அதில் துரைத்தனத்தைக் கண்டித்துக்கொண்டுவந்தார்.

ஆளும் வகுப்பினர் இதையெல்லாம் கண்டு திகிலடைந்தனர் : ஜாக்கொபின் முறைகளைப்[5]பற்றிய பீதி அவர்கள் மனத்தை விட்டு இன்னும் அகலவில்லை. சீர்திருத்தக் கூக்குரலுக்குச் சிறிது இடங்கொடுத்தாலும் நிலைத்துள்ள அரசாங்க முறைமை முற்றிலும் கவிழ்ந்துவிடுமென்று அவர்கள் பயந்தார்கள். ஆகவே, அடிப்படைச் சீர்திருத்தக் கிளர்ச்சிக்காரர்களை அடக்கிவிடவேண்டுமென்று தீர்மானித்து, ஹன்டைச் சிறையிலிட்டுக் காபெட்டைச் சிறிதுகாலம் நாடுகடத்தி வைத்தனர். இது ஒரு நோயைக் குணப்படுத்த அதன் அறிகுறிகளை மறைக்க முயல்வதைப்போன்றிருந்தது. இந்த அடக்குமுறையின்[6]

1. Radical agitators. 2. 'Orator' Hunt. 3. William Cobbett.
4. *Political Register.* 5. Jacobinism. 6. Repression.

விளைவாகவே பீட்டர்லூ படுகோலை[1] என்னும் துக்ககரமான சம்பவம் நிகழ்ந்தது. 'பெரும்பேச்சாளர்' ஹன்ட் பார்லமென்ட் சீர்திருத்தத்தைப்பற்றி மான்செஸ்டர் நகரத்தைச் சேர்ந்த சென்ட் பீட்டர் மைதானத்தில்[2] ஒரு மாபெருங் கூட்டத்தில் பேசப்போகிறார் என்று விளம்பரம் செய்யப்பட்டதால், சுற்றுப்பக்கங்களிலிருந்து ஆயிரக்கணக்கான மக்கள் அங்கு வந்து குழுமினர். அவர்கள் நிராயுதபாணிகளாகவே வந்தனர். அவர்களுள் பெண் மக்களும் பலர் இருந்தனர். அவ்வளவு பெரிய கூட்டத்தைக் கண்டு கலவரங்கொண்ட நகர அமைதித் தலைவர்கள்[3] ஹன்டைக் கைதுசெய்ய ஒரு சிறிய குதிரைப்படையை அனுப்பினர். வந்த குதிரைவீரர்கள் கூட்டத்தினுள் புக முடியாமல் தவித்ததால் நகர அமைதித் தலைவர்கள் மேலும் சில குதிரைவீரர்களைக் கூட்டத்தின்மீது பாய்ந்து அதைக் கலைக்க அனுப்பினர். உடனே பயத்தினால் கூட்டத்தில் குழப்பமேற்பட்டது. வந்த போர்வீரர்கள் கூட்டத்தின்மீது பாய்ந்து அதை நாலா பக்கமும் சிதறவடித்தனர். அதனால் பலர் இறந்து மேலும் பலர் அடிபட்டனர். மிகவும் வருந்தத்தக்க இந்த நிகழ்ச்சியைத் துரைத்தனத்தார் ஒரு 'கலக'மெனக் கருதி அதைக் காலதாமதமின்றி அடக்கிய சாமர்த்தியத்துக்காக அந்த நகர அமைதித் தலைவர்களைப் பாராட்டினர். உடனே பார்லமென்ட் ஆறு சட்டங்களை[4] இயற்றியது. அவற்றால் நாட்டுமக்கள் சில முக்கியமான சுதந்தரங்களை இழக்கவேண்டியவர்களாயினர் (கு. 190).

**§ 270. காசில்ரேயும்[5] வெளிநாட்டு விவகாரங்களும்:**—அப்போது தலைமையமைச்சராக இருந்த லிவர்ப்

1. Peterloo Massacre. 2. St. Peter's Fields, Manchester. 3. Magistrates. 4. The Six Acts. 5. Castlereagh.

லிவர்பூல் பிரபு[1] அமைச்சர் குழுவினைக்[2] கலையாமல் வைத்திருப்பதைவிட வேறு யாதொரு இராஜீய திறமையு மில்லாதவர். அவரது நீண்ட அமைச்சின்[3] முதல் பத்து ஆண்டுகளில்—அது 1812 முதல் 1827 வரை நீண்டிருந்தது—அமைச்சர் குழுவில் மிகுந்த செல்வாக்கு படைத்திருந்தவர் காசில்ரே பிரபுவே (1769-1822). 1814-15-ம் ஆண்டில் சமாதான ஏற்பாடு செய்துவைத்த வியென்னா காங்கிரஸில் அவர் பிரிட்டனின் பிரதிநிதியா யிருந்தவர். 1822-ம் ஆண்டில் அவர் இறக்கும்வரை வெளிநாட்டு விவகாரங்களைக் கவனிக்கும் அமைச்சராகவே[4] இருந்தார். சமாதானம் ஏற்பட்டதும் முதன்மையான யூரோப்பிய அரசர்கள் தமக்குப் பொதுவான விவகாரங்களைப்பற்றி அப்போதைக்கப் போது கூடிப் பேசுவதற்காக ஒரு நிலையான "தெய்விகக் கூட்டுறவு"[5] ஏற்படுத்திக்கொள்ள உடன்பட்டனர். புகழ் பெற்ற ஆஸ்ட்ரியா நாட்டு அமைச்சரான மெட்டர்னிக்[6] அடிக்கடி கூடப்போகும் இந்த 'காங்கிரஸ்க'ளில் யூரோப்பின் பல பாகங்களிலும் தோன்றிய 'புரட்சி இயக்கங்க'ளை[7] அடக்கக் கூட்டுஏற்பாடுகள் செய்யச் சூழ்ச்சி புரிந்தார். காசில்ரேயும் அமைச்சர் குழுவின் மற்ற அங்கத்தினர்களைப்போல் ஒரு டோரியே[8]; ஜாக்கொபின் கொள்கைகளுக்கு எதிரியே[9]. ஆயினும், வெளிநாடுகளில் நியாய வரம்புக்குட்பட்ட துரைத்தனங்களை[10] அமைக்க அம்மக்கள் செய்யும் முயற்சிகளை அடக்கப் பிரிட்டிஷ் சேனைகளையும் கப்பல் படையையும் பயன்படுத்த நினைக்கும் எந்த அமைச்சினையும் பார்லமென்ட் எப்போதும் ஆதரிக்காது என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். ஆகவே, அவர்

---

1. Prime Minister, Lord Liverpool. 2. The Cabinet. 3. Ministry.
4. Foreign Secretary. 5. Holy Alliance. 6. Metternich.
7. Revolutionary movements. 8. A Tory. 9. Anti-Jacobin.
10. Constitutional government.

எக்ஸ் லா ஷாப்பெல் காங்கிரஸில்[1] (1818) அத்தகைய செயல்களில் பிரிட்டன் கலந்துகொள்ள முடியாதென்று கூறிவிட்டார். ட்ரோப்பாவ் காங்கிரஸில்[2] (1820), வல்லரசுகள்[3] நேப்பில் அரசருக்கு ஒரு கலகத்தினை அடக்க உதவிபுரியவேண்டுமென்று தீர்மானித்தபோது, பிரிட்டிஷ் பிரதிநிதி அத்தீர்மானத்தைக் கண்டித்துவிட்டு விலகிக் கொண்டார். இதனால் தெய்விகக் கூட்டுறவின் பலம் ஒடுங்கி அது கலையலாயது.

§ 271. பிற்போக்கினர் காலம் முடிகிறது :—கஷ்ட காலமும் தானியச் சட்டமும் கனவரிகளும் ஆறு சட்டங்களும் ஒன்றுசேர்ந்து துரைத்தனத்தை மக்கள் வெறுப்புக்கு ஆளாக்கின. பிரிட்டனை ஆண்ட குழுவினரில் அவர்களைப்போல் வேறு எவரும் அவ்வளவு அதிகமாக வெறுக்கப்படவில்லை என்னும் நிலை அவர்களுக்கு 1820-க்குள் ஏற்பட்டுவிட்டது. போரில் நாட்டுக்கு வெற்றி தேடி வைத்த பெருமைகூட அவர்களுக்கு மறைந்துவிட்டது. அவர்களை அதுவரை ஆதரித்துவந்த மக்கள் 'பீட்டர்லூ போ'ருக்குப்[4] பிறகு தயங்கலாயினர். டோரி அமைச்சர்களால் பெண்களையும் சிறு பிள்ளைகளையும் வாளுக்கு இரையாக்காமல் அமைதியை நிலைநாட்ட முடியாதென்றால், அவர்கள் மற்றவர்களுக்கு இடம் தருதல் மேல் என்று பலர் எண்ணலாயினர்.

'இராணியின் விஷய'மாக[5] அவர்கள் நான்காம் ஜியார்ஜ் மன்னரைத் திருப்திசெய்ய முயன்றமையால் அவர்கள் நிலை மேலும் கலகலத்துவிட்டது. மூளைகெட்டுப் பார்வை இழந்திருந்த தம் தந்தை கிழ வயதில் இறந்ததும் ஜியார்ஜ் 1820-ல் மன்னரானார். தம்மை அணைவரும்

---

1. The Congress of Aix-la-Chapelle. 2. The Congress of Troppau.
3. The Powers. 4. 'The Battle of Peterloo'. 5. The Queen's Affair.

'ஐரோப்பின் முதல் சீமா'னுகக்[1] கருதவேண்டுமென விரும்பிய அவர் உண்மையில் சுயநலத்தையும் சுகபோகங்களையும் விழைந்த ஒரு டாம்பீகக் கிழவரே: அவரிடம் எவருக்கும் அன்போ மரியாதையோ உதிப்பது அரிது. அவர் தமது மனைவியைக் கொடுமையாக நடத்தி நெடுங் காலமாகவே தனித்து வாழ்ந்து வந்தார். மன்னரானதும் அவர் தமது மனைவி சமூக வாழ்க்கையில் அரசிக்குரிய மேதைகளை அடையலாகாதென ஒரு சட்டம் (தண்டனைகளும் அபராதங்களும் விதிக்கும் சட்டம்[2]) இயற்றவேண்டுமென்றார். இவ்விஷயமாக நாட்டில் மிகுந்த அபிப்பிராய பேதந் தோன்றியது. நாட்டு மக்களுள் பெரும்பான்மையோர் அவ்வம்மைக்காகப் பரிந்ததால், லிவர்ப்பூல் பிரபு இவ்விஷயத்தில் பின்வாங்கவேண்டியவ ரானார். சில வாரங்களுள் அவ்வம்மையாரே இறந்துவிட்டதால் இவ் விசித்திர நிலை மாறியது.

திரைத்தனத்துக்கு ஆபத்து வந்துள்ள தென்பதற்கு 1820-ல் வெளிப்படையான அறிகுறியொன்றும் தோன்றியது. அதைக் காட்டோ தெருச் சதி[3] என்பர். சிலர், ஒரு விருந்து நடக்கும்போது அமைச்சர்களையெல்லாம் கொன்றுவிட்டு, லண்டன் அரணையும்[4] இங்லண்ட் பாங்கையும் துரைத்தனக் காரியாலயங்களையும் கைப்பற்றிக் கொண்டு ஒரு குடியரசை யேற்படுத்தச் சூழ்ச்சி செய்தனர். சதிகாரர்களின் திட்டம் போலீஸுக்குத் தெரிந்துவிட்டபடியால், ஏற்பாடுகள் முற்றுவதற்குள் அவர்கள் கைதுசெய்யப்பட்டனர். அவர்களுள் நால்வர் தூக்குத் தண்டனை பெற்றனர். எனினும், பிற்போக்கான டோரி கொள்கைகளில் நாட்டு மக்களுக்குச் சலிப்பும் வெறுப்பும் உண்டாயிருந்தமை வெளிப்படையாயிற்று. மன்னரிடமும்

---

1. 'The first gentleman of Europe'. 2. A Bill of Pains and Penalties.
3. Cato Street Conspiracy. 4. The Tower of London.

அவர்களுக்கு மதிப்பு குறைந்துவிட்டது. அமைச்சு முறிய வேண்டிய காலம் வந்துவிட்டதுபோல் தோன்றியது. பயங்கரமான புரட்சியும் சடுதியில் பின்தொடருமோ எனப் பலர் அஞ்சினர். ஆயினும், டோரி கட்சியினருள்ளும், காலத்தின் இன்னல்களை யுணர்ந்து அவற்றிற்கான பரிகாரங்களையும் அறிந்தவர்கள் பலர் இருந்தனர். லிவர்ப்பூல் பிரபுவின் அமைச்சில் அவர்கள் இப்போது ஆதிக்கம் பெறலாயினர்.

---

அறுபத்திரண்டாம் அத்தியாயம்

## டோரி சீர்திருத்தக்காரர்கள்

## (1822—1827)

§ **272.** அறிவு விளக்கம் பெற்ற டோரிகள் :—1822-ம் ஆண்டு காசில்ரே வாழ்க்கையில் சலிப்புத் தட்டி மனச்சோர்வினால் தற்கொலை புரிந்துகொண்டதும், வெளிநாட்டு விவகாரங்களைக் கவனிக்கத் தக்க திறமையுள்ளவர் ஒருவரைக் கண்டுபிடிக்க லிவர்ப்பூல் பிரபு தவிக்கலானார். பதினைந்து ஆண்டுகளுக்கு முன் வெளிநாட்டு அமைச்சராக இருந்த ஜியார்ஜ் கானிங்[1] (1770—1827) என்பவரே அப்பதவிக்கு மிக்க தகுதி வாய்ந்தவர். ஆயினும், அவர் இராணியின் சார்பாகப் பரிந்து அமைச்சினின்றும் விலகிக்கொண்டாராதலால், நான்காம் ஜியார்ஜ் மன்னர் அவரை வெறுத்தார். இங்லண்டின் இராஜீயத் துறையில் அவர் இனிப் பங்கும் பெயரும் எடுக்க முடியாதுபோல் தோன்றியது. இந்தியா கவர்னர் ஜெனரல் பதவியை அவர் அப்போதுதான் ஏற்றுக்கொண்டிருந்தார்—அதாவது, இங்லண்

1. George Canning.

டின் இராஜீய வாழ்க்கையினின்றும் அவர் மறைந்துவிடத் தீர்மானித்திருந்தார். காஸில்ரேயின் எதிர்பாராத மறைவு கானிங்குக்கு மீண்டும் பெயரெடுக்க ஒரு நல்ல சந்தர்ப்பத்தை அளித்தது. முதலில் அவரை வெளிநாட்டு அமைச்சராக ஏற்றுக்கொள்ள மன்னர் மறுத்துவிட்டார். ஆயினும், அப்படியானல் லிவர்ப்பூல் பிரபுவே தம் தலைமை அமைச்சர் பதவியை ராஜிநாமா செய்துவிடப்போவதாகக் கூறவே அரசர் அரைமனதுடன் இணங்கினர். ஏனென்ருல், லிவர்ப்பூல் அமைச்சு முறிந்தால் விக் கட்சியினர் பதவிக்கு வந்துவிடலாம். நான்காம் ஜியார்ஜ் மன்னருக்கு இது விருப்பமில்லை. அவரும் தம் தந்தையைப்போல் இப்போது ஓர் உரமிக்க டோரியாக மாறிவிட்டார்.

கானிங்குக்கும் காஸில்ரேயிக்கும் எவ்வளவோ வித்தியாசம். காஸில்ரே திமிர்பிடித்த உயர்குடியினர்; தம்மையும் தம் செயல்களையும் மக்கள் விரும்பவேண்டுமே என்று அவர் கோரியதில்லை. கானிங்கோ இராஜீயத் துறையில் தமது குண மேம்பாட்டாலும் சொல்வன்மையாலும் முன்னுக்கு வந்தவர் (கு. 191). அமைச்சர் குழுவின் மற்ற அங்கத்தினர்கள் அவரைத் தம்மினும் தாழ்ந்த சமூக நிலையைச் சார்ந்தவராகவே கருதிவந்தனர். ஆயினும், அறிவில் அவருக்கு அவர்கள் தாழ்ந்தவர்களே.

லிவர்ப்பூல் அமைச்சில் நேர்ந்த வேறு சில மாறுதல்களால் கானிங்கின் நிலை சௌகரியமானதாயிற்று. அதே சமயத்தில் சிட்மத், எல்டன்[1] முதலிய பிற்போக்கான டோரி அமைச்சர்கள் பலரும் விலகிக்கொண்டதால், அவர்கள் பதவிகளைச் சீர்திருத்த மனப்பான்மையுடைய புதிய டோரிகள் ஏற்றுக்கொண்டனர். அவர்கள் நிலம் படைத்ததனாலன்றி, ஆக்கத்தொழிற் புரட்சி காரணமாக நேர்ந்த வாணிப அபிவிருத்தியாலும் ஆக்கத்தொழில்

1. Sidmouth, Eldon.

அபிவிருத்தியாலும் செல்வம் பெருகி முன்னுக்கு வந்தவர்கள். அவர்களுள், ராபர்ட் பீல்(1788-1850) உள்நாட்டு அமைச்சரானார்[1]; எப். ஜெ. ராபின்சன்[2] கருவூலமன்றத்துத் தலைமை நீதிபதி (சான்செலர் ஆப் தி எக்செக்கர்)[3] ஆனார்; வில்லியம் ஹஸ்கிஸன்[4] (1770-1830) வாணிப இலாகாவின்[5] தலைவரானார். பழைய டோரி குழுவினர் 'ஆறு சட்டங்க'ளைப் போன்ற முறைகளைக்கொண்டு நாட்டினர் முறையீடுகளை அடக்க முயலுதலே தங்கள் முக்கிய வேலை என்று கருதியிருந்தனர். புதிய டோரி அமைச்சர்களோ அம் முறையீடுகளின் அடிப்படையான காரணங்களை உணரும் அறிவும் அவற்றை விலக்கக்கூடிய அனுபவ ஆற்றலும் பெற்றிருந்தனர். கானிங் ஒரு பெரிய இராஜீய அறிஞர் என்பதை உணர்ந்து பாராட்டுவதற்கு இடையூறாக அவர்களிடம் யாதொரு சாதித்திமிரும் இல்லை. ஆகவே, அவர்களிடையே அமைச்சர் குழுவில் முன்னர் காஸில்ரே மந்திராலோசனையில் வகித்திருந்த உன்னத நிலையை இப்போது கானிங் வகிக்கலானார்.

§ 273. கானிங் வெளிநாட்டு அமைச்சராகச் சாதித்தவை :—காஸில்ரேயைப் போலவே, வெளிநாட்டு அரசாங்கங்கள் தங்கள் குடிமக்களிடையே தோன்றும் உரிமைக் கிளர்ச்சிகளை அடக்க முற்படும்போது அவைகளுக்கு உதவி செய்யவரும் மற்ற வல்லரசுகளோடு பிரிட்டன் சேருவதில்லை என்னும் கொள்கையைக் கானிங்கும் தொடர்ந்து கடைப்பிடிக்கலானார் (§ 270). பல சந்தர்ப்பங்களில் அவர் அதற்கும் ஒரு படி மேலாகவே சென்று உரிமைகளை நாடும் குடிமக்கள் சார்பாகத் தலையிடவும் தயங்கியதில்லை. உதாரணமாக, போர்ட்யுகல் நாட்டினருள் தாராள மனப்

1. Robert Peel, Home Secretary. 2. F. J. Robinson. 3. Chancellor of the Exchequer. 4. William Huskisson. 5. Board of Trade.

பான்மையினர்'[1] ஏற்படுத்திய துரைத்தனத்தைப் பாது காக்க அவர் ஒரு சேனையை அனுப்பிவைத்தார். தென் அமெரிகாவிலுள்ள ஸ்பெயின் குடியேற்ற நாடுகள் ஜோசெப் போனபார்ட் 'அரச'ரின்[2] (§ 261) அதி காரத்தை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டன. அங்கிலையில் அவை தங்கள் வாணிபத்தின்மீது தாய்நாட்டுத் துரைத் தனம் பழமையாக விதித்துக்கொண்டுவந்திருந்த கட்டுத் திட்டங்களினின்றும் விடுதலையடைந்திருப்பதன் அனு கூலங்களை உணரலாயின. ஆகவே, பழைய பர்டினண்ட்[3] மன்னர் தாம் இழந்த பதவியை 1814-ல் மீண்டும் பெற்ற போது அக் குடியேற்ற நாடுகள் இனித் தாம் சுயேச்சை பெற்ற தனிநாடுகளாக இருக்கப்போவதாகத் தெரிவித்து விட்டன. பர்டினண்ட் மன்னர் அவைகளை அடக்கித் தம்மதிகாரத்தின்கீழ் மீண்டும் கொண்டுவரச் செய்த முயற்சி வீணாயிற்று. மற்ற வல்லரசுகள் அவருக்குத் துணை செய்யப் போவதாகத் தெரிவித்தபோது கானிங் புதிய குடியரசுகளின் சுயேச்சை நிலையைப் பிரிட்டன் அங்கீகரிப் பதாகத் தெரிவித்தார். அவைகளை அடக்க ப்ரெஞ்சு சேனைகளோ ருஷ்ய சேனைகளோ அனுப்பப் பெறுமானால் பிரிட்டிஷ் கப்பற்படை அவற்றை வழிமறித்துத் தாக்கு மென்பதையே அந்த அறிவிப்பு குறிப்பிட்டது (கு. 191). இச் செயலில் அவர் அமெரிகா ஐக்கிய நாட்டுக் குடியரசுத் தலைவரின் ஆதரவையும் பெற்றார். ஐக்கியநாட்டுக் குடி யரசுத் தலைவர் அமெரிகா கண்டங்களின் விவகாரங்களில் யூரோப்பிய வல்லரசுகள் தலையிடுதலுக்கு ஐக்கியநாட்டுத் துரைத்தனம் இனி இடங்கொடுக்காது என்று அறிவித் தார். இதுவே "மன்ரோ கொள்கை"[4] எனப்படும்.

---

1. Liberals. 2. 'King' Joseph Bonaparte. 3. Ferdinand. 4. 'The Monroe Doctrine.'

க்ரேக்கர் சுயேச்சைகிலேப் போரில்[1] கானிங் தலையிட்டது வெளிநாடுகளில் குடிகளின் உரிமைக் கிளர்ச்சிகளுக்கு அவர் புரிந்த உதவிக்கு மற்றொரு முக்கியமான உதாரண மாகும். க்ரேக்க மக்கள் தங்கள்மீது அரசு செலுத்திய துருக்கி சுல்தானின் கொடுங்கோன்மையை எதிர்த்துக் கிளம்பினர். அவர்களுக்குத் தம்மிச்சையாக உதவிபுரியச் சென்ற பல இங்லிஷ் கல்விமான்களுள் பைரன் பிரபு[2] மிகப் புகழ்வாய்ந்தவர். கானிங் இதில் முதலில் தலையிடவில்லை. துருக்கி ஒடுங்கிவிடுமானல் கிழக்கு மத்தியதரைக்கடல் நாடுகளில் ருஷ்யாவே போராதிக்கம் பெற்றுவிடுமென அவர் அஞ்சினர். ஆயினும், சுல்தான் தமது ஈஜிப்ட் படைகளைக்கொண்டு க்ரீக் நாட்டினரை அப்படியே துடைத்துவிட முயன்றபோது, அவர் துருக்கியின் அக்கிரமங்களை அடக்க ருஷ்யாவுடனும் ப்ரான்ஸுடனும் சேர்ந்து ஒரு கப்பற்படையை அனுப்பச் சம்மதித்தார். நவாரினே விரிகுடாவில்[3](1827) நேசநாடுகளின் கப்பல்கள் துருக்கிக் கப்பல்களை அணுகி நின்றபோது ஒரு துருக்கிக் கப்பல் ஒரு சிறிய பிரிட்டிஷ் படகின் மீது குண்டுவீசியது. உடனே தொடங்கிய கடற்போரின் விளைவாக, துருக்கி கப்பற்படை முழுமையும் அழிந்துவிட்டது. இந்த எக்கச்சக்கமான நிகழ்ச்சிக்காக வருந்துவதாகப் பிரிட்டிஷ் துரைத்தனம் சுல்தானுக்குத் தெரிவித்துக் கொண்டது. ஏனென்றல், அவர்மீது போர் தொடுத்திருப்பதாக அறிவிக்கப்படவில்லை. ஆயினும், எவ்வித வருத்த அறிவிப்பும் அந்நிகழ்ச்சியின் விளைவை மாற்ற வல்லதாயில்லை, சுல்தானல் அதன் பிறகு தம் க்ரேக்க குடிகளை அடக்கமுடியவில்லை. முடிவில் எட்ரியனேப்பில்

---

1. The Greek War of Independence. 2. Lord Byron. 3. Navarino Bay.

சமாதான உடன்படிக்கையின்படி[1] (1829) க்ரேக்கரின் சுயேச்சை நிலையை அவர் அங்கீகரிக்கவேண்டியவ ரானார்.

§ 274. பீல் குற்றச்சட்டத்தை[2] ஒழுங்குபடுத்துகிறார் :— பல நூற்றாண்டுகளாகக் குற்றங்களை யடக்கக் கொலைத் தண்டனையையே பார்லமென்ட் பெருக்கிக்கொண்டு வந்தது. அதன் காரணமாகக் குற்றச் சட்டத்தில் முரண்பாடுகளும் ஒழுங்கீனங்களும் மலிந்து கிடந்தன. இருநூறு குற்றங்களுக்குமேல் கொலைத்தண்டனை விதிக்கப்பெற்றன; உ-ம்., இரவில் வீட்டில் புகுந்து கொள்ளையிடல் (பகலில் வீட்டில் புகுந்து கொள்ளையிடுதல் இந்தக் கணக்கில் வரவில்லை), உபகார விடுதியிலிருக்கும் கிழப் போர்வீரனைப் போல் வேஷம் போட்டுக்கொண்டு ஏமாற்றல், வெளுக்கும் துறையிலிருந்து திருடுதல், சிறிய மரங்களை வெட்டுதல். இதையெல்லாம் ஒழுங்குபடுத்தப் பலர் முயன்றும் பயன் பெறவில்லை; உதாரணமாக, சர் சாமுவெல் ரோமில்லி[3] என்பவரது முயற்சியைக் குறிப்பிடலாம் (கு. 193). சட்டத்தின் கடுமை காரணமாகச் சில குற்றவாளிகள் தண்டனை பெறுமலே தப்பினர். அல்பசொல்பமான குற்றங்களுக்குத் தங்களைப்போன்ற மக்களைத் தூக்கிலிடுவதை விரும்பாத ஜூரிகள் குற்றம் தெளிவாக ருசுவாக்கப்பட்ட சமயங்களிலும் குற்றவாளிகளை நிரபராதிகளென்றே கூறிவிட்டுவிட்டனர். பீல் குற்றச் சட்டத்தைச் சீர்திருத்தி அமைக்க முற்பட்டார். தண்டனையின் கடுமையைவிட அது நேருமென்பதன் நிச்சயமே ஒருவனைக் குற்றம் செய்யாமலிருக்க வைக்கும் என்பதை அவர் நன்றாக உணர்ந்து, நூற்றுக்கு மேற்பட்ட குற்றங்களுக்குக் கொலைத் தண்டனையை நீக்கி அதற்குப்பதில் சிறைவாசத்தையோ தீவாந்தர சிக்ஷையையோ விதித்தார்.

1. Treaty of Adrianople. 2. The Criminal Law. 3. Sir Samuel Romilly.

சில ஆண்டுகளுள் அவர் ஒரு போலீஸ் திட்டத்தையும்[1] வகுத்துவைத்தார். பழமையாகச் சில வலிவற்ற கிழவர்கள் இராக்காலக் காவலாளர்களாக[2] நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்களுக்குப் பதில் ராபர்ட் பீல் ஒரு போலீஸ் படையை ஏற்படுத்தினர். இந்தப் போலீஸ்காரர்கள் மற்ற நாடுகளின் போலீஸ்காரர்களைப்போல் போர்வீரர்களல்லர். அவர்கள் மற்ற மனிதர்களைப் போலவே வாலுள்ள சட்டைகளையும் உயரமிக்க தொப்பிகளையும் அணிந்திருந்தனர்; கையில் ஒரு தடியைத் தவிர வேறு எவ்வித ஆயுதமும் அவர்களுக்கு இல்லை. (இன்னும் லண்டனில் இந்த போலீஸ் ஜவான்கள் அவர்களை முதலில் ஏற்படுத்திய ராபர்ட் பீலின் சுருக்கப் பெயராகிய 'பாப்' என்னும் பெயராலேயே 'பாபீஸ்'[3] என அழைக்கப்படுகின்றனர்.) பீல் தலைநகரத்துப் போலீஸ்படையையே[4] உருவாக்கினர்; லண்டன் நகரத்தில்தான் அவருக்கு இவ்விஷயத்தில் அதிகார மிருந்தது. ஆயினும், சில நாட்களுள் அதன் உபயோகம் எல்லோருக்கும் விளங்கியபடியால் மற்ற இடங்களிலும் அத்தகைய போலீஸ் திட்டங்கள் ஏற்படாயின. விரைவிலேயே நாடுமுழுமையிலும் அவை பரவின. இப்போது பிரிட்டிஷ் மக்களுக்கே அவர்கள் போலீஸ் திட்டம் பெரிதும் பெருமை யளிப்பதாக இருக்கிறது.

§ 275. கட்டுப்பாடற்ற வாணிபத்தின்[5] ஆரம்பம்:— பிரிட்டனின் எதிர்கால வளம் பயிர்த்தொழிலி லில்லை, வாணிபத்தில்தான் இருக்கும் என்பதை உணர்ந்த முதல் வாணிப அமைச்சர் ஹஸ்கிஸனே. ஆகவே, அவர் ஆடம் ஸ்மித்[6] நாடுகளின் செல்வம்[7] (§ 239) என்னும் தமது நூலில் விளக்கியுள்ள விதிகளைப் பின்பற்றி நாட்டின்

1. Police System. 2. Night-watchmen. 3. 'Bobbies'. 4. Metropolitan Police Force. 5. Free Trade. 6. Adam Smith. 7. *Wealth of Nations.*

வெளிநாட்டு வாணிபத்தை வளர்க்க ஒரு முறையான திட்டத்தை வகுக்கலானர். பிட் சுங்க வரிகளைக்[1] குறைத்து ஒழுங்குபடுத்தினர். ஆயினும், அவர் திட்டப்படுத்திய 'வரி விகிதங்கள்'[2] மீண்டும் நாளடைவில் பெருஞ் சிக்கல்களுக் குள்ளாயின. ஹஸ்கிஸன் பல சுங்க வரிகளைக் குறைத்ததோடு பலவற்றை நீக்கியேவிட்டார். ஆக்கத் தொழில்களுக்காக[3] இறக்குமதியாகும் மூலப்பொருள்கள்[4] மீது வரிச் சுமை ஏறக்கூடாது என்பது அவர் நோக்கம். அதோடு, பிரிட்டனில் இறக்குமதியாகும் வெளிநாட்டுப் பொருள்கள் பிரிட்டிஷ் கப்பல்களிலேனும் அவை வரும் நாடுகளின் கப்பல்களிலேனும் மட்டுமே கொண்டுவரப் படல்வேண்டு மென்று (§ 162) பிரிட்டனின் கப்பலோட்டும் தொழிலுக்கு ஆதரவு காட்டப் பதினேழாம் நூற்றுண்டில் இயற்றப்பட்ட கப்பல் ஓட்டல் சட்டங்களை[5] அவர் திருத்தி யமைத்தார். அவை ஏற்பட்ட காலத்தில் மிக அவசியமாக இருந்தபோதிலும் தற்போது அவற்றால் பயனென்றுமில்லை. பல வெளிநாடுகள் அவற்றைப் பின்பற்றிப் பிரிட்டிஷ் கப்பல் ஓட்டல் தொழிலுக்கு இடைஞ்சலாகத் தாங்களும் அத்தகைய சட்டங்களை இயற்றி வைத்துக்கொண்டன. ஆயினும், அக் கப்பல் ஓட்டல் சட்டங்கள் 1849-ல் தான் முழுமையும் ரத்தாயின. ஹஸ்கிஸன் மட்டும் மற்ற நாடுகளுடன் பேச்சுக்கள் நடத்தி ஒன்றுக்கொன்று விதித்திருக்கும் கட்டுப்பாடுகளைத் தளர்த்திவைத்துக்கொள்ள முயலுவதற்குத் தமது வாணிப இலாகாவுக்கு அதிகாரம் வாங்கிக்கொண்டார்.

மேலும், புதிதாக வளரும் போரசினைப் பரிவுடன் போற்றும் அவசியத்தை அவர் காலத்தில் ஹஸ்கிஸன் ஒருவரே தீர்மையாக உணர்ந்தார். ஆகவே, அவர் குடி

1. Customs Duties. 2. 'Book of Rates'. 3. Manufactures. 4. Raw materials. 5. Navigation Laws.

யேற்றநாட்டுப் பொருள்களுக்குக் குறைந்த சுங்கங்களையே[1] விதித்தார். இதனால் வேற்றுநாட்டுப் பொருள்களைவிடத் தம் பேரரசு நாடுகளின் பொருள்களைப் பிரிட்டிஷ் மக்கள் அதிகமாக வாங்கலாயினர்; உதாரணமாக, கானடாவிலிருந்து வரும் மரத்தைக் கூறலாம்.

§ 276. ஒன்றுகூடல் சட்டங்கள் நீக்கல்[2] :—இதுவரை நாம் விவரித்த சீர்திருத்தங்கள் துரைத்தன அமைச்சர்களாலேயே பார்லமெண்டில் கொண்டுவந்து நிறைவேற்றப் பெற்றன. அடிப்படையான மாறுதல்களை விழைந்த 'ராடிகல்'[3] அங்கத்தினர் சிலர் வேறொரு முக்கியமான சீர்திருத்தத்தை நிறைவேற்றி வைத்தனர். அதிக கூலிக்காகத் தொழிலாளர்கள் ஒன்றுகூடிக் கிளர்ச்சி செய்தல் சட்டவிரோதமானதென்று பிட் இயற்றிவைத்த ஒன்றுகூடல் சட்டங்கள் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களை[4] அழிக்கவில்லை (§ 255). அவை அதுமுதல் அந்தரங்கமாக வேலைசெய்ய ஆரம்பித்ததால், அவைகள் விஷயமாக முன்னைவிட இப்போது அதிகமாக அஞ்சவேண்டியதாயிற்று. ப்ரான்சிஸ் ப்ளேஸ்[5] என்னும் ஒரு 'ராடிகல்' தையற்காரர் அச்சட்டங்களை ரத்துசெய்விக்கக் கங்கணங் கட்டிக்கொண்டார். தொழிற் கட்டுப்பாடு சங்கங்களால் அதிக நன்மை உண்டென்னும் நம்பிக்கையால் அவர் தூண்டப்பட்டார் என்று சொல்வதற்கில்லை. அச்சங்கங்களில் சேரத் தடையொன்றும் இல்லாவிட்டால் மக்கள் அவற்றில் சேர விழையமாட்டார்களென்பது அவர் அபிப்பிராயம்.

ஜோசெப் ஹ்யூம்[6] அப்போது பார்லமெண்ட் அங்கத்தினராக இருந்த மிகச் சில ராடிகல்களுள் ஒருவர். அவருக்கு ப்ளேஸ் தம் கொள்கையை உருவேற்றி ஒன்றுகூடல் சட்டங்களை ரத்துசெய்ய அவரை ஒரு மசோதா

1. Preferential duties. 2. Repeal of the Combination Acts. 3. Radicals. 4. Trade Unions. 5. Francis Place. 6. Joseph Hume.

கொண்டுவரவைத்தார். மற்ற அங்கத்தினர்கள் அதன் முக்கிய நோக்கத்தை உணர்ந்துகொள்ளாமல் கண்மூடிக் கொண்டிருந்ததால் அது சட்டமாய்விட்டது (1824). ஆயினும், அதனால் ப்ளேஸ் எதிர்பார்த்தபடி தொழிற் கட்டுப்பாடு இயக்கம் வலிவிழக்கவில்லை. புதிய சட்டத் தைப் பயன்படுத்திக்கொண்டு தொழிற்கட்டுப்பாடு சங்கங் கள் நாடெங்கும் வேலைநிறுத்தங்களைப்[1] பரவச்செய்தன. கப்பல்கள் செய்வோரும் பஞ்சாலைக்காரர்களும் தங்கள் பிரதிநிதிகளை அமைச்சர்களிடம் அனுப்பித் துரைத்தனம் அம்மசோதாவுக்கு இடங்கொடுத்தது தவறு என்பதை வற்புறுத்தினர். ஆயினும், ப்ளேஸ் முன்வைத்த காலைப் பின்வாங்குபவ ரல்லர். துரைத்தனத்தார் இவ்விஷயத் தைப்பற்றி விசாரிக்க ஒரு சிறு குழுவினை[2] நியமித்தனர். தொழிலாளர்களுள் நாணயமிக்கவர்களான சிலர் அதன் அங்கத்தினர்களை வழிமறித்துப் பாரபக்ஷமில்லாத நியாய மான தீர்ப்பையே அவர்கள் அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுமாறு ப்ளேஸ் ஏற்பாடு செய்தார். அதோடு, விசாரணைக் குழுவினர்முன் சான்று பகர வந்தவர்களை ஹ்யூம் மிக்க திறமையுடன் குறுக்கு விசாரணை செய்துகொண்டு வந்ததால், சென்ற ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் அவ்விசாரணையின் முடிவாகச் சிறிதளவில்தான் மாற்றி யமைக்கப்பட்டது. அதுமுதல் தொழிலாளர் தங்கள் கூலி விஷயமாக ஒன்றுசேர்ந்து ஆலோசிப்பதும், ஏகோபித்து வேலைநிறுத்தம் செய்வதும் நியாயமான முறைகளே என்பது தெளிவாகக் கூறப்பட்டது. வேலை வாங்குவோருக்கோ தங்களுடன் வேலைநிறுத்தம் செய்ய மறுக்கும் மற்ற தொழிலாளர்களுக்கோ இடையூறுகள் விளைவிப்பதுதான் சட்டப்படி தடுக்கப்பட்டது.

---

1. Strikes. 2. A committee.

## அறுபத்து மூன்றும் அத்தியாயம்

# டோரி ஆட்சியின் முடிவு

## (1827—1830)

§ **277.** இரண்டு உறுத்தலான விஷயங்கள் :—முன் அத்தியாயத்தில் கூறிய சீர்திருத்தங்கள் அநேகமாக அபிப்பிராய பேதங்களின்றியே பார்லமென்டில் நிறைவேறின. ஆயினும், இரண்டு விஷயங்களைப்பற்றி டோரி கட்சியினருள்ளேயே மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்தன. எதிர்ப்பு மதத்தினரோடு[1] காதொலிக்கர்களுக்கும் சம அரசியல் உரிமைகள் அளிப்பதா? உதாரணமாக, அவர்கள் பார்லமென்ட் அங்கத்தினர்களாக இருக்கலாமா? மேலும், நாட்டு மக்களுக்கு இன்னும் அதிகமான பிரதிநிதித்துவம் ஏற்படுமாறு காமன்ஸ் சபையைச் சீர்திருத்தி அமைக்க வேண்டுமா? இவ்விரு சீர்திருத்தங்களையும் விக் கட்சியினர் ஆதரித்தனர். டோரிகளுள், வெல்லிங்டனையும் பீலையும்[2] போன்ற சிலர் இரண்டையும் எதிர்த்தனர்; கானிங்கையும் ஹஸ்கிஸனையும் போன்ற சிலர் காதொலிக்கர் விடுதலையை[3] ஆதரித்துப் பார்லமென்ட் சீர்திருத்தத்தை எதிர்த்தனர். லிவர்ப்பூல் பிரபு தலைமை அமைச்சராக இருந்தவரையில் இந்த அபிப்பிராய பேதங்கள் முன்னணிக்கு வராமல் பார்த்துக்கொண்டார். 1827-ல் உடல் நலம் குன்றியதால் அவர் பதவியை விட்டு விலக வேண்டியவரானார். அமைச்சர் குழுவில் கானிங் நெடுநாள் ஆட்சி பெற்றிருந்ததால் மன்னர் அவரையே அரைமனத்துடன் தலைமையமைச்சராக்கினார். டோரி கட்சியில் அதுவரை

---

1. Protestants. 2. Wellington and Peel. 3. Catholic Emancipation.

லிவர்ப்பூல் மூடி மறைத்துவைத்திருந்த பிளவுகள் இப்போது வெளிப்படையாயின. லிவர்ப்பூல் அமைச்சில் கானிங்குடன் சம அந்தஸ்து பெற்று உழைக்க ஒப்புக்கொண்ட வெல்லிங்டன் கட்சியினர் அவர்கீழ் உழைக்க விரும்பாது தங்கள் பதவிகளை விட்டு விலகிக்கொண்டனர். அவர்களில்லாது ஒரு திறமையான அமைச்சர் குழுவினை அமைக்கக் கானிங் பட்ட கஷ்டம் கொஞ்சமல்ல. அதனாலேயே அவர் சில மாதங்களில் இறந்துவிட்டார் (1827).

அவரது பழைய நண்பர் காட்ரிச் பிரபு[1] (ராபின்சன்) துரைத்தனத்தை நடத்த முயன்றார். ஆயினும், கானிங் போய்விட்டபிறகு அவர் கூட்டத்தினரிடம் யாருக்கும் அதிக நம்பிக்கையில்லாததால் அவர்கள் விரைவிலேயே தங்கள் பதவிகளை விட்டு விலகவேண்டியவர்களாயினர். நான்காம் ஜியார்ஜ் பிறகு வெல்லிங்டனைத் தலைமை அமைச்சராகவும் பீலைக் காமன்ஸ் சபைத் தலைவராகவும் நியமித்தார். இவ்வாறு நேரிட்டது அவருக்கு மிகுந்த திருப்தியை அளித்தது. இதனால் காதொலிக்கர் விடுதலை என்னும் 'ஆபத்'தினின்றும் நாடு மீட்கப்பட்டதாகவே அவர் நினைத்தார்.

§ 278. மதச் சமத்துவம்[2]:—ஆயினும், அவர் நினைத்தபடி ஒன்றும் நடக்கவில்லை. அவரது ஆப்த டோரி நண்பர்களே காதொலிக்கர் விடுதலைக்கு இணங்குவதோடு, அதைப் பார்லமெண்டும் நாடும் வேண்டாவெறுப்பாக ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்தவேண்டியவர்களாயினர். இதனால் அறுபது ஆண்டுகள் இடைவிடாத ஆதிக்கத்திலிருந்த டோரி கட்சியினர் முறிவுற்று வலியொடுங்கினர்.

முதல்முதலாக அவர்கள் சோதனைச் சட்டத்தையும்[3] கார்ப்பொரேஷன் சட்டத்தையும்[4] நீக்கிச் (1828) சீர்திருத்த

1. Lord Goderich. 2. Religious Equality. 3. Test Act. 4. Corporation Act.

மனப்போக்கினுக்கு இடங்கொடுக்க வேண்டியவர்களாயி னர். இணங்காதவர்களுக்குத்[1] துரைத்தன காரியாலயங் களிலும் நகர ஆட்சிக் கழகங்களிலும் இடமில்லை என்று கூறிய அச்சட்டங்கள் இரண்டாம் சார்ல்ஸின் ஆட்சிக் காலத்தில் இங்லண்ட் மதஸ்தாபனத்தின் தனியுரிமை பெற்ற அந்தஸ்தினை மேலும் உயர்த்துவதற்காக இயற்றப் பட்டன (கு. 118). இந்தச் சட்டங்களை மீறி நடந்தார்கள் என்று ஒரு நடவடிக்கையும் எவர்மீதேனும் நெடுங்கால மாகவே எடுத்துக்கொள்ளப்படவில்லையாயினும், மத விஷயமாகத் தாராளமான கொள்கைகள் பரவிவரும்போது ஒரு நாட்டுமக்களுள் லக்ஷக்கணக்கானவர்களைத் தாழ்வாக நடத்தி அவர்களுக்குச் சமத்துவத்தை மறுப்பது அநீதி யென்று பரந்த நோக்கங்களைக் கொண்டவர்கள் உணர லாயினர். விக் கட்சியினர் இந்தச் சட்டங்களை ரத்து செய்துவிடவேண்டுமென்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தனர். (தேர்வுகளில்[2] இக்கட்சியையே இணங்காதவர் கள் நிலையாக ஆதரித்துவந்தார்கள்). இவ்விஷயத்தில் பொதுமக்கள் அபிப்பிராயம் மிகவும் தீவிரமாக இருந்த தால் அதற்குத் துரைத்தனத்தார் இணங்கவேண்டியவர்க ளாயினர்.

காதொலிக்கர் விடுதலை விஷயமாகமட்டும் இங்லிஷ் மக்களுள்ளும் ஸ்காட்டிஷ் மக்களுள்ளும் ஐந்தில் நால்வர் துரைத்தனத்தின் போக்கை ஆதரித்தனர்; நாட்டில் 'போப் மதத்தினர்'க்கு[3] எதிர்ப்பு இன்னும் பலமாகவே இருந்தது. காதொலிக்கர் பெருங்கூட்டமாக இருந்த அயர்லண்டைத்தான் இந்த விஷயம் அதிகமாகப் பாதித் தது. இங்லிஷ் துரைத்தனத்தார் இவ்விஷயத்திலேனும் இதர விஷயங்களிலேனும் எப்போதும் நேர்மையாக நடந்ததில்லையென ஐரிஷ் மக்கள் கருதினர். முக்கியமாக,

1. Dissenters. 2. Elections. 3. Papists.

1800-ல் இயற்றப்பட்ட இணைப்புச் சட்டத்துக்கு[1] (§ 250) ஐரிஷ் மக்களின் அனுமதியைப் பெறுவதற்காக அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றாதுவிட்டது அவர்களது ஆத்திரத்தைத் தூண்டியது. ஆகவே, சிறிது காலத்துக்குமுன் தான் டானியல் ஓ கானெல்[2] என்பவரின் தலைமையின்கீழ் ஒரு பெரிய இயக்கம் தொடங்கியது. சரித்திரத்தில் அவரைவிடப் பிரசித்திபெற்ற அரசியல் கிளர்ச்சிக்காரரைக் காண்ப தரிது. ஐரிஷ் குடியானவர்களிடையே மிகுந்த செல்வாக்கு படைத்திருந்த காதொலிக் பாதிரிமார் அவரை ஆதரித்தனர். அவர் இயக்கத்தின் செலவுகளைத் தாங்க அநேகமாக அயர்லண்டிலுள்ள ஒவ்வொரு காதொலிக் குடும்பமும் வாரத்துக்கு ஒரு பென்னி வீதம் வரி விதித்துக் கொண்டு கொடுத்தது. பெருங் கூட்டங்களைக் கூட்டி அவற்றில் அயர்லண்டின் குறைகளைக் கேட்போருக்குக் கோபமும் ஆத்திரமும் உண்டாகும்படியாக விவரிப்பதே அவர் கையாண்ட முறை. ஆயினும், தம்மைச் சேர்ந்தவர்கள் பலாத்காரச் செயல்களில் ஈடுபடக்கூடாதென்று அவர் எப்போதும் வற்புறுத்திக்கொண்டிருந்தார். ஏனென்றால், இதைச் சாக்கிட்டு இங்லிஷ் துரைத்தனத்தார் அவர் இயக்கத்தைத் தங்கள் இராணுவ பலத்தைக்கொண்டு அடக்கிவிடக் கூடாதென்பது அவர் கோரிக்கை.

வெல்லிங்ட்டன் இந்த இயக்கத்தை அடக்கிவைக்கும் நோக்கத்துடன் தமது நண்பர் ஆங்கில்செ பிரபுவை[3] லார்ட் லெப்டெனென்டாக[4] அனுப்பிவைத்தார். ஆயினும், இந்த ஆங்கில்செ பிரபுவே, தாம் கவனித்த அளவில் காதொலிக்கருக்கு உடனே விடுதலை யளிக்காவிட்டால் சடுதியில் ஒரு பயங்கரமான கலகமோ உள்நாட்டுப் போரோ ஏற்படும் என்று தமக்குத் தோன்றுவதாக அறி

1. Act of Union. 2. Daniel O'Connell. 3. Lord Anglesey.
4. Lord Lieutenant.

வித்தார். நிலைமை எவ்வளவு ஆபத்தான தென்பது அப் போதுதான் தலைமையமைச்சருக்கு விளங்கியது. அவர் போரின் அலங்கோலங்களை நன்ருகக் கண்டுணர்ந்தவர். அவைகளுக்குத் தம்மால் இயன்ற வரையில் தம்மன்னரது நாடுகளில் இடங்கொடுக்கக்கூடாதென்று அவர் தீர்மானித் தார். பிறகு, ஓ கானெல் க்ளேர் கௌன்டியின்[1] பிரதிநிதி யாகப் பார்லமென்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காதொ லிக்கர் ஆனதால் சட்டப்படி அவர் தேர்தலுக்கு அருகதை யற்றவரே. ஆயினும், அவருக்குப் போட்டியாக நின்றவர் எதிர்ப்புமதப் பூமான்களுள் மக்களால் விரும்பப்பட்ட சிலருள் ஒருவராயிருந்தபோதிலும், ஓ கானலுக்கே அதிக ஓட்டுக்கள் கிடைத்தன. இந்தத் தேர்தல் ஐரிஷ் மக்களின் திடசித்தத்தைத் தெளிவாக வெளிப்படுத்தியது. வெல் லிங்ட்டனும் பீலும் இதை எதிர்ப்பதைவிட இதற்கு இணங் குதலே மேல் எனக் கருதினர். 1829-ல் இயற்றப்பட்ட காதோலிக்கர் விடுதலைச் சட்டத்தின்படி[2], மன்னர், மன்னர் பிரதிநிதி, லார்ட் சான்செலர் ஆகிய மூன்று பதவிகளைத் தவிர்த்து மற்ற எல்லாப் பதவிகளுக்கும் காதொலிக்கரும் அருகதை யாயினர்.

§279. "நமது இணையற்ற துரைத்தன அமைப்பு[3]":— காதொலிக்கர் கூக்குரலுக்குத் தலைவர்கள் இணங்கியது டோரிகளுக்குப் பெரிய ஏமாற்றமாயிருந்தது. எவ்வகை யிலேனும் விக் கட்சியினரைப் பதவி ஏற்கவிடக்கூடா தென்னும் வைராக்கியமே டோரிகளை ஒன்று சேர்த்து வைத்திருந்தது. ஏனென்ருல், விக் கட்சியினர் பதவி ஏற்க நேர்ந்தால் அவர்கள் பார்லமென்டில் ஒரு சீர்திருத்த மசோதா கொண்டுவந்து "துரைத்தன அமைப்பை அடி யோடு அழித்துவிடுவார்கள்" என்று டோரிகள் கருதினர்.

1. County Clare. 2. Catholic Relief Act. 3. "Our Matchless Constitution".

வெல்லிங்ட்டனும் அவரது நண்பர்களும் அவ்வளவு அபிமானத்துடன் ஆதரித்த துரைத்தன அமைப்புத்தான் என்ன? பதினைந்தாம் நூற்றுண்டுமுதல் ஒவ்வொரு கௌன்டியும்[1] பார்லமென்டுக்கு இரண்டு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு வந்தது. ஆனால், பட்டணங்களின் பிரதிநிதித்துவத்துக்கு ஒழுங்கான திட்டமெதுவும் வகுக்கப்படவில்லை. ஆக்கத்தொழிற் புரட்சியால் மக்கள் கூட்டத்தில் அதிகமான இடப்பெயர்ச்சி ஏற்பட்டது. ஆகவே, சில இடங்கள் அநேகமாகக் காலியாய் விட்டன. அங்கு பத்துப் பதினைந்து ஓட்டர்களுக்குமேல் இருப்பது அரிதாய்விட்டது. ஆயினும், அவ்விடங்களின் பழைய சிறப்பையொட்டி அவைகளுக்கு அளிக்கப்பட்டிருந்த பிரதிநிதித்துவ விகிதப்படியே அவை பார்லமென்டுக்கு அங்கத்தினர்களை இன்னும் அனுப்பிக்கொண்டுவந்திருந்தன. பர்மிங்காமைப்போல்[2] புதிய வளர்ச்சி பெற்றிருந்த ஆக்கத்தொழிற் பட்டணங்களுக்கோ பிரதிநிதித்துவமே இல்லை. ஓட்டுரிமையும்[3] இந்த விதமாகவே ஒழுங்கும் நேர்மையுமின்றி வழங்கப்பட்டிருந்தது. சில பட்டணங்களில் நகராட்சிக் கழக[4] அங்கத்தினர்கள்மட்டுமே ஓட்டுரிமை பெற்றிருந்தனர்; சிலவற்றில் வரிகொடுத்தவர்கள் அனைவரும் பெற்றிருந்தனர்; சிலவற்றில் சில வீட்டுக்காரர்கள்மட்டும் பெற்றிருந்தனர். இதோடு, எத்தனையோ "சொத்தைப் பட்டணங்கள்"[5] இருந்தன; அவற்றில் ஓட்டுரிமை பெற்றவர்கள் விரல்விட்டு எண்ணக்கூடிய அவ்வளவு குறைந்த தொகையினராக இருந்ததால், அவ்விடத்திய மிகப் பெரிய பூமான்கள் ஓட்டர்களைப் பயமுறுத்தியேனும் இலஞ்சம் கொடுத்தேனும் தமக்கு வேண்டியவர்களையே தேர்ந்தெடுத்து அனுப்புமாறு செய்துவிடலாம்.

1. County. 2. Birmingham. 3. 'The franchise'. 4. The Corporation. 5. "Rotten Boroughs".

இவ்விதமாகவே நிலம்படைத்தவர்கள் வகுப்புக்குப் பார்லமென்டில் அதிக செல்வாக்கு இருந்துகொண்டிருந்தது. லான்ஸ்டேல் ஏர்லைப்[1] போன்ற பெரிய பூமான் ஒருவர் மட்டும் காமன்ஸ் சபைக்குத் தாம் விரும்பிய பத்து அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பமுடியும்; ஆயினும், யார்க் ஷைர்[2] முழுமையும் இரண்டு பிரதிநிதிகளைத்தான் அனுப்பலாம்; மான்செஸ்டர் நகரம்[3] ஒருவரையும் அனுப்ப முடியாது.

பரந்த மனப்பான்மையுடைய 'லிபரல்' கட்சியினர்[4] இந்த அநீதிகளையும் ஒழுங்கீனங்களையும் சீர்திருத்த வேண்டுமென்று அடிக்கடி வாதித்துவந்தனர். அவற்றுள் மிகக் கேவலமான சிலவற்றை அறவே ஒழிக்கப் பிட் ஒரு மசோதாவும் கொண்டுவந்தார். ஆயினும், அச் 'சொத்தைப் பட்டணங்க'ளின் சொந்தக்காரர்கள் தங்களுக்குச் செல்வமும் சிறப்பும் அளித்து வந்த பழைய ஏற்பாட்டை நிலைக்கச்செய்ய ஒவ்வொருதரமும் பெரும்பாடுபட்டனர். ஒவ்வொருதரமும் அவர்கள் கட்சியே இதுவரை வெற்றி பெற்றுவந்தது. ஆயினும், 1820-ஐ முதலாண்டாகக் கொண்ட பத்து ஆண்டுகளில் சீர்திருத்தக் கூக்குரல் மேலும் மேலும் வலுக்கலாயது. இவ்விஷயத்தில் இது வரை முழு ஊக்கங் காட்டாதிருந்த விக் கட்சியினர் இப்போது டோரி துரைத்தனத்தை யொழிக்க அதை ஆர்வத்துடன் ஆதரிக்கலாயினர். காபெட்டைப்[5] போன்ற 'ராடிகல்கள்', தொழிலாளர் வகுப்பின் துயரங்கள் தொலைய வேண்டுமானால், அவர்களுக்குப் பார்லமென்டில் பிரதிநிதித்துவம் அவசிய மென்பதை விளக்கி அப்பிரதிநிதித்துவத்தை வற்புறுத்திக் கேட்கும்படி அவர்களைத் தூண்டிக் கொண்டிருந்தனர் (§ 269). மேலும், ஆக்கத்தொழில்

---

1. Earl of Lonsdale. 2. Yorkshire. 3. Manchester. 4. 'Liberals'. 5. Cobbett.

முதலாளிகளும், வியாபாரிகளும், தனிப்பட்ட கல்விப் பயிற்சியால் கௌரவமுள்ள சுயேச்சையான தொழில்களைச் செய்பவர்களும்[1], ஆக்கத்தொழில் புரட்சியால்[2] அபிவிருத்தியடைபவர்களும் நிலம்படைத்தவர்கள் மட்டுமே அரசியல் அதிகாரங்களனைத்தையும் அனுபவித்து வருதல் அநீதி என்பதை நாளுக்கு நாள் அதிகமாக உணரலாயினர்.

1830-ல் இந்த சீர்திருத்த இயக்கத்துக்கு ஆதரவு உச்சநிலையை அடைந்தது. அதுவரை பார்லமெண்ட் சீர்திருத்தத்துக்கு முட்டுக்கட்டை இட்டுவந்த நான்காம் ஜியார்ஜ் அவ்வாண்டு இறந்துவிட்டார். அவருக்குப்பின் மன்னரான அவர் தம்பி நான்காம் வில்லியம் 'சீர்திருத்தக்கார'[3]ரென்று பெயரெடுக்க விரும்பினார். மேலும், அம்மன்னர் ஆட்சியின் முதல் பார்லமெண்டுக்குத் தம் அரசியல் கொள்கையை அறிவித்தபோது, வெல்லிங்டன் ட்யூக், "நமது இணையற்ற துரைத்தன அமைப்பில்"[4] சிறிது மாறுதல் செய்ய விரும்புவதையும் தாம் அழுத்தமாகக் கண்டிப்பதாகக் கூறினார். அதன் பலனாக, அவர் அமைச்சைச் சேர்ந்த இளம் அமைச்சர்கள் தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்துவிட்டு எதிர்ப்புக்கட்சியில்[5] சேர்ந்துகொண்டனர். பாமர்ஸ்டன் பிரபுவையும் மெல்போர்ன் பிரபுவையும்[6] போன்றவர்கள், சீர்திருத்தப் பித்தேறியவர்களாயில்லாவிடினும், இது விஷயமாகப் பொதுமக்கள் கோரிக்கைகளை எதிர்த்து நிற்பது மதியீனம் என்பதை உணர்ந்தனர்.

காதொலிக்கர் விடுதலை விஷயமாக விட்டுக்கொடுத்ததற்காக ஏற்கெனவே ஆதரவு குன்றியிருந்த வெல்லிங்டன்துரைத்தனம் இந்தஇரண்டாவதுஅதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. வெல்லிங்டன் தம் பதவியை ராஜிநாமா

1. Professional men. 2. The Industrial Revolution. 3. 'Reformer'. 4. 'Our matchless Constitution'. 5. The Opposition. 6. Lord Palmerston, Lord Melbourne.

செய்துவிட்டார். விக் கட்சித் தலைவரான க்ரே பிரபுவை[1] ஒரு அமைச்சு அமைக்குமாறு வில்லியம் மன்னர் அழைத்தார்.

அறுபது ஆண்டுகளாகத் தளர்வுறாது நிலைத்திருந்த டோரி ஆட்சி முடியும் காலமும் வந்துவிட்டது.

§280. பெரிய சீர்திருத்த மசோதா[2]:—பதவியேற்றதும் விக் கட்சியினர் ஒரு சீர்திருத்த மசோதா கொண்டுவந்தனர் (ஏப்ரில், 1831). காமன்ஸ் சபையில் அதைப்பற்றி ஒரு நீண்ட விவாதம் அதிக தீவிரமாக நடந்து எட்டு அதிக ஓட்டுக்களால்[3] அது தள்ளுபடியாயிற்று. உடனே க்ரே பிரபு அந்தப் பார்லமென்டைக் கலைத்துவிட்டார். அடுத்தபடியாக நடந்த பொதுத்தேர்தல்[4] பிரிட்டன் சரித்திரத்திலேயே மிகவும் பிரசித்தி பெற்றது.* 'சொத்தைப் பட்டணங்க'ளின் சொந்தக்காரர்கள் விக் கட்சியினரைத் தோற்கடிக்கப் பெருமுயற்சி செய்தனர். ஆயினும், நாட்டினர் 'மசோதா, முழு மசோதா, மசோதாவே'[5] வேண்டுமென்று ஒரே பிடிவாதமாகத் தீவிரமான கிளர்ச்சி செய்தனர். சுயேச்சையாக ஓட்டர்கள் ஓட்டுகொடுத்த இடங்களெல்லாம் அம்மசோதாவை ஆதரிப்பதாக வாக்கு கொடுத்தவர்களையே தேர்ந்தெடுத்து அனுப்பின. ஆகவே, புதிய காமன்ஸ் சபையின்முன் அது மீண்டும் கொண்டு வரப்பட்டபோது மிக அதிக ஓட்டுக்களின் ஆதரவோடு ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆயினும், பிரபுக்கள் சபையோ பழைய ஆட்சியின்[6] கொள்கைகளைக் கட்டிக் காக்கும் இடமாயிருந்தது. அச்சபையின்முன் மசோதா வந்ததும் பிரபுக்கள் அதில் பல முக்கிய மாறுதல்களைச்

---

* ஸ்டான்லி வேமன் என்பவர் எழுதியுள்ள 'சிப்பிஞ்ச்'[7] என்னும் நூலில் அது மிக நன்முக வருணிக்கப்பட்டுள்ளது.

1. Lord Grey. 2. The Great Reform Bill. 3. A majority of eight. 4. General Election. 5. "The Bill, the whole Bill, and nothing but the Bill!" 6. 'The Old Regime'. 7. Stanley Weyman's *Chippinge*.

செய்து அதைப் பயனற்றதாக்கிவிட முயன்றனர். அவ்வளவு சீக்கிரமாக மற்றொரு பொதுத்தேர்தலை நாடி நாட்டினர்முன் முறையிடுதலும்[1] இயலாத காரியம். ஆகவே, க்ரே பிரபு நூறு புதிய விக் பிரபுக்களை உண்டாக்கிப் பிரபுக்கள் சபையிலிருந்த எதிர்ப்பினை அதிக ஓட்டுக்களால் கவிழ்த்துவிடலாம் என மன்னருக்கு யோசனை கூறினர். மன்னரோ இதற்கு இணங்கவில்லை. அவர் எதிர்பார்த்ததைவிட அம்மசோதா நிரைத்தன அமைப்பில் பல பெரிய மாறுதல்களைப் புகுத்துவதாக இருந்தது. நிரைத்தனத்தில் அவ்வளவு அதிக மாறுதல்களுக்கு இடந்தர அவர் தயங்கினர். ஆகவே, க்ரே பிரபுவும் அவரது விக் அமைச்சர்களும் ராஜிநாமா செய்துவிட்டனர். மறுபடியும் வெல்லிங்ட்டன் தலைமையமைச்ச ரானர்.

ஆயினும், அவர் சில வாரங்களே அப்பதவியை வகித்தார். தங்கள் மனதுக்குகந்த ஒரு சீர்திருத்தம் இவ்விதமாகத் தள்ளுபடியாவதுபற்றித் தங்களுக்கு ஏற்பட்ட சீற்றத்தை நாட்டு மக்கள் மிகுந்த ஆவேசத்துடன் வெளியிடத் தொடங்கினர். நாட்டின் வடக்கிலும் நடுப்பாகங்களிலும் மிகப்பெரிய தொழிலாளர்கூட்டங்கள் நடைபெற்றன. இங்லண்ட் பாங்க்கிலுள்ள தங்கத்தையெல்லாம் வாபஸ் வாங்கிக்கொண்டு நிரைத்தனத்தைத் திண்டாடவைக்கப் போவதாக லண்டன் நகரம் பயமுறுத்தியது. கலகங்கள் கிளைத்துப் பொதுக் கூட்டங்கள் அழிக்கப்பட்டன. ஒழுங்கான போலீஸ் படையில்லாததாலும் நாட்டின் இராணுவப் படை மிகச் சிறியதாக இருந்ததாலும் எங்கும் பரவி நிகழ்ந்த இந்தக் கலகங்களையும் ஒழுங்கீனங்களையும் அடக்க முடியவில்லை. இந்த நிலையில் இராணுவ வீரர்களும் இக்கிளர்ச்சிகளை யடக்க உண்மை மனத்துடன் உழைப்பார்களென வெல்லிங்ட்டன் நம்புவதற்கில்லை. ஆகவே, அவரும்

1. to 'appeal to the country'.

ராஜிநாமாசெய்துவிட்டார். அரசர் மீண்டும் க்ரே பிரபுவை அழைத்து அவர் கூறிய ஆலோசனைக்கு இணங்கினர். இச்சமயம் பிரபுக்கள் சபையினரின் எதிர்ப்பு குறைந்துவிட்டது. எவ்வளவு எதிர்த்தாலும் சீர்திருத்தத்தினின்றும் தப்புவது இனி முடியாதென்பது அவர்களுக்கு விளங்கிவிட்டது. அம்மசோதா 1832–ல் சட்டமாயிற்று.

அப் பெரிய சீர்திருத்தச் சட்டப்படி மிகவும் சொத்தையான[1] ஐம்பத்தாறு பரோக்கள் (பட்டணங்கள்) பிரதிநிதித்துவத்தை (காமன்ஸ் சபைக்கு இரண்டு அங்கத்தினர்களை அனுப்பும் உரிமையை) இழந்தன. முப்பத்தாறு சற்றுப் பெரிய சொத்தைப் பரோக்கள் ஒரு அங்கத்தினரைத்தான் அனுப்ப முடிந்தது. இவ்விதம் விடுதலையாக்கப்பட்ட இடங்களை அதுவரையில் பிரதிநிதித்துவம் பெறுதிருந்த பெரிய பட்டணங்கள் பெற்றன. பட்டணங்களில் ஓராண்டில் £ 10 அல்லது அதற்கு மேற்பட்ட தொகையை வாடகையாகக் கொடுத்த வீட்டுக்காரர்களெல்லாம் ஓட்டுரிமை பெற்றனர். கடைசியில் இதைப்பற்றி அவ்வளவு ஆர்வங் காட்டிய தொழிலாளர் வகுப்பினர் ஒன்றும் பெறவில்லை. அவர்களுள் பலர் பழைய பட்டணங்களில் ஓட்டுரிமை பெற்றிருந்தனர். ஆயினும், ஆண்டில் £ 10 வாடகை செலுத்தியவர்கள் அவர்களுள் மிகச் சிலரே. இந்த மசோதாவின் விளைவாக நிலம்படைத்தவர்களோடு அரசியல் அதிகாரத்தைப் பங்குபோட்டுக்கொண்டவர்கள் மேலான நடுத்தர வகுப்பினரே.[2]

---

1. *Very* rotten. 2. The upper middle class.

அறுபத்து நான்காம் அத்தியாயம்

# முதல் பெரிய சீர்திருத்தக் காலம்

## (1830—1841)

§ 281. **சீர்திருத்தப்பட்ட பார்லமேண்ட்** :—சீர்திருத்தச் சட்டத்துக்குப்பின் நடந்த முதல் பொதுத்தேர்தலில் விக் கட்சியினர் அதிக ஓட்டுக்கள் பெற்றுப் பதவியில் நிலைத்தமை எதிர்பார்க்கக்கூடியதே. அடுத்த பத்தாண்டுகள் பார்லமெண்ட் மிகச் சுறுசுறுப்பாக வேலைசெய்தது. சென்ற ஐம்பது ஆண்டுகளாக ஆக்கத்தொழில்களில் நேர்ந்த துரிதமான அபிவிருத்தியால் மக்கள்நெருக்க மிக்க ஆக்கத்தொழிற் பட்டணங்கள் பல வளர்தல் போன்ற பெரிய மாறுதல்கள் சமூக வாழ்க்கையில் ஏற்பட்டன. 1770 முதல் அதிகாரம் வகித்திருந்த டோரிகள் இந்தப் புது நிலைகளுக்கு ஏற்றவாறு சட்டங்களில் திருத்தங்கள் செய்ய மனங்கொள்ளவில்லை. ஏனென்றால், அவர்கள் உள்ளவற்றை உள்ளவாறே விட்டுவிடுதல் என்னும் ‘லெய்சஸ் பேர்’[1] கொள்கையில் ஒருவாறு நம்பிக்கை வைத்திருந்தனர். (அதாவது, தனிப்பட்ட மக்களின் வாழ்க்கையில் துரைத்தனம் எவ்வளவுக் கெவ்வளவு தலையிடாதிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு மேல் என்பது). மேலும், சீர்திருத்தத்துக்கு இடங்கொடுத்தால் ப்ரான்ஸில்போல் இங்லண்டிலும் புரட்சி வந்துவிடும் என்று அவர்கள் அஞ்சினார்கள். ஆயினும், பார்லமென்டில் இப்போது ஒரு புதிய மனநிலை காணப்பட்டது. நெருக்கத்தில் நிகழ்ந்த பொதுத் தேர்தல்கள் நெடுநாட்களாக நிறுத்தி

---

1. *Laissez-faire.*

வைக்கப்பட்டிருந்த சீர்திருத்தங்களை உடனே செய்தாக வேண்டுமென்று நாட்டுமக்கள் கோரியதை வெளிப் படுத்தின. துரைத்தனமும் அக் கோரிக்கையை மிகுந்த ஆர்வத்துடன் நிறைவேற்றத் தலைப்பட்டது. சீர்கேடுகளை விசாரித் துணர்ந்து அவைகளுக்கேற்ற திருத்தங்களைக் குறிப்பிட அரசாது ஆராய்வுக் குழுக்கள்[1] அமைக்கப் பெற்றன. ஆகவே, சென்ற அரை நூற்றுண்டில் இயற்றப் பெற்ற சட்டங்களைவிட அதிகமான சட்டங்கள் அடுத்த பத்தாண்டில் பார்லமென்ட் நிறைவேற்றி வைத்தது.

1834-ம் ஆண்டின் இறுதியில் மட்டும் சில மாதங்கள் துரைத்தனத்தின் சீர்திருத்தப் போக்கில் தடையேற் பட்டது. கிழவரான வில்லியம் மன்னர் சீர்திருத்த வேகத்தைக் கண்டு பயந்துவிட்டார். ஆகவே, அமைச்சர் கள் தீர்மானமொன்று பார்லமெண்டில் நிறைவேருமற் போகவே, அரசர் அவர்களை ராஜிநாமா செய்யச் சொல்லி ஒரு அமைச்சைக் கூட்டப் பீலுக்குக்[2] கட்டளையிட்டார். பீல் டாம்வொர்த் அறிக்கையை[3] வெளியிட்டார். அதில், அவர் தாம் பழைய டோரி கட்சியின் சிதைவிலிருந்து உரு வாக்கிக் கொண்டுவந்த 'நிதானப்போக்குள்ளவர்' கட்சி யின்[4] திட்டத்தை விளக்கினர். அக்கட்சியினர் புதிய பார்லமென்ட் ஏற்பாட்டை ஒப்புக்கொள்வதாகவும், அறி வாளிகள் ஒப்புக்கொள்ளக்கூடிய அவசியமான சீர்திருத் தங்களை நிறைவேற்றிவைக்கத் தயாராயிருப்பதாகவும், ஆயினும், விக் கட்சியினரின் கண்மூடித்தனமான வேகத் துடன் அவர்கள் எக்காரியத்தையும் செய்யத் தயாராயில்லை யென்பதாகவும் கூறினர். எனினும், அவர் அந்தப் பார்ல மென்டைக் கலைத்துப் புதுத் தேர்தலை நடத்தியபோது விக் கட்சியினர் பழையபடியே அதிக ஓட்டுக்களைப் பெற்

1. Royal Commissions. 2. Peel. 3. *The Tamworth Manifesto.*
4. The "Conservative" Party.

றுத் தோர்த லடைந்தனர். ஆகவே, பீல் தமது 'நூறு நாட்கள்' அதிகாரத்துக்குப்பின் தம் பதவியை ராஜி நாமா செய்யவேண்டியவ ரானார். மெல்போர்ன் பிரபுவைத்[1] தலைமையமைச்சராகக் கொண்டு விக் கட்சியினர் மீண்டும் பதவி யேற்றனர்.

§ 282. ஆக்கத்தொழிற்சாலைகள் சட்டம்[2] :—மாறிய நிலைகளுக்கு ஏற்பப் புதிய சட்டங்கள் வேண்டுமென்பது ஆக்கத்தொழிற்சாலைகளில் சிறு பிள்ளைகளை வேலைக்கு வைத்துக்கொள்ளுதல் விஷயமாக வெளிப்படையாயிற்று. 'கிடைத்தல் – வேண்டல் விதி'ப்படி[3] முதலாளிகளோடு தொழிலாளர்கள் பேரம்செய்ய விடப்படவேண்டுமென் பது நல்லதா நல்லதல்லவா என்னும் விஷயமாக அபிப்பி ராய பேத மிருக்கலாம். ஆயினும், அத்தொழிலாளர்கள் ஆறு ஏழு வயது பிள்ளைகளாக இருக்கும்போது இந்தக் கொள்கை நியாயமானதல்ல. இயந்திரங்களைக் கவனித் துக்கொள்ளும் வேலைகள் பலவற்றைப் பிள்ளைகள் செய்ய லாம். அப்போதைய கஷ்ட நிலையில் குடும்ப வருமானத் தில் வாரத்துக்கு ஒன்று அல்லது இரண்டு ஷில்லிங் சேரும் என்பதைக் கருதிப் பெற்றோர்கள் பிள்ளைகளையும் வேலைக்கு அனுப்பவேண்டியவர்களா யிருந்தனர். ஆகவே, பிள்ளை களுக்கு நடக்க முடிந்ததும் அவர்கள் ஆலைகளிலோ கனி களிலோ தினம் பத்து, பன்னிரண்டு, அல்லது பதினான்கு மணிநேரம் காற்றடைப்பான நிலைகளில் வேலைசெய்ய அனுப்பப்பட்டனர். அவர்களுக்குக் கல்வி கற்க வசதி யில்லை; வாழ்க்கையில் விளையாட்டையோ மகிழ்ச்சியையோ அவர்கள் அறியார். இத்தீமைகளைக் குறைக்க ஏதாவது சீர்திருத்தம் பேசப்படும்போதெல்லாம், ஆலைச்சொந்தக் காரர்கள் தங்கள் ஆலைகள் நெடுநேரம் வேலைசெய்ய

---

1. Lord Melbourne. 2. The Factory Act. 3. Law of Supply and Demand.

வில்லையானல் தாங்கள் ஒரேயடியாக அழிந்துபோய் விடுவர் என்று கூக்குரலிட்டனர்.

சிறுவர்களுக்காகப் பரிந்து மன்றாடியவர் ஆஷ்லெ பிரபு.[1] அவரே பிறகு ஷாப்ட்ஸ்பரி பிரபு[2] எனப் புகழ் பெற்றவர் (1801–1885). அவர் உயர் குடியில் பிறந்த ஒரு டோரி பூமான். மற்ெறாரு தாராள மனம் படைத்த டோரி பெரியாராகிய வில்பெர்போர்ஸைப்[3] போல் அவரும் தெய்வ பக்தி நிறைந்த ஒரு 'எவான்ஜெலிகல் சர்ச்மன்.'[4] தொழிற்சாலைகளின் நிலைமைகளை ஆராய ஒரு அரசர் ஆராய்வுக் குழுவினை[5] நியமிக்க அவர் துரைத்தனத்தைத் தூண்டினார். அக் குழுவினர் வெளியிட்ட அறிக்கை பார்லமென்டைத் திகைப்படையச் செய்தது. நிலையை மாற்ற அவர்கள் உடனே நடவடிக்கை யெடுத்துக்கொண்டனர். 1833-ல் நிறைவேறிய தொழிற்சாலைகள் சட்டம்[6] ஒன்பது வயதுக்குட்பட்ட சிறுவர்களை வேலையில் வைத்துக்கொள்ளவே கூடாதென்று திட்டஞ் செய்தது. பதின்மூன்று வயதுக் குட்பட்டவர்களிடம் தினம் எட்டுமணி நேரத்துக்குமேல் வேலைவாங்கக் கூடாதென்றும், பதினெட்டுக்குட்பட்ட இளைஞர்கள் பதின்மூன்றரை மணி நேரத்துக்குமேல் வேலைசெய்யக்கூடாது என்றும் கூறியது. இந்த விதிகளைக் கடைப்பிடித்து நடக்கிறார்களா என்று பார்க்கத் துரைத்தனத்தார் கண்காணிப்பாளர்களை நியமிக்க வேண்டும். சட்ட பாரமரிப்பு இதுவரை அவ்வவ்விடத்துக் கௌரவ அமைதித்தலைவர்களைப்[7] பொறுத்திருந்தது. சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்களை அதற்கு நியமித்தது இதுதான் முதல்தரம். இதையே 'உத்தியோக அதிகாரிகளது ஆட்சி'யின்[8] ஆரம்ப மெனலாம். இந்தச் சட்டத்தி

---

1. Lord Ashley. 2. Lord Shaftesbury. 3. Wilberforce. 4. Evangelical Churchman. 5. A Royal Commission. 6. Factory Act. 7. Local Magistrates. 8. Bureaucracy.

ஞல் முதலாளிகள் அழிந்துவிடவில்லை என்பதை அவர்கள் விரைவிலேயே உணர்ந்துகொண்டனர். ஏனென்ருல், இக் கட்டுத்திட்டங்களெல்லாம் எல்லோரையும் ஒரேவித மாகவே பாதித்தன.

§ 233. புதிய ஏழைகள் சட்டம்[1]:—ஏழைகளுக்கு ஆதரவு அளிக்கவேண்டியது அக்கால நிலைக்கு அவசிய மான மற்ருெரு அவசரமான சீர்திருத்தம். எலிசபெத் காலத்திலிருந்து (§ 115) நடைமுறையிலிருந்துவந்த ஏழை கள் சட்டத்தின்படி, ஒவ்வொரு நிலப்பிரிவிலுமுள்ள நிலம்படைத்தவர்கள்மீது ஒரு வரி விதிக்கப்பட்டு அவ் வாறு சேர்ந்த தொகையை அவ்வவ்விடத்து ஏழைகளின் ஆதரவுக்காகச் செலவிட ஆங்காங்கே தேர்ந்தெடுக்கப் பட்ட 'பாதுகாப்பாளர்கள்'[2] இருந்தனர். ஆயினும், பயிர்த்தொழிலிலும் இயந்திரங்களைக்கொண்டு நடை பெற்ற ஆக்கத்தொழில்களிலும் ஏற்பட்ட அபிவிருத்தி களாலும் மக்கள்கூட்டத்தின் பெருக்கத்தாலும் கூலிகள் மிகக் குறைந்துவிட்டதால், ஏழைகளுக்கு இந்தப் பழைய முறைப்படி கிடைத்துவந்த ஆதரவு நெடுங்காலமாகவே போதியதாக இல்லை. பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதியில், பயிர்வேலைகளுக்குக் கூலி வாரத்துக்குச் சுமார் ஆறு ஷில்லிங்குக்கு இறங்கிவிட்டதோடு, ரொட்டி அப் போது பஞ்சவிலைகளுக்குத்தான் கிடைத்தது. ஆகவே, பல்லாயிரக்கணக்கான தொழிலாளர் குடும்பத்தினர் பட்டினிகிடக்கவேண்டியவ ராயினர். இந்த நிலையின் விளைவாக நாட்டில் 'ஜாக்கொபின்' கலகங்கள் பரவுமோ வென்று நாடாளும் வகுப்பினர் பயந்துவிட்டனர். பெர்க் ஷைர் அமைதித் தலைவர்கள்[3] நியுபரிக்கு[4] அடுத்த ஸ்பீன் ஹாம்லண்டில்[5] கூடி அவரவர்களுக்குக் கிடைக்கும் கூலிக்

1. The New Poor Law. 2. 'Guardians'. 3. Berkshire Magistrates. 4. Newbury. 5. Speenhamland.

கும் குடும்ப அங்கத்தினரின் எண்ணிக்கைக்கும் தானிய விலைக்கும் ஏற்றவாறு ஒரு விகிதாசாரம் வகுத்து அதன்படி ஏழைகளுக்கு ஆதரவளித்து அவர்கள் பட்டினிகிடக்காம லிருக்கப் பார்த்துக்கொள்ளவேண்டுமென்று தீர்மானித் தனர். மற்ற பிரிவுகளும் விரைவில் இவ்விதமே தீர்மானித் தன. இந்த ஸ்பீன்ஹாம்லண்ட் திட்டம்[1] நாடெங்கும் பாவியது. அதனால் அப்போதைய நிலையில் ஏழைகளுக்கு ஆதரவு கிடைத்தபோதிலும், மூன்று வருந்தத்தக்க விளைவு கள் ஏற்பட்டன. முதலாவதாக, வரிகொடுப்போர் செல வில் குறைந்த கூலிக்கு அவர்களுக்கு ஆட்கள் கிடைப்பா தலால், உயிர்வாழ்தலுக்குத் தேவையான கூலியைத்[2] தம் தொழிலாளர்களுக்குக் கொடுக்கவேண்டு மென்பதைப் பற்றி முதலாளிகள் இனிக் கவலைப்படப் போவதில்லை. இரண்டாவதாக, தொழிலாளர்கள் தன்மதிப் பிழந்தனர்; எவ்வளவு உழைத்தாலும் எவ்வளவு செட்டாக வாழ்ந் தாலும் 'பாரிஷ் ஆதர'வின்றி[3] வாழமுடியாதபடி அவ்வளவு குறைவாக அவர்கள் கூலிகள் இறங்கிவிட்டன. அதைத் தங்கள் மாமூல் வருமானத்தின் ஒரு பகுதியாக அவர்கள் கருதலாயினர். மூன்றாவதாக, சில பிரிவுகளில் 'ஏழைகள் வரி'[4] வாடகைப் பணத்தைவிட[5] அதிகமாய்விட்டது. அதனால் ஆயிரக்கணக்கான குடியானவர்கள் நஷ்ட மடைந் தனர். பலர் பயிர்த்தொழிலை விட்டுத் தாங்களும் கூலி யாட்களாக மாறிவிட்டனர். அந்நிலையில் அவர்கள் ஏழை கள் வரிக்குத் தங்கள் பணத்தைக் கொடுப்பதற்குப்பதில் தாங்களே அதில் பங்கு வாங்கிக்கொள்ளலா மல்லவா?

இந்தச் சிக்கல்களால் நாட்டின் வளம் குன்றிவிடும் போல் தோன்றியது. இவ்விஷயங்களைத் தீர்மையாக ஆராய்ந்து ஒரு அறிக்கை வெளியிட எட்வின் சாட்விக்[6]

1. The 'Speenhamland System'. 2. A living wage. 3. 'Parish Relief'. 4. The Poor Rate. 5. Rent. 6. Edwin Chadwick.

என்பவர் தலைமையின்கீழ் ஒரு ஆராய்வுக் குழு[1] நியமிக்கப் பெற்றது. சாட்விக் ஒரு அடிப்படையான சீர்திருத்த வாதி[2]; தெளிவும் அனுபவ அறிவும் நிறைந்தவர். இந்த ஆராய்வுக் குழுவினர் வெளியிட்ட அறிக்கையின் விளைவே ஏழைகள் சட்டத் திருத்தம்[3] (1834). அதன்படி, வெளியி லிருந்து வரும் உடல்வலிவுள்ள மக்களுக்கு ஆதரவு மறுக் கப்பட்டது. ஏழைகள் வரியிலிருந்து உதவி நாடியவர்கள் 'தொழிற்கூடங்க'ளுக்கு[4] அனுப்பப்பட்டனர். அங்கு அவர்கள் தங்கள் குடும்பத்தினரிடமிருந்து பிரிந்து வாழ வேண்டும். வேண்டுமென்றே அவர்கள் வாழ்க்கை அத் தொழிற்கூடங்களில் வெளியிடங்களில் காட்டிலும் கஷ்ட மாக்கப்பட்டது. இந்த ஏற்பாடு முழுமையும் மூன்று ஏழைகள்சட்ட அதிகாரிகளின்[5] கண்காணிப்பின்கீழ் நடை பெறவேண்டும். அவர்களுள் சாட்விக்கும் ஒருவர்.

இதன் விளைவாக முதலாளிகள் தங்கள் ஆட்களுக்கு உயிர்வாழ்தலுக்குத் தேவையான கூலியைக் கொடுக்க வேண்டியவர்களாயினர்: அன்றேல் அவர்களுக்கு ஆட் களே கிடைப்பது அரிதாய்விடும். தொழிலாளர்களும் தங்களுக்குத் தேவையானவைகளுக்காக உண்மையாக உழைக்காவிடில் புதிய 'தொழிற்கூடங்'களாகிய 'சிறைக் கூடங்க'ளில்தான் வாழவேண்டி வரும். (இவ்விதமே அவை வழங்கப்பெற்றன). ஆயினும், இப்புதிய நிலை களுக்கு அனைவரும் சரிப்படுத்திக்கொள்ளப் பல ஆண்டு கள் ஆயின; இடைக்காலத்தில் இச்சட்டத்தினால் ஏழைத் தொழிலாளர்கள் பட்ட கஷ்டம் கொஞ்சமல்ல.

§ 284. **விக் அமைச்சின் இறங்கும்படியான காலம்:— 1832**-ல் சீர்திருத்த மசோதா சட்டமானபோது விக் கட்சியினர் டோரிகளைப் போலவே பல ஆண்டுகள் அதி

1. A Commission. 2. A Radical. 3. The Poor Law Amendment Act. 4. Workhouses. 5. Poor Law Commissioners.

காரம் வகிப்பார்கள் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர். ஆயினும், அவர்களுக்குப் பல இடைஞ்சல்கள் தோன்றின. ஆகவே, அவர்கள் விரைவிலேயே நாட்டுமக்களின் நம்பிக்கையை இழக்கலாயினர். முக்கியமாக, பணமுட்டுத் தோன்றியது. ஒவ்வொரு ஆண்டிலும் துரைத்தனச் செலவு வரவுக்கு மிஞ்சியது. வாணிபம் நல்ல நிலையில் இல்லாததால் வரி வருமானம் குறைந்தது. இந்தக் குறையை நிரப்பச் சுங்கங்களை அதிகமாக்க முயன்றால், வாணிபம் மேலும் மங்கி வரி வருமானம் முன்னைவிட அதிகமாகக் குன்றியது.

அயர்லண்டின் நிலையும் கவலைக்கிடமாயது. காதொலிக்கர் விடுதலையின்[1] விளைவாக ஓ கானெல்[2] இப்போது பார்லமென்ட் அங்கத்தினராக இருந்தார். அவரைத் தலைவராகக் கொண்டிருந்த ஒரு சிறிய ஐரிஷ் அங்கத்தினர் கூட்டம் "ஓ கானெலின் வால்"[3] எனப்பட்டது. அவர்கள் அயர்லண்டின் சுயேச்சை நிலையைப் பாதித்த இணைப்பு ஏற்பாட்டை[4]யும் (§ 250) ப்ராடெஸ்டன்ட் மதஸ்தாபனத்தின்[5] செலவுக்காக ஏழை ஐரிஷ் குடியானவர்கள்மீது விதிக்கப்பட்ட 'டைத்'[6] என்னும் வரியையும் ஒழிக்கக் கிளர்ச்சி செய்யலாயினர். அவ்விதமான வரியைக் கொடுத்தலை அவர்கள் மதம் ஒப்பவில்லை. ஆகவே, அதை அவர்கள் கொடுக்க மறுத்ததனால் ஏற்பட்ட சச்சரவுகள் ஒரு புரட்சியில் முடியும்போல் தோன்றின. ஓ கானெலும் அவர் 'வாலு'ம் எல்லா வகைகளிலும் பார்லமென்டின் வேலைகளுக்கு அடிக்கடி இடையூறு உண்டாக்கித் தங்கள் கோரிக்கைகளை வற்புறுத்திக்கொண்டு வந்தனர். ஆயினும், இவ்விஷயமாக அமைச்சர்களுக்குள் ஒருமித்த அபிப்பிராய மில்லை. 1835-ல் ஓ கானெல் அமைச்சர்களோடு

1. Catholic Emancipation. 2. O' Connell. 3. 'O'Connell's Tail.' 4. The Union. 5. The Protestant Church. 6. Tithes.

ஒரு அந்தரங்க ஒப்பந்தம்* செய்துகொண்டார். அதன் படி, 'டைத்' வரியை ஒழிக்க ஒரு சட்டம் இயற்றப்பெறு மானல் தாம் இணைப்பு ஏற்பாட்டை ரத்துசெய்யக் கிளர்ச்சிசெய்வதில்லை என்று ஒப்புக்கொண்டார். ஆயி னும், அது பார்லமென்டின்முன் வந்தபோது விக் கட்சி யினருள் பெரும்பான்மையோர் அதை எதிர்த்து அதற்கு விரோதமாக ஓட்டு கொடுத்தனர். ஓ கானெல் மீண்டும் முன்னிலும் மிக்க மும்முரத்துடன் தமது இருதலைக் கிளர்ச்சியில் ஈடுபட்டார். துரைத்தனத்துக்கும் இது ஊனத்தையே உண்டாக்கியது. தன் சொந்த ஆதரவாள ரின் நம்பிக்கையை அது இழக்க நேர்ந்தது.

மேலும், சீர்திருத்த மசோதா விஷயமாகத் தங்களை விக் கட்சியினர் ஏமாற்றிவிட்டதாக அடிப்படைச் சீர் திருத்த வாதிகள்[1] நினைத்ததால் அவர்கள் பார்லமென்டை மேலும் சீர்திருத்தும் நோக்கத்துடன் "உரிமைப் பத் திர"க் கிளர்ச்சி[2] என்பதொன்றைத் தொடங்கினர். இதோடு, துரைத்தனத்தாரின் புதிய ஏழைகள் சட்டம்[3] போன்ற சீர்திருத்தங்கள் நல்ல எண்ணத்தோடு இயற்றப் பட்டவைகளாயினும், அவற்றால் ஏழைகளுக்குப் பெரிய துன்பங்கள் நேரலாயின.

1837-ல் நான்காம் வில்லியம் இறந்தது விக் கட்சி யினரைச் சிறிது காலம் காப்பாற்றியது. அவருக்குப் பின் அரசியான அவர் தம்பி மகள் விக்டோரியா[4] அரசியல் அனுபவமற்ற பதினெட்டு வயது பெண்ணாயிருந்ததால், எவ்விஷயத்திலும் தலைமையமைச்சரே அவருக்கு வழி காட்டவேண்டியவ ரானார். அக்கடமையைச் செவ்வனே

* இதை 'லிச்பீல்ட் வீட்டு ஒப்பந்தம்'[5] என்றும் கூறுவதுண்டு.
1. Radicals. 2. The 'Chartist' agitation. 3. The New Poor Law.
4. Victoria. 5. 'The Lichfield House Compact'.

செலுத்த மெல்போர்ன் பிரபுவிடம்[1] மரியாதை, கனிவு, உலகானுபவம் முதலிய பல அருமையான குணங்கள் பொருந்தியிருந்தன. இளம் அரசிக்கு அவர் ஒரு தந்தையைப்போலிருந்து விஷயங்களைப் பக்குவமாகவும் தெம்பேற்படும்வகையிலும் விளக்கி வந்ததால், அரசிக்கு அவர்பால் ஒரு தனி அன்பும் மரியாதையும் உதித்தன. ஆகவே, அவரை விட்டுப் பீலைப்போன்ற விரைப்பான அறிவாளிகளைத் தமது முக்கிய அமைச்சராக அமர்த்திக்கொள்ளத் தயங்கித் தயங்கி அரசி நாள்கடத்திக்கொண்டே வந்தார்.

முடிவில் அந்நாள் எவ்விதம் வந்தது என்பதன் விவரங்களை அடுத்த அத்தியாயத்தில் படிப்போம்.

---

## அறுபத்தைந்தாம் அத்தியாயம்

# வாணிபத்தின் கட்டவிழ்த்தல்[2]

## (1841—1846)

§ 285. பீலின் 'கட்டுப்பாடற்ற வாணிப'[3] சம்பந்தமான முதல் வரவு செலவுத் திட்டம்[4]:—எட்டு ஆண்டுகளுக்குமுன் சீர்திருத்தப் பாதையில் மிகுந்த நம்பிக்கையுடன் செல்லத்தொடங்கிய விக் துரைத்தனம் 1838-க்குள் நாட்டுமக்களின் ஆதரவை இழந்துவிட்டது. ஓகானெலின் கிளர்ச்சிக்கு இடங்கொடுத்ததும், உரிமைப் பத்திரக் கிளர்ச்சிக்காரர்களின்[5] கோரிக்கைகளுக்குச் செவிசாய்க்க மறுத்ததும், புதிய ஏழைகள் சட்டத்தின்[6] கடுமையும் இதற்கு ஒருவகையில் காரணங்களாக இருந்தபோதிலும், முக்கியமாகச் செலவுக்கேற்ற வரவைத் தேட முடியாததனல்தான் அவர்கள் ஆட்சி முடிவடைந்தது. அம்

---

1. Lord Melbourne. 2. The unfettering of trade. 3. 'Free Trade'. 4. Budget. 5. The Chartists. 6. The New Poor Law.

முடிவு 1841-ல் தானியச் சட்டத்தைத்[1] (§ 268) திருத்தியமைக்க அவர்கள் முயன்றபோது நேர்ந்தது. அச்சீர்திருத்தம் மிகவும் அவசியமானதே; ஆயினும், அவர்கள் கட்சியைச் சேர்ந்த நிலம்படைத்தவர்களுக்கே அது பெரும் பீதியை உண்டாக்கிவிட்டதால், அது பார்லமென்டில் நிறைவேறுமற் போய்விட்டது. அந்தப் பார்லமென்ட் கலைக்கப்பட்டு மற்றொரு புதுத் தேர்தல் நடந்தபோது நிதானப்போக்கினர்[2] அதிக இடங்களைப் பெற்றனர். ஆகவே, விக் அமைச்சர்கள் ராஜிநாமா செய்துவிட்டனர். ஆண்டு தோறும் புதிது புதிதாக மூண்டு வரும் தொல்லைகளில் சிக்கிக்கொண்டு துரைத்தனத்தை நடத்த முயன்று அவதிப்படுவதைவிட இவ்வாறு விடுதலையடைவதே அவர்களுக்கு மேல்.

பீலுக்கு இது ஒரு நல்ல தருணம். காதொலிக்கர் விடுதலையின்போதும் பார்லமென்ட் சீர்திருத்தத்தின் போதும் (§ 279) முறிவுற்று ஒடுங்கிய டோரி கட்சியைப் பீல் இத்தனை காலமாகத் திருத்தி அமைத்துக்கொண்டிருந்தார். அது இப்போது புதுப் பலத்துடனும் 'நிதானப் போக்கினர்' என்னும் புதுப்பெயருடனும் துலங்கியது. நிலம்படைத்தவர்கள் ஆதரவே அதன் முக்கிய பலம். அதன் கொள்கைகளைப் பீல் 'டாம்வொர்த் அறிக்கை'யில்[3] (§ 281) வெளியிட்டிருந்தார். அப்போதைக் கப்போது அவசியமாகக் கருதப்படும் சீர்திருத்தங்களை நிதான மனப்பான்மையுடன் தீர்மையாக ஆலோசித்துச் செய்து துரைத்தனத்தை உள்ளவாறே நடத்திக்கொண்டு போவதே அவர்களின் சிறப்பான நோக்கம். பீல் பதவியேற்க நேர்ந்தபோது இருந்த நிலையில் அவர் இரு கடமைகளை இயற்றவேண்டியவ ரானார்: ஒன்று, துரைத்தனத்

1. The Corn Law. 2. The Conservatives. 3. The Tamworth Manifesto.

தின் வரவு செலவுச் சிக்கல்களைத் தீர்த்தல்; மற்றொன்று, தானியச் சட்டங்களை நிலைக்க வைத்தல்.

அரசியல் வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த பலரைப் போல் பீல் செயல்திற மற்றவ ரல்லர். அவர் தேடிய சிகிச்சை மிகவும் துணிச்சலானது. வரிகளைக் குறைத்து அவர் வருமானத்தைப் பெருக்கத் தீர்மானித்தார். ஹஸ்கிஸன் கட்டுப்பாடற்ற வாணிபத்துக்கு[1] வழிபண்ணி வைத்ததும் (§ 275) விக் அமைச்சர்கள் இறக்குமதிப் பண்டங்கள்மேல் விதிக்கப்படும் சுங்கங்களில் மிக்க சிக்கல்களைப் புகுத்திவிட்டனர். இறக்குமதியான ஐந்நூறு வெவ்வேறு வகையான பண்டங்களின்மீது சுங்கங்கள் விதிக்கப்பட்டிருந்தன. அவைகளை விதிக்கப் பார்லமெண்டில் எண்பது தனிப்பட்ட சட்டங்கள் இயற்றப்பட்டிருந்தன. அச்சுங்கங்களை நிர்ணயித்து வசூலிக்க ஒரு பட்டாளம் வரி தண்டும் உத்தியோகஸ்தர்கள் வேண்டியிருந்தனர். சில வரிகளால் யாதொரு வருமானமும் கிடைக்கவில்லை; ஏனெனில், அவற்றால் பண்டங்களின் விலை மிக அதிகமாக ஏறிவிட்டதால் மக்களால் அவைகளை வாங்க முடியவில்லை. இவ்விதமாகவே பிரிட்டனின் வெளிநாட்டு வாணிபம் ஒடுங்கிவிட்டது. வெளிநாடுகள் பிரிட்டனின் பொருள்களைத் தங்கள் நாட்டுப் பொருள்களுக்குப் பதிலாகத்தான் வாங்க முடியும்.

சுங்கங்களைக் குறைப்பதால், வாணிபம் துளிர்த்து, நாட்டுமக்களின் செலவிடும் சக்தி மிகுந்து, பண்டங்களுக்கு அதிக தேவை ஏற்படுமென்றும், மற்ற வரிகள் அதிக வருவாயை ஈட்டிக்கொடுக்குமென்றும் பீல் எதிர்பார்த்தார். இந்தச் சீர்திருத்தத்தின் முழு பலனையும் காணச் சிறிது காலமாகுமாதலால், சில ஆண்டுகளுக்கு

1. Free Trade.

அவர் பழைய வருமான வரியை (ஒரு பவுண்டுக்கு ஆறு பென்ஸ் வீதம்) மீண்டும் விதித்து வைக்கலானார்.

புதிய திட்டத்தின் முதல் ஆண்டிலேயே நல்ல பலன் கிடைத்ததால், அது 1843-ல் சிறிது விஸ்தரிக்கப்பட்டது: அடுத்த இரண்டாண்டுகளில் அது மேலும் விஸ்தரிக்கப் பட்டது. குடித்தனச் செலவுகள் எங்கும் குறைந்தன; வாணிபம் புத்துயிர் பெற்றது; ஆண்டுதோறும் துரைத் தனத்துக்குச் செலவுக்கேற்ற வரவு கிடைத்துக்கொண்டு வந்தது. இத்தகைய வளம் பொதுவில் மிகவும் மெதுவா கத்தான் வளரும். மேலும், அவ்வரிகளுள் மிகவும் இடைஞ்சலான தானிய வரிகளைப் பீல் நீக்கிவிடத் துணி யாததால் அது மிகவும் தடைப்பட்டே கிடந்தது.

§ 286. தானியச் சட்ட எதிர்ப்புச் சங்கம்[1] :—பலர் —பெரும்பாலும் நல்ல வருவாயுள்ள வியாபாரிகளும் ஆக்கத்தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களும்—நிலம்படைத்த வகுப்பினர்களின் அனுகூலத்துக்காகப் பிரிட்டனுள் வெளி நாட்டுத் தானியங்களை வரவொட்டாமல் தடுத்துக்கொண் டிருந்த சுங்கங்கள் ஏழைமக்களின் முக்கிய உணவின் விலையை ஏற்றிவைத்ததோடு வியாபாரத்தையும் ஒடுக்கிக் கொண்டு வந்தன என்பதை உணர்ந்தனர். ஆகவே, இது விஷயமாகப் பொதுமக்களின் அறிவைத் துலக்கித் தானியச் சட்டங்களை ரத்துசெய்துவிடுமாறு பார்ல மென்டை வற்புறுத்துவதற்கு அவர்கள் ஒரு பெரிய இயக் கத்தை உண்டாக்கினர். நாடெங்கும் கூட்டங்கள் கூட்டிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன; அச்சிட்ட தாள் களும் கட்டுரைகளும் மக்களுக்கு வழங்கப்பெற்றன. இக் கிளர்ச்சிக்கு இரண்டு புதிய சாதனங்கள் மிக்க வசதி யளித்தன: (1) 1840-ல் ஏற்படுத்தப்பட்ட பென்னித் தபால்[2] திட்டத்தின் பலனை எவ்விஷயத்தையும் எவரும்

1. The Anti-Corn-Law League. 2. The Penny Post.

காலைச் சாப்பாட்டு வேளைக்குள் படித்துணர்ந்துகொள்ளும்படி தபாலில் அனுப்ப முடிந்தது. (2) புதிதாகத் தோன்றியிருந்த இருப்புப்பாதைகள் சொற்பொழிவாளர்கள் சுலபமாக நாடெங்கும் சுற்றிவர அனுகூலமா யிருந்தன.

இந்த இயக்கத்தின் மூலபுருஷர்கள் ரிச்சர்ட் காப்டென், ஜான் பிரைட்[1] என்ற இருவர். அவர்கள் ஆக்கத்தொழில்களில் ஈடுபட்டிருந்த பணக்காரர்கள். ஆயினும், இந்த இயக்கம் நாட்டினை வளமுறச் செய்யும் என்னும் நம்பிக்கையினால் இதில் ஈடுபெற அவர்கள் தங்கள் தொழிலையும் விட்டு வந்தனர். காப்டென் தெளிவாகவும் வெளிப்படையாகவும் பேசிக் கேட்போரின் பகுத்தறிவைத் தூண்டும் சக்தி வாய்ந்தவர்; பிரைட் உணர்ச்சி ததும்பப் பேசிக் கேட்போர்க்கு ஆத்திர முண்டாகும்படி செய்யவல்லவர். ஏழைகளை வாட்டி உயர்குடிப் பிறப்பினராகிய நிலம்படைத்தவர்களைக் கொழுக்கவைக்கும் திட்டத்தைத் தகர்த்தெறிய வேண்டுமென்று ஆவேசத்துடன் எழுந்தனர் அவர் பேச்சைக் கேட்டவர்கள்.

1841-ல் காப்டென் பார்லமென்ட் அங்கத்தினரானார். ஆகவே, அதில் இவ்விஷயத்தைப்பற்றி ஆண்டுதோறும் வற்புறுத்திப் பேச அவருக்குச் சந்தர்ப்பம் வாய்த்துக் கொண்டிருந்தது. தானியச் சட்டங்கள் எப்பொழுதேனும் ரத்தாகவேண்டியவையே யென்று பீல் உணர்ந்துகொண்டார். ஆனால், அவர் தானியச் சட்டங்களை நிலைக்கப்பண்ணுவதாக வாக்குறுதி கொடுத்துவிட்டுப் பதவி ஏற்றுக்கொண்டவர்; மேலும், அவரை ஆதரித்தவர்கள் அவைகளை ஒரு வகையான தெய்வச் சட்டங்களைப்போல் மதித்தனர். ஆயினும், பீல் யாரோடும் தாராளமாகப் பழகும் பண்புடையவராக இல்லையாதலால்,

1. Richard Cobden, John Bright.

அவரோடு பதவி வகித்தவர்களுக்கே இவ்விஷயமாக அவர் அபிப்பிராயம் மெதுவாக மாறிக்கொண்டு வந்தது தெரியாது. அவர் மட்டும் இதைத் தீர ஆலோசித்துத் தமது மாறிய கொள்கையை வெளியிடுவதற்குத் தக்க தருணமொன்றை எதிர்பார்த்திருந்தார். இரண்டோராண்டுகளில் நடக்க இருந்த பொதுத்தேர்தலின்போது தமது புதிய அபிப்பிராயத்தை அறிவித்து அதை நிறைவேற்றத் தம் கட்சியின் அனுமதியையும் நாட்டின் ஆதரவையும் வெளிப்படையாக நாடுவதென்று அவர் தீர்மானித்திருந்தார்.

§ 287. தானியச் சட்டங்களின் நீக்கம்[1] :—எதிர்பாராத விபத்தொன்றால் பீல் தம் தீர்மானப்படி நடக்க முடியவில்லை. 1845–ல் அயர்லண்டில் உருளைக்கிழங்குப் பயிர் அழிந்துவிட்டது. அந் நாட்டுக் குடியானவர்களுக்கு உருளைக்கிழங்கே முக்கிய உணவாயிருந்ததால் அவர்கள் அவ்வாண்டின் இலையுதிர் காலம் வருவதற்குள்ளாகவே பட்டினிகிடக்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. இந்நிலைகளில் இங்லண்டிலிருந்து தானியம் கொண்டுவந்து அயர்லண்ட் மக்களின் பசியைத் தீர்க்கலாம்; ஆயினும், அவ்வாண்டில் மிகக் கனமாகப் பெய்த கோடை மழையினால் இங்லண்டின் தானியப் பயிரும் அழிந்துவிட்டது. காப்டென் பிற்காலத்தில் கூறியபடி, இந்த அகால மழை தானியச் சட்டங்களை அடித்துக்கொண்டு போய்விட்டது. அயர்லண்டில் மக்கள் படும் பாட்டைக் கேட்டுப் பீல் சொல்லமுடியாத துயாமுற்று, அவர்களுக்கு உதவிபுரிய உடனே ஏதாவது செய்தாகவேண்டும் என்று தீர்மானித்தார். வெளிநாட்டுத் தானியம் பிரிட்டிஷ் துறைமுகங்களுக்கு யாதொரு தடையுமின்றி வரமுடிந்தால்தான் மக்கள் துயரம் தீரும். ஆகவே, தானியச் சட்டங்களைத்

1. Repeal of the Corn Laws.

தாம் ரத்துசெய்யப்போவதாக அவர் அமைச்சர் குழுவில்[1] வெளியிட்டார். இன்னும் பழைய மனப்பான்மையோடிருந்த சில டோரி அமைச்சர்கள் இந்த இக்கட்டான நிலையிலும் அவ்வாறு செய்யக்கூடாது என்றனர். பீல் தலைமை அமைச்சர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். விக் கட்சியினரின் தலைவராயிருந்த ஜான் ரசெல் பிரபுவை[2] அமைச்சமைக்க அரசியார் கட்டளையிட்டார். சிறிது காலத்துக்கு முன்தான் இவர் தம்மைத் தேர்ந்தெடுத்தவர்களுக்கு எழுதிய ஒரு அறிக்கையில் தானியச் சட்டங்கள் 'அனைத்தையும் உடனே' ரத்துசெய்தல் விக்கட்சியினரின் அரசியல் கொள்கை என்று கூறியிருந்தார். ஆயினும், இவருக்கும் இங்கிலையில் தம் கட்சியினர் அனைவரின் ஒன்றுபட்ட ஆதரவு இச்சீர்திருத்தத்துக்குக் கிடைப்பது அரிதாயிருந்தது. ஏனென்றால், டோரி தலைவர்களுள் முக்கியமானவர்களைப் போல் விக் கட்சியிலும் செல்வாக்கு மிக்கவர்கள் நிலம்படைத்த உயர்குடிப்பிறப்பினராகவே இருந்தனர். ஆகவே, ஜான் ரசெல் பிரபு அமைச்சமைக்க முடியாமல் மீண்டும் பீலுக்கே பதவி திரும்பியது.

சர் ராபர்ட் பீல் மிக்க நம்பிக்கையுடன் மீண்டும் பதவி ஏற்றார். தம் கட்சியைச் சேர்ந்தவர்களுள் பலர் அவர் கொள்கையை ஏற்கவில்லை யென்பது அவருக்குத் தெரியும். ஆயினும், குள்ளநரி வேட்டையில் நிபுணர்களாயிருந்த அந் நாட்டுக்கனவான்கள்[3] நன்றாகப் பேசவோ மற்றவர்களைத் தம்வழித் திருப்பவோ திறமையற்றவர்களாக இருந்ததால், அவர்களது எதிர்ப்புக்காக அவர் அஞ்சவில்லை.

ஆயினும், அவர் ஒரு ஆளை மறந்துவிட்டார். டோரிகளுள் பெஞ்ஜமின் டிஸ்ரேலி[4] (1804-1881) என்ற ஒரு

---

1. The Cabinet. 2. Lord John Russell. 3. Country gentlemen.
4. Benjamin Disraeli.

இளம் யூதர் இருந்தார். அவர் சாமர்த்தியசாலி. பீல் 1841-ல் பதவியேற்றபோது தம் அமைச்சில் டிஸ்ரேலிக்கு ஓரிடங் கொடுக்க மறுத்துவிட்டார். ஆகவே, அவர் இப்போது பீலுக்கு விரோதமாக வேலை செய்ய ஆரம்பித்தார். எந்தச் சட்டங்களைப் பாதுகாப்பதற்காகப் பீல் தலைமை அமைச்சர் பதவியில் அமர்த்தப்பட்டாரோ அவைகளையே அவர் ரத்துசெய்ய முயலுவது தம் கட்சியினர்க்குப் பெரிய துரோகமாகும் என்று திறமைமிக்க பல சொற்பொழிவுகளில் டிஸ்ரேலி எடுத்துச்சொல்லலானர். டோரி கட்சியினர் 'பீல் கொள்கையினர்'[1], 'பாதுகாப்புக் கொள்கையினர்'[2] என இரு பிரிவாயினர். விக் ஓட்டுக்களின் ஆதரவுடன் பீல் தமது தீர்மானத்தை நிறைவேற்றி வைத்தார். ஆயினும், விரைவிலேயே மற்றொரு விஷயத்தில், 'பாதுகாப்புக் கொள்கையினர்' 'விக் எதிர்ப்புக் கட்சியா'[3]ருடன் சேர்ந்து பீலுக்குத் தோல்வி தேடி வைத்தனர். ஆகவே, அவர் மீண்டும் தம் பதவியை விட்டு விலகினர்.

'நிதானப் போக்கின' ரிடையே[4] தோன்றிய பிளவு பிறகு எப்போதும் கூடவில்லை. டார்பி பிரபு[5] 'பாதுகாப்புக் கொள்கையின'ரின் தலைவரானர்: அவருக்குத் துணையாக டிஸ்ரேலி இருந்தார்; 'பீல் கொள்கையின'ரைவிடப் 'பாதுகாப்புக் கொள்கையின'ரின் தொகை அதிகமே. ஆயினும், கட்சியில் திறமைமிக்கவர்களாக இருந்தவர்களுள் பெரும்பான்மையோர் 'பீல் கொள்கையின'ரே. தாம் பெரு மதிப்புடன் பாராட்டிய தலைவரை எதிர்த்த டிஸ்ரேலியை அவர்கள் எப்போதும் மன்னிக்கத் தயாராயில்லை. இதன் விளைவாக 'விக் தாராள மனப்போக்கினர்'[6] சிறிது காலம் விட்டு விட்டுச் சுமார் முப்பது ஆண்டுகள் அதிகாரம் வகிக்கலாயினர் (1846-1874). பீல் அதற்

1. Peelites. 2. Protectionists. 3. The Whig Opposition.
4. Conservatives. 5. Lord Derby. 6. The Whig Liberals.

கப்பால் பதவி ஏற்கவே இல்லை. இறக்கும் வரை (1850) அவர் எல்லோராலும் மிக்க மரியாதையோடு நடத்தப் பெற்று எதிர்ப்புக்கட்சியினரோடு அமர்ந்திருந்தார்.

---

## அறுபத்தாறும் அத்தியாயம்

# நல்ல காலம்

## (1835—1852)

§ 288. தொழிலாளர் வகுப்பினரின் சொந்த முயற்சி:— பிரிட்டனின் வரித் திட்டத்தில் பீல் புகுத்திய புரட்சிகரமான மாறுதல்கள் அந்த நூற்றாண்டின் முக்கியமான திரும்புங் காலத்தைக்[1] குறிப்பதாகக் கருதப்படுகின்றன. அதுமுதல் ஆக்கத்தொழில்களிலும் வாணிபத்திலும் மிக்க வளம் காணப்பட்டது. இதன் பலனைத் தொழிலாளர் வகுப்பினரும் நலமுற்றனர். வாட்டர்லூவுக்குப் பிறகு அவர்கள் பட்ட கஷ்டங்கள் பெரும்பான்மையும் நீங்கின. ஆயினும், இந்நலன்கள் அந்நூற்றாண்டின் நடுவிற்குப் பிறகே தோன்றலாயின. அந்நூற்றாண்டின் ஐந்தாம் பத்து 'பட்டினி கிடந்த' ஐந்தாம் பத்து[2] என இன்றும் வழங்கப் படுகிறது. ஆயினும், உண்மையில் நான்காம் பத்தே[3] அதைவிட அதிகமாகப் பட்டினி கிடந்தது. இந்தக் கஷ்ட காலங்களில் தொழிலாளர் வகுப்பினர் தம்மளவில் தங்கள் நிலையை மேம்படுத்திக்கொள்ளச் செய்த முயற்சிகள் பல. அவற்றுள் சிலவற்றை இங்குச் சுருக்கமாகக் கூறுவோம்.

முதலில் தொழிற்கட்டுப்பாடு சங்கங்கள் இதற்குப் பயன்படுத்தப்பட்டன. 1834-ல் ராபர்ட் ஓவென்[4] (கு. 196) என்பவர் ஒன்றுபடுத்தப்பட்ட பெரிய தேசிய

---

1. turning point. 2. 'The hungry forties'. 3. The thirties.
4. Robert Owen.

தொழிற்கட்டுப்பாடு சங்கம்[1] என்பதைத் தோற்றுவித்து, அதன்கீழ் முன்னமே தோன்றியிருந்த சங்கங்களையெல்லாம் இணைத்துவைத்தார். நாடெங்கும் ஒரே நாளில் வேலைநிறுத்தம்[2] செய்து அப்போதிருந்த முதலாளிகள் அமைப்பைத்[3] திடுமெனக் கவிழ்த்துவிட்டு, ஆக்கத்தொழில்களைத் தேசிய வியாபார ஸ்தாபனங்கள் மூலம் நடத்திவரவேண்டுமென்று அவர் ஒரு திட்டம்போட்டார். அவ்வகையில் தொழிலாளரிடையே போட்டியை அறவே ஒழித்துவிடலாம் என்பது அவர் கண்ட கனவு. ஏழைத் தொழிலாளர்கள் தமக்கு நல்ல காலம் பிறந்துவிட்டதென்ற மலைப்பில் தொழிற்கட்டுப்பாடு சங்கங்களில் பல்லாயிரக் கணக்கில் சேர்ந்தனர். துரைத்தனத்தார் இக்கிளர்ச்சியைக் கண்டு திகிலடைந்து அதை எவ்விதமேனும் அடக்கிவிடப் பார்த்தனர்.* ஆயினும், 'பெரிய தேசிய சங்க'த்தினால் அதிகமாக ஒன்றும் சாதிக்க முடியவில்லை

---

* 'டார்செஸ்டர் தொழிலாளர்கள்'[4] விஷயமாக அவர்கள் நடந்துகொண்டது அவர்கள் கையாண்ட முறைக்கு ஒருதாரணமாகும். டார்செட் ஷைரில் டால்படிவில்[5] யாதொரு தீங்கையும் நினைக்காத சில தொழிலாளர்கள் தங்கள் சங்கத்தின் அங்கத்தினர்களை ஆணையிட்டுச் சத்தியஞ்செய்ய வைத்தனர்[6]. அச்சங்கத்தின் விதிகள் வேலைநிறுத்தம் தவறான முறையென்று கூறின. ஆயினும், துரைத்தனத்தார் அந்த அங்கத்தினர்களைக் கைதுசெய்து மற்றவர்களை ஆணையிட்டுச் சத்தியஞ்செய்ய வைத்ததற்காக அவர்களை நீதிமன்றத்தில் விசாரிக்க வைத்து ஏழு ஆண்டுகள் தீவாந்தர சிக்ஷைக்கு ஆளாக்கினர். (அவ்விதம் ஆணையிடுதல் ஒரு குற்றமென்று ஒரு பழைய பார்லமென்ட் சட்டம் கூறியது. அதை அநேகர் மறந்தேவிட்டனர்). ஆயினும், இத்தண்டனை மிக அநீதியானதென்று நாடெங்கும் கிளர்ச்சி யேற்பட்டதால் அவர்கள் சில ஆண்டுகளில் மன்னிப்பு பெற்று விடுதலையடைந்தனர்.

1. The Grand National Consolidated Trade Union. 2. A General Strike. 3. Capitalist System. 4. The 'Dorchester Labourers.'. 5. Tolpuddle in Dorsetshire. 6. Administered an oath

அதன் அங்கத்தினர் தொகையே அதன் வேலைகளுக்கு இடையூறாக இருந்தது. இருப்புப்பாதைகளாலும் பென்னி தபாலாலும் போக்குவரத்துக்கு அப்போது வசதிகள் அமைந்தில்லை. அங்கங்கே உள்ள சங்கங்களைத் தங்களிஷ்டப்படி சுயேச்சையாக நடப்பதை நடுச்சங்கம்[1] தடுக்க முடியவில்லை; மேலும், முதலாளிகள் தங்கள் ஆட்களைத் தொழிலாளர் கட்டுப்பாடு சங்கங்களை நிராகரிக்குமாறு கட்டாயப்படுத்தி அவ்விதம் உறுதிகூறவைப்பதையும் நடுச்சங்கம் தடுக்கமுடியவில்லை. ஆகவே, இக்கிளர்ச்சி அதிகமாக ஒன்றையும் செய்யமுடியாமல் மறைந்துவிட்டது. தொழிற்கட்டுப்பாடு சங்கங்களின் நிலை முன்னைவிடக் கேவலமாய்விட்டது.

பிறகு, தொழிலாளர் வகுப்புகளுக்குப் பார்லமெண்டில் செல்வாக்கு தேடித்தர ஒரு கிளர்ச்சி தோன்றியது. அடிப்படைச் சீர்திருத்த வாதிகள்[2] 1832-ல் நிறைவேறிய சீர்திருத்தச் சட்டம் ஏதோ அதிகமாகச் சாதித்துவிடப் போகிறதென்று நம்பி ஏமாற்றமடைந்தனர் (§ 269). அது நடுத்தர வகுப்புகளுக்குத்தான்[3] ஓட்டுரிமை கொடுத்தது (§ 280). அவர்கள் தங்கள் கோரிக்கைகளை ஆறு தலைப்புக்களின்கீழ் அமைத்து மக்கள் உரிமைப் பத்திரம்[4] (கு. 198) என்பதொன்றைத் தயாரித்தனர். அவர்கள் இரவுகளில் தீவர்த்திகளுடன் ஊர்வலங்கள் ஏற்பாடுசெய்து பெரிய கூட்டங்கள் கூட்டினர். பல இடங்களின் பிரதிநிதிகள் ஒரு தேசிய மகாநாட்டில்[5] கூடிப் பார்லமெண்டுக்கு ஒரு மனு தயாரித்தனர். ஆயினும், அவர்களிடையே உள்ளுக்குள்ளே பல சச்சரவுகளிருந்ததால் அவர்கள் கிளர்ச்சி வலுக்கவில்லை. வில்லியம் லொவெட்[6] என்

1. The central organisation. 2. The Radicals. 3. The middle classes. 4. The People's Charter. 5. A National Convention. 6. William Lovett.

பவரைத் தலைவராகக்கொண்ட ஒரு கட்சி நியாயவரம்புக் குட்பட்ட கிளர்ச்சியைத்[1] தவிர மற்ற எதையும் ஆதரிக்க வில்லை. பியர்கஸ் ஓ கானர்[2] தலைமையில் திரண்ட 'பலாத்கார கட்சி'[3] தங்கள் மனு கவனிக்கப்படாம லிருக்குமானால் பலாத்கார முறைகளைக் கையாளவேண்டு மென்றனர். முடிவில் மனு கவனிக்கப்படவில்லை.

தலைவர்களைச் சிறையிலிட்டுத் துரைத்தனம் இக் கிளர்ச்சியைத் திடசித்தத்துடன் அடக்கியது. பலாத்கார வாதிகள் மிரட்டியபடி புரட்சியொன்றும் நிகழவில்லை. எனினும், நன்னோக்கமுள்ள பலர்க்கு 'உரிமைப் பத்திரம்' பல ஆண்டுகளுக்கு ஒரு சீரிய இலக்ஷியமாக இருந்தது. சில ஆண்டுகள் உறங்கியிருந்து 1848-ல் அது மீண்டும் கிளைத்தது. அவ்வாண்டில் ஓ கானர் கென்னிங்டன் மைதானத்தில்[4] ஒரு பெரிய கூட்டம் கூடப்போவதாகவும், அங்கிருந்து அது ஊர்வலமாக வந்து பார்லமென்டுக்கு ஒரு பிரம்மாண்டமான மனுவைக் கொடுக்கப்போவதாகவும் அறிவித்தார். ஆயினும், துரைத்தனம் அக்கூட்டம் நடக்கக் கூடாதென்று தடை உத்தரவு போட்டதும் ஓ கானர் அடங்கிவிட்டார். (அவர் வாய்வீச்சுக்காரரே தவிர காரியவாதி யல்லர்). மேலும், அம்மனுவில் எத்தனையோ பொய்க் கையொப்பங்கள் இருந்தன. இவ்விதம் இக் கிளர்ச்சி யொடுங்கியது பரிகாசத்துக் கிடமாயிற்று. ஆயி னும், அது மறைந்ததற்கு மூலகாரணம் நாட்டின் ஆக்கத் தொழில்களில் அப்பொழுது ஏற்படத்தொடங்கிய அபி விருத்தி தொழிலாளர்களுக்கும் நன்மை பயக்க நேர்ந்ததே யாம்.

இக்கிளர்ச்சிகளையெல்லாம்விட நிலையான நன்மை யுண்டாக்கியது கூட்டுறவு இயக்கமே[5]. ராஷ்டேல் நெசவுக்

1. Constitutional agitation. 2. Feargus O' Connor. 3. 'Physical Force Party'. 4. Kennington Common. 5. Co-operation.

காரார் சிலர் (இவர்கள் 'ராஷ்டேல் வழிகாட்டிகள்'[1] எனப் படுவர்) ஒன்றுகச் சேர்ந்து தங்களுக்கும் அக்கம்பக்கங் களில் இருந்தவர்களுக்கும் தேவையான உணவுப்பொருள் களை வாங்கி விற்க ஒரு சிறு கடையைத் திறந்தனர். இதற்குமுன் அத்தகைய முயற்சிகள் இருந்தும் அவை நிலைத்துப் பயன்பெறவில்லை. இந்த 'டோட் சந்து பல சரக்கு மாளிகை'யின்[2] சிறப்புப் பண்பு என்னவென்றால், அதன் லாபம் அதன் சரக்குகளை வாங்குவோர்க்கே அவர் கள் அவைகளுக்கு கொடுத்த தொகையின் விகிதப்படி பங்கிட்டுக் கொடுக்கப்பட்டது. ஆகவே, அவர்களனை வருக்குமே அதன் வியாபாரத்தைப் பெருக்க அக்கறை ஏற்பட்டது. இந்த வியாபார முறை விரைவில் நாடெங் கும் பரவியது ; வேறு பொருள்களை வாங்குவதிலும் இது பழக்கத்தில் வந்தது. இதன் பலனைகத் தற்போது பிரிட்ட னிலுள்ள குடும்பங்களுள் மூன்றில் ஒன்று விகிதம் கூட் டுறவாளர்களா யிருக்கின்றனர். நாட்டின் அரசியல் விருத்தி யையும் இம்முறை அந்தப்படுத்தியது : தொழிலாளர் வகுப் பினரிடையே சிக்கனப் பழக்கத்தையும், நாட்டின் அபி விருத்தியில் தமக்கும் ஒரு பங்கிருக்கிறது என்னும் உணர்ச்சியையும், பொது நலத்துக்காக ஒத்துழைக்கும் அருமையான அனுபவத்தையும் ஏற்படுத்தியது.

§289. **வளம் தலைகாட்டுகின்றது** :—நாடு பயிர்த் தொழில் நிலையிலிருந்து ஆக்கத்தொழில் நிலைக்கு மாறிக் கொண்டு வருகிறது என்பதற்கும் துரைத்தனத்தில் நிலம் படைத்தவர்கள் செல்வாக்குக்குப்பதில் முதல் படைத்தவர் கள்[3] செல்வாக்கு பரவிக்கொண்டு வருகிறது என்பதற்கும் தானியச் சட்டத்தின் நீக்கம் ஒரு சிறந்த அறிகுறியாகும். 1832-ம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் ஆக்கத்தொழில் களிலும் அவை சம்பந்தமான வாணிபத்திலும் ஈடுபட்

1. 'The Rochdale Pioneers'. 2. 'Toad Lane Store.' 3. Capitalists.

டிருந்தவர்களுக்கும் அரசியல் அதிகாரங்களில் நிலம் படைத்தவர்களோடு பங்கு ஏற்படும்படி செய்தது. இதன் பலனாக அவர்களால் தங்களுக்கு மேலும் நன்மை விளையக் கூடிய வழிகளில் வரிவிதிப்பை மாற்றிக்கொள்ள முடிந்தது. அவர்களது புதிய வரிவிதிப்புத் திட்டம் உணவுப் பொருள்களின் விலைகளைக் குறைத்துக் கூலிகளையும் குறைத்ததால் வெளிநாட்டு வியாபாரம் தழைத்து அவர்களுக்கு அதிக லாபம் வந்தது.

வியாபாரத்தின் தளைகளை அவிழ்த்துவிட்டதோடு வேறு வகைகளிலும் பார்லமென்ட் ஆக்கத்தொழிலாளர்களுக்கும் பெரிய வியாபாரிகளுக்கும் நன்மை தேடியது. 1837-ல் வரையறைக்குட்பட்ட பொறுப்புச் சட்டம்[1] நிறைவேறியது. அதுவரை ஒரு வியாபாரத்தில் ஏற்படும் எல்லாக் கடனையும் நஷ்டத்தையும் தாங்கவேண்டிய முழு பொறுப்பு அதில் சம்பந்தப்பட்டிருந்த பங்குக்காரர் ஒவ்வொருவருக்கும் இருந்தது. இந்தச் சட்டத்தின்படி, பதிவு செய்யப்பட்டுள்ள எந்தக் கம்பெனியேனும் முறியுமானால் அதனால் ஏற்படும் நஷ்டம் அதன் பங்குக்காரர் ஒவ்வொருவரையும் அவரவர் அந்த வியாபாரத்தில் வைத்துள்ள பங்குத்தொகையின் அளவுக்குத்தான் பாதிக்கும். இதனால், மக்கள், பணத்தைச் சேர்த்து வீட்டிலேயே வைத்துக் காவலிருப்பதற்குப்பதில் லாபம்தரக்கூடிய வாணிப முயற்சிகளில் பங்கெடுத்துக்கொள்ளத் துணிந்து முன் வந்தனர். ஆகவே, துரிதமாக அபிவிருத்தி யடைந்து கொண்டுவந்த ஆக்கத்தொழில்களுக்கு ஏராளமான முதல் கிடைக்கலாயது. 1844-ல் பீல் இயற்றிவைத்த பாங்க் சட்டமும்[2] இதே பலனைத் தந்தது. இங்லண்ட் பாங்க்[3] பிரிட்டனில் நடைபெறும் ஆக்கத்தொழில் வாணிபம் அனைத்துக்கும் மூலாதாரம். ஆக்கத்தொழில் முயற்சி

1. Limited Liability Act. 2. Bank Act. 3. The Bank of England.

களுக்கு வேண்டிய பணமுதலைத் திரட்டித்தரும் சிறிய பாங்க்களுக்கு மூலபாங்க்காக இருப்பது அது. இந்தச் சட்டத்தின்படி அதன் நிலை மிகவும் பத்திரமாக்கப்பட்டது. பாங்க்கில் வைத்திருக்கும் பொன்னின் மதிப்புக்கு ஒரு விகித அளவு வரைக்குந்தான் பாங்க்நோட்டுகள் அச்சிடப் படவேண்டும் என்று வரையறுக்கப்பட்டது. இதனால் இந்த பாங்க் விஷயத்தில் மக்களுக்கு அதிக நம்பிக்கை பிறக்கலாயது.

அந்த நூற்றுண்டின் நான்காம் பத்திலும் ஐந்தாம் பத்திலும்[1] இருப்புப்பாதைகள் வேகமாக அமைக்கப்பட்டதை நாட்டின் ஆக்கத்தொழில் வளத்தின் விளைவெனலாம்; காரணமுமெனலாம். சரக்குகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக் கொண்டுபோதல் புதிய இருப்புப் பாதைகளின் முக்கிய நோக்கங்களுள் ஒன்று. அவைகளுக்குத் தண்டவாளங்களும் எஞ்சின்களும் வண்டிகளும் தேவையாக இருந்ததால், இரும்பில் வார்ப்படவேலை செய்யும் தொழிற்சாலைகளுக்கும் இயந்திரங்களைச் செய்யும் தொழிற்சாலைகளுக்கும் அதிக வேலை கிடைத்தது. வெளி நாடுகளிலும் இருப்புப்பாதைகள் அமைக்கப்பட்டபோது அவைகளுக்கு அவசியமான சாமான்கள் பிரிட்டனிலிருந்தே தருவிக்கப்பட்டன. காற்றை நம்பிப் பாய்விரித்துச் செல்வதற்குப்பதில் கப்பல்களை ஓட்ட நீராவியைப் பயன்படுத்த நேர்ந்ததுமுதல் கப்பல்கள் கட்டுந்தொழிலும் பிரிட்டனில் புத்துயிர் பெற்றுத் தழைத்தது. மரக் கப்பல்களுக்குப் பதில் இரும்புக் கப்பல்கள் செய்யப்பட்டன.

'கிரிஸ்டல் பாலஸ்'[2] எனப்பட்ட பளிங்கு மாளிகை அக்காலத்து வளத்தின் சின்னமாகத் தோன்றியதே. 1851-ல் 'ஹைட் பார்க்[3] எனப்படும் சிங்காரத் தோட்

1. The 'thirties' and 'forties'. 2. 'The Crystal Palace'. 3. Hyde Park.

டத்தில் கட்டப்பட்ட அம்மாளிகையில் ஒரு பெரிய பொருட் காட்சி[1] நடைபெற்றது. புதிய ஆக்கத்தொழில் முறைகளின் விசித்திரங்களைப் பெருமிதத்துடன் காட்டவும், வேற்று நாடுகளோடு வாணிபத்தை வளர்க்கவும் அது பெரிதும் பயன்பட்டது.

§ 290. பாமர்ஸ்டன் பிரபு[2]:—நாட்டு மக்கள் புது நம்பிக்கையுடன் பெருமிதங்கொண்டிருந்தனர். வியத்தற்குரிய புதுப்புது இயந்திரங்களின் பிறப்பும், பெருகும் வாணிப முயற்சியும், கொழியும் செல்வமும் அவர்களுக்குத் தங்கள் நாட்டினரின் குணமேம்பாட்டிலும் அரசியல் அமைப்புக்களிலும் ஒரு பெருமை யுணர்ச்சியை யுண்டாக்கியது. இம்மனநிலையின் வெளியுருவாக அச்சமயம் திகழ்ந்தவர் பாமர்ஸ்டன் பிரபு (1784—1865). 1846-ல் பீல் அரசியல் வாழ்க்கையை விட்டு விலகியதும் இவர் துரைத்தனத்தில் மிக்க செல்வாக்கு பெற லானார். அச் செல்வாக்கு சுமார் இருபதாண்டுகள் நீடித்திருந்தது.

பாமர்ஸ்டன் தமது அரசியல் வாழ்க்கையைட் டோரி கட்சியில் சேர்ந்து தொடங்கி லிவர்ப்பூல் பிரபுவின் நீண்ட அமைச்சில் போர்அமைச்சராக இருந்துவந்தார். ஆயினும், வெல்லிங்ட்டன் அக்கட்சியின் தலைவராகவந்து தாம் பார்லமென்ட் சீர்திருத்தத்தை எதிர்ப்பதாகக் கூறிய போது (§ 279) பாமர்ஸ்டன் விக் கட்சியில் சேர்ந்து கொண்டார். விக் துரைத்தனத்தில் 1830 முதல் 1841 வரையில் அவர் வெளிநாடுகள் அமைச்சர் பதவியினை ஏற்றிருந்தார். அந்தப் பதவியில் அவர் இருந்தபோது, அவரது சோர்வின்மையையும் சிறிய விவரங்களையும் கவனிப்பதில் அவருக்கு இருந்த ஆர்வத்தையும் கண்டு எவரும் மெச்சினர். வெளிநாட்டு விவகாரங்களில் அவர் தாராள மனப்பான்மையினர்[3]; உள்நாட்டு விவகாரங்களில் நிதா

1. The Great Exhibition. 2. Lord Palmerston. 3. Liberal.

னப் போக்கினர்[1]. காதோலிக்கர் விடுதலையையும் பார்ல மென்ட் சீர்திருத்தத்தையும் அவர் ஆதரித்ததற்குக் காரணம் அவைகளைப் பொதுமக்கள் தீவிரமாகக் கோரினர் என்பதை அவர் உணர்ந்தமையே யாம். அவைகளைக் கண் மூடித்தனமாக எதிர்க்குங் கட்சியின் அரசியல் செல்வாக்கு அழிவுறும் என்பது அவருக்கு நன்ருகப் புலப்பட்டது. ஆயினும், அவைகளுக்குப் பிறகு பல சீர்திருத்தங்கள் நிறைவேறியபோதிலும், அவற்றில் அவர் எவ்வகையான ஊக்கமும் காட்டவில்லை. தாம் வகித்துவந்த பதவியில் மட்டும் அவர் பொதுவில் கானிங்கின் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து வந்தார் : முக்கியமாக, அழுத்தப்பட்ட மக்கள் தங்கள் நாட்டுக்குச் சுயேச்சை நிலையையும் பார்ல மென்ட் துரைத்தனத்தையும் நாடிச் செய்த கிளர்ச்சிகளுக்கும் போராட்டங்களுக்கும் அவர் அனுதாபமும் ஆதரவும் காட்டினர் (§ 273). பிரிட்டனின் வன்மையை வெளிநாட்டினர்க்கு உணர்த்தும் சந்தர்ப்பங்கள் ஏற்படுமானல் பாமர்ஸ்டன் மிக்க மகிழ்ச்சியுறுவார். மற்ற வல்லரசுகளுக்குப் பிரதிகூலமான பல வெற்றிகளை இராஜ தந்திரத்தின்மூலமாகவே அவர் தம் நாட்டுக்குத் தேடி வைத்தார் (கு. 215). இதனல் அவரைத் தம் நாட்டினர் அனைவரும் விரும்பிக் கொண்டாடினர். 'பாம்,' 'பாம்'[2] என்று அவரைச் செல்லப்பெயரிட்டு அழைத்தனர். அவர் கையாண்ட முறைகள் பல அவரது சகாக்களுக்குப் பிடிக்கவில்லை. ஆயினும், மக்கள் அவர்பால் கொண்டிருந்த அன்பும் அபிமானமும் அவர் கட்சிக்கு வலியூட்டின. ஆகவே, 1846-ல் பீல் பதவியிலிருந்து விலகியதும் § (287) விக் கட்சியினர் அதை மீண்டும் ஏற்க நேர்ந்தபோது பாமர்ஸ்டன் பழையபடியே வெளிநாட்டு அமைச்சரானர்.

---

1. Conservative. 2. 'Pam.'

§ 291. பாமர்ஸ்டனுக்குத் தொந்தரவு :—ஆயினும், அவர் முதலில் பதவியேற்றபோது இருந்த நிலைக்கும் இப்போது இருந்த நிலைக்கும் ஒரு பெரிய மாறுதல் காணப்பட்டது. முதலாவதாக, வெளிநாட்டு விவகாரங்களை மெல்போர்ன் பிரபு (இவர் முதியவர் : காரியங்களை மேல்போக்காகக் கவனிப்பவர்) பாமர்ஸ்டன் வழியாகவே விட்டு வைத்திருந்ததுபோல் புதிய தலைமை அமைச்சராகிய ஜான் ரசெல் பிரபு விட்டுவைக்கத் தயாராயில்லை; எதையும் தம்மைக் கலந்தே செய்யவேண்டுமென்றுவற்புறுத்துபவரா யிருந்தார். இரண்டாவதாக, 1840-ல் விக்டோரியா அரசி சாக்சி-கோபர்க்கைச் சேர்ந்த ஆல்பெர்ட் இளவரசனை[1] (இவர் உலக அறிவும் ஆர்வமும் நிறைந்த ஒரு இளம் ஜெர்மானியர்) மணந்துகொண்டதால், அவரே அரசியின் அந்தரங்க காரியதரிசியைப்போ லிருந்தார். தம்மை ஏற்றுக்கொண்ட நாட்டின் விஷயங்களில் அவர் அதிக ஊக்கமும் சிரத்தையும் கொள்ளலானார். அரசரின் வரையறுக்கப்பட்ட உரிமைகளை மீறி விக்டோரியா அரசி அதிகாரம் செலுத்தவேண்டு மென்பது அவர் கணவரின் எண்ணமில்லையாயினும், வெளிநாட்டு மன்னர்களோடு வைத்துக் கொள்ளும் தொடர்புகளில் அரசி நேராக விவகாரங்களைக் கவனிப்பது அவ் வுரிமைகளின் வரம்புக்கு உட்பட்டதே என்பது அவரது அபிப்பிராயம். ஆகவே, வெளிநாடுகள் சம்பந்தமான முக்கியமான விஷயங்களில் பாமர்ஸ்டன் தம் இச்சைப்படி காரியங்களை நடத்திக்கொண்டுபோவதைப் பற்றி அரசியும் ஆல்பெர்ட் இளவரசரும் ஜான் பிரபுவிடம் கண்டித்துக் கூறினர். ஜான் பிரபுவுக்கும் அதே குறையிருந்ததால் அவர் பாமர்ஸ்டனிடம் அதை வெளியிட்டார். பாமர்ஸ்டனோ வின்சரில்[2] வாழ்ந்துவந்த அரசிளம் தம்பதிகளை அதிகமாகப் பொருட்படுத்தவில்லை. தலைமை

1. Prince Albert of Saxe-Coburg. 2. Windsor.

அமைச்சர்பாலும் அவருக்கு அதிக மதிப்பில்லை. ஆகவே, அவர் பரிகாசத் தொனியில் மன்னிப்பு கேட்டுக்கொண்டு பழையபடியே நடக்கலானார். நாட்டுமக்கள் தம்மை விரும்பியதுபோல் அரசியின் வெளிநாட்டுக் கணவரை விரும்பவில்லை என்பது அவருக்குத் தெரியும்.

ஒரு விஷயத்தில் அவர் அத்துமீறிச் சென்றார். 1830-ம் ஆண்டின் புரட்சியால் (கு. 194) ப்ரான்ஸில் தோன்றிய சட்டவரம்புக்குட்பட்ட மன்னரசு[1] 1848-ம் ஆண்டின் புரட்சியால் முடிவுக்கு வந்தது. லூயி பிலிப்[2] (சட்டவரம்புக்குட்பட்ட மன்னர்) இங்லண்டுக்கு ஓடிவந்து விட்டார்; ப்ரான்ஸில் ஒரு குடியரசு[3] ஏற்படுத்தப்பட்டது. இந்தக் குடியரசின் தலைவராக லூயி நெபோலியன் போன பார்ட் (இவர் பழைய பேரரசரின் தம்பி மகன்) அமர்ந்தார். 1851-ல் இவர் தமது பெரியப்பனின் வழியைப் பின்பற்றித் திடுமெனத் தமது அரசியல் எதிரிகளைக் கைதுசெய்து பாரிஸ் தெருக்களில் தோன்றிய எதிர்ப்பையும் கலவரத்தையும் படைகளைக்கொண்டு அடக்கினார். விரைவிலேயே தாமே 'ப்ரெஞ்சு மக்களின் பேரரசர்'[4] என்று பிரகடனம் செய்துகொண்டார். இதெல்லாம் எதிர்பாராதவகையில் திடுமென நடந்ததால், இந்தப் புதிய அரசினை உடனே அங்கீகரிக்கக் கூடாதென்று பிரிட்டிஷ் துரைத்தனம் தீர்மானித்தது. ஆயினும், பாமர்ஸ்டன் இத்தீர்மானத்தை அசட்டைசெய்து பாரிஸிலுள்ள பிரிட்டிஷ் துரைத்தனப் பிரதிநிதிக்குப்[5] புதிய நெபோலியனைப் போய்ப் பார்த்து அவருக்குப் பிரிட்டிஷ் துரைத்தனத்தின் மகிழ்ச்சியைத் தெரிவிக்குமாறு உத்திரவிட்டார். இது அரசிக்கும் தலைமை அமைச்சருக்கும் தெரியவந்ததும் அவர்கள் மிகவும் சினமுற்றனர். ஆகவே, பாமர்ஸ்டன்

1. Constitutional Monarchy. 2. Louis Philippe. 3. Republic.
4. 'Emperor of the French'. 5. Ambassador.

தமது வெளிநாட்டு அமைச்சர் பதவியை ராஜிநாமா செய்யவேண்டியவ ரானார். ஆயினும், அவருக்குப் பார்லமென்டில் அதிக ஆதரவும் செல்வாக்கும் இருந்தமையால், சில வாரங்களுள் அவர் தலைமை அமைச்சர்மீது வஞ்சந் தீர்த்துக்கொண்டார். பாமர்ஸ்டனும் அவரது நண்பர்களும் செய்த பிரசாரத்தின் பலனாகத் துரைத்தனத் தீர்மான மொன்றைப் பார்லமென்ட் அதிக ஓட்டுக்களால் தள்ளி விட்டதால் ரசெல் அமைச்சு கவிழ்ந்தது.

§ 292. க்ளாட்ஸ்டன்[1] பீலின் வேலையை முடித்து வைக்கிறார் :—டோரி கட்சியினருள் டார்பியையும் டிஸ்ரேலியையும்[2] தலைவர்களாகக் கொண்டிருந்த பாதுகாப்புக் கொள்கையினர்[3] இப்போது பதவி ஏற்றனர். ஆயினும், அவர்கள் நிலை மிக்க ஊனமாகவே இருந்தது. மீண்டும் அவர்கள் தானியச் சட்டங்களைப் புகுத்துவார்களா? அவர்களை ஆதரித்த நிலம்படைத்த வகுப்பினர் அவைகளைத் திரும்பவும் இயற்றிவைக்கவேண்டு மென்றனர்; பீலை விரோதித்துக்கொண்டது அவைகளுக்காகத்தானே. ஆயினும், அச்சட்டங்களை ஒழித்ததால் நாட்டுக்குப் பல நன்மைகள் நேர்ந்துள்ளன. ஆகவே, அவைகளை மீண்டும் புகுத்தச் செய்யும் எம்முயற்சியையும் நாட்டு மக்கள் ஆவேசத்துடன் எதிர்ப்பது திண்ணம். டிஸ்ரேலி தமது துரைத்தன வரவு செலவுத் திட்டத்தில் எல்லோர் ஆதரவையும் பெறுவதற்கு ஒருவகையான நடுவழியை வகுக்க முயன்றார். ஆயினும், அது எக்கட்சியினர்க்கும் திருப்தியளிக்காததால் நிதானப்போக்கினர்[4] மூன்று மாத வாழ்வுடன் பதவியினின்றும் விலகவேண்டியவ ராயினர்.

விக் கட்சியினர்க்கும் இப்போது தவிப்பு ஏற்பட்டது. அவர்களுள் முக்கியமானவர்களான ரசெல்லும் பாமர்ஸ்ட

1. Gladstone. 2. Derby, Disraeli. 3. Protectionists. 4. The Conservatives.

னும் ஒருவர்கீழ் மற்றொருவர் உழைக்கமாட்டார்கள். ஆயினும், ஒருவரைவிட்டு மற்றொருவரால்மட்டும் தனியாக அமைச்சு நடத்த முடியாது. கடைசியில், அவர்கள் பீலைப் பின்பற்றிய நிதானப்போக்கினருடன்[1] சேர்ந்து ஒரு கூட்டமைச்சு[2] அமைக்கவேண்டுமென்று முடிவுகட்டப்பட்டது. ஆபெர்டீன் பிரபுவும்[3] க்ளாட்ஸ்டனும்[4] (இவர்கள் பீலைப் பின்பற்றிய நிதானப்போக்கினர்) முறையே தலைமையமைச்சரும் கருவூலமன்றத்துத் தலைமைநீதிபதியும் (சான்செலர் அப் தி எக்செக்கர்)[5] ஆயினர்; ரசெல்லும் பாமர்ஸ்டனும் முறையே வெளிநாட்டு அமைச்சராகவும் உள்நாட்டு அமைச்சராகவும் ஆயினர்.

பீலின்கீழ் க்ளாட்ஸ்டன் வாணிப இலாகாவின் தலைவராக இருந்ததால் அவர் கட்டுப்பாடற்ற வாணிப முறையில் அனுபவம் பெற்றிருந்தார்; ஆகவே, தம் தலைவரின் வேலையை முடித்துவைக்க இப்போது அவருக்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. சிக்கனம், தீர்மையாக வேலையைச் செய்தல் முதலியவற்றில் அவருக்கிருந்த ஆர்வமும், புள்ளி விவரங்களைத் தெளிவாக வகுத்துக் காட்டுவதில் அவருக்கிருந்த ஆற்றலும், எவ்விஷயத்திலும் சோர்வில்லாத பெரு முயற்சியும் ஊக்கமும் காட்டும் அவரது மனவன்மையும் அவரை ஒரு தலைசிறந்த கருவூலமன்றத் தலைவராக ஆக்கின. பத்தாண்டுகளுக்குமுன் வெளிநாட்டு வாணிபத்துக்குப் பீல் தேடித்தந்த கட்டவிழ்ப்பு பிரிட்டனை உலகத்தின் ஆக்கத்தொழிற்சாலையாக மாற்றிக்கொண்டு வந்தது. இவ்வளத்தை மேலும் பெருக்க க்ளாட்ஸ்டன் சுமார் நூறு பொருள்களின்மீதிருந்த தீர்வைகளை எடுத்துவிட்டார். மற்றும் சுமார் நூறு பொருள்கள்மீதிருந்த தீர்வைகளைக் குறைத்துவிட்டார். இதனால் சிறிதுகாலம்வரையில்

1. The Peelite Conservatives. 2. A Coalition. 3. Lord Aberdeen.
4. W. E. Gladstone. 5. The Chancellor of the Exchequer.

ஏற்படக்கூடிய வருமானக் குறைவினை ஈடுசெய்யப் பீல் கையாண்ட சிகிச்சையாகிய வருமான வரியை மீண்டும் விதித்தார். 1860-ம் ஆண்டு வரையில் அதை ஆண்டு தோறும் குறைத்துக்கொண்டே வந்து முடிவில் அதை அறவே எடுத்துவிடுவதற்கும் அவர் ஒரு திட்டம் வகுத்தார்.

---

## அறுபத்தேழாம் அத்தியாயம்

# க்ரைமியா போரும் இந்திய சிப்பாய்கள் கலகமும்

## (1853—1858)

§ **293.** கிழக்கு விவகாரம்[1] :—**1860-ல்** வருமான வரியை அறவே எடுத்துவிட முடியுமென்று உறுதி கூறிய க்ளாட்ஸ்டன் அதற்குள் பிரிட்டன் இரண்டு போர்களில் சிக்க நேரும் என்பதை எதிர்பார்க்கவில்லை.

**1853-ல்** அவர் தமது வரவு செலவுத் திட்டத்தைப் பார்லமென்டுக்கு விளக்கிக்கொண்டிருக்கும்போதே கிழக்கில் ஒரு மனிதனின் கையளவு சிறிய மேகம் கிளம்பிக் கொண்டிருந்தது. அவ்வாண்டு முடிவதற்குள் அது யூரோப் மீது பாவிக் குமுறியது. இதற்கு மூலகாரணம் ‘கிழக்கு விவகாரம்’ என்பதே. ஆட்டோமன் துருக்கியர்[2] எனப்பட்ட அரைநாகரிகம் படைத்த ஒரு முகம்மதிய கூட்டத்தினர் சில நூற்றாண்டுகளுக்குமுன் தென்கிழக்கு யூரோப்பைக் கைப்பற்றிப் பால்கன் தீபகற்பத்திலிருந்த[3] கிறிஸ்தவ மக்களின்மீது ஆட்சிசெலுத்தலாயினர். அவர்களது கொடுங்கோன்மையை க்ரீக் மக்கள் முன்னமே உத

---

1. The Eastern Question 2. The Ottoman Turks. 3. The Balkan Peninsula.

றித் தள்ளிவிட்டனர் (§ 273). பல்கர், செர்பர், ருமேனியர்[1] முதலியவர்கள் எப்போதும் அவர்களுக்குக் கீழ்ப்படியாமல் கலகம் விளைத்துக்கொண்டிருந்தனர். அரை நாகரிகம் படைத்த கிறிஸ்தவரல்லாதவர்களின் கொடுங்கோன்மையின்கீழ் அவதிப்படும் இந்தக் கிறிஸ்தவ மக்களை விடுவிக்க மேல்நாட்டுத் துரைத்தனங்கள் பரிவுகாட்டுமென்று நாம் எதிர்பார்க்கலாம். ஆயினும், அதற்கோர் இடையூறிருந்தது. பால்கன் கிறிஸ்தவர்கள் ஸ்லாவ்[2] பிரிவினர்; பழைய கிறிஸ்தவ மதாசாரங்களைக் கொண்டவர்கள்.[3] ஆகவே, அவர்கள் ஸ்லாவ் பிரிவினருள்ளும் பழைய கிறிஸ்தவ மதாசாரங்களைக் கொண்டவர்களுள்ளும் வன்மை மிக்கவர்களாயிருந்த ருஷ்யர்கள் ஆதரவையே எதிர்பார்த்தார்கள். பேராவல் மிக்க ருஷ்யாவின் மன்னர்கள் (இவர்கள் 'சார்'[4] என்னும் பட்டம் பெற்றிருந்தார்கள்) வட ஏஷியா முழுமையும் தங்கள் ஆட்சியைப் பரப்பி யூரோப்பிலும் மிகுந்த ஆதிக்கம் பெற்றிருந்தனர். அவர்களை மேலும் வன்மையுறாதபடி தடுப்பதற்குத் துருக்கி சாம்ராச்சியம்[5] பயன்படுமென்று மற்ற யூரோப்பிய நாடுகள் கருதின. செர்பரும் பல்கரும் சுல்தானின் அதிகாரத்தினின்றும் விடுதலையடைவார்களானால் அவர்கள் தங்கள் 'பெரிய அண்ணன்'[6] ருஷ்யாவின் ஆதிக்கத்தின்கீழ் வருவது திண்ணம்.

இந்தப் பேராவல்களும் பொறாமைகளும் ஒரு போரைக் கிளப்பிவிட்டன. வாட்டர்லூவுக்குப் பிறகு இதுவே முதல் பெரும்போர். பதினெட்டாம் நூற்றாண்டில் கையொப்பமிடப்பட்ட ஒரு உடன்படிக்கை துருக்கி சாம்ராச்சியத்திலிருந்த தம் மதத்தினர் சார்பாகத் தலையிட சார் மன்னருக்கு ஒருவகையான உரிமையினை அளித்

1. The Bulgars, Serbs, Rumanians. 2. Slavs. 3. Orthodox. 4. The Czar. 5. The Turkish Empire. 6. The 'big brother'.

திருந்தது. 1853-ல் முதலாம் நிக்கொலஸ் சார்[1] இந்த உரிமையினைச் சுல்தான் திட்டமாக ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினர். கான்ஸ்டான்டிநோப்பிளி லிருந்த பிரிட்டிஷ் பிரதிநிதி அளித்த தைரியத்தால் சுல் தான் அவ்வாறு ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். சார் உடனே டான்யூப் ஆற்றுவாயின் இருபுறமு மிருந்த இரண்டு துருக்கி மாகாணங்களைக் கைப்பற்றிக்கொள்ள ஒரு சேனையை அனுப்பினர் (ஜூன் 1853). ஆகவே, ருஷ் யாவுக்கும் துருக்கிக்கும் போர் மூண்டது.

இந்தத் தகராறு சம்பந்தமாக இருவருக்குள்ளும் சமரசம் ஏற்படுத்துமாறு ப்ரான்ஸும் இங்லண்டும் ப்ரஷ்ஷியாவும் ஆஸ்டிரியாவும் சேர்ந்து 'வியென்னு குறிப்பு'[2] என்னும் திட்டமொன்றைத் தயாரித்து அனுப் பின. சார் அதை ஒப்புக்கொண்டார்; ஆயினும், சுல்தான் ஒப்புக்கொள்ளவில்லை. எனினும், தங்கள் மந்திராலோசனை யின் விளைவாகவே சுல்தான் ருஷ்யாவை எதிர்த்து நிற்கத் தீர்மானித்ததால் இந்தப் போரில் ப்ரான்ஸும் பிரிட்டனும் அவரை ஆதரிக்கக் கடமைப்பட்டிருந்தன. ஆகவே, அவர்கள் தங்கள் கடற்படைகளைக் கான்ஸ்டான்டி நோப்பிளைக் காக்க அனுப்பி டான்யூப் மாகாணங்களி னின்றும் ருஷ்யப் படைகள் திரும்பிவிடவேண்டுமென்று வற்புறுத்தினர். சார் சிறிது தயங்கிப் பிறகு இணங்கினர். இதற்குள் அவரது கடற்படை சினேப் விரிகுடாவிலிருந்த[3] துருக்கிக் கடற்படையை அழித்துவிட்டது. பிரிட்டிஷ் பொதுமக்கள் ருஷ்யாவைப்பற்றிப் பீதியுற்று அந்நாட் டின்மீது போர்தொடுக்க வேண்டுமென்று கூக்குரலிட்ட னர். அப்போரில் ப்ரான்ஸும் சேர்ந்தது (மார்ச், 1854). ப்ரெஞ்சு பேரரசர் ருஷ்யா சார்மீது சில மனத் தாங்கல்கள் கொண்டிருந்தார் (கு. 203).

1. Czar Nicholas I. 2. 'The Vienna Note'. 3. The Bay of Sinope.

§ 294. யாரோ தவறிழைத்துவிட்டனர் :—பால்டிக் கடலுக்குச் சென்ற நேசக்கடற்படை ஒன்றுஞ் சாதிக்க முடியவில்லை. பிறகு கருங்கடலில் முக்கிய ருஷ்யக் கப்பற் படைத் துறைமுகமாயிருந்த செபாஸ்டொபோலைத்[1] தாக்க ஒரு இங்லிஷ் - ப்ரெஞ்சு சேனை புறப்பட்டது. க்ரைமியா தீபகற்பமாக இருப்பதால் அதை முக்கிய போர்த்தளமாக ஆக்கிப் போர்புரிந்தால் தீபகற்பப்போரின்போது பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டிருந்த அனுகூலங்கள் இப்போதும் நேசப்படைகளுக்கு ஏற்படுமென்று எல்லோரும் கருதினர்கள் (கு. 187). அவையாவன : கடலோடு அவர்களுக்குத் தொடர்பிருக்கும் ; தென் ருஷ்யாவின் பரந்த ஸ்டெப்பி புல்வெளிகள், நெப்போலியன் படைகளுக்கு ஸ்பெயின் காட்டு மலைகள் இருந்ததைப்போல், சார் சேனைகளின் போக்கு வரவுக்கு இடைஞ்சலாக இருக்கும். ஆயினும், நேசப்படைகளின் தலைவர்களிடையே கிளைத்த கருத்து வேறுபாடுகளால் அவர்களது தாக்கும் வன்மை குறைந்து விட்டது. சென்ற நாற்பது ஆண்டுகளின் அமைதி காரண மாக அவர்களது போர் இயந்திரம் துருப்பிடித்திருந்தது.

செபாஸ்டொபோலுக்கு வடக்கே சில மைல்களுக்கு அப்பால் ப்ரெஞ்சு பிரிட்டிஷ் சேனை ராக்லன் பிரபு[2] தலைமையிலும் மார்ஷல் செண்ட் ஆர்னட்[3] தலைமையிலும் இறங்கியது. அது துறைமுகத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது வழியில் ஆல்மா ஆற்றங்கரையில்[4] இடை மறித்த ருஷ்யப் படையினைத் தோற்கடித்தது. செண்ட் ஆர்னட் தம் படைக்கு ஓய்வு அவசியமென்று தீர்மானித்து அவ்வெற்றியைத் தொடர்ந்து ருஷ்யர்களை விரட்டியடிக்கவில்லை. இதனால் அப்பட்டணத்தின் அரண் களைக் கட்டிமுடித்துவிட அவர்கள் சேனாபதி டோடில்

1. Sebastopol. 2. Lord Raglan. 3. Marshal St. Arnaud. 4. The River Alma.

பென்னுக்கு[1] அவகாசம் கிடைத்தது. அவர் மிகத் திறமையுடன் அவ்வரண்களை அமைத்தார். நேசப்படைகள் கடைசியில் அதை நெருங்கியபோது முற்றுகைக்குப் போதிய முஸ்திப்புக்கள் அவர்களிடமில்லை. ஆகவே, முற்றுகைக்கு வேண்டிய பீரங்கிகளையும் இதர உபகரணங்களையும் அவர்கள் தங்கள் தாய்நாட்டிலிருந்து பெற ஆளனுப்

செபாஸ்டொபோல் முற்றுகை




பினர். குளிர்காலத்திலும் போரைத் தொடர்ந்து நடத்த வேண்டியிருக்குமே என்ற யோசனையின்றி அதற்கு யாதொரு ஏற்பாடும் செய்யாததால் அடுத்த சில மாதங்களில் நேசப்படையினர் சொல்லமுடியாத பல தொல்லை

1. Todleben.

களை அனுபவித்தனர், இவ்விதமாக அதிகாரிகள் இழைத்த தவறுகள் பல. வேண்டாத இடங்களுக்கு முக்கியமான சாமான்கள் போய்ச் சேர்ந்தன. பதுங்கல் கிடங்குகளி லிருந்த[1] படைவீரர்களுக்கு அவசரமாகத் தேவையான பொருள்கள் இருபது மைல்களுக்கு அப்பாலிருந்த பாலக் ளாவா[2] என்னு மிடத்துக் கடற்கரையோரம் வைக்கப் பட்டு அங்கே மட்கிக்கொண்டிருந்தன. அவற்றை இருபது மைல்களுக்கு அப்பாலுள்ள இடத்துக்கு எடுத்துச்செல்ல அவர்களால் முடியவில்லை. சேனைகளில் காயம்பட்டவர் களுக்கும் நோயுற்றவர்களுக்கும் சிகிச்சை செய்வதற்கான ஏற்பாடுகளும் ஒழுங்காகவும் போதிய அளவுக்கும் இல்லாத தால் அவர்கள் நூற்றுக்கணக்கில் மாண்டனர். அது மின்சார தந்தி ஏற்பட்ட பிறகு நடந்த முதல் போரான படியால் டைம்ஸ்[3] பத்திரிகையின் நிருபராகிய வில்லியம் ரசெல்[4] என்பவர் இந்த ஒழுங்கீனங்களையும் ஊழல்களையும் அவற்றால் விளைந்த அல்லல்களையும் வருணித்துத் தம் தாய் நாட்டு மக்களுக்கு அப்போதைக்கப்போது அறிவித்துக் கொண்டிருந்தார்.

ஆபெர்டீன் துரைத்தனத்தை எல்லோரும் பழிக்க லாயினர். உண்மையில் அவர்களையோ அவர்களுக்கு முன் னிருந்த துரைத்தனத்தையோ பழிப்பதில் பொருத்த மில்லை. நாட்டின் போர்இயந்திரமே உடைந்துகிடந்தது. பார்லமென்ட் அங்கத்தினராயிருந்த ரோபக்[5] என்ற அடிப் படைச்சீர்திருத்தவாதியொருவர் போர் நடத்தலைப்பற்றி ஒரு விசாரணை வேண்டுமென்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். போர்நடந்துகொண்டிருக்கும் தருவாயில் அத் தகைய விசாரணையை நிகழ்த்தல் சரியல்லவென்று துரைத் தனத்தார் அதை ஒப்புக்கொள்ளவில்லை. ஆயினும்,

1. Trenches. 2. Balaclava. 3. *The Times.* 4. William Russell.
5. Roebuck.

அமைச்சர்களில் முக்கியமானவர்களுள் ஒருவரான ஜான் ரஸெல் பிரபு இதையொட்டிக் கருத்து வேறுபாடுகொண்டு ராஜிநாமா செய்துவிட்டார். விசாரணை நடத்தத் துரைத்தனம் ஒப்புக்கொண்டிருக்க வேண்டுமென்பது அவர் அபிப்பிராயம். அவர் ராஜிநாமாசெய்து அமைச்சைவிட்டு விலகியது அதன் செல்வாக்கைத் தளர்த்தியது. ஆகவே, ரோபக்கின் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டபோது பார்லமென்ட் அதை ஏற்றுக்கொண்டது. உடனே அமைச்சு கலைந்தது. இரண்டு ஆண்டுகளுக்குமுன் இந்தக் கூட்டமைச்சு ஏற்பட்டபோது அது இவ்வளவு விரைவில் செல்வாக்கிழந்து கலைந்துவிடும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

§295. பாமர்ஸ்டன் துணைக்கு வருகிறார்:—டோரிகளுள் பாதுகாப்புக் கொள்கையினர் வன்மையற்றிருந்ததால் டார்பி பிரபு அமைச்சு ஏற்க மறுத்துவிட்டார். ஆபெர்டீனை விட்டுப் பிரிந்ததால் ரஸெலுக்குச் செல்வாக்குக் குறைந்துவிட்டது. ஆகவே, அரசியார் பாமர்ஸ்டனையே தலைமை அமைச்சராக இருக்குமாறு கேட்டுக்கொள்ளவேண்டியவரானார். அவர் இன்றி எக்காரியமும் ஆகாதுபோல் தோன்றியது. எல்லோரும் எதிர்பார்த்தபடி அவரே அங்கிலைக்கு ஏற்றவர் என்று விரைவிலேயே விளங்கிவிட்டது. இந்தப் போருக்குக் காரணமான ருஷ்யாவெறுப்பை அவர் மனப்பூர்வமாக ஆதரித்தார். மேலும், இயற்கையாக அவருக்கிருந்த சுறுசுறுப்பும் தன்னம்பிக்கையும் துணிச்சலும் இப்போது பெரிதும் பயன்பட்டன.

இந்தப் போரின் பிற்பகுதியில் நிகழ்ந்த முக்கிய சீர்திருத்தம் ப்ளாரேன்ஸ் நைட்டிங்கேல்[1] ராணுவ சிகிச்சை ஏற்பாடுகளில் புகுத்திய மாறுதலேயாம். அவர் அந்தஸ்தும்

1. Florence Nightingale.

செல்வமும் படைத்த ஒரு சீமாட்டி. நோயாளிகளைப் பராமரிப்பதையே தமது வாழ்நாளின் முக்கிய வேலையாகக் கொண்டவர். அவர் தாம் நேரில் சென்று சிகிச்சை ஏற்பாடுகளை ஒழுங்குபடுத்த விரும்புவதாகக் கூறியதும் ஆபெர்டீன் அமைச்சு மகிழ்ச்சியுடன் அவர் சேவையை ஒப்புக்கொண்டது. அவருக்குத் துணையாக வருவதாக ஒரு பெண்மக்கள் கூட்டம் சேர்ந்தது. அவர்கள் ஸ்கூட்டாரி[1] என்ற இடத்திலிருந்த ராணுவ சிகிச்சை சாலையை அடைந்த போது அது மிகுந்த வெட்கக்கேடான நிலையில் இருந்தது. அங்கு நீரில்லை; அழுக்கையும் அசங்கியங்களையும் போக்கவோ ஆடைகளைத் தோய்த்துச் சுத்தப்படுத்தவோ யாதொரு ஏற்பாடுமில்லை; மருந்தில்லை; காயங்களுக்குக் கட்டப் பஞ்சுமில்லை, துணியுமில்லை; அழுக்குத் தரையைத் துடைக்கவோ பெருக்கவோ சுறண்டவோ எதுவுமில்லை; ஒரு சோப்புக்கட்டித்தானு மில்லை. இவற்றிற்கெல்லாம் பொறுப்பாளிகளாயிருந்த ராணுவ உத்தியோகஸ்தர்களின் தாமதத்தையும் சோம்பேறித்தனத்தையும் மாற்ற நைட்டிங்கேல் விடாமுயற்சியுடனும் மிக்க மனவுறுதியுடனும் வேலைசெய்யவேண்டியிருந்தது. அவரது திடத்தையும் ஆச்சரியகரமான நிருவாகத் திறமையையும் கண்டு எல்லோரும் முடிவில் திருந்திவந்தனர். அவர் வந்த புதிதில் இருந்ததைவிடப் போர் முடியும் சமயத்தில் சிகிச்சை சாலையில் மாண்டவர்களின் தொகை இருபதுக்கு ஒன்றே ஆகக் குறைந்துவிட்டது. ப்ளாரென்ஸ் நைட்டிங்கேல் அப்போது ஓய்வுசாய்வின்றி உழைத்ததால் அவரது உடல் நலம் நிலையாகக் கெட்டுவிட்டது. ஆயினும், அவர் தமது ஒப்பிலாத் தொண்டினைத் தமது நீண்ட வாழ்நாள் முழுமையும் தொடர்ந்துசெய்து நாட்டின் ராணுவ சிகிச்சை ஏற்பாடுகளை ஒழுங்குபடுத்திவைத்தார். அதோடு

1. Scutari.

அவர் தொண்டினால், நோயாளிகளைப் பராமரிக்கும் தொழிலில் ஈடுபடும் பெண்மக்களின் பெருமை எவராலும் உணரப்பட்டது.

நிக்கோலஸ் சார்[1] 1855-ம் ஆண்டு மார்ச் மாதம் இறந்துவிட்டார். புதிய சார் இரண்டாம் அலெக்சாண்டர் அப்போருக்கு எவ்விதத்திலும் பொறுப்பாளி யல்லர். சமாதானப் பேச்சுக்கள் நடந்தபோது அவர் நேசநாட்டினர் விதித்த நிபந்தனைகளுள் ஒன்றைத் தவிர மற்றவைகளை அப்படியே ஒப்புக்கொண்டார். கருங்கடலில் ருஷ்யப் போர்க்கப்பல்கள் இருக்கக்கூடாது என்பதைமட்டும் அவர் ஒப்புக்கொள்ளவில்லை. ப்ரான்ஸ் இவ்விஷயத்தில் விட்டுக்கொடுக்கத் தயாரா யிருந்தபோதிலும் பாமர்ஸ்டன் தயாராயில்லை. உண்மையில், பிரிட்டிஷார் ஏதாவது ஒரு பகட்டான வெற்றியை யடைவதன்முன் சமாதானம் செய்துகொள்வதை அவர் விரும்பவில்லை. ஆயினும், ப்ரெஞ்சு பேரரசர் சமாதானம் செய்துகொள்ளத் தீர்மானித்துவிட்டார். புதிய சாரோடு அவருக்கு யாதொரு மனத்தாங்கலு மில்லை. தமது சேனைக்கும் இந்தப் போரினால் கிடைக்கக்கூடிய 'பெருமை' அவ்வளவும் கிடைத்துவிட்டது. அதன் செலவால் நாட்டில் தம்மீது விருப்பம் குறையும்போ லிருந்தது. ஆகவே, அவர் பாரிஸில் ஒரு சமாதான மகாநாட்டுக்கு[2] வல்லரசுகளின் பிரதிநிதிகளை வரவழைத்தார். அவர்களுக்கெல்லாம் நல்ல விருந்தளித்து விழாக்கள் கொண்டாடித் தாமே நடுவிலிருந்து சமாதானப் பேச்சை நடத்தினர். முடிவில் பாமர்ஸ்டன் போரை முடிக்க ஒப்புக்கொள்ளவேண்டியவரானார். ஒரு பயனற்ற போருக்கு அது ஒரு பயனற்ற முடிவாயிற்று. தமது முகம்மதிய குடிமக்களோடு கிறிஸ்தவ குடிமக்களுக்கும் சம உரிமைகள் அளிப்பதாகச் சுல்தான் வாக்களித்த

1. Czar Nicholas. 2. Peace Congress.

தன்மேல் சார் பால்கன் பிரிவின் கிறிஸ்தவர்களை ஆதரிக்கத் தாம் கொண்டாடிய உரிமையினை விட்டுக்கொடுத்தார். (சுல்தானே அவ்வாக்குறுதியை நிறைவேற்றச் சிறிதும் முயலவில்லை). கருங்கடல் பொதுக்கட லாக்கப்பட்டது. இந்த நிபந்தனையை சார் 1871-ல் நிராகரித்துவிட்டார் (கு. 229). மற்றோர் இருபது ஆண்டுகளில் இந்தக் 'கிழக்கு விவகாரம்'[1] மீண்டும் யூரோப்பின் அமைதியைக் கலைத்தது.

§296. இந்திய சிப்பாய்கள் கலகம்:—க்ளாட்ஸ்டன் எதிர்பாராத இரண்டாவது நிகழ்ச்சி இந்திய சிப்பாய்கள் கலகம் (1857-8). சில காலமாகவே பிரிட்டிஷார் தங்கள் மதங்களைக் குலைக்கப்பார்க்கிறார்கள் என்ற சந்தேகம் இந்திய சிப்பாய்கள் மனதில் புகுந்து வேலைசெய்துகொண்டிருந்தது. 1854-ல் லீ-என்பீல்ட் துப்பாக்கி[2] வழங்கப்பட்டபோது இந்தச் சந்தேகம் உச்சநிலையை அடைந்தது. அதன் வெடிமருந்துச் சுரைகளைச்[3] சுற்றி மிருகங்களின் கொழுப்பு தடவப்பட்டிருந்ததால் அவைகளைத் தொட இந்திய சிப்பாய்களின் மனம் ஒப்பவில்லை. 1857-ம் ஆண்டு ஏப்ரில் மாதம் மீரட்டில்[4] இருந்த ஒரு பட்டாளம் துப்பாக்கிப் பயிற்சிசெய்ய மறுத்துவிட்டது. இவ்விதம் செய்யத் தூண்டியவர்களைச் சிறையிலிட்டபோது, அவர்களின் தோழர்கள் கட்டுமீறிக் கலகம் விளைத்து அவர்களைச் சிறையினின்றும் விடுவித்ததோடு, தங்கள் மேலதிகாரிகளையும் கொன்றுவிட்டு, இருபது மைல்களுக்கு அப்பாலிருந்த டில்லியை நோக்கிச் சென்றனர். அங்கு அவர்கள் தூண்டுதலின்மேல் ஒரு பெரிய குழப்பம் தோன்ற, அங்கிருந்த வெள்ளைக்காரர்க ளெல்லோரும் கொல்லப்பட்டனர். பிறகு பஞ்சாபிலிருந்து 4000 பிரிட்டிஷ் போர்வீரர்களும் இந்திய சிப்பாய்களும் திரண்டுவந்தனர். ஆயினும், அவர்

1. "The Eastern Question." 2. The Lee-Enfield rifle. 3. Cartridges. 4. Meerut.

# சிப்பாய்கள் கலகம்


மைல்
0 50 100 200 300 400 500
6000'-க்குமேல் உயரம்: மலைகள்
1848-ல் பிரிட்டிஷ் மாகாணம்
டல்ஹௌசி சேர்த்தவை
சட்லெஜ்
டில்லி
அவுத்
கான்பூர்
கங்கையாறு
பிரம்மபுத்திரா ஆறு
கல்கத்தா
நருமதையாறு
கோதாவரியாறு
பசென்
பம்பாய்

களை எதிர்த்து நின்ற கலகக்காரர்கள் 25000 பேர். அவர்கள் ஆயுதபாணிகளாக இருந்ததோடு பத்துமைல் நீளமுள்ள உயரமிக்க மதில்களின் பாதுகாப்புடன் அமைந்திருந்த டில்லிநகரமே அவர்கள்வச மிருந்தது. ஆகவே, பஞ்சாபி லிருந்து வந்த சேனை துணிச்சலாக உடனே ஒன்றும் செய்வதற்கில்லை.

டில்லியில்போல் கான்பூரிலும் லக்நௌவிலும் கூட அதிக குழப்ப மிருந்தது. கான்பூரில் 300 பிரிட்டிஷ் போர்வீரர்களும் இருப்புப்பாதை கட்டுவதில் ஈடுபட் டிருந்த சில உத்தியோகஸ்தர்களும் தங்கள் மனைவி மக்க ளுடன் பழுதுற்ற ஒரு பழைய கோட்டையில் அகப்பட்டுக் கொண்டனர். அக்கோட்டையை ஆயிரக்கணக்கான கலகக் காரர்கள் சூழ்ந்துகொண்டனர். கோட்டைத் தலைவரான சர் ஹ்யூ வ்வீலர்[1] நானா சாஹிப் என்ற ஒரு இந்திய சிற்ற ரசரின் துணையை நாடினர். நானா சாஹிப் பிரிட்டிஷாரின் நண்பரைப்போல் பாசாங்கு பண்ணிக்கொண்டிருந்தார். ஆயினும், அவர் பிரிட்டிஷ் துரைத்தனத்தின்மீது அந்தரங்கமான வஞ்சனையெண்ணம் கொண்டிருந்தார். தம்மைத் தத்தெடுத்தவருக்குக் கொடுத்துவந்த பெருந் தொகையான உபகாரச் சம்பளத்தைத் தமக்கும் அவர்கள் கொடுக்கவில்லை என்பது அவர் குறை. ஆகவே, அவர் சர் ஹ்யூ வ்வீலரின் துணைக்கு வருவதுபோல் வந்து கலகக் காரர்களுக்குத் தலைமை பூண்டார். கோட்டையிலிருந்த வர்கள் சில வாரங்கள் மிகுந்த கஷ்டத்தோடு எதிர்த்து நின்றார்கள். முடிவில் அதன் சுவர்கள் இடிந்துவிட்ட தாலும் குடிநீர் வசதி குறைந்துவிட்டதாலும் எஞ்சியிருந்த வர்கள் நானாவின் சொல்லை நம்பிப் பணிந்தனர். அவ் விடத்தை விட்டுப்போக அனுமதி பெற்று அவர்கள் ஆற்றங்கரைக்குச் சென்று படகுகளில் ஏறியதும் அவர்

1. Sir Hugh Wheeler.

களுள் ஆண்கள் சுட்டுவீழ்த்தப்பட்டனர். பெண்களும் குழந்தைகளும் திரும்பவும் பட்டணத்துள் அழைத்துச் செல்லப்பட்டுச் சில நாட்களுக்குப் பிறகு கொல்லப்பட்டனர். அவர்களது பிரேதங்கள் முற்றத்திலிருந்த ஒரு பெரிய கிணற்றுக்குள் போடப்பட்டன. அவுத்தின் தலைநகரமான லக்நௌவிலிருந்த காவற்படை (இதில் சில சிப்பாய்களும் இருந்தனர்) ஒத்தாசை வரும்வரையில் சரணடையாமல் சமாளித்து நின்றது.

§297. கலகம் அடக்கப்பட்டது:—அப்போது கவர்னர் ஜெனரலாயிருந்த கானிங் பிரபு அதுவரை சிறப்பாக எதையேனும் சாதித்தவரென்று பெயரெடுத்தவ ரல்லர். ஆயினும், இத்தருணத்தில் அவர் மிகத் திறமையுடன் நடந்துகொண்டார். இவ்வளவு கலவரங்களுக்கிடையே அவர் தைரியத்தை இழக்கவில்லை. பெர்சியாவில் ஒரு சில்லரைப் போரில் ஈடுபட்டிருந்த சில போர்வீரர்களையும் நன்னம்பிக்கை முனையிலிருந்து சில போர்வீரர்களையும் அவர் தருவித்துக்கொண்டார். ஜூலை மாத ஆரம்பத்தில் 1500 போர்வீரர்களைக் கலகம் நேர்ந்த இடத்துக்கு அவர் சர் ஹென்றி ஹாவ்லக்[1] தலைமையில் அனுப்பிவைத்தார். அவர்கள் கான்பூரை மீட்டனர். ஆயினும், கலகக்காரர்கள் அவர்களை லக்நௌவில் சூழ்ந்துகொண்டனர். (இப்போது சர் ஜேம்ஸ் அவுட்ராம்[2] என்பவர் தலைமையில் வந்த 2500 பேர்களும் அவர்களோடு சேர்ந்திருந்தனர்). செப்டெம்பரில் டில்லிக்கு வெளியிலிருந்த சேனை காஷ்மீர் வாயிலைத் தகர்த்து அந்நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டது.

இதற்கிடையே பிரிட்டனிலிருந்து சர் காலின் காம்ெபல்[3] என்பவர் தலைமையில் 20000 புதிய வீரர்கள் வந்தனர். அவர் க்ரைமியா போரில் புகழ் பெற்றவர். தம்

1. Sir Henry Havelock. 2. Sir James Outram. 3. Sir Colin Campbell.

கடமையை மிகத் தீர்மையாக அவர் நிறைவேற்றினார். லக்நௌவில் அகப்பட்டிருந்த ஹாவ்லக் விடுதலைபெற்றார். டில்லியைச் சூழ்ந்திருந்த கலகக்காரர்கள் விரட்டியடிக்கப் பட்டனர். 1858-ம் ஆண்டு ஆகஸ்டு மாதத்துக்குள் கலகம் முற்றிலும் அடக்கப்பட்டது.

இந்தக் கலகத்தை அடக்கியபோது துரைத்தனத்தார் கொடூரமான செயலொன்றும் புரியவில்லை. சிலர் பழிக்குப் பழி வாங்கவேண்டுமென்று கூக்குரலிட்டனர். ஆயினும், கானிங் பிரபு மிகக் கருணையுடன் நடந்துகொண்டார். அதற்காக அவரைச் சிலர் 'கருணைமிக்க கானிங்'[1] என்று பரிகாசமாகக் கூப்பிடலாயினர். ஆயினும், அவர் போக்கை அரசியாரும் அவர் அமைச்சர்களும் புகழ்ந்து ஆதரித்தனர். பின் விளைவுகளைக் கவனிக்கும்போது அவர் செய்தது சரியென்பது தெளிவாகிறது (கு. 210).

---

## அறுபத்தெட்டாம் அத்தியாயம்

# புதிய குடியேற்றப் பேரரசு[2]

## (1833—1867)

§ 298. அடிப்படைச் சீர்திருத்தவாதிகளுள் பேரரசை விழைந்தோர்[3] :—அச்சமயத்தில் ஒரு புதிய அக்கரைப் பேரரசு[4] வளர்ந்துகொண்டிருந்தது. அரசியல் நிபுணர்கள் அதற்காகத் தீர்மையான திட்டமெதுவும் வகுக்கவில்லை. சிலர் அது 'ஞாபக மறதியாகப் பெறப்பட்டது'[5] என்றும் பரிகசித்தனர். எனினும், புதிய நாடுகளில் பிழைப்பு தேடவேண்டுமென்னும் உணர்ச்சி பிரிட்டிஷ் மக்களின்

---

1. 'Clemency Canning.' 2. The New Colonial Empire. 3. The Radical Imperialists. 4. Overseas Empire. 5. 'Acquired in a fit of absence of mind.

இரத்தத்தில் தோய்ந்திருந்ததோடு, அத்தகைய முயற்சிகளில் வெற்றி பெறுதற்கேற்ற குணங்களும் அவர்களிடம் மல்கிக் கிடந்தன.

பிரிட்டிஷ் குடியேற்றங்கள் விஷயமாகத் தாய்நாட்டுத் துரைத்தனத்தாரின் போக்கினை இரண்டு முக்கிய கருத்துக்கள் தூண்டின. முதலாவது, அக்காலத்தில் மக்கள் நலத்துக்கான நற்செயல்களில் சீர்திருத்தக்காரர்களின் மனம் ஊன்றியிருந்ததால்[1] (கு. 193), குடியேறுபவர்கள் பழங்குடிகளுக்குத் தீங்கிழைக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று தாய்நாட்டுத் துரைத்தனத்தார் கருதினர். இந்த மனப்பான்மையே அடிமை ஏற்பாட்டை[2] ஒழித்ததற்குக் காரணம். தென் ஆப்ரிகாவிலும் நியுசிலண்டிலும்கூட இதற்குச் சான்றுகள் இருப்பதை இனி உணர்வீர்கள். இரண்டாவது, தங்கள் தாய்நாட்டின் பிரதிநிதித்துவக் குடியரசு அமைப்பில்[3] தாங்கள் கொண்டிருந்த பெருமை யுணர்ச்சியும் உற்சாகமும் குடியேற்றங்களுக்கும் சுய ஆட்சி வழங்கிவிடவேண்டுமென்று நினைக்க அவர்களைத் தூண்டின. குடியேற்றங்களால் தாய்நாட்டுக்கு இலாபமில்லை என்றே அவர்கள் கருதினர்கள். அமெரிக்கா குடியேற்றங்களில் என்ன நேர்ந்ததோ அதே மீண்டும் மற்ற குடியேற்றங்களிலும் நேரலாம்; "காய் முற்றியதும் மரத்திலிருந்து தானே விழுந்துவிடும்."

முதல் முதலில் பேராசை விழைந்து அதில் மோகங் கொண்டவர்கள் எட்வர்ட் கிப்பன் வேக்பீல்ட்[4] (1796-1862) தலைமையில் திரண்ட அடிப்படைச் சீர்திருத்த வாதிகள் சிலரே. செல்வாக்கு பெறவேண்டுமென்னும் ஆவல், வினைத்திறன், சுறுசுறுப்பு முதலிய நற்குணங்களைப் பெற்றிருந்தபோதிலும், வேக்பீல்ட், ஒரு பணக்காரப் பெண்

1. The humanitarian impulse. 2. Slavery. 3. Democratic Constitution. 4. Edward Gibbon Wakefield.

ளைத் தூக்கிச்சென்று தன்னை மணந்துகொள்ளுமாறு தூண்டியதால், பார்லமென்டில் முன்னுக்குவரவேண்டிய சந்தர்ப்பத்தை இழந்தார். இந்தக் குற்றத்துக்காக அவர் சிறையிலிருந்தபோது குடியேற்றங்களைப்பற்றித் தமக்குக் கிடைத்த நூல்களையெல்லாம் படிக்கலானார். விடுதலை யடைந்ததும் இவ்விஷயமாகப் பிரசாரம்செய்து புதிதாகப் பெயரெடுக்க அவர் தீர்மானஞ் செய்துகொண்டார். ஆகவே, விடுதலையடைந்ததும் 'குடியேற்றச் சங்கம்'[1] ஒன்றை நிறுவி அதன்மூலம் தமது அபிப்பிராயங்களை நடைமுறைக்குக் கொண்டுவரப் பிரசாரஞ் செய்யலானார். அவர் கூறியதாவது: பிரிட்டனில் மக்கள் கூட்டம் அளவுக்கு மேல் பெருகியிருந்தது. குடியேற்ற நாடுகளோ அநேகமாகக் காலியாகவே கிடந்தன. தாய்நாட்டின் ஆக்கத்தொழில்களுக்கு ஏராளமான மூலப் பொருள்களும்,[2] அவ்வாக்கத் தொழில்களில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு ஏராளமான உணவுப் பொருள்களும் தேவை. அதோடு, அவ்வாக்கத்தொழில்களால் உண்டாக்கப்பெறும் பொருள்கள் விலையாவதற்காக மேலும் மேலும் பரந்து விரியும் இடங்கள் தேவை. பிரிட்டனின் அக்கரை நாடுகளை ஒழுங்காக விருத்திசெய்தால் தாய்நாட்டில் அளவுக்குமிஞ்சியிருந்த மக்கள் கூட்டம் அங்குபோய் நிலைத்துத் தாய்நாட்டின் ஆக்கப்பொருள்களை[3] ஏற்றுக்கொண்டு அவைகளுக்குப் பதில் உணவுப்பொருள்களையும் ஆக்கத்தொழில்களுக்கான மூலப்பொருள்களையும் தாய்நாட்டுக்கு அனுப்பிக்கொண்டிருக்கலாம். ஒருவருக்கொருவர் ஆதரவாயிருக்கக் கூடிய இந்தத் திட்டத்துக்கு இரண்டு இடையூறுகள் இருந்தன: (1) குடியேறுபவர்களுக்கு அங்கே நிலம் இலவசமாகக் கிடைத்துவிடுமானால் அதை விருத்திசெய்யும்

1. Colonisation Society. 2. Raw Materials. 3. Manufactured goods.

நோக்கமில்லாமலேயே அவர்கள் அதை ஏற்றுக்கொள்வார்கள். மேலும், அதை விருத்திசெய்வதற்கு வேண்டிய உழைப்பாளிகளும் அங்கே கிடைப்பது அரிது. (2) வெளிநாட்டுக் குடியேற்றத்தால் அதிகமாகப் பலனடையக்கூடியவர்கள் ஏழை மக்களே; ஆனால், வெளிநாடு செல்வதற்காகும் செலவுக்கு அவர்களிடம் பணமிராது. ஆகவே, துரைத்தனம் குடியேற்றங்களில் நிலத்தை இலவசமாகக் கொடுக்காமல் விற்குமானால், அவ்விற்பனைத் தொகைகளைச் சேர்த்து ஒரு நிதி திரட்டிக் குடியேறச் செல்லும் மக்களுக்கு உதவிபுரியலாம். அதனால் எல்லோருக்கும் நன்மையேற்படும்.

§ 299. ஆஸ்ட்ரேலியாவின் முன்னேற்றம் :—இவ்விதமாக விருத்தியடைந்த முதல் குடியேற்ற நாடு ஆஸ்ட்ரேலியா. முன் அத்தியாயம் ஒன்றில் (§ 241) இந்தத் தீவுக் கண்டமானது தாய்நாட்டில் தண்டனைபெற்ற குற்றவாளிகளைக் கொண்டுபோய்த் தள்ளும் இடமாக உபயோகிக்கப்பட்டது என்று அறிந்தோம். அவர்களுள் அனைவரும் பெருங்குற்றவாளிகள் என்று கூறுவதற்கில்லை. ஏனென்றால், அக்காலத்துச் சட்டங்கள்படி அல்ப குற்றங்களுக்கும் நாடுகடத்தல் தண்டனை[1] (தீவாந்தர சிக்ஷை) விதிக்கப்பட்டது. டார்செஸ்டர் தொழிலாளர்களுக்கு விதிக்கப்பட்ட தண்டனையை இதற்கு உதாரணமாகக் கூறலாம் (§ 288). தண்டனைக்கு விதிக்கப்பட்ட காலம் முடிந்ததும் அவர்கள் விடுதலைபெற்றுச் சாதாரண குடியேற்றக்காரர்களைப்போல் அங்கு வாழலாயினர். சிட்னியின்[2] காவல் படைத்[3] தலைவரான காப்டன் மாக்ஆர்தர்[4] என்பவர் ஒரு சமயம் அவ்விடத்தின் பின்புறத்திலிருக்கும் நீலமலைகளுக்கு[5] அப்பால் பசுமையான புல்நிலங்களிருப்பதைக்

1. Transportation. 2. Sydney. 3. Garrison. 4. Captain Mac Arthur. 5. Blue Mountains.

கண்டுபிடித்தார். அதுவே புதிய தென் வேல்ஸ்[1] குடியேற்றத்தின் விருத்திக்கு வித்தெனலாம். நன்னம்பிக்கை முனைக் குடியேற்றத்திலிருந்து அவர் நல்ல சாதி மெரினோ ஆடுகளை[2] வரவழைத்து அங்கே வளர்க்க ஏற்பாடு செய்தார். யார்க்ஷைர் கம்பள நெசவுத் தொழிற்சாலைகளின் சொந்தக்காரர்களுக்குத் தங்களுக்குத் தேவையான மூலப் பொருள் இப்போது இப்புதிய இடத்திலிருந்து பெறப் படும் என்பதை அவர் உணர்த்தினர்.

ஆயினும், தண்டனைக்குள்ளான குற்றவாளிகளோடு வாழ்தல் அநேகருக்குப் பிடிக்காததால் அவர்கள் அங்கு போகத் தயங்கினர்கள். ஆகவே, 1835-ல், வேக்பீல்ட் தென் ஆஸ்ட்ரேலியாவில் அத்தகைய மாசொன்றுமில்லாத ஒரு புதிய குடியேற்றத்துக்குத் திட்டம் வகுத்தார். தென் ஆஸ்ட்ரேலியா முதலிலிருந்தே சுய ஆட்சி நாடாக இருக்க வேண்டுமென்பது அவர் விருப்பம். ஆயினும், தாய்நாட்டுத் துரைத்தனம் 1841—ல் அக்குடியேற்றத்துக்கு சர் ஜியார்ஜ் கிரே[3] என்பவரைக் கவர்னராக நியமித்தது. அவர் மிகவும் சிரமப்பட்டு அதைப் பொருள்முட்டிலிருந்து காப்பாற்றினர். எனினும், சில ஆண்டுகளில் வேக்பீல்டின் திட்டப்படி அங்கு 16000 பேர் வெற்றிகரமாகக் குடியேற்றப்பட்டனர்.

பிரிட்டிஷ் துரைத்தனம் குற்றங்களுக்கு நாடுகடத்தல் தண்டனை விதித்தலை நீக்கிவிட்டதும் (அதற்குப் பதில் குற்றவாளிகளுக்குச் சிறைக்கூடங்களில் உழைத்தல் தண்டனை விதிக்கப்பட்டது) ஆஸ்ட்ரேலியா மிக விரைவாக விருத்தியடைந்தது. 1833-ல் புதிய தென்வேல்ஸில் 60000 பேர்களே இருந்தனர்; அவர்களுள் சுமார் பாதி பேர் தண்டனைக்குள்ளான குற்றவாளிகள். 1850-லோ அங்கு 265000 பேர் இருந்தனர்; அவர்களுள் நூற்றுக்கு

1. New South Wales. 2. Merino sheep. 3. Sir George Grey.

ஒருவர் விகிதம்கூடக் குற்றவாளிகளில்லை. இனி பொறுப்பான சுய ஆட்சிக்கு அங்கு வழியேற்பட்டது. தங்களுக்கு விருப்பமான அரசியலை அமைத்துக்கொள்ளவும் வாணிப விதிகளை விதித்துக்கொள்ளவும் ஆஸ்ட்ரேலியாவின் மூன்று குடியேற்றங்களுக்கும் சுதந்தரமளிக்கும் சட்டமொன்றை 1850-ல் ஜான் ரசெல் பிரபு நிறைவேற்றி வைத்தார். பாஸ்டன் துறைமுகத்தில் நடந்ததைப் போன்ற சம்பவமெதுவும் சிட்னி துறைமுகத்தில் இனி நடப்பதற்கில்லை. இதற்கிடையே, சிலர் புதிய தென் வேல்ஸிலிருந்து போய் விக்டோரியாவில் குடியேறினர். அங்கு 1851-ல் தங்கம் கிடைப்பதாகச் செய்தி பரவியதும் சில ஆண்டுகளில் அதன் மக்கள் கூட்டம் மூன்றுமடங்கு பெருகிவிட்டது.

§ 300. நியு சீலண்டின் ஆரம்பம் :—வேக்பீல்டின் குடியேற்ற முயற்சிகளுக்கு நியு சிலண்ட் பெரிதும் பொருத்தமான இடமாயிருந்தது. பூத நிலையிலும் மண்ணின் தன்மையிலும் அது பிரிட்டனை ஒத்திருந்தது. ஆயினும், அங்கு சில சிக்கல்கள் ஏற்பட்டன. அங்கு முன்னமே வேறு மக்கள் வாழ்ந்துகொண்டிருந்தனர். அவர்கள் சுறுசுறுப்பும் புத்திகூர்மையும் மாறும் நிலைகளுக்கு ஏற்றவாறு சரிப்படுத்திக்கொள்ளும் ஆற்றலும் பெற்றவர்களா யிருந்தனர். சில கிறிஸ்துமதப் பிரசாரகர்கள்[1] அவர்களிடையே முன்னமே பிரசாரஞ்செய்து அவர்களைக் கிறிஸ்தவர்களாக்கிவைத்திருந்தனர். அவர்கள் அங்குவரும் வெள்ளைக்காரர்களோடு சேர்ந்தால் கெட்டுவிடுவார்களென்பது அம்மதப்பிரசாரகர்களின் அபிப்பிராயம். அவர்களுக்குக் குடியேற்ற நாடுகளின் அமைச்சராகிய[2] க்ளெனெல்க் பிரபு[3] ஆதரவளித்தார். அவர்

---

1. Missionaries. 2. The Colonial Secretary. 3. Lord Glenelg.

ஒரு 'எவாஞ்செலிகல் சர்ச்மன்'[1]. பிற்போக்கான மக்களை நாகரிக நிலையை அடையச்செய்வது பிரிட்டனின் பொறுப்புக்களில் ஒன்றாக இருத்தல்வேண்டு மென்பது அவர் கருத்து. துரைத்தனம் தமக்குத் துணைசெய்ய மறுத்தும், வேக்பீல்ட் 'நியு சீலண்ட் கம்பெனி' என்பதொன்றை ஏற்படுத்தி 1839-ல் தமது உடன்பிறந்தவரான சார்ல்ஸ் வேக்பீல்ட் என்பவர் தலைமையில் முதல் கூட்டமொன்றை அனுப்பிவைத்தார். ஆயினும், அவர்களோடு கிறிஸ்துமதப் பிரசாரகர்களும் பழங்குடிகளும் பகைமை பாராட்டினர். அங்குள்ள மவோரி[2] பழங்குடிகளின் வழக்கப்படி நிலம் தனிப்பட்ட நபர்களுக்குச் சொந்தமாகாமல் பொதுவில் குலக்கூட்டத்துக்குச்[3] சொந்தமாகக் கருதப்பட்டு வந்தது. இனித் தாய்நாட்டுத் துரைத்தனத்தார் விலகியிருக்க முடியாதாகையால், 1841-ல் அத்தீவுகளைப் போரசில் சேர்த்துக்கொள்ள ஒரு அதிகாரியை அனுப்பினர். அவர் மவோரியர் குலக்கூட்டங்களின் தலைவர்களைக் கூட்டி அவர்களோடு வைட்டாங்கி உடன்படிக்கை[4] என்பதொன்றைச் (1840) செய்துமுடித்தார். அதன்படி விக்டோரியாவைத் தங்கள் அரசியாக அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். நிலத்துக்குமட்டும் அவர்களே சொந்தக்காரர்கள் என்று அங்கீகரிக்கப்பட்டனர். எனினும், சில ஆண்டுகள் அங்கு அடிக்கடி சச்சரவுகள் தோன்றிக்கொண்டிருந்தன. குடியேற வந்தவர்கள் நிலங்களுக்காகப் போராவல் கொண்டிருந்தனர்; கிறிஸ்துமதப் பிரசாரகர்கள் அவர்களுக்கு விரோதமாக இருந்தனர்; மவோரிகள் சண்டை சச்சரவுகளில் உற்சாகமிருந்தவர்களா யிருந்தனர். 1845-ல் சர் ஜியார்ஜ் கிரே நியு சீலண்ட் கவர்னராக நியமிக்கப்பட்டார். அவர் தென் ஆஸ்ட்ரேலியா குடியேற்றத்தை ஒழுங்காக நிலைக்க

1. Evangelical Churchman. 2. The Maoris. 3. The Tribe.
4. Treaty of Waitangi.

வைத்த புகழோடு வந்து சேர்ந்தார். அவர் மவோரிகளின் மொழியையும் குலக்கதைகளையும் வழக்கவொழுக்கங்களை யும் கற்றுக்கொள்ளக் காட்டிய ஆவல் அவர்களுக்கு மகிழ்ச்சி யளித்தது. ஆயினும், அங்குவந்து குடியேறி யிருந்த வெள்ளைக்காரர்களோடு அவர்கள் அமைதியாக வாழவேண்டுமென அவர் வற்புறுத்தினர். நில விஷயமாக ஏற்பட்ட சிக்கலைத் தீர்க்க அவர் ஒரு வழியைக் கண்டு பிடித்தார். குலக்கூட்டங்களிடமிருந்து பரந்த நிலங்களை அவர் விலைகொடுத்து வாங்கிக்கொண்டு குடியேற வந்தவர் களுக்குச் சில நிபந்தனைகளோடு விற்றார். கிறிஸ்துமதப் பிரசாரகர்களும் மெதுவாக இந்தப் புதிய ஏற்பாடுகளுக்கு இணங்கிவந்துவிட்டார்கள். ஸ்காட்லண்ட் மதப்பிரசார சங்கங்கள் தீவின் தென்பாகத்தில் குடியேறச் சிலரைத் திரட்டியனுப்பினர்: அப்பாகம் அநேகமாக அவர்கள் தாய்நாட்டைப்போலவே இருந்தது. சர்ச் மிஷனரி சொஸைடி[1] இப்போது கான்டெர்பெரி[2] எனப்படும் இடத்துக்கு மற்றொரு கூட்டத்தினரைக் குடியேற அனுப் பினர். ஆகவே, 1852-ல் நியு சிலண்டில் 30000 வெள்ளைக் காரர்கள் இருந்தனர். அவர்கள் தகங்ளைத் தாங்களே ஆண்டுகொள்ளக்கூடிய நிலையிலிருந்ததால் கிரேயின் கண் காணிப்பின்கீழ் அவர்களுக்கு ஒரு அரசியல் திட்டம் வரை யப்பட்டது. அதன்படி ஒவ்வொரு பிரிவிலும் ஒரு பிரிவுச் சபை ஏற்பட்டது. வெல்லிங்ட்டனில்[3] (இப்புதிய பட்ட ணத்துக்கு அப்போது காலமான ட்யூக்கின் பேரை வைத் தனர்) ஒரு பொதுச் சபை ஏற்பட்டது. அதற்கு ஒவ் வொரு பிரிவிலிருந்தும் பிரதிநிதிகள் சென்றனர். ஆஸ்ட் ரேலியா குடியேற்றங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சுய ஆட்சி இதற்கும் அளிக்கப்பட்டது.

---

1. Church Missionaty Society. 2. Canterbury. 3. Wellington.

§ 301. தென் ஆப்ரிகாவில் டச்சுக்காரரும் இங்லிஷ்காரரும் :—தென் ஆப்ரிகாவிலும் பழங் குடிகள் இருந்தனர். மற்றொரு யூரோப்பியர் கூட்டமும் அங்கு முன்னமே குடியேறியிருந்ததால், அவர்களுக்கும் புதிய பிரிட்டிஷ் குடியேற்றக்காரர்களுக்குமிடையே அடிக்கடி பல சச்சரவுகள் தோன்றி அவர்கள் விருத்தி தடைப்பட்டது. இந்த மனத்தாங்கல்களின் விளைவுகளை இன்றும் அங்கு காண்கிறோம். (நன்னம்பிக்கை) முனைக் குடியேற்றம்[1] நெப்போலியனோடு நட்பாயிருந்த டச்சுக்காரரிடமிருந்து கைப்பற்றப்பட்டது. 1815-ல் சமாதான மேற்பட்டபோது ஹாலண்ட் அதைப் பிரிட்டனுக்கு 6000000 பவுனுக்கு விற்றுவிட்டது. முக்கியமாக இந்தியாவுக்குச் செல்லும் பிரிட்டிஷ் கப்பல்கள் அவற்றின் நெடும் பயணத்தின் நடுவே சிறிது தங்கிச் செல்வதற்கு இவ்விடம் அவர்களுக்குத் தேவையாக இருந்தது. பல ஆண்டுகள் அங்கு 'போயெர்கள்'[2] எனப்பட்ட டச்சு உழவர்களே அடிமைகளைக்கொண்டு பழைய முறையில் பயிர்த்தொழில் செய்து கொண்டு வாழ்ந்து வந்தனர். 1833-ல் பிரிட்டிஷ் நாடுகளில் அடிமைகளுக்கு விடுதலை அளிக்கப்பட்டது போயெர்களுக்குப் பிடிக்கவில்லை. இதற்காக அவர்கள் பெற்ற நஷ்டஈடுப் பணம் மிகக் குறைவு. அச்சமயத்தில் அவர்களுக்கு மற்றொரு கஷ்டமும் ஏற்பட்டது. போர் வேட்கை கொண்ட காபிர் கூட்டத்தினர்[3] அவர்களை வடக்கிலிருந்து தாக்கினர். முனைக் குடியேற்றத்தின் கவர்னர் சர் பெஞ்சமின் டிஅர்பான்[4] என்பவர் அவர்களை விரட்டியடித்து அவர்கள் நாட்டுக்கும் முனைக்குடியேற்றத்துக்குமிடையே ஒரு நிலப்பரப்பைக் கைப்பற்றிக்கொண்டார். அதை 'எவருக்குஞ் சொந்தமில்லாத நில'மாக[5] வைத்

1. Cape Colony. 2. 'Boers.' 3. The Kaffirs. 4. Sir Benjamin D'Urban. 5. 'No Man's Land.'

திருக்க வேண்டுமென்பது அவர் எண்ணம். உள்நாட்டு அமைச்சர் க்ளெனெல்க் பிரபு இதைப்பற்றிக் கேள்விப் பட்டதும், காபிர் மக்களுக்கு இழைக்கப்பட்ட தீங்கை மாற்றும் நோக்கத்துடன், கைப்பற்றிய நிலப்பரப்பைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டுமென்றும், டிஅர்பான் கவர்னர் பதவியை விட்டுவரவேண்டுமென்றும் கட்டளை யிட்டார். இதனால் போயர்களுக்கு மிகுந்த அதிருப்தி யேற்பட்டது.. பிரிட்டிஷ் துரைத்தனம் நிலவேலைகளுக் குத் தேவையான ஆட்களைப் பிரித்துவைத்ததோடு, அநாக ரிகமிக்க பகைவர்களிடமிருந்து தங்களைப் பாதுகாக்கவும் விரும்பவில்லையே யென்று அவர்கள் நினைத்தார்கள். ஆகவே, அவர்களுள் சிலர் வேறு காலி இடங்களுக்குச் சென்று அங்கே நிலைத்துச் சுயேச்சையாகத் தங்கள் பாது காப்புக்கும் வேலைகளுக்கும் தனியேற்பாடுகளைச் செய்து கொள்ளத் தீர்மானித்தார்கள். இவ்வாறு அவர்கள் புதிய இடங்களை நாடிச் சென்றதைப் பெரிய மாட்டுவண்டிப் பயணம் ('கிரேட் ட்ரெக்'[1]) என்பர். பல போயர் குடும்பத்தினர் தங்கள் தட்டுமுட்டுச் சாமான்களை யெல் லாம் பெரிய மாட்டு வண்டிகளில் ஏற்றிக்கொண்டு தங்கள் மந்தைகளையும் அவற்றின்முன் ஓட்டிக்கொண்டு வடக்கு நோக்கிச் சென்றனர். அவர்களுள் சிலர் ஆரஞ்சு ஆற் றுக்கு அப்பால் தங்கி அங்கு நிலைத்தனர்: சிலர் வால் ஆற் றைக் கடந்தும் சென்றனர்.

ஆயினும், அவர்களுடைய பண்ணைகள் இங்கொன்றும் அங்கொன்றும் இடைவிட்டுப் பரவிக் கிடந்ததால் காபிர் மக்களின் எதிர்ப்புக்களை அவர்களால் ஒன்று சேர்ந்து தடுக்கமுடியவில்லை. இதனால் முனைக் குடியேற்றமும் அவர் களது எதிர்ப்புக்களுக்கு இலக்கானது. ஆகவே, புதிய கவர்னராக வந்த சர் ஹென்றி ஸ்மித்[2] போயர்களின்

1. The Great Trek. 2 Sir Henry Smith.

புதிய நாடுகளையும் கைப்பற்றிவிடத் தீர்மானித்தார் (1847). சில ஆண்டுகள் தென் ஆப்ரிகா அமைதியாக இருந்தது. விரைவிலேயே பிரிட்டிஷ் துரைத்தனத்தின் போக்கு மாறியது. பிரிட்டிஷ் அரசியல் நிபுணர்கள் அக்கரை நாடுகளைக் கைப்பற்றியாளும் பொறுப்பை உதறிவிடவேண்டுமென்று நினைத்திருந்தார்கள் என்பதை முன்னமே கூறியுள்ளோம். அவற்றால் லாபத்தைவிடத் தொந்தரவே அதிகமென்பது அவர்கள் கருத்து. ஆகவே, 1852-ல் அவர்கள் மணலாற்று ஒப்பந்தம்[1] என்பதன் மூலம் டிரான்ஸ்வால் குடியரசின்[2] தனி அந்தஸ்தினை அங்கீகரித்தனர். இரண்டாண்டுகளுக்குப்பின் ப்ளோயெம்பான்டீன் ஒப்பந்தம்[3] என்பதன் மூலம் ஆரஞ்சு சுயேச்சை நாடு (ப்ரீ ஸ்டேட்)[4] என்பதின் தனி அந்தஸ்தினையும் அங்கீகரித்தனர்.

ஆயினும், இதோடு இந்தக் கதை முடிந்துவிடவில்லையென்பதைப் பிறகு உணர்வீர்கள்.

§ 302. கானடா: டராம் பிரபுவின்[5] அறிக்கை:— ஆஸ்ட்ரேலியாவுக்கும் நியு சிலண்டுக்கும் சுய ஆட்சி உரிமைகளை அளிக்கப் பிரிட்டிஷ் துரைத்தனம் தயாராக இருந்ததற்கு முக்கிய காரணம் கானடாவில் நிகழ்ந்த சில சம்பவங்களே. அவற்றால் தாய்நாட்டுக்கும் குடியேற்றங்களுக்கும் எத்தகைய தொடர்பிருக்கவேண்டுமென்பதைப் பற்றிச் சில புதியகருத்துக்கள் தோன்றலாயின. அமெரிக்கா சுயேச்சைநிலைப் போர் மூண்டதற்குக் காரணமாயிருந்த நிலை கானடாவிலும் காணப்பட்டது. பிட் இயற்றிவைத்த கானடா சட்டத்தின்படி (§ 241) ஒவ்வொரு மாகாணத்திலும் தாய்நாட்டுத் துரைத்தனத்தார் நியமிக்கும் ஒரு கவர்னரும் ஆலோசனை சபையும் இருந்ததோடு, அவ்வவ்

1. The Sand River Convention.
2. The Transvaal Republic.
3. The Bloemfontein Convention.
4. The Orange Free State.
5. Lord Durham.

விடத்து மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சட்ட சபையும் இருந்தது. இவ்வகையில் பிரிட்டனின் ஆளும் வகுப்பினருக்குக் கொடுக்கப்பட்டிருந்த செல்வாக்கினைக் கானடா மக்கள் விரும்பவில்லை. ஏனென்றால், அவ்வகுப்பினருக்கு அந்நாட்டில் அக்கரையொன்றுமில்லை. ஆகவே, இவ்விரு சபைகளும் அடிக்கடி சச்சரவிட்டுக்கொண்டிருந்தன. அதோடு, அந்நியர்களாகப் பாவிக்கப்பட்ட அவர்களுக்கும் மதஸ்தாபனத்துக்கும்[1] தாய்நாட்டுத் துரைத்தனத்தார் பரந்த வளமிக்க நிலங்களை மானியங்களாக வழங்கியதும் கானடா மக்களின் அதிருப்தியைத் தூண்டியது. அவர்களுள் பெரும்பான்மையோர் இங்லிஷ் மதஸ்தாபனத்தைச் சேராதவர்கள்; க்வெபெக் மாகாணத்தவர்கள் ப்ரெஞ்சு காதொலிக்கர்கள்; அன்டாரியோ மாகாணத்தவர்கள் ஸ்காட்டிஷ் ப்ரெஸ்பிடீரியர்கள்.[2] இந்த அதிருப்திகள் காரணமாக இவ்விரு மாகாணங்களிலும் 1837-ல் கலவரங்கள் தோன்றின. அவைகளை உடனே அவ்வவ்விடத்து அதிகாரிகள் அடக்கிவிட்டனர். ஆயினும், தாய்நாட்டுத் துரைத்தனத்தார் அதோடு திருப்தியடைந்துவிடாது, அமைதியை உண்டாக்கவும் அத்தகைய கலவரங்கள் நேர வேண்டியதன் காரணங்களைக் கண்டுபிடித்து அவற்றிற்குத் தக்க பரிகாரங்களைக் கூறவும் பொறுப்பு வாய்ந்த ஒரு கனவானை நியமித்து அனுப்பத் தீர்மானித்து, அடிப்படைச் சீர்திருத்தவாதிகளுள் பேரரசை விழைந்தோரில்[3] ஒருவராகிய டராம் பிரபுவுக்கு (1792-1840) அப் பொறுப்பினை அளித்தார்கள். இது ஒரு துணிவுமிக்க செயலே.

பிரிட்டிஷ் பேரரசினைச் செவ்வையான முறையில் திரட்டியமைத்த பெரிய மனிதர்களுள் டராம் ஒருவர். அவர் நேர்மையும் பெரு நோக்கமும் சுறுசுறுப்பும் திடமனதும் கொண்டவர். முதலில் கலகத் தலைவர்களை

1. The Church. 2. Scottish Presbyterians. 3. Radical Imperialisrs.

விசாரணையின்றி நாடுகடத்தியும் மற்றவர்களை மன்னித்தும் அவர் சில தீர்ப்புக்களை வெளியிட்டார். பிறகு அங்கிருந்த அரசியல் நிலையினையும் மக்கள் கருத்துக்களையும் விசாரித்து ஆராய்ந்து தாய்நாட்டுத் துரைத்தனத்துக்கு ஒரு அறிக்கை தயாரித்தார். ஆயினும், அவர் தம் வேலையை முடிப்பதற்குள் அமைச்சினர் திகிலடைந்து அவர் தம்மிஷ்டப்படி செய்த செயல்களையெல்லாம் நிராகரித்து அவர் தீர்ப்புக்களை ரத்துசெய்துவிட்டனர். ஆகவே, அவர் தம் உத்தியோகத்தை ராஜிநாமா செய்துவிட்டு இங்லண்ட் திரும்பினர். அடுத்த ஆண்டிலேயே அவர் இறந்துவிட்டதற்குத் துரைத்தனத்தார் அவரை இவ்வாறு கேவலமாக நடத்தியதே காரணமென நினைக்க இட மிருக்கிறது.

அவர் இறந்த பிறகு, 'டாம் தம் வாழ்க்கையைக் கெடுத்துக்கொண்டபோதிலும் ஒரு பேராசை நிறுவினர்' என்னும் உண்மையை எல்லோரும் உணரலாயினர். தமது அறிக்கையில் (1839) அவர் கூறிய ஆலோசனைகளே தற்போதுள்ள பிரிட்டிஷ் தனி மக்களின் பொதுநலப் பேரசின்[1] அடிப்படைத் தத்துவத்தை உருவாக்கியவை. கானடாவின் இருமாகாணங்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட பார்லமென்டொன்றின் ஆதரவைப் பெற்றுள்ள ஒரு துரைத்தனத்தின்கீழ் ஒன்றுபடுத்தப்பட வேண்டுமென்று அவர் கூறினர். தாய்நாட்டுடன் குடியேற்றங்களை உண்மையன்புடனும் ஆர்வத்துடனும் நிலையாகப் பிணித்துவைக்கக்கூடியது, தாய்நாட்டுத் துரைத்தனம் அவர்கள் விஷயங்களில் கூடுமான வரையில் தலையிடாதிருந்து அவர்களைத் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும்படி விட்டுவிடுவதே என்றும் அவர் கூறினர் (கு. 211).

எனினும், கானடா மாகாணங்களின் மக்களிடையே தோன்றியிருந்த பொறாமை மீண்டும் தலைகாட்டியது.

1. The British Commonwealth of Nations.

அங்குச் சில காலமாக நிலைத்திருந்த ப்ரெஞ்சு மக்கள் அன்டாரியோ மாகாணத்துக்குள் பெருந் திரளாக வந்து புதிதாகக் குடியேறிக்கொண்டிருந்த பிரிட்டிஷ் மக்களின் அதிக தொகையால் தங்களுக்குத் துரைத்தனத்தில் செல்வாக்கு குறைந்துவிடுமெனப் பயந்தனர். மேலும், ஒரு சமயம், இயற்கை நிலையை யொட்டியும் பொருளாதாரத்தை யொட்டியும் இம் மாகாணங்கள் அமெரிக்கா ஐக்கிய நாடுகளோடு சேர்ந்துவிடுமோ என்ற சந்தேகமு மிருந்தது. சர் ஜான் மாக்டானல்ட்[1] என்பவரது அரசியல் திறமையால் இந்நிலை மாறியது. அடுத்துள்ள ஐக்கிய நாடுகளின் கவர்ச்சியால் பாதிக்கப்படாமலிருக்க அம்மாகாணங்களை ஒரு கூட்டரசுத் திட்டத்தில் இணைத்துப்[2] பலப்படுத்தி அக் கூட்டரசுக்குச் சுயேச்சை பெற்ற ஒரு தனி நாட்டின்[3] அந்தஸ்தினை நல்கித் தாய்நாட்டோடு சமநிலையில் தொடர்பு பெற்றிருக்க[4] வைப்பதே சிறந்த வழி யென்பதை அவர் உணர்ந்தார். இந்த இலக்ஷியத்துடன் இயற்றப் பட்டதே பிரிட்டிஷ் வட அமெரிக்கா சட்டம்[5] (1867). அதன்படி கானடாவில் நிறுவப்பட்ட 'டொமினியன் துரைத்தனம்'[6] உள்ளூர் விஷயங்களைத்[7] தவிர கானடாவின் மற்றெல்லா விஷயங்களையும் கவனிக்க அதிகாரம் பெற்றது. உள்ளூர் விஷயங்களை மாகாண சபைகள்[8] கவனித்துக் கொண்டன. பிரிட்டிஷ் துரைத்தனத்தின் பிரதிநிதியாக ஒரு கவர்னர் ஜெனரல் நியமிக்கப்பட்டார். அவர் பிரிட்டிஷ் அரசியல் அமைப்பில்[9] அரசர் இயற்றும் கடமைகளை இயற்றிக்கொண்டு வருகிறார்.

---

1, Sir John Macdonald. 2. To join them in a Federal Union. 3. An Independent Nation. 4. In free partnership. 5 British North America Act. 6. Dominion Government. 7. Local matters. 8. Provincial Councils. 9. British Constitution.

அறுபத்தொன்பதாம் அத்தியாயம்

# இரண்டாம் சீர்திருத்தச் சட்டம்

## (1858—1867)

§ **303.** மற்றொரு டார்பி-டிஸ்ரேலி இடைக்காட்சி :— க்ரைமியா போரை வெற்றிகரமாக முடித்த பெருமையோடு பாமர்ஸ்டன் தமது ஆயுள் முடியும்வரை (1858-9-ல் சிறிது காலம் தவிர) தலைமை அமைச்சராக இருந்தார். அந்தச் சிறிது காலத்திலும் அவர் தமது வழக்கமான போக்கினின்றும் பிறழ்ந்ததே அவர் வீழ்ச்சிக்குக் காரணமா யிருந்தது. 1858-ம் ஆண்டின் தொடக்கத்தில் பேரரசர் மூன்றும் நெப்போலியனைக் கொல்லப் பாரிஸில் சிலர் சூழ்ச்சிசெய்தனர். அந்தச் சூழ்ச்சியும் அதற்கு வேண்டிய வெடிகுண்டும் லண்டனிலிருந்து வந்ததாகச் சான்றுகள் கிடைத்தன. பேரரசரை ஆதரித்தவர்கள் (முக்கியமாகச் சேனைத்தலைவர்கள்) இத்தகைய அயோக்கியச் செயல்களைத் தடுக்கப் பிரிட்டிஷ் துரைத்தனம் யாதொரு தீர்மையான ஏற்பாடும் செய்ய முடியாதிருந்தது பற்றிச் சினந்து குறை கூறினர். வெளிநாட்டாரை மட்டந்தட்டி வைப்பதில் பெயர்பெற்ற பாமர்ஸ்டன் அவர்கள் ஆலோசனை பிரிட்டனுக்கு அவசியமில்லை என்று கூறி அவர்களுக்குப் பாடங் கற்பிப்பார் எனப் பலர் எதிர்பார்த்தனர். ஆயினும், அவர் இந்தத் துணிச்சல் மிக்க நெப்போலியனை எப்போதும் அதிகமாக மெச்சிக்கொண்டிருந்தவ ராதலால் (§ 291), அவரைத் திருப்திசெய்யக் கொலைச்சூழ்ச்சி மசோதா[1] என்னும் சட்டமொன்று கொண்டுவந்து அத்தகைய குற்றத்துக்

---

1. Conspiracy to Murder Bill.

குரிய தண்டனையைக் கடுமையாக்க முயன்றார். வேற்று நாட்டாரைத் திருப்திசெய்யக் கொண்டுவந்த மசோதாவென அதைப் பார்லமென்ட் அதிக சீற்றத்துடன் தள்ளிவிட்டது. ஆகவே, பாமர்ஸ்டன் ராஜிநாமா செய்ய வேண்டியவரானார்.

டார்பி பிரபுவும் அவரை ஆதரித்த டிஸ்ரேலியும் தங்கள் எதிரிகளிடையே கிளைத்த ஒற்றுமையின்மையால் மீண்டும் பதவியேற்க நேர்ந்தது (§ 292). ஆயினும், முன் போலவே அவர்கள் அதில் நெடுநாள் நிலைத்திருக்க முடியவில்லை. யூதர்களும் பார்லமென்ட் அங்கத்தினராகலாம் என்று ஒரு சட்டம் இயற்றியதோடு, சிப்பாய்கள் கலகத்துக்குப் பிறகு இந்தியா துரைத்தனத்தையும் அவர்கள் மாற்றியமைத்தார்கள். ஆயினும், அந்தப் பார்லமென்ட் கலைந்து புதுத்தேர்தல் நேர்ந்தபோது அவர்களுக்கு ஆதரவு குறைந்துவிட்டதால், ஓராண்டு வாழ்வுக்குள் அவர்கள் ராஜிநாமா செய்துவிடவேண்டியவர்களாயினர்.

ரசெல் பிரபுவை வெளிநாட்டு அமைச்சராகவும் க்ளாட்ஸ்டனைக் கருவூல நீதிமன்றத் தலைவராகவும் (சான்செலர் அப் தி எக்செக்கர்)[1] அமர்த்திக்கொண்டு பாமர்ஸ்டன் பிரபு தமது இரண்டாம் அமைச்சினை நிறுவினார். டோரியாகத் தமது அரசியல் வாழ்க்கையைத் தொடங்கிய க்ளாட்ஸ்டன் இப்போது விக் தாராளப்போக்கினரோடு[2] சேர்ந்துகொண்டார். அரசியல் வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தவேண்டுமென்றால் அவர் ஏதாவது ஒரு கட்சியில் சேர்ந்தாகவேண்டும். டிஸ்ரேலி டோரி கட்சியினரின் தலைவராக இருக்கும் வரையில் அவர் அதில் திரும்பிச் சேருவதற்கில்லை. ஏனென்றால், 1846-ல் தானியச் சட்டங்களை ரத்துசெய்தபோது டிஸ்ரேலி பீலைப் 'பின்னலிருந்து குத்தினர்' என்ற காரணத்தால்

1. Chancellor of the Exchequer. 2. The Whig-Liberals.

பீலைப் பின்பற்றியவர்க ளெல்லோரும் டிஸ்ரேலியை மன்னிக்க முடியாத நிலையிலிருந்தனர் (§ 287). மேலும், வயதும் அனுபவமும் முதிர முதிர கிளாட்ஸ்டனின் போக்கும் நோக்கங்களும் விரிந்த பான்மையனவாய்க் கொண்டு வந்தன. ஆகவே, அடுத்த இருபது ஆண்டுகள் காமன்ஸ் சபையானது அவருக்கும் டிஸ்ரேலிக்கும் ஒரு சொற்போர் மேடையாகவே இருந்தது.

§ 304. மூவர் துரைத்தனம்[1] :—இந்த இரண்டாவது பாமர்ஸ்டன் அமைச்சில் பாமர்ஸ்டன், ரசெல், க்ளாட்ஸ்டன் என்னும் மூவரே செல்வாக்கு மிகுந்தவர்களாக இருந்ததால், ஆக 'மூவர் துரைத்தனம்' என்றும் கூறுவதுண்டு. ஆயினும், அம் மூவரிடையே பல துறைகளில் ஒற்றுமையில்லை. இட்டலியில் காரிபால்டி, காவூர்[2] என்னும் நாட்டுப்பற்றுமிக்க தலைவர்களின் முயற்சியால் தோன்றிய 'ரிஸார்ஜிமென்டோ'[3] கிளர்ச்சிக்கு மட்டும் அவர்கள் ஒற்றுமையோடு ஆதரவு காட்டினார்கள். (அக் கிளர்ச்சியின் விளைவாக சார்டீனியா மன்னர் விக்டர் எமான்யுவெலின்[4] ஆட்சியின்கீழ் இட்டலி ஒன்றுபட்ட நாடாயிற்று.) இதைத் தவிர்த்தால், ஜான் பிரபு பாமர்ஸ்டன்பால் கொண்டிருந்த பழைய பொறாமையாகட்டும், பாமர்ஸ்டன் வெளிநாடுகளிடம் செருக்குடன் நடந்து கொண்டதில் கிளாட்ஸ்டன் காட்டிய அருவருப்பாகட்டும் இன்னும் மாறியபாடில்லை.

சூழ்ச்சி மசோதா விஷயமாகத் தாம் அடைந்த அவமானத்தைத் தலைமையமைச்சர் மறக்கவில்லை. இவ்விதமாகத் தம் செல்வாக்கை மறுபடியும் இழக்க அவர் விரும்பவில்லை. ப்ரான்ஸைப்பற்றிய அவர் போக்கு இப்போது நேர்மாறாக இருந்தது. மூன்றாம் நெப்போலியன் எப்போ

1. The Triumvirate. 2. Garibaldi. Cavour. 3. 'Risorgimento.'
4. King Victor Emanuel of Sardinia.

தாவது பிரிட்டனைத் தாக்குவார் என்ற எண்ணம் பிரிட்டிஷ் மக்களின் மனதில் எவ்வாறோ புகுந்துகொண்டது. அவர் எதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் அதில் ஏதோ ஒரு அந்தரங்க எண்ணத்தின் அறிகுறியைக் காண்பதாக அவர்கள் நினைத்தார்கள். நாட்டில் போர்ப் பீதி[1] பரவியது. சுயேச்சையாக வந்து சேருபவர்களைக் கொண்டு ஒரு சேனை திரட்டப்பட்டது. (இதுவே தற்போதைய உள்நாட்டுக் காவற்படையின்[2] முதல் வடிவம்.) கப்பற்படைத் துறைமுகங்களின் அரண்களைப் பலப்படுத்த வேண்டுமென்று எங்கும் கூக்குரல் கிளம்பியது. இந்தப் போர் முயற்சிகளால் செலவு அதிகமாகப் போகாதபடி கட்டிப்பிடிக்க கிளாட்ஸ்டன் பெரு முயற்சி செய்தார். கடுஞ் சிக்கனமும் நாட்டு வருவாயைப் பெருக்குதலும் அவரது முக்கிய ஆர்வங்களாயின (கு. 201). 1860-ம் ஆண்டில் அவர் தயாரித்த துரைத்தன வரவு செலவுத் திட்டம்[3] அவர் பீலிடம் கற்ற கட்டுப்பாடில்லாத வாணிபக் கொள்கையின் சிகரம் எனப்பட்டது. க்ரைமியா போரும் இந்திய சிப்பாய்கள் கலகமும் 1853-ல் அவர் உறுதி கூறியபடி (§ 292) வருமான வரியை ஒழித்துவிட முடியாதவாறு பெரிய இடைஞ்சல்களாய் வந்து குறுக்கிட்டபோதிலும், நாட்டின் வாணிபம் அபரிமிதமாக வளர்ந்துகொண்டு வந்ததால் துரைத்தனத்துக்கு வருவாய் அதிகரிக்கலாயது. இதனால் அவரால் வரிச்சுமையை மேலும் குறைக்க முடிந்தது. காகித வரிகளைக் குறைத்ததும் ப்ரான்ஸோடு ஒரு வாணிப உடன்படிக்கை செய்துகொண்டதும் (1860) இதற்குச் சிறந்த உதாரணங்களாகும். காகிதவரி விதித்தல் அறிவை வரி கொடுக்கச் செய்வதாகும் என்பது அவர் கருத்து. ஏனென்றால், அதனால் புத்தகங்களும் செய்தித் தாள்

1. Warscare. 2. 'Territorial Army.' 3. The Budget.

களும் விலேயேறின. காகித வரிகளை ஒழிக்கவேண்டுமென்று அவர் கொண்டுவந்த தீர்மானத்தைப் பிரபுக்கள் சபை தள்ளிவிட்டபோதிலும், அடுத்த ஆண்டின் துரைத்தன வரவுசெலவுத் திட்டத்திலேயே அதைப் புகுத்தி அவர் தம் எண்ணத்தை நிறைவேற்றிக்கொண்டார். அத்திட்டத்தைப் பிரபுக்கள் சபை தொடுவதற்கில்லை. கட்டுப்பாடில்லாத வாணிபத்தைப் பரப்பவேண்டுமென்று பிரசாரஞ்செய்துகொண்டிருந்த ரிச்சர்ட் காப்டென்[1] பிரெஞ்சு பேரரசரோடு அவ்விஷயமாகப் பேச நேர்ந்தபோது மேற்கூறிய வாணிப உடன்படிக்கை முடிவுகட்டப்பட்டது. அதன்படி இரு நாடுகளும் மற்றொன்றின் முக்கிய பொருள்கள்மீது சுங்கவரிகளைக் குறைக்கவேண்டுமென்று ஏற்பாடாயிற்று. இதன் பலனாக பிரிட்டிஷ் இரும்பு சாமான்களுக்குப் பதில் ப்ரெஞ்சு பட்டும் திராக்ஷாசபானங்களும் தருவிக்கப்பட்டன. க்ளாட்ஸ்டனுக்கும் காப்டெனுக்கும் இது இரு பறவைகளை ஒரே கல்லால் வீழ்த்துவதுபோ லிருந்தது. இதனால் கட்டுப்பாடில்லாத வாணிபம் தழைத்தது; இரு நாடுகளும் நெருக்கமான வாணிபத் தொடர்பால் பிணைக்கப்பட்டதால் போர்ப்பீதி மறைந்தது.

§ 305. பார்லமென்ட் சீர்திருத்தத்துக்குக் கிளர்ச்சி:—அமைச்சர் குழுவினுள் பார்லமென்ட் சீர்திருத்தத்தைப் பற்றித்தான் மிகுந்த கருத்துவேறுபாடு இருந்தது. 1832-ம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் நடுத்தர வகுப்பினருக்குத்தான்[2] ஓட்டுரிமை கொடுத்தது. தொழிலாளர் வகுப்பினர் பழையபடி ஓட்டுரிமை யின்றியே இருந்தனர். உரிமைப்பத்திரவாதிகள்[3] மேலும் சீர்திருத்தம் வேண்டுமென்று கிளர்ச்சிசெய்தனர் (§ 288). ஆயினும், டோரிகளோடு விக்குகளும் சேர்ந்து அதை ஒருமனதாக

1. Richard Cobden. 2. The middle classes. 3. The Chartists.

எதிர்த்ததால் அவர்கள் கிளர்ச்சி மடிந்தது. ஜான் ரசெல் பிரபுதான் அதை மிகத் தீவிரமாக எதிர்த்தார். 1832-ம் ஆண்டு சீர்திருத்தமே முடிவான ஏற்பாடு என்று அவர் கூறியதால், அடிப்படைச்சீர்திருத்தவாதிகள்[1] அவரை 'முடிவான ஜாக்'[2] என்று பரிகசித்தனர். ஆயினும், நாளடைவில் இன்னும் சில சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டியது மிகவும் அவசியமென்பதையும் நியாயமென்பதையும் அவர் உணரலானார். ஆயினும், பலமுறை அவர் அச் சீர்திருத்தங்களை இயற்றிவைக்க முயன்றும் அவர் முயற்சிகள் பலிக்கவில்லை. க்ளாட்ஸ்டனும் இப்போது முழுத்தாராளப்போக்கினராக மாறிவிட்டபடியால் அவரும் ரசெலின் முயற்சிகளுக்கு ஆதரவளித்தார். அமைச்சர் குழுவுக்கு வெளியே புகழ்மிக்க அடிப்படைச்சீர்திருத்தவாதியும் சிறந்த சொற்பொழிவாளருமான ஜான் பிரைட்டும்[3] அவைகளை ஆதரித்தார்.

இம்முயற்சிகளுக்குப் பெருந்தடையாக இருந்தவர் பாமர்ஸ்டனே. வெளிநாடுகளில் சட்ட வரம்புக்குட்பட்ட துரைத்தனங்களை நிறுவச் செய்யப்படும் கிளர்ச்சிகளுக்கு அவர் எவ்வளவு 'தாராள'[4]ப்போக்குடன் ஆதரவளித்தாரோ (§ 290) அதற்கு நேர்மாறாக உள்நாட்டுச் சீர்திருத்தக் கிளர்ச்சிகளை ஆதரிக்க அவர் அவ்வளவு 'நிதான'[5]ப் போக்குடையவராக இருந்தார். தாராளப்போக்கினர் துரைத்தனத்தின்[6] தலைவராக இருந்துகொண்டு சீர்திருத்தங்களை அவர் வெளிப்படையாக எதிர்ப்பதற்கில்லை. ஆயினும், அவர் அவைகளின்பொருட்டு ஆர்வமற்றிருந்ததால், அவர் துரைத்தனத்தின் தலைவராக இருந்தவரையில் அவைகளை இயற்றி அரசியல் அமைப்பினைப் பூரணமாக மாற்றி வைப்பது எளிதில் நிறைவேறக்கூடிய காரியமாயில்லை.

1. The Radicals. 2. 'Finality Jack.' 3. John Bright.
4. 'Liberal.' 5. 'Conservative.' 6. A Liberal Government.

1865-ல் பாமர்ஸ்டன் இறந்துவிட்டார். அவர் தமது நீண்ட வாழ்நாளில், அறுபது ஆண்டுகளுக்குமேல் பார்லமெண்ட் அங்கத்தினராயும், அவற்றுள் சுமார் ஐம்பது ஆண்டுகள் பதவிகள் வகித்தும் இருந்தார். ரசெல் இப்போது தலைமையமைச்சராய்விடவே அவரும் கிளாட்ஸ்டனும் உடனே ஒரு சீர்திருத்த மசோதாவினைத் தயாரித்தனர். அதன்படி அவர்கள் ஒரு மிதமான மாறுதலைத்தான் இயற்றிவைக்கக் கருதினர்; புதிதாக ஐந்து லக்ஷம் பேர்களுக்கு ஓட்டுரிமை அளிக்க நினைத்தனர். ஆயினும், டிஸ்ரேலி தலைமையின்கீழிருந்த டோரி எதிர்க்கட்சியினரின் மும்முரமான எதிர்ப்போடு ராபர்ட் ஓவென்[1] என்பவரது தலைமையின்கீழிருந்த தாராளப்போக்கினர் பலரது எதிர்ப்பும் அதற்குப் பலமாக இருந்ததால் காமன்ஸ் சபையில் அதற்குப் போதிய ஆதரவு இல்லாமற்போய்விட்டது. துரைத்தனத்தார் மசோதா ஆதரவற்றுப்போய்விடவே, ரசெல் ராஜிநாமா செய்துவிடவேண்டியவரானார்.

§ 306. 'இருட்டில் குதித்தல்':—தங்கள் எதிரிகளிடையே தோன்றிய ஒரு பிளவின் விளைவாக மறுபடியும் டோரி கட்சியினர் பதவிவகிக்கவேண்டியவர்களாயினர். இந்த மூன்றாவது 'டார்பி-டிஸ்ரேலி இடைக்கால'த்தில்[2] ஒரு முக்கியமான சட்டம் இயற்றப்பட்டது. இதில் விந்தை என்னவென்றால், தாராளப்போக்கினர் தயாரித்த ஒரு மிதச்சீர்திருத்த மசோதாவை எதிர்த்து அவர்களைப் பதவியினின்றும் வீழ்த்தியதால் அப்பதவியைத் தாங்களே ஏற்க நேர்ந்த டோரிகள், அதனினும் பெரு மாறுதல்களைப் புகுத்திய ஒரு சட்டத்தைத் தாங்களே இயற்றிவைத்தனர்.

இது எவ்விதம் நேர்ந்தது? 1832-ம் ஆண்டு சட்டத்தின்படி நாட்டுத் துரைத்தனத்தில் அதிகாரம் பெற்ற

1. Robert Owen. 2. 'Derby-Disraeli Interregnum.'

நடுத்தர வகுப்பினரின் ஆட்சியை டிஸ்ரேலி எப்போதும் விரும்பியதில்லை. அவர், தமது இளம் வயதில், பழைய உயர்குடிப் பிறப்பினர் தொழிலாளர்களின் ஆதரவு பெற்று அவர்களுக்காக நாட்டை ஆளவேண்டிய தலைவர்களாக இருக்கவேண்டு மென்னும் கொள்கையுடன் 'இளம் இங்லண்ட்'[1] என்ற ஒரு இயக்கத்தைத் தொடங்கினர். ஆகவே, கீழ்வகுப்பினர்களுக்கு ஓட்டுரிமை கொடுத்து நடுத்தர வகுப்பினரின் செல்வாக்கைத் துடைத்துவிடக்கூடிய எந்த பார்லமென்ட் சீர்திருத்தத்தையும் அவர் கொள்கை யள வில் எதிர்த்தவ ரல்லர். இதுவரை அவர் அதை எதிர்த்த தற்குக் காரணம் அது விக் தாராளப்போக்கினர்களால் ஆதரிக்கப்பட்ட தென்பதே. இப்போது அச்சீர்திருத் தத்தைத் தாமே கொண்டுவந்து தமது 'டோரி குடியா சின்'[2] திட்டங்களுக்குப் புதிய ஓட்டர்களின் ஆதரவைப் பெற அவருக்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. சென்ற இரண் டோராண்டுகளுக்குமுன் வரையில் இவ்விஷயமாகத் தொழி லாளர் வகுப்பினர் அதிக ஊக்கங் காட்டவில்லை; ஆயினும், 1866-ல் ரசெல்லின் மசோதா தோல்வியுற்றதும், இச்சீர் திருத்தத்தை அவர்கள் இன்றியமையாததெனக் கோரலாயி னர். நாட்டின் வடபாகங்களிலும் நடுப்பாகங்களிலும் பெருங் கூட்டங்களைக் கூட்டி பிரைட்டும் கிளாட்ஸ்டனும் ஆவேசமிக்க பேச்சுக்கள் பேசி மக்களுக்குப் பார்லமென்ட் சீர்திருத்தத்தில் பேரூக்க முண்டாக்கினர். சீர்திருத்தத் தின்பொருட்டு 1832-ம் ஆண்டு தோன்றியதைப்போன்ற ஆர்வம் மீண்டும் நாடெங்கும் தோன்றலாயிற்று. சீர் திருத்தங்களை இயற்றிவைப்பதில் தமது எதிரிகளுக்கே தனியுரிமை இருக்கவேண்டிய அவசியமில்லை யென்றும், இந்தப் பார்லமென்ட் சீர்திருத்தத்தை இயற்றிவைத்துத்

1. 'Young England'. 2. 'Tory Democracy.'

தமது கட்சியினர்க்குப் புகழ்தேடித்தரவேண்டுமென்றும் டிஸ்ரேலி தீர்மானித்துவிட்டார்.

தம்முடன் பதவியேற்றிருந்த மற்ற அமைச்சர்களைத் தம் கருத்துக்கிணங்கச் செய்வது டிஸ்ரேலிக்குப் பெரிதும் கஷ்டமாயிருந்தது. டார்பியும் அவரது நண்பர்களும் டிஸ்ரேலியைப்போல் சுறுசுறுப்பான மூளை பெற்றவர்களல்லர். அவர்கள் எப்போதும் சீர்திருத்தத்தை எதிர்த்துக் கொண்டு வந்திருந்ததால், திடுமென டிஸ்ரேலியின் போக்கு மாறியதன் காரணம் அவர்களுக்குத் தெளிவாக விளங்கவில்லை. ஆகவே, 300,000 புதிய ஓட்டர்களைமட்டும் உண்டாக்கும் மிக மிதமான திட்டம் ஒன்றோடு அவர் திருப்தியடையவேண்டியவரானார். இப்போது தாராளப்போக்கினர்க்குத் தங்கள் வழியே காரியங்களை நடத்த ஒரு வாய்ப்பு தோன்றியது. க்ளாட்ஸ்டன் தலைமையில் அவர்கள் அம்மசோதாவில் பல திருத்தங்களைப் புகுத்தி அதைப் பழைய உரு தெரியாமல் மாற்றிவிட்டனர். கடைசியாக, அவர்கள் கொண்டுவந்த திருத்தம், அநேகமாகப் பட்டணங்களில் வசிக்கும் எல்லா வீட்டுக்காரர்களுக்கும் ஓட்டுரிமை கொடுத்து, சென்ற ஆண்டில் அவர்கள் தங்கள் மசோதாவில் புதிதாக ஓட்டுரிமை பெறவேண்டுமென்று கோரிய தொகைக்கு இரண்டத்தனைப் பேர் ஓட்டுரிமை பெறுமாறு செய்துவிட்டது. காமன்ஸ் சபையார் இத் திருத்தங்களைப் பெருவாரியாக ஏற்றுக்கொண்டனர். டிஸ்ரேலி திருத்தங்களை ஒப்புக்கொள்வதா அல்லது மசோதாவை விட்டுவிடுவதா என்று தீர்மானிக்கவேண்டியவரானார். எவ்விதமேனும் மசோதா சட்டமாகவேண்டுமென்று அவர் ஆவல் கொண்டிருந்ததால், தமது சகாக்களின் சந்தேகங்களையும் கவனிக்காமல் அவர் அத்திருத்தங்களை ஒப்புக்கொண்டார். அம்மசோதா தங்கள் கட்சித் துரைத்தனத்தால் கொண்டுவரப்பட்டிருந்ததால், நிதானப்

போக்கினர் அதற்கு மாருக ஓட்டு கொடுப்பதற்கில்லை. க்ளாட்ஸ்டனைத் தலைவராகப் பெற்றிருந்த தாராளப்போக்கினரும் அதை ஆதரித்ததால், அது பார்லமென்டின் பூரண அங்கிகாரம் பெற்றுச் சட்டமாய்விட்டது.

1867-ம் ஆண்டு இயற்றப்பட்ட சீர்திருத்தச் சட்டம்[1] தொழிலாளர்களுள் பட்டணங்களில் சிறிது மேலான படிகளிலுள்ளவர்களுக்கு மட்டுமே ஓட்டுரிமை வழங்கியது (கு. 219). எனினும், பல அரசியல் தலைவர்கள் அதைப்பற்றிப் பெரிதும் அச்சமுற்றனர். தலைமை அமைச்சர் டார்பி பிரபு அதை 'இருட்டில் குதித்த'லுக்குச் சமமாகக் கருதினர். அதன் விளைவு எத்தகையதாக இருக்குமென்று எவராலும் கூறமுடியவில்லை. டாமஸ் கார்லைல்[2] குடியாட்சிச் சுழலில் கண்மூடித்தனமாகப் பாய்ந்து மூழ்கும் நீர்வீழ்ச்சிக்கு அதை ஒப்பிட்டார். சால்ஸ்பரி பிரபு[3]வுக்குப்பின் நிதானப்போக்கினருள் இளைஞர்கள் சிலரின் தலைவராக விளங்கிய க்ரான்போர்ன் பிரபு[4] நிதானப்போக்கினர் துரைத்தனம்[5] அத்தகைய சட்டமொன்றை இயற்றிவைத்தல் 'சரித்திரத்தில் ஈடு இணையற்ற அரசியல் அயோக்கியத்தன'[6] மாகும் என்றனர். காவென்ட்ரி பாட்மூர்[7] 1867-ம் ஆண்டினை "உண்மை தவறிய இங்கிலீஷ் பிரபுக்களும் அவர்களது யூதரும், கடவுளால் அறிவு மழுங்கவைக்கப்பட்டு, தீமையினின்றும் காப்பாற்றுவதாகத் தாங்கள் இருமுறை வாக்குறுதி தந்து ஏற்ற பொறுப்பினை மாய்த்துப் பெருங்குற்ற மிழைத்த ஆண்டு" என்று வருணித்தார்.

---

1. The Reform Act of 1867. 2. Thomas Carlyle. 3. Lord Salisbury. 4. Lord Cranborne. 5. A Conservative Government. 6. "A piece of political dishonesty unexampled in history." 7. Coventry Patmore.

# ஒன்பதாம் பகுதிக்கான குறிப்புக்கள்
## (1815—1867)

## இங்லண்ட் மன்னர்கள்

மூன்றம் ஜியார்ஜ் (1760—1820).

(இவருக்கு 1811 முதல் கண் தெரியவில்லை ; மூளையும் குழம்பிக் கிடந்தது).

நான்காம் ஜியார்ஜ் (1820—1830).

நான்காம் வில்லியம் (1830—1837).

விக்டோரியா (1837—1901).

## யூரோப் அதிபதிகளுள் முக்கியமானவர்கள்

ப்ரான்ஸ் :

பதினெட்டாம் லூயி (1814—1824).

*புரட்சிக்கு முன்னுண்ட பூர்பான் குலம்*[1] *மீண்டும் அரச பதவி பெற்றது.*

பத்தாம் சார்ல்ஸ் (1824—1830).

1830-*ம் ஆண்டு புரட்சியால் பதவி யிழந்தார்.*

லூயி பிலிப் (1830—1848).

*சட்ட வரம்புக்குட்பட்ட மன்னரசு*[2]; 1848-*ம் ஆண்டு புரட்சியால் கவிழ்ந்தது.*

இரண்டாம் குடியரசு[3] (1848—1852.)

*லூயி நெப்போலியன் போனபார்ட்டைத் தலைவராகக் கொண்டது. அவரது திடுஞ் செயலால் கவிழ்ந்தது.*

மூன்றம் நெப்போலியன் (*பேரரசர்*).

*இரண்டாம் பேரரசு*[4] (1852—1870).

---

1. Line of Bourbon. 2. Constitutional Monarchy. 3. Second Republic. 4. The Second Empire.

**கு. 189. சமூகநிலையையொட்டிய அதிருப்தியின்[1] காரணங்கள்.**

(1) போரால் நேரும் அழிவு.

போரால் நேரும் செலவு வளப்பெருக்கத்துக்கு ஆவதில்லை. சிறிதுகாலம் அதிக கூலிகளும் அதிக லாபங்களும் கிடைப்பது ஒருவகைப் போலிவளத்தின் தோற்றமே. பிறகு அவற்றிற்கெல்லாம் அதிகமாகத் திருப்பிக்கொடுக்க வேண்டிவரும். ஆகவே, போரின்பிறகு எப்போதும் கஷ்டகாலமே வரும்.

(2) போர்க்கால முயற்சிக்குரிய ஊக்கம் அதன் பிறகு ஒடுங்குதல்.

போர் பொருளாக்கத்தைத்[2] தூண்டுகிறது. ஆயினும், அவ்வாக்கத்துக்கென வைத்த முதல் அமைதி யேற்பட்டதும் மூழ்கிவிட்ட பணமாய் நஷ்ட முண்டாகிறது. ஆக்கத் தொழிற் புரட்சி அவ்வாண்டுகளில் உச்சநிலையி லிருந்தமை இத் தீமையை அதிகப்படுத்தியது.

(3) தொழிலாளர் தொகை தேவைக்குமேல் அதிகமாதல்.

(நிலப் படைகளும் கடற் படைகளும் கலைக்கப்பட்ட காரணத்தால்).

உபகாரச் சம்பளம்[3], போர்ச் சேவைப் பரிசு[4] முதலிய ஏற்பாடுகள் அக்காலத்திலில்லை.

(4) பொருளாதார விஷயங்களில் பார்லமெண்டின் குருட்டுப் போக்கு.

தானியவரி விதிப்பும் (1815) வருமான வரி நீக்கமும் (1816) மக்களின் குடும்பச்செலவுகளை, முக்கியமாகத் தொழிலாளர் வகுப்பின ரிடையே, அதிகப்படுத்தின (§ 268).

[குறிப்பு: தொழிலாளர் வகுப்பினர் ஏழைகளாக இருந்ததால் அவர்கள் பொருள்களை வாங்கச் சக்தியற்றிருந்தனர்; ஆகவே, அவைகளுக்குத் தேவை குறைந்தது.]

**கு. 190. சமூக நிலையை யொட்டிய அதிருப்தி விஷயமாகத் துரைத்தனத்தார் கையாண்ட முறைகள்.**

துரைத்தனத்தார் இவ் விஷயமாகப் பீதி கொண்டதற்கு இரண்டு காரணங்கள் கூறலாம்: (i) ஒழுங்கான

1. Social unrest. 2. Production. 3. Pension. 4. War gratuity.

போலீஸ் படையின்மை ; (ii) ஜாக்கொபின் மனப்பான்மையைப்பற்றி[1] அவர்கள் ஆதியில் கொண்டிருந்த அச்சம் இன்னும் நீங்காமை.

(1) சூழ்ச்சிகளைக் கண்டுபிடிப்பதற்கென்று ஒற்றர்கள்[2] நியமிக்கப்பட்டனர்.

இத்தகையோர் எப்போதும் பீதி யுண்டாக்கும் செய்திகளைத்தான் திரட்டி அனுப்புவார்கள்.

(2) ஹேபியஸ் கார்ப்பஸ் சட்டம்[3] அமுலிலிருந்து நீக்கிவைக்கப்பட்டது.[4]

இது, துரைத்தனத்தார் கொடுங்கோன்மையை (அடக்கு முறைகளை)த் தவிர்க்க பிரிட்டன் தேடிய பாதுகாப்புக்களுள் ஒன்று.

(3) அடிப்படைச் சீர்திருத்தக் கிளர்ச்சிக்காரர்கள்[5] கூடுமான வரையில் வாயடைக்கப்பட்டனர்.

'பெரும் பேச்சாளர்' ஹன்ட்[6] சிறையிலிடப்பட்டார் ; காபெட்[7] (சிறிது காலம்) அமெரிகாவுக்கு ஓட்டப்பட்டார்.

(4) ஆறு சட்டங்கள்[8] (1819—20).

i. துரைத்தன அங்கீகாரம் பெறாத படைப்பயிற்சியைத்[9] தடுக்கும் சட்டம். (இது இன்றும் அமுலிலுள்ளது.)

ii. ஆயுதங்களைப் பிடுங்கிக்கொள்ள அமைதித் தலைவர்களுக்கு[10] அதிகாரமளிக்கும் சட்டம். (இது 1822 வரை அமுலிலிருந்தது.)

iii. பலாத்காரமான குற்றங்களைக்[11] கண்டிக்கத் தாமதம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளும் சட்டம்.

iv. துரைத்தன சிந்தனையான[12] கூட்டங்களைத் தடுக்கும் சட்டம். (இது ஐந்தாண்டுகள் அமுலிலிருந்தது.)

v. துரைத்தன சிந்தனையான பேச்சுக்களுக்கும் எழுத்துக்களுக்கும் முன்னிலும் அதிகமான அபராதங்களை விதிக்கும் சட்டம்.

vi. சில வெளியீடுகளுக்குத்[13] துரைத்தனத்தார் முத்திரை வேண்டுமென்று கட்டாயப்படுத்தும் சட்டம். (இதனால் அவற்




1. Jacobinism. 2. Spies. 3. Habeas Corpus Act. 4. Was suspended. 5. Radical agitators. 6. 'Orator' Hunt. 7. Cobbett. 8. The Six Acts. 9. Military training. 10. Magistrates. 11. Crimes of violence. 12. Seditious. 13. Publications.

றின் விலை ஏறியது. இது முக்கியமாகக் காபெட் வெளியிட்ட 'ரெஜிஸ்டர்'[1] என்னும் வெளியீட்டை ஒழிக்க இயற்றியதாகும்.)

[குறிப்பு : இச் சட்டங்களுள் சில பிரிட்டிஷ் மக்கள் நெடுங் காலமாக அனுபவித்துவந்த பேச்சுச் சுதந்தரத்தைப் பாதித்தன. எனினும், அவைகளை இயற்றிய பிறகும் யூரோப்பில் வேறு எந்த நாட்டினரும் அனுபவிக்காத அவ்வளவு அதிகமான பேச்சுச் சுதந்தரத்தைப் பிரிட்டிஷ் மக்கள் அனுபவித்திருந்தனர்.]

மேலும், ஆபத்துக் காலங்களில் அமைதியை நிலைக்கப் பண்ணுவது துரைத்தனத்தின் முதல் கடமை என்பதையும், அவ்விதம் அது அக்கடமையினை இயற்றியபோது மிகக் குறைந்த உயிர்ச்சேதமோ இரத்தச்சிந்தலோதான் ஏற்பட்டதென்பதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்ளல் வேண்டும்.

## கு. 191. காசில்ரேயும் (1769—1822) கானிங்கும் (1770—1827): ஓர் ஒப்புமை.

இருவருக்கும் ஒரே வயது ; இருவரும் பீலின்கீழ் அரசியல் அனுபவம் பெற்றவர்கள்.

ஆயினும், காசில்ரே உயர்குடியில் தோன்றிய உள் வட்டத்தைச்[2] சேர்ந்தவர் ; கானிங்கோ உயர்குடிப் பிறப்பின் அனுகூலமின்றித் தம் சொந்த முயற்சியாலும் ஆற்றலாலும் முன்னுக்கு வந்தவர்.

போரின்போது : கானிங் வெளிநாட்டு அமைச்சராகப்[3] பெயரெடுத்தார் ; சிறப்பாக, டில்சிட் உடன்படிக்கைக்குப் பிறகு[4] (1807) டச்சு கப்பற்படையைக் கைப்பற்றியதால். காசில்ரே போரமைச்சராக இருந்து திபகற்பப் போருக்குப் பொறுப்பாளியானார் (தட்டுக்கெட்டுப்போன வால்செரென் அவசரப் படையெடுப்பு[5] உள்பட, 1809).

இருவருக்கும் போட்டி : (வால்செரென் அவசரப் படையெடுப்பு விஷயமாக இருவருக்கும் ஒரு வாட்போர்[6] நிகழ்ந்தது). கானிங் மிகுந்த ஆற்றலுடன் பேச வல்லவர் ; காசில்ரேக்குப் பேச்சுவன்மையில்லை. கானிங் துணிச்சலும் பகட்டும் மிக்க காரியங்களை இயற்றும் தன்மையுள்ளவர் ; காசில்ரே எதையும் நிதானமாகவும் சாக்கிரதையாகவும் பகட்டின்றியும் செய்யவல்லவர்.

---

1. 'Register.' 2. The 'inner circle.' 3. Foreign Secretary. 4. Treaty of Tilsit. 5. The Walcheren Expedition. 6. A duel.

பிற்காலத்து அரசியல் வாழ்க்கை: 1812 முதல் 1822 வரையில் லிவர்ப்பூல் பிரபு அமைச்சில் காமன்ஸ் சபையில் துரைத்தன காரியங்களுக்குத் தலைவராகவும்[1] வெளிநாட்டு விவகார அமைச்சராகவும் காசில்ரே செல்வாக்கு பெற்றிருந்தார்.

நெப்போலியனின் வீழ்ச்சிக்குக் காரணமான எத்தனங்களைச் சூழத் துணைசெய்தார். வியென்னா காங்கிரஸில் கிரேட் பிரிட்டன் பிரதிநிதியாயிருந்தார். சமாதானத்தின் முதலாண்டுகளில் வெளிநாட்டு விவகாரங்களைக் கவனித்தார், துரைத்தனத்தின் அடக்குமுறைகளுக்குத் தாமே காரணர் என்று பெயரெடுத்த போதிலும், உண்மையில் அவருக்கு இதில் பொறுப்பில்லை (கு. 190).

அதே அமைச்சில் 1822 முதல் 1827 வரையில் காமன்ஸ் சபையில் துரைத்தன காரியங்களுக்குத் தலைவராகவும் வெளிநாட்டு விவகார அமைச்சராகவும் விளங்கியவர் கானிங். (1827-ம் ஆண்டு பெப்ருவரி மாதம் முதல் ஆகஸ்டு மாதம் அவர் இறந்த வரையில் தலைமை யமைச்சராக இருந்தார்.)

'யூரோப்பிய சிக்கல்க'ளினின்றும்[2] பிரிட்டனை விடுவித்தார். ஆயினும், போர்ட்யுகலின் விடுதலையையும் அமெரிகாவில் ஸ்பெயின் குடியேற்றங்களின் விடுதலையையும் ஆதரித்தார். சில உள்நாட்டுச் சீர்திருத்தங்களுக்கு அவரே பொறுப்பாளரென்று பெயர் வாங்கிய போதிலும் உண்மையில் அவருக்கு இதில் சம்பந்தமில்லை (§ 272).

வெளிநாட்டு விவகாரங்களில் போக்கு[3]: நியாய வரம்புக்குட்பட்ட துரைத்தனங்களை ஏற்படுத்த நடக்கும் புரட்சிக் கிளர்ச்சிகளை[4] அடக்குவதில் மற்ற வல்லரசுகளுக்குத் துணை செய்ய மறுத்தல் என்னும் கொள்கையை முதன்முதல் உருவாக்கியவர் காசில்ரே.

1818-ல் எக்ஸ்-லா-ஷாப்பெல்லில்[5] நடந்த காங்கிரஸில் தெய்வீகக் கூட்டுறவின்[6] வன்மையை மெதுவாகக் குறைத்தார்.

கானிங் இதற்கும் ஒரு படி மேலே சென்று, சில சந்தர்ப்பங்களில் கிளர்ச்சிக்காரர்களுக்கு நேராகத் துணையும் புரிந்தார் என்பதற்கு, உண்மையில் பிரிட்டனின் வியாபாரத்தைக் காக்கவேண்டியது காரணமாயிருந்தது.

---

1. Leader of the Commons. 2. European entanglements. 3. Foreign Policy. 4. 'Revolutionary' movements for constitutional government. 5. Aix-la-Chapelle. 6. The Holy Alliance.

உ-ம்.—போர்ட்யுகலும் தென் அமெரிக்கா குடியரசுகளும் ப்ரான்ஸ் ஸ்பெயின் நாடுகளின் ஆளுகையின்கீழ் வந்திருக்குமாகில் அவைகளோடு நடந்த பிரிட்டிஷ் வியாபாரத்துக்கு இடைஞ்சலேற்பட்டிருக்கும்.

(இவ்விஷயத்தில் இவ்விருவருக்கும் அதிக வேறுபாடில்லை.)

## கு. 192. நான்காம் ஜியார்ஜ் ஆட்சியில் சீர்திருத்தங்கள்.

முதல் பிரிவு (1820-22).—லிவர்ப்பூல் அமைச்சில் காஸில்ரே இப்போதும் மிகுந்த செல்வாக்கு பெற்றிருந்தார். சீர்திருத்த மெதுவும் நடைபெறவில்லை.

இரண்டாம் பிரிவு (1822-27).—i. இப்போது லிவர்ப்பூல் அமைச்சில் அதிக செல்வாக்கோடிருந்தவர் கானிங் ('அறிவு விளக்கம்பெற்ற' டோரிகள்[1]). வெளிநாட்டு விவகாரங்களில் கானிங்கின் 'தாராளப்' போக்கு[2]. ii. பீல் குற்றச் சட்டத்தை[3] ஒழுங்குபடுத்தினார். iii. ஹஸ்கிஸனும் ராபின்சனும் சுங்க வரித் திட்டத்தை[4] மாற்றி யமைத்தார்கள். iv. ஒன்றுகூடல் சட்டங்கள்[5] நீக்கப்பட்டன.

மூன்றாம் பிரிவு (1828-30).—வெல்லிங்டன்கீழ் 'பழைய டோரிகள்'[6] பதவியேற்றனர். v. தலைநகரத்துப் போலீஸ் படை[7] நிறுவப்பட்டது. vi. சோதனைச் சட்டமும் கார்ப்பொரேஷன் சட்டமும்[8] நீக்கப்பட்டன. vii. காதோலிக்கர் விடுதலைச் சட்டம்[9] இயற்றப்பட்டது.

(iv-க்குப் பொறுப்பாளர் ஒரு சாதாரண காமன்ஸ் சபை அங்கத்தினர். (vi) பொதுமக்கள் கோரிக்கையின் வன்மையால் இயற்றப்பட்டது. (vii) அயர்லண்டில் உள்நாட்டுப்போர் தொடங்கிவிடும் என்னும் பீதியால் துரைத்தனத்தார் கட்டாயப்படுத்தப்பட்டு, இயற்றியது.)

## கு. 193. மக்கள் நலனில் பரிவு.[10]

1790-ம் ஆண்டு முதற்கொண்டு கஷ்டநிலையிலிருந்தவர்கள் விஷயமாக மிகுந்த பரிவு தோன்றலாயது. இதற்கு

---

1. 'The Enlightened Tories.' 2. 'Liberal' Foreign Policy. 3. The Criminal Law. 4. The Customs Tariff. 5. The Combination Acts. 6. The 'Old Tories.' 7. The Metropolitan Police. 8. The Test and the Corporation Act. 9. The Catholic Relief Act. 10. Humanitarianism.

ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத இரு காரணங்களைக் குறிப்பிடலாம்: (i) வெஸ்லி மதக்கிளர்ச்சி, (ii) ப்ரெஞ்சு புரட்சியின் கொள்கைகள். (இரண்டும் மக்களின் அடிப்படையான சமத்துவத்தை வற்புறுத்தின.) இந்தப் பரிவு முக்கியமாகக் கீழே குறிப்பிட்டுள்ள வகைகளில் வெளிப்பட்டது:—

(1) மதப்பிரசார சங்கங்கள்[1] நிறுவப்பெறல்.

1799-ல் 'தி பிரிட்டிஷ் அண்ட் பாரின் பைபில் சொசைடி' (இணங்காதவர்கள்)[2]; 1804-ல் 'தி சர்ச் மிஷனரி சொசைடி'[3] (இங்லண்ட் மதஸ்தாபனம்.)[5]

(2) சிறைச்சாலைகள் சீர்திருத்தம்.

சுகாதார விதிகளை யொட்டி அமைக்கப்பெறாத சிறை நரகங்களில் ஆண்களும் பெண்களும் எல்லாப் பருவத்தினரும் ஒன்றாக அடைக்கப்பட்டிருந்தனர். இதன் நிலைமகளை முதல் முதல் சுட்டிக் காட்டிய சீர்திருத்தவாதிகள் எலிசெபெத் ப்ரையும்[6] ஜான் ஹாவர்டும்.[7]

(3) குற்றச்சட்டச்[8] சீர்திருத்தம்.

§274-ஐப் பார்க்கவும். இதில் முதலில் முனைந்தவர் சாமுவெல் ரோமில்லி[9]. அவர் தமது எழுத்தாலும் பார்லமெண்டில் பேச்சாலும் இது விஷயமாகப் பரந்த நோக்கங் கொள்ளுமாறு மக்களைத் தூண்டினார். எச் சீர்திருத்தமும் நடைபெறுதலுக்குமுன் 1818-லேயே அவர் இறந்தபோதிலும், பொதுமக்கள் அறிவை இவ்விஷயத்தில் அவர் துலக்கிவைத்திருந்ததால் பிறகு சிறைக்கூட அமைப்பிலும் குற்றச்சட்டத்திலும் பில் இயற்றிவைத்த சீர்திருத்தங்களுக்கு அவர் அடிகோலியவரானார்.

(4) அடிமைகள் ஏற்பாட்டைக் கலைத்தல்.

இதில் மும்முரமாக முனைந்து நின்றவர்களுள் முக்கியமானவர் வில்லியம் வில்பெர்போர்ஸ்[10] (1759—1833). 1807-ல் அடிமை வியாபாரம் நிறுத்தப்பட்டது (§ 259). 1833-ல் பிரிட்டிஷ் மாகாணங்களில் அடிமை ஏற்பாடு கலைக்கப்பட்டது. அடிமைகளின் விடுதலைக்கு அவர்களின் சொந்தக்காரர்களுக்கு ஈடுப் பணமாகக் கொடுக்கத் துரைத்தனம் 20,000,000 பவுன் ஒதுக்கிவைத்தது. விடுதலை பெற்ற அடிமைகள் தங்கள் பழைய சொந்தக்காரர்களுக்கு

---

1. Missionary Societies. 2. Dissenters. 3. The British and Foreign Bible Society. 4. The Church Missionary Society. 5. The Church of England. 6. Elizabeth Fry. 7. John Howard. 8. Criminal Law. 9. Samuel Romilly. 10. William Wilberforce.

ஏழாண்டுகள் வரையில் கூலி வாங்கிக்கொண்டு உழைக்கக் கட்டுப் படுத்தப்பட்டனர்.

(5) தொழிற்கூடச் சட்டங்கள்.[1]

இத்துறையில் உழைத்துப் புகழ்பெற்றவர் ஷாப்ட்ஸ்பரி பிரபு.[2] 1833-ம் ஆண்டு நிறைவேறிய பிரசித்திபெற்ற தொழிற் கூடச் சட்டத்துக்குமுன் குழந்தைகளைத் தொழிற் கூடங்களில் வேலைக்கு வைத்துக்கொள்ளுதலின் தீமைகளை விலக்கப் பல முயற்சி கள் செய்யப்பட்டன.

(6) ஆரம்பக் கல்வி.

ஆதியில் ஏழைமக்கள் கல்விபயில்வதற்கு எவ்வித ஏற்பாடு மில்லை. (இவ்விஷயத்தில் அமெரிக்காவும் ஜெர்மனியும் ஸ்காட் லண்டும் இங்லண்டைவிட முன்னேற்ற மடைந்திருந்தன.) ஏழைமக்கள் கல்விக்காகப் பணந் திரட்ட (முக்கியமாகப் புதிய ஆக்கத்தொழிற் பட்டணங்களில்) இணங்காதவர்கள் 'பிரிட் டிஷ் அண்ட் பாரின் ஸ்கூல்ஸ் சொசைடி'[3] என்பதொன்றை 1803-ல் நிறுவினார்கள். அதைப் பின்பற்றி இங்லண்ட் மத ஸ்தாபனத்தினர் தங்கள் மதஸ்தாபனத்தின் கொள்கைகளில் ஏழைமக்களுக்குக் கல்விபுகட்ட 'நாஷனல் சொசைடி'[4] என்ப தொன்றை நிறுவினார்கள். இந்தச் சங்கங்களுக்கு உதவிபுரிய 1833-ல் துரைத்தனம் 20000 பவுன் அளித்தது. ஆண்டுதோறும் இவ்வுதவி சிறிது சிறிதாக உயர்ந்துகொண்டு வந்தது. 1839-ல் இவ்வுதவிப் பணம் ஒழுங்காகச் செலவிடப்படுகிறதா என்று கவனிக்க மேற்பார்வையாளர்[5] நியமிக்கப்பட்டனர்.

கு. 194. பார்லமென்ட் சீர்திருத்தம் அது நடைபெற்றபோ தன்றி அதற்குமுன்னால் ஏன் நடைபெறுவதற்கில்லை?

(1) ஜாக்கொபின் பீதி குறைந்துகொண்டு வந்தது.

சீர்திருத்தத்தைக் கோரிய சிலர் (விக் கட்சியினர்—இவர்கள் இதைக்கொண்டு டோரிகளைத் தாக்க இலேசாக முடிந்தது: செல்வம் படைத்தவர்கள்—இவர்கள் அரசியல் அதிகாரங்களை அனுபவிக்கமுடியாமல் நிலம் படைத்தவர்களால் ஒதுக்கிவைக்கப் பட்டிருந்ததைப்பற்றிக் குறைகூறினார்கள்.) நெடுங்காலமாக அதைத் திட்டமாக இயற்றிவைக்கத் தயங்கிக்கொண்டிருந்தார்கள். இதற் குக் காரணம் தாழ்ந்த வகுப்பினர்க்கு அதிகாரம் பெருகினால் புரட்சி ஏற்பட்டுவிடுமோ என்ற பயந்தான்.

---

1. Factory Acts. 2. Lord Shaftesbury. 3. The British and Foreign Schools Society. 4. The National Society. 5. Inspectors.

(2) துரைத்தனத்தில் மிகுந்த செல்வாக்கு படைத்திருந்து மனமாற்றத்துக்கு இடந்தராத வைராக்கிய டோரித் தலைவர்களுள் முக்கியமானவர்கள் (உ - ம்., காசில்ரே, எல்டன், சிட்மத்[1]) இறந்துவிட்டனர்.

பின் தலைமுறையைச் சேர்ந்தவர்கள் (உ - ம்., பாமர்ஸ்டன், மெல்போர்ன், ஸ்டான்லி) 1830-ல் வெல்லிங்டன் தாம் எப்போதும் பார்லமெண்ட் சீர்திருத்தத்தைச் சிறிதளவேனும் ஆதரிக்கப் போவதில்லை என்று தெளிவாகக் கூறியபோது டோரி கட்சியினின்றும் விலகிவிட்டார். இந்தச் சீர்திருத்தக் கோரிக்கை நிறைவேறுமென்ற நம்பிக்கையை அவர்கள் இழந்தார்கள் (§ 279).

(3) தாராள நோக்க மெதையும் எதிர்த்துக்கொண்டிருந்த நான்காம் ஜியார்ஜ் மன்னர் 1830-ல் இறந்துவிட்டார்.

அவர் தம்பி நான்காம் வில்லியம் விக் கட்சியினர்க்கு வேண்டியவர்.

(4) 1830ளு ஜூலையீ ப்ரான்ஸில் ஏற்பட்ட புரட்சி காரணமாக அங்கு நடுத்தர வகுப்பினர்களுக்கு அதிக செல்வாக்குடன் கூடிய சட்டவரம்புக்குட்பட்ட ஒரு மன்னரசு தோன்றியது.

இவ் விஷயங்களில் உலகத்துக்கே ஒரு எடுத்துக்காட்டாக இருப்பதாகப் பெருமைபடைத்திருந்த பிரிட்டன் இப்போது ப்ரான்ஸுக்குப் பின்னணியில் நிற்க நேர்ந்தது.

## கு. 195. பார்லமெண்ட் சீர்திருத்தம் வேண்டுமென்பதற்கும் வேண்டாமென்பதற்கும் கூறப்பட்ட நியாயங்கள்.

இவ் விஷயத்தைப்பற்றிப் பார்லமெண்டிலும் அதற்கு வெளியிலும் நிகழ்ந்த கணக்கற்ற விவாதங்களில் இரு கட்சியினரும் கூறியவற்றின் சுருக்கம்:

வேண்டாம்: பிரிட்டிஷ் துரைத்தன அமைப்பு மூதாதையர் காலந்தொட்டு நெடுங்காலமாகக் கையாளப்பட்டு வரும் ஒரு அரிய பழஞ் சொத்து. அது எத்தனையோ ஆபத்துக்களினின்றும் கஷ்டங்களினின்றும் (சமீபத்தில் நடந்த போர் உள்பட) நாட்டைக் கைப்பற்றிக்கொண்டு வந்திருக்கிறது. அதை ஏன் மாற்றவேண்டும்?

1. Castlereagh, Eldon, Sidmouth.

வேண்டும்: காலப்போக்குக்கு ஏற்பத் துரைத்தனத்தைப் புதுப்பித்துக்கொள்ளல் அதை அழித்தலாகாது. ஒரு கட்டடத்தைப் பழுதுபார்த்தல் அதை இடித்தலாகுமா? அதைப் பலப்படுத்தி நிலைக்கவைக்குமல்லவா? சீர்திருத்தத்தை எதிர்த்தவர்கள் மெதுவாக அப்போதைக்கப்போது நடந்திருக்கவேண்டிய சிறு சிறு மாறுதல்களையும் எத்தனையோ பத்தாண்டுகளாக நிறுத்திவைத்துவிட்டபடியால், இப்போது ஒரு பெரிய மாறுதல் அவசியமாய்விட்டது.

வேண்டும்: இப்போதிருக்கும் நிலை நகைப்புக் கிடமானதோடு பொருத்தமற்றதாகவும் நியாயத்துக்கு எதிரானதாகவும் இருக்கிறது. (உ-ம்., மக்களே வாழாத பழைய சேரத்திற்கு[1] இரண்டு அங்கத்தினர்கள்; 200000 மக்கள் கூட்டம் கொண்ட பர்மிங்காம் நகரத்துக்குப் பிரதிநிதித்துவமே இல்லை.)

வேண்டாம்: 'நியாயம்', 'பொருத்தம்' என்ற எண்ணங்களை மனதில் வைத்துக்கொண்டுதான் ஒரு துரைத்தன அமைப்பினைத் தயாரித்தார்கள் ப்ரான்ஸ் நாட்டு ஜாக்கொபின் கட்சியினர்: அது என்ன கதிக்கு வந்துவிட்டது என்பதை இப்போது எல்லோரும் அறிவர்.

வேண்டும்: இப்போதிருக்கும் ஏற்பாட்டின்படி வரி கொடுப்போர் பத்து லக்ஷக்கணக்கானவர்களுக்குப் பிரதிநிதித்துவமே இல்லை. 'பிரதிநிதித்துவ மின்றேல் வரி கொடுத்தலு மில்லை' என்னும் சீரிய கொள்கை என்னவாவது? (இதற்காக முன் தலைமுறையொன்றைச் சேர்ந்தவர்கள் போரிட்டு மடியவில்லையா?)

வேண்டாம்: எல்லா வகுப்பினரும் மறைமுகமாகவேனும் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கின்றனர். பொது மக்களின் எண்ணங்கள் ஓட்டுக்கள் மூலமாக வெளியிடப்படாவிட்டாலும் துரைத்தனத்தார் கவனத்தைப் பெறுகின்றன. இப்போதைய திட்டத்தில் தனி நபர்களும் இடங்களும் நியாயம் பெறுமல் பாதிக்கப்படலாம். ஆயினும், பலவகையான ஓட்டுரிமைகள் இருப்பதால் எல்லா வகுப்பினரும் எங்கேனும் பிரதிநிதித்துவ மடைகின்றனர்.

---

1. Old Sarum.

வேண்டும் : நாட்டு மக்கள் இச் சீர்திருத்தத்தைப் பற்றி அதிக ஆவலாக இருப்பதால் அது நடைபெருவிட்டால் ஒரு புரட்சி ஏற்படும்.

வேண்டாம் : கிளர்ச்சிக்காரர்கள் மிரட்டலால் ஒரு மாறுதலுக்கு இப்போது இடங்கொடுத்துவிட்டால் இதற்கு முடிவேது ?

வேண்டாம் : நிலம்படைத்தவர்களுக்கு நாட்டில் அக்கு அதிகமாக இருப்பதால் துரைத்தனத்தில் அவர்கள் செல்வாக்கு டைடைத்திருப்பது நியாயமே. ஒழுங்கற்ற துரைத்தனத்தால் நஷ்டமடையப் போகிறவர்கள் அவர்களே.

வேண்டும் : பொருளைப் பெருக்குந் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும், தொழிற்சாலைச் சொந்தக்காரர்களுக்கும், வியாபாரிகளுக்கும், ரொக்க லேவாதேவிக்காரர்களுக்கும், தனிப்படிப்பும் பயிற்சியும் வேண்டிய தொழில்களில் அமர்ந்திருப்பவர்களுக்கும் நாட்டில் அக்கு இல்லையா? ஒழுங்கற்ற துரைத்தனத்தால் அதிகமாக நஷ்டமடையக் கூடியவர்கள் அவர்களே.

வேண்டாம் : பார்லமெண்டில் அதிகமான பிரதிநிதித்துவம் பெற்றுள்ள பயிர்த்தொழில்தான் எப்போதும் நாட்டின் முதுகெலும்பைப்போ லிருப்பது.

வேண்டும்: இது பழைய காலத்துக் கொள்கை. ஆக்கத்தொழிற் புரட்சியால் சென்ற ஐம்பது ஆண்டுகளாக இந்நிலை மாறிக்கொண்டு வருகிறது. இனி நாட்டின் முதுகெலும்பைப் போல் இருக்கப்போவது பயிர்த்தொழிலல்ல; ஆக்கத்தொழிலும் வாணிபமுமே.

சீர்திருந்தக்காரர்கள் இச் சீர்திருத்தத்துக்காகக் கிளர்ச்சிசெய்யத் தொழிலாளர் வகுப்பினரையும் தூண்டினர்கள் ; அவர்களுக்குப் பார்லமெண்டில் பிரதிநிதித்துவமிருந்தால் அவர்கள் கஷ்டங்களெல்லாம் அறவே தீர்ந்துவிடுமென்றூர்கள்.(§ 269). இது 'எல்லோருக்கும் எல்லாவற்றையும் அளிக்கும் சீர்திருத்தம்' எனப்பட்டது.

## கு. 196. ராபர்ட் ஓவென்[1] (1771—1858)

இங்லிஷ் சமூக நலன் [கொள்கையைத்[2] தோற்றுவித்தவர் : முதலில் லண்டனில் ஒரு துணிக் கடையில் வேலையிலிருந்து,

1. Robert Owen. 2. English Socialism.

தமது முயற்சியாலும் சிக்கனத்தாலும் முன்னுக்கு வந்து, முப்பது வயதுக்குள் நியு லானர்க்[1] என்னு மிடத்திலுள்ள முக்கியமான பஞ்சாலைகளின் கூட்டாளியாகவும் காரியஸ்தராகவும் ஆனார். வேறுபாடற்று ஒரே மாதிரியான சந்தர்ப்பம் கிடைக்குமானால் மக்களனைவரும் இயற்கையில் நல்லவர்களே என்னும் ப்ரெஞ்சு புரட்சிக்காரர்களின் கொள்கையில் அவர் ஆழ்ந்த நம்பிக்கைகொண்டிருந்தார். தமது ஆலைகளைச் சிறந்த மாதிரித் தொழிற்கூடங்களாக அவர் வைத்திருந்தார். நியாயமான ஓய்வுடனும் குடும்பச் செலவுக்குப் போதிய கூலியுடனும் ஆரோக்கியமான சூழலில் அவர் தொழிலாளர்கள் வாழ்ந்தனர். ஆயினும், மற்ற ஆலைக்காரர்கள் அவர் நெறியைப் பின்பற்றுபவர்களாக இல்லை. அவர்களைக் கட்டாயப்படுத்த ஒரு கண்டிப்பான தொழிற்கூடச் சட்டத்தை[2] இயற்றப் பார்லமென்டைத் தூண்டவும் அவரால் முடியவில்லை. ஆகவே, ஆக்கத் தொழில் முயற்சியில் அவருக்கிருந்த அக்குகளையெல்லாம் விற்றுவிட்டு அவர் தமது வாழ்நாளின் மிகுந்த பாகத்தைப் பார்லமென்டின் துணையை நாடாமலே தொழிலாளர் நிலையைச் செவ்வைப்படுத்துதலான முயற்சிகளில் கழிக்கலானார்.

கூட்டுறவு, சமூக வாழ்வு[3] முதலிய துறைகளில் அவர் செய்த முதல் எத்தனங்கள் பலிக்கவில்லை. பிறகு அவர் 'ஒன்றுபடுத்தப்பட்ட பெரிய தேசீய தொழிற் கட்டுப்பாடு சங்க'த்தின்[4] மூலம் தாம் கனவுகண்ட நல்ல காலத்தை[5] வருவிக்க முயன்றார் (§ 288). இம் முயற்சியும் வீணாயிற்று. அவரது மற்ற திட்டங்களும் அவ்வாறே ஆயின. எனினும், அவரது உழைப்பின் பலனாகத் தொழிலாளர்களிடையே தன் முயற்சி, ஒன்றுபட்டு முயற்சித்தல் முதலிய பழக்கங்கள் பரவலாயின.

## கு. 197. முதல் பெரிய சீர்திருத்தக் காலம் (1832—1841).

1832. பெரிய சீர்திருத்தச் சட்டம் (§ 280).

1833. அடிமை ஏற்பாட்டைக் கலைத்தல் (கு. 193); தொழிற்கூடங்கள் சட்டம் (§ 282).

1. New Lanark. 2. Factory Act. 3. Co-operation, communal living. 4. The Grand National Consolidated Trade Union. 5. The millennium.

1834. ஏழைகள்சட்டத் திருத்தம் (§ 283); கல்விக்குத் துரைத்தனத்தின் முதல் பணவுதவி (கு. 225).

1835. நகராட்சிச் சீர்திருத்தச் சட்டம்[1] (கு. 224).

1836. கலியாண விஷயங்களில் மதஸ்தாபனத்தின் தனி உரிமையை[2] நீக்கிய சட்டம.

1837. அயர்லண்டில் 'டைத்' வரிகள் ஈடுசெய்யப் பட்டன[3] (§ 284); முதல் வரையறைக்குட் பட்ட பொறுப்புச் சட்டம்[4] (§ 289).

1839. பள்ளிக்கூடங்களைத் துரைத்தனத்தார் கண் காணிக்கத் தொடங்கினர் (கு. 225).

1840. பென்னி தபால்; கானடாவைப்பற்றி டராம் பிரபுவின்[5] அறிக்கை (§ 302).

கு. 198. உரிமைப் பத்திரக் கிளர்ச்சி[6] (1835—1849).

தொழிலாளர் வகுப்பினர்க்குச் சட்ட மியற்றுதலில் அதிக செல்வாக்கு கிடைக்குமாறு பார்லமெண்டைச் சீர் திருத்தி யமைக்கவேண்டுமென்ற கிளர்ச்சி (§288). இக் கிளர்ச்சிக்காரர்கள் கோரியவை:—

(1) எல்லா குடும்பங்களுக்கும் ஓட்டுரிமை.[7]

ஒவ்வொரு குடும்பத்திலும், அது எவ்வளவு சிறியதாயிருப் பினும், குடும்பத் தலைவருக்கு ஓட்டுரிமை வேண்டும். (பிற் காலத்தில் 1867, 1884, 1919 ஆண்டுகளில் இயற்றப்பட்ட சீர்திருத்தச் சட்டங்களால் இது நிறைவேறியது.)

(2) ஓட்டுப் பதிவுக்கு இரகசிய ஏற்பாடு.[8]

நிலத்தின் சொந்தக்காரர்களோ தொழில் முதலாளிகளோ தலையிட்டு மிரட்டாதபடி ஓட்டுப்பதிவு இரகசியமாக நடை பெறவேண்டும். (இது 1872-ல் நிறைவேறியது.)

(3) பிரதிநிதித்துவத்துக்கு ஒரே ஓட்டுத் தொகைகளைக் கொண்ட தேர்தல் பிரிவுகள்.[9]

தேர்தல் பிரிவுகளில் சில மற்றவைகளைவிட மிகப் பெரிய ஓட்டுத் தொகைகளைக் கொண்டிருத்தல் நியாயமல்ல. (இது பிற்காலத்தில் பல சட்டங்களால், முக்கியமாக 1885-ம் ஆண்டின் புதுப் பங்கீடு சட்டத்தினால்,[10] நிறைவேறியது.)

1. Municipal Reform Act. 2. Monopoly. 3. Irish Tithes commuted. 4. First Limited Liability Act. 5. Lord Durham. 6. Chartism. 7. Household Suffrage. 8. Vote by Ballot. 9. Equal Electoral Districts. 10. Redistribution Act.

(4) அங்கத்தினர்களுக்குச் சொத்திருக்கவேண்டுமென்னும் நியதி நீக்கப்படல்.

இதனால் தொழிலாளர்களும் பார்லமென்ட் அங்கத்தினராகலாம். (இது 1858-ல் நிறைவேறியது.)

(5) அங்கத்தினர்களுக்குச் சம்பள மளித்தல்.

இதற்கும் மேற்கூறிய நோக்கமே. (1911-ல் நிறைவேறியது).

(6) ஆண்டுதோறும் பொதுத்தேர்தல் நடத்தல்.

இதனால் அங்கத்தினர்கள் தங்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புவோரின் விருப்பங்களைச் சிரத்தையுடன் தெரிந்து கொள்ளவேண்டிய கட்டாய மேற்படும். (இது நிறைவேறவில்லை. நிறைவேறுதல் கஷ்டம். இதனால் தொந்தரவும் செலவும் அதிகமாகும்.)

கு. 199. பீல் பிரிட்டனுக்குச் செய்தவை.

1819. பார்லமென்ட் நியமித்த நாணயச் செலாவணி ஆராய்வுக் குழுவின் தலைவராக[1] இருந்தபோது அவா இங்லண்ட் பாங்க் போர்க்காலத்தில் நிறுத்திவைத்திருந்த பொன் வெள்ளி நாணயங்களில் பணம் கொடுக்கும் முறையை மீண்டும் கையாளுமாறு செய்தார்.

இதனால் நாணயச் செலாவணித் திட்டம் உறுதிபெற்று நிலைத்துப் போருக்குப்பின் ஏற்பட்ட பண்டங்களின் விலையிறக்கம்[2] முடிவுற்றது.

1822—7. லிவர்ப்பூல் அமைச்சில் உள்நாட்டு அமைச்சராக இருந்தபோது, அவர் குற்றச் சட்டத்தைப் பரிவுடன் திருத்தி யமைத்தார் (§ 274).

1828—30. வெல்லிங்டன் அமைச்சில் உள்நாட்டு அமைச்சராக இருந்தபோது, அவர் தற்காலத்துப் போலீஸ் திட்டத்தை நிறுவினர் (§ 274).

1830—41. எதிர்க்கட்சியின் தலைவராக அவர் பழைய டோரி கட்சியின் சிதைவிலிருந்து நிதானப்போக்கினர் கட்சியை[3] நிறுவினர். டாம்வொர்த் அறிக்கையில்[4] அவர் தமது வேலைத்திட்டத்தை வெளியிட்டார் (§ 281).

---

1. Chairman of the Parliamentary Committee on Currency. 2. Post-war 'slump.' 3. The Conservative Party. 4. 'The Tamworth Manifesto.'

1842—6. தலைமையமைச்சராக, அவர் வெளிநாட்டு வியாபாரத்தை ஒடுக்கிக்கொண்டிருந்த பல சுங்க வரிகளை நீக்கிக்கொண்டுவந்து முடிவில் தானியச் சட்டங்களை நீக்கினார் (§ 287).

**கு. 200. பீல் தமது கட்சிக்கு மும்முறை 'துரோகஞ்' செய்தார்.**

(1) (1828).—அவரும் வெல்லிங்டனும் காதொலிக்கர் விடுதலைச் சட்டத்தை இயற்றி வைத்தனர். (அதை எதிர்க்கவே அவர்கள் பதவியேற்றனர்.) இதனால் பழைய டோரி கட்சி முறிந்தது.

**ஆயினும், அவர் வேறு என்ன செய்திருக்க முடியும்?**

அதை ஒரே பிடியாக எதிர்த்திருந்தால் அயர்லண்டில் உள்நாட்டுப் போர் மூண்டிருக்கும்.

(2) (1832).—அவரும் அவரது கட்சியும் சீர்திருத்த மசோதாவை எதிர்ப்பதாக வாக்குக் கொடுத்திருந்தபோதிலும் அவர் அதைச் சிறிதும் தயக்கமின்றி ஒப்புக்கொண்டார்.

**ஆயினும், அவர் வேறு என்ன செய்திருக்க முடியும்?**

அம் மசோதாவுக்குப் பொது மக்கள் ஆதரவு மிகவும் தீவிரமாக இருந்ததால் அதை எதிர்த்து நிற்றல் அரசியல் தற்கொலையா யிருந்திருக்கும்.

(3) (1846).—எந்தத் தானியச் சட்டங்களைப் பாதுகாக்க அவர் பதவியில் அமர்த்தப்பட்டாரோ அவைகளையே அவர் ரத்துசெய்துவிட்டார். இதனால் கிதானப்போக்கினரிடையே பிளவேற்பட்டு 1874 வரையில் (இடையில் மூன்று குறுகிய இடைக்காலங்களில் தவிர) அவர்கள் பதவியேற்க முடியாமலிருக்க வேண்டியவ ராயினர்.

**ஆயினும், அவர் வேறு என்ன செய்திருக்க முடியும்?**

தானியச் சட்டங்கள் தொலையவேண்டுமென்று அவர் மனதில் தெளிவாகப் பட்டது. அயர்லண்டில் தோன்றிய உருளைக்கிழங்குப் பஞ்சம் அவற்றை ரத்துசெய்தால் தவிர வேறு வழியில்லை என்ற நிலைமையை உண்டாக்கியது.

**கு. 201. க்ளாட்ஸ்டன் வரவு செலவு அமைச்சர்[1].**

மூன்று முக்கிய கொள்கைகள்

(1) கட்டுப்பாடற்ற வாணிபம்[2] (கு. 202).

---

1. Finance Minister. 2. Free Trade.

(2) சிக்கனம்.—வரிகளைக் குறைத்து மக்களிடம் பணம் சேரவைத்தால் நாட்டில் முதலாளிகளுக்குப் புதிய முயற்சிகளுக்குத் தேவையான பணமும் சாதாரண மக்களுக்கு ஆக்கப்பொருள்களை வாங்கப் பணமும் ஏராளமாகக் கிடைக்கும். மீதமாகும் பணம் இவ்வகையில் பலனளிப்பதாகும்.

ஆகவே, போர்த்தளவாடங்களைப் பெருக்கப் பணஞ் செலவிடுதலை அவர் சிறிதும் விரும்பவில்லை (§ 304).

(3) கணக்கு வைப்பதில் ஒழுங்கும் கண்டிப்பும்.—பார்லமென்ட் அனுமதிப்பதற்குமேல் ஒரு பென்னிகூட அதிகமாகச் செலவிட முடியாதபடி துரைத்தனக் கணக்குகளைத் தணிக்கை செய்ய[1] அவர் சில முறைகளை வகுத்தார்.

## கு. 202. கட்டுப்பாடற்ற வாணிபத்தின் பெருக்கம்.

1776. ஆடம் ஸ்மீத்[2] தமது 'நாடுகளின் செல்வம்'[3] என்னும் நூலில் இக் கொள்கையை விவரித்தார் (§ 239).

1784—8. பிட் இதை முதல் முதல் நடைமுறையில் கொண்டுவர முயன்றார்.

அவர் 'வரி விகிதப் பட்டியைச்' சுருக்கியமைத்துத்[4] திருட்டு வியாபாரத்தினுல்[5] லாபமில்லாமல் செய்துவிட்டார். ப்ரான்ஸோடும் அவர் ஒரு வியாபார உடன்படிக்கையைச்[6] செய்து முடித்தார் (§ 239).

ஆயினும், போர்ச் செலவுகள் அதிகரிக்க அதிகரிக்கச் சுங்க வரிகளை அவர் பெருக்கிக்கொண்டே வரவேண்டியவரானுர். 1815-க்குப் பிறகு இந்நிலை இன்னும் கேவலமாயிற்று (§ 268).

1823—5. ராபின்சனும் ஹஸ்கிஸனும்[7] மீண்டும் சுங்க வரிகளைச் சுருக்கினர்.

ஹஸ்கிஸன் (வாணிப இலாகாவின் தலைவராக இருந்தபோது)[8] குடியேற்ற நாடுகளுக்குச் சுங்க வரிகளைக் குறைத்த[9] லென்னும் கொள்கையைத் துவக்கினர். கப்பலோட்டுஞ் சட்டங்களையும் திருத்தியமைக்க அவர் அதிகாரம் பெற்றுர் (§ 275).

ஆயினும், விக் கட்சியினர் ஆட்சிக் காலத்தில் (1830—41) சுங்க வரிகள் திட்டம் மீண்டும் குழப்பமடைந்தது; சிக்கல்மிக்க

---

1. Audit. 2. Adam Smith. 3. 'Wealth of Nations.' 4. Simplified the Book of Rates. 5. Smuggling. 6. Commercial Treaty with France. 7. Robinson and Huskisson. 8. President of the Board of Trade. 9. Preferential duties for the Colonies.

பல சுங்க வரிகளால் வியாபாரம் நிறைலாயது. 1839-ல் நியமிக்கப்பட்ட ஓர் ஆராய்வுக் குழு வரிகள் சுமத்தப்பட்ட 500 பொருள்களுள் 10 பொருள்கள் மட்டுமே இத்தகைய வருமானத்தில் ஐந்தில் நான்கு பங்குகளைத் திரட்டிக் கொடுத்தன என்பதைக் கண்டுபிடித்தது.

1842—6. பீல் சுங்க வரிகளைக் குறைத்து வருமானத்தை அதிகப்படுத்தும் முறையைக் கையாண்டார்.

'அவர் நான்கு முறையாகத் தயாரித்த வரவு செலவுத் திட்டங்களின்[1] மூலம் 250 சுங்க வரிகளை நீக்கி அதற்கு மேற்பட்டவைகளைக் குறைத்துவிட்டார். இந்தப் போக்கின் சிகரமே தானிய வரிகளின் நீக்கம் (§ 285).

இவ் விஷயமாகப் பீலுடன் கருத்துவேறுபாடு கொண்ட டோரிகள் டார்பி, டிஸ்ரேலி[2] என்பவர் தலைமையின்கீழ் 'பாதுகாப்புக் கொள்கையினர்'[3] எனப் பிரிந்தனர். ஆயினும், 1852-ல் அவர்கள் பதவி யேற்க நேர்ந்த சமயம் இந்தப் போக்கின் நற்பலன்கள் அவர்களுக்கு மிக வெளிப்படையாகப் புலப்பட்டதால் அதை மாற்ற அவர்கள் துணியவில்லை (§ 292).

1853—65. க்ளாட்ஸ்டன் பீலின் போக்கைப் பின்பற்றி அதன் முழுப் பலனையும் கண்டார்.

சிறப்பாக, அவரது பிரசித்திபெற்ற 1853, 1860-ம் ஆண்டுகளின் வரவு செலவுத் திட்டங்களில். அவர் முயற்சிகளில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை இரண்டு: 'அறிவின் மீது வரிகள்'[4] எனப்பட்ட காகிதத் தீர்வைகளின் நீக்கம்; 1860-ல் ப்ரான்ஸோடு முடித்த வாணிப உடன்படிக்கை[5] (§ 304).

## கு. 203. க்ரைமியா போரில் பிரிட்டனும் ப்ரான்ஸும் சார்டினியாவும் தலையிட்டதன் காரணங்கள்.

பிரிட்டன்: ருஷ்யாவுடன் பகை. இதற்குக் காரணங்கள்: (i) ருஷ்யாவின் பெருக்கம் யூரோப்பிய நாடுகளிடையே 'வல்லமைச் சமநிலை'யைக்[6] கலைத்து அந்நாட்டினை இந்தியாவில் தலையிடச்செய்யலாம் என்று நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்த பயம்; (ii) போலண்ட் மக்களை சார் மன்னர்[7] நடத்தியதைப்பற்றியும், ஹங்கரி மக்களை ஒடுக்கி அடக்க ஆஸ்ட்ரியாவுக்கு உதவி செய்ததைப்பற்றியும் சீற்றம்; (iii) நெடுநாளைய அமைதியைப்பற்றிய சலிப்பு.

1. Budgets. 2. Derby, Disraeli. 3. The Protectionist Tories.
4. 'The taxes on knowledge.' 5. Commercial Treaty with France.
6. The 'Balance of Power.' 7. The Czar.

ப்ரான்ஸ்: ப்ரான்ஸின் வீரப்பிரதாபத்தைப் புதுப்பித்துத் தமது நிலையைப் பலப்படுத்திக்கொள்ள மூன்ரும் நெப்போலியன் கோரினர். ஆயினும், தமது பெரியப்பன் தவறிழைத்ததைப்போல் பிரிட்டனைப் பகைத்துக்கொள்ள அவர் விரும்பவில்லை. இப்போரிலோ பிரிட்டனின் துணைவராக இருந்து போரிட அவருக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. மேலும், அவருடன் சம அந்தஸ்து உடையவராகத் தம்மை மதிக்க மறுத்த சார்மீது அவர் க்ஷாத்திரம் கொண்டிருந்தார்.

சார்டீனியா: தமது எஜமானராகிய சார்டீனியா மன்னர் விக்டர் எம்மான்யுவெலின்[1] ஆளுகையின்கீழ் இட்டலியை ஒரு தனி இராச்சியமாக்கிவைக்க முயன்று கொண்டிருந்த காவூர்[2] இப்போரின் முடிவில் நடக்கவிருந்த சமாதான மகாநாட்டில்[3] கலந்துகொண்டு தம் முயற்சிக்கு ஒரு பெரிய வல்லரசின்[4] ஆதரவைப் பெற நினைத்தார்.

## கு. 204. க்ரைமியா போரின் முன்நிகழ்ச்சிகள்.[5]

1853ஞு ஜூலைமீ.—டான்யூப் மாகாணங்களில்[6] ருஷ்யப் படைகள் நுழைந்தன. மத்தியஸ்தம் செய்ய வந்த நாடுகள் விடுத்த 'வியென்ன குறிப்'பினை[7] சார் ஒப்புக்கொண்டார்; சுல்தான் நிராகரித்தார்.

,, அக்டோபர்மீ.—கான்ஸ்டான்டிநோப்பிலைப் பாதுகாக்க ப்ரெஞ்சு பிரிட்டிஷ் கப்பற்படைகள் டார்டனெல்ஸைக்[8] கடந்து சென்றன.

,, நவம்பர்மீ.—துருக்கி கடற்படை சினேப்பில்[9] அழிந்தது.

1854ஞு ஜெனவரிமீ.—ப்ரெஞ்சு பிரிட்டிஷ் கப்பற்படைகள் கருங்கடலுள் நுழைந்தன.

,, பெப்ருவரிமீ.—ருஷ்யப் படைகள் டான்யூப் மாகாணங்களை விட்டு விலகவேண்டுமென ப்ரெஞ்சு பிரிட்டிஷ் துரைத்தனங்கள் வற்புறுத்தின.

1. King Victor Emmanuel of Sardinia. 2. Cavour. 3. Peace Conference. 4. A Great Power. 5. Events leading to. 6. The Danube Principalities. 7. Vienna Note. 8. The Dardanelles. 9. Sinope.

1854ஆ மார்ச்மீ.—பிரிட்டனும் ப்ரான்ஸும் ருஷ்யாமீது போர் தொடுத்திருப்பதாக அறிவித்தன.

„ ஏப்ரில்மீ.—பிரிட்டனும் ப்ரான்ஸும் ஒரு கூட்டுறவு ஒப்பந்தம்[1] செய்துகொண்டன.

## கு. 205. பிரிட்டன் க்ரைமியா போரில் ஒரு நிர்ணயமின்றி நுழைய நேர்ந்ததா?

ஆபெர்டீன் கூட்டமைச்சில்[2] மாறுபட்ட கருத்துக்கள்: ஆபெர்டீனும் க்ளாட்ஸ்டனும் சாரை ஆதரிக்கவேண்டுமென்றனர்; பாமர்ஸ்டனும் ரசெல்லும் சுல்தானை ஆதரிக்க வேண்டுமென்றனர்.

பிரிட்டன் தம்மீது போர்தொடுக்குமென்று சார் அறிந்திருந்தால் அவர் நிச்சயமாகப் பின்வாங்கியே இருப்பார்; அவர் ஆபெர்டீனும் க்ளாட்ஸ்டனும் தம்மீது போர் தொடுக்கமாட்டார்களென்று நம்பினர்.

சுல்தானுக்குப் பிரிட்டன் தம்மை ஆதரிக்காதென்று பட்டிருந்தால் அவர் நிச்சயமாகப் பின்வாங்கி இருப்பார். அவர் பாமர்ஸ்டனையும் ரசெல்லையும், தமது தலைநகரத்தில் பிரிட்டிஷ் பிரதிநிதியாகவிருந்த ஸ்ட்ராட்பர்ட் டி ரெட்க்ளிப் பிரபுவையும்[3] (இவர் ருஷ்யாவை ஆவேசத்துடன் கண்டிப்பவர்) நம்பியிருந்தார்.

இப்போரின் தொடக்கத்துக்கு முக்கிய காரணமான செயல்களுக்கு (உ-ம்., கருங்கடலுள் கப்பற்படையை அனுப்பியது) ஆபெர்டீன் பிரபு இணங்கியது அவற்றாலேயே அமைதி நிலைக்குமென்ற நம்பிக்கையால்தான். அவர் இணங்காதிருந்தால், பாமர்ஸ்டனும் ரசெல்லும் ராஜிநாமா செய்துவிட்டிருப்பார்கள். அதனால் அவ்வமைச்சு முறிந்து வேறொரு அமைச்சு ஏற்பட்டிருக்கும். அவர்கள் உடனே போர் தொடுத்திருப்பார்கள்.

[குறிப்பு: இவ்விஷயம் ஒன்றில்தான் பாமர்ஸ்டனும் ரசெல்லும் ஒத்துப்போனார்கள். பார்லமென்ட் சீர்திருத்த விஷயமாக ரசெல் கொண்டுவந்த மசோதாவை அமைச்சர் குழு ஆதரித்தால் தாம் உடனே ராஜிநாமா செய்யப்போவதாக அவர் அப்போதுதான் மிரட்டிக்கொண்டிருந்தார்.]

1. A Treaty of Alliance.
2. The Aberdeen Coalition Cabinet.
3. Lord Stratford de Redcliffe.

### கு. 206. க்ரைமியா போரின் போக்கு.

1854ஆ செப்டெம்பர்மீ.—நேசப்படைகள் கிரைமியாவில் இறங்கின; ஆல்மா ஆற்றுப்போர்[1]; செபாஸ்டொபோல்[2] முற்றுகையின் ஆரம்பம்.

,, அக்டோபர்மீ.—பாலக்ளாவாபோர்[3] (பிரிட்டிஷ் கப்பற்படையின் முக்கிய இடத்தைக் காக்க).

,, நவெம்பர்மீ.—இன்கர்மான் போர்[4] (முற்றுகையைக் கலைக்க ருஷ்யர்கள்செய்த முயற்சிகளுள் ஒன்று).

1855ஆ ஜனவரிமீ.—சார்டீனியா போரில் கலந்துகொண்டது.

,, மார்ச்மீ.—இரண்டாம் நிக்கொலஸ் சார் இறந்தார்.

,, ஜூன்மீ.—மாலகாப், ரெடன்[5] அரண்களின்மீது நேசப்படைகள் பலனின்றித் தாக்கின.

,, ஆகஸ்டுமீ.—ட்செர்னயா போர்[6] (ப்ரெஞ்சுக்காரர்களும் சார்டீனியர்களும் ருஷ்யத் தாக்குதலைக் குலைத்தனர்).

,, செப்டெம்பர்மீ.—மாலகாப்பை ப்ரெஞ்சுக்காரர் பிடித்துக் கொண்டனர். பிரிட்டிஷார் ரெடனைப் பிடித்து விட்டுவிட்டனர். மறுநாள் ருஷ்யர்கள் செபாஸ்டொபோலைக் காலிசெய்துவிட்டுப் போய்விட்டனர்.

### கு. 207. க்ரைமியா போரின் விளைவுகள்.

1855-ல் ஏற்பட்ட பாரிஸ் உடன்படிக்கைப்படி[7] பால்கன் நாடுகளிலுள்ள கிறிஸ்தவர்களுக்காகப் பரிந்து தலையிடும் உரிமையை சார் விட்டுவிட்டார். சுல்தானும் அவர்களை ஒழுங்காக நடத்துவதாக ஒப்புக்கொண்டார். யூரோப்பில் சுல்தானுக்குச் சொந்தமான நாடுகள் அவராட்சியின் கீழேயே இருக்குமென்று வல்லரசுகள் உறுதிகூறின. கருங்கடலைப் பொதுக்கடலாகப் பாவிக்க சார் ஒப்புக்கொண்டார் (அதாவது, அங்கு போர்க் கப்பல்களை வைத்திருக்கலாகாது).

---

1. Battle of the Alma. 2. Sebastopol. 3. Battle of Balaclava. 4. Battle of Inkerman. 5. Malakoff, Redan. 6. Battle of Tchernaya. 7. Treaty of Paris.

ஆயினும், இந்த ‘விளைவு’களில் எதுவும் நிலைத்தில்லை; பால்கன் நாடுகளிலுள்ள கிறிஸ்தவர்களைத் துருக்கி பழையபடி கொடூரமாக நடத்தியதால் 1876-ல் அங்கொரு கலகம் நிகழ்ந்தது (§ 312). ஆசியாவுக்குள் நாடுகளைக் கைப்பற்ற ருஷ்யா முனைந்ததால் இந்தியாவைப்பற்றிப் பிரிட்டன் கொண்டிருந்த பீதி முன்னிலும் அதிகமாயது. சுல்தானுக்குச் சொந்தமான நாடுகள் அவராட்சியின்கீழேயே இருக்குமென்று வல்லரசுகள் கூறிய உறுதிமொழிக்கு நேர்மாறாக டான்யூப் மாகாணங்கள் சுயேச்சை பெற்று 1861-ல் ருமேனியா இராச்சியமாயின. 1871-ல் ப்ரான்ஸேனும் பிரிட்டனேனும் தம்மை எதிர்க்கமுடியாத நிலையிலிருந்தபோது, சார் கருங்கடலைப் பொதுக்கடலாகப் பாவிக்க மறுத்துவிட்டார் (§ 310).

[பாவம்! பிரிட்டனில் வருமான வரி வாக்களித்தபடி எடுபடுவதாக இல்லை!]

## ரு. 208. பிரிட்டிஷ் இந்தியாவும் டல்ஹௌசி பிரபுவும்[1] (1848-1856).

இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராச்சியத்தை உருவாக்கிய நால்வருள் கடைசி பெரியார்: திறமையும் சுறுசுறுப்பும் மிக்கவர்; அக்காலம் பிரிட்டனின் முக்கிய தத்துவமாகிய ‘வளர்ச்சி’[2] எண்ணத்தில் ஆர்வங் கொண்டவர். இந்தியாவின் பெரும்பாகத்தைப் பிரிட்டிஷ் ஆளுகையின்கீழ்க் கொண்டுவருதலே தாம் இந்நாட்டுக்குச் செய்யக்கூடிய பெருந் தொண்டென்று அவர் கருதினார்.

அவர் சேர்த்த நாடுகள்.[3]

1. *பஞ்சாப்*; அவருக்குமுன் கவர்னர் ஜெனரல் பதவியிலிருந்த ஹார்டிஞ்ச் பிரபு[4] காலத்தில் நடந்த முதல் சீக்கர் போரின்[5] விளைவாகப் பஞ்சாப் ஒரு பாதுகாப்பு நாடாயிற்று.[6] இந்த ஏறபாடு முறிந்துவிட்டதால் இரண்டாம் சீக்கர் போருக்குப்பிறகு (சில்லியன் வாலா, குஜராத் சண்டைகள்[7]) டல்ஹௌசி அதைப் பிரிட்டிஷ் ஆளுகையின்கீழ்ச் சேர்த்துக்கொள்ளத் தீர்மானித்தார். பஞ்சாபை ஆள நியமித்த ஜான் லாரென்ஸ், ஹென்றி லாரென்ஸ்[8] என்னும் இரு சகோதரர்கள் டல்ஹௌசியின் கொள்கைகளைப் பின்பற்றி அங்கு ஒழுங்கான முறையில் நடைபெறக் கூடிய நீதிமன்றங்களை அமைத்து,

1. Lord Dalhousie. 2. ‘Progress.’ 3. Annexations. 4. Lord Hardinge. 5. The First Sikh War. 6. A Protectorate. 7. Battles of Chilianwalla and Gujerat. 8. John and Henry Lawrence.

வரிகளைக் குறைத்து, மக்களிடையே அமைதியையும் திருப்தியையும் வளத்தையும் பெருக்கி அதை ஒரு சிறந்த மாதிரிமாகாணமாக[1] உருவாக்கினர். (சிப்பாய்கள் கலகத்தின்போது சீக்கர்கள் பிரிட்டிஷாருக்கு மாறாத் துணையாக இருந்தார்கள்.)

2. பர்மா: பர்மா அரசர் பிரிட்டிஷ் வியாபாரிகளைக் கொடுமையாக நடத்தி அதற்கு ஈடுசெய்ய மறுத்தார். பர்மா போரின் (1852) விளைவாகக் கீழ்ப்பர்மா பிரிட்டிஷ் ஆளுகையின் கீழ்ச் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

3. அரசிழத்தல் கோட்பாடு[2]: ஒரு சிற்றரசர் வாரிசு இன்றி இறந்துவிட்டால் அவர் ஆண்டுகொண்டிருந்த நாடு பேரரசரின்[3] நேராளுகையின் கீழ் வரவேண்டுமென்னும் ஒரு பழைய கோட்பாட்டை டல்ஹௌசி நடைமுறையில் கொண்டுவந்தார். முன்காலத்தில் மொகலாய மன்னர் பேரரசர் நிலையிலிருந்தார்: இப்போது அந்நிலையில் கிழக்கிந்தியா கம்பெனி இருந்தது. இந்தக் கோட்பாட்டின்படி நடு இந்தியாவிலுள்ள ஏழு சிறு நாடுகள் பிரிட்டிஷ் ஆளுகையின் கீழ்ச் சேர்க்கப்பட்டன.

4. ஔத்: எவ்வளவோ எச்சரிக்கை செய்தும் ஔத் அரசர் தம் குடிமக்களை மிகக் கொடுமையாக நடத்தி அவர்களுக்குத் துன்பம் விளைத்துக்கொண்டிருந்தார். ஆகவே, டல்ஹௌசி அவர் நாட்டையும் சேர்த்துக்கொண்டார். (இப்போது கங்கைப் பள்ளத்தாக்கு முழுவதும் கம்பெனி ஆளுகையின் கீழ் வந்தது.)

'நாகரிகத்தின் நலன்கள்'

1. சாலைகள்: உ-ம்., கல்கத்தாவையும் பெஷாவரையும் இணைக்கும் பெரிய சாலை.

2. தந்தி: டல்ஹௌசி ஆளுகையின் கீழ் 4000 மைல் நீளத்துக்குத் தந்திக்கம்பிகள் நாட்டப்பட்டன.

3. இருப்புப்பாதைகள்: ஒரு திட்டத்தை வகுத்து, முதல் இருப்புப்பாதையைத் திறந்துவைத்தார்.

4. தபால் திட்டம்: பிரிட்டனில் சமீபத்தில் ஏற்பட்ட பென்னித் தபாலைவிட நயமானது.

---

1. A model Province. 2. Doctrine of Lapse. 3. The Paramount Power.

5. *நீர்ப்பாய்ச்சல்:* பெரும் பரப்புக்களில் புதிதாக உணவுப் பொருள்களை விளைவிக்க முடிந்தது.

## கு. 209. சிப்பாய்கள் கலகத்தின் காரணங்கள்.

1. பொதுவான ஒரு கலவர உணர்ச்சியும், டல்ஹௌசி நாட்டில் புகுத்திய புதுமைகளையும் திருத்தங்களையும் பற்றிய வெறுப்பும்.

2. சிப்பாய்களின் குறைகளும் சமுசயங்களும்; சிறப்பாக, தங்கள் மதத்தை வேரறுக்க ஒரு சூழ்ச்சியிருப்பதாக அவர்கள் கொண்ட சந்தேகம். பல தொடர்பற்ற நிகழ்ச்சிகளால் இந்தப் பீதி வளர்ந்தது.

i. அக்கரை நாடுகளிலும் (உ-ம்., பர்மாவில்) சிப்பாய்கள் போரிடச் செல்லவேண்டும் என்ற ஒரு புதிய கட்டளை. இதனால் அவர்கள் ஜாதியினின்றும் தள்ளிவிடப்படலாம்.

ii. சிறைக்காவலிலுள்ள கைதிகள் தங்கள் உணவைத் தாங்களே சமைத்துக்கொள்ளக் கூடாதென்ற ஒரு புதிய கட்டளை. ஆகவே, அவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவு ‘தீண்டாதவர்கள்’ தொட்டு அசுத்தப்படுத்தியதாக இருக்கலாம்.

iii. கொழுப்பு தடவப்பெற்ற வெடிமருந்துச் சுரைகள்[1] (§ 296).

iv. கிறிஸ்துமதப் பிரசாரகர்கள்[2] இருப்புப்பாதைகளின் துணையால் தாங்கள் இந்தியா முழுவதையும் கிறிஸ்து மதத்துக்கு மாற்றிவிட முடியுமென்று தைரியமாகக் கூறிய பேச்சு.

3. சிற்றரசர்களின் குறைகள்.

i. ‘அரசிழத்தல் கோட்பா’ட்டை[3] அமுலுக்குக் கொண்டு வந்தமை (கு. 208).

ii. நானா சாஹிப்புக்கு உபகாரச்சம்பளம் மறுக்கப்பட்டமை.

4. மற்ற காரணங்கள்.

i. க்ரைமியா போரின் குழப்பங்களாலும் சமீபத்தில் ஆப்கானிஸ்தானத்தின்மீது செல்வாக்கு பெற முயன்ற முயற்சி பலிக்காததாலும் பிரிட்டிஷ் புகழ் ஒளி மழுங்கியிருந்தது.

1. Greased cartridges. 2. Missionaries. 3. Doctrine of Lapse.

ii. பிரிட்டிஷார் ஆதிக்கம் இந்தியாவில் ஒரு நூற்றுண்டுதான் நிலைத்திருக்குமென்று சில சந்நியாசிகள் தீர்க்கதரிசனமாகக் கூறியிருந்த கூற்றுக்கள்[1], பிளாஸிக்குப்பின் 1857-ம் ஆண்டோடு ஒரு நூற்றுண்டு முடிந்தது.

iii. பெர்சியா போரில் கலந்துகொள்ளக் கம்பெனிப் படைகள் சில அனுப்பப்பட்டிருந்ததால் இந்தியாவில் பிரிட்டிஷாரின் போர்ப் பலம் அச்சமயம் குறைந்திருந்தது.

## கு. 210. சிப்பாய்கள் கலகத்தின் விளைவுகள்.

1. கிழக்கிந்தியா கம்பெனி கலைக்கப்பட்டது. அவர்கள் ஆளுகையின்கீழிருந்த நாடுகள் பிரிட்டிஷ் துரைத்தனத்தின் ஆளுகையின்கீழ் வந்தன.

பிரிட்டிஷ் அமைச்சர் குழுவிலும் பார்லமென்டிலும் இந்தியா விஷயங்களைக் கவனிக்க ஒரு அரசாங்கக் காரியதரிசி[2] (அமைச்சர்) நியமிக்கப்பட்டார். அவருக்கு ஆலோசனை கூற இந்தியா விஷயங்களில் அனுபவமுதிர்ந்த சில அங்கத்தினர்கள் கொண்ட சபையொன்று ஏற்படுத்தப்பட்டது.

இந்தியாவில் கவர்னர் ஜெனரலுக்குப பதிலாக ஒரு அரசப் பிரதிநிதி நியமிக்கப்பட்டார். அவர் அரசாங்கக் காரியதரிசியின் தீர்மானங்களை நிறைவேற்றவேண்டியவர். அவருக்குத் துணையாகச் சில இந்திய அங்கத்தினர்களும் கொண்ட ஒரு சபை அமைக்கப்பட்டது.

2. கம்பெனியின் சிப்பாய்ப்படை அரசியாரின் படையாக மாறியது.

இந்திய போர்வீரர்களின் தொகை பிரிட்டிஷ் போர்வீரர்களின் தொகையைவிட எப்போதும் ஐந்து பங்குக்குமேல் இருக்கக்கூடாதென்று திட்டமானது.

3. இந்தியரது மதம் தாக்கப்படுமென்ற சமுசயம் இனி ஏற்படாதவாறு துரைத்தனம் மிகச் சாக்கிரதையாக இருக்கத் தீர்மானித்துக் கொண்டது.

---

1 Prophecies. 2. Secretary of State.

அரசியாரின் அறிக்கையொன்று[1] இந்தியாவின் சிற்றரசர்களுக்கும் மக்களுக்கும் பின்வருமாறு உறுதி கூறியது; "தற்போது எமக்குச் சொந்தமாகவுள்ள நாடுகளின் பரப்பைப் பெருக்கிக்கொள்ளும் நோக்கமே எமக்கில்லை. சுதேச அரசர்களின் உரிமைகளையும் பெருமைகளையும் கௌரவத்தையும் எம்முடையனபோல் மதித்துப் பாராட்டுவோம்......எமது குடிகள் எந்த இனத்தைச் சேர்ந்தவராயினும் எம்மதத்தைச் சேர்ந்தவராயினும் எமது துரைத்தனத்தில் தாராளமாகவும் பாரபக்ஷமின்றியும் உத்தியோக பதவிகள் வகிக்க அனுமதிக்கப்பெறுவர்."

## கு. 211. டராம் பிரபு[2] கானடாவைப்பற்றித் தயாரித்த அறிக்கை (1839).

தற்கால பிரிட்டிஷ் தனி மக்களின் பொதுநலப் பேரரசின்[3] அடிப்படையான பொறுப்புள்ள சுயாட்சிக்கொள்கையை[4] அவர் வரையறுத்தார்.

உடனே நிறைவேற வேண்டியவையென்று அவர் கூறியவை :—

1. மேல் கானடாவும் கீழ்க்கானடாவும் இரண்டு சபைகள் கொண்ட ஒரு பார்லமென்டின்கீழ் இணைக்கப்பெறல் வேண்டும்.

இதைப் பிரிட்டிஷ் பார்லமென்ட் உடனே 1840-ல் ஒரு சட்டமியற்றி நிறைவேற்றி வைத்தது.

2. இந்தப் பார்லமென்ட் மூலம் பொறுப்புள்ள சுயாட்சி.

'பொறுப்புள்ள சுயாட்சி' யென்பது பார்லமென்டில் அதிக தொகையினரின் ஆதரவுபெற்ற ஒரு அமைச்சர் குழுவினால் நடைபெறும் துரைத்தனம். இது உடனே வழங்கப் பெறவில்லை. வெல்லிங்டன் 'அவ்வவ்விடத்துப் பொறுப்புள்ள துரைத்தனமும்[5] கிரேட் பிரிட்டனின் மேலாட்சி நிலையும்[6] ஒன்றோடொன்று முற்றிலும் பொருத்தமற்றவை' என்றார். ஆயினும், டராமின் மருமகர் எல்ஜின் பிரபு[7] கவர்னர் ஜெனரலாக இருந்தகாலத்தில் (1846-54) இது நடைமுறையில்[8] கொண்டுவரப்பட்டது. இவர் தமது மாமனாரின் கோட்பாடுகளைக் கடைப்பிடித்தார். கானடா பார்லமென்டை அதன் வழியே விட்டுத் தவறுகளை அதுவே உணரச்செய்யவேண்டும் என்பது அவர் கருத்து. பொறுப்புள்ள

---

1. Queen's Proclamation. 2. Lord Durham. 3. The Modern British Commonwealth of Nations. 4. Responsible Self-Government. 5. Local Responsible Government. 6. Sovereignty. 7. Lord Elgin. 8. Practice.

சுயாட்சி 1867-ல்தான் பிரிட்டிஷ் வட அமெரிகா சட்டத்தினல்[1] சட்டரீதியாக[2] வழங்கப்பட்டது (§ 302).

டராம் அறிக்கையிலிருந்து சில வாக்கியங்கள் ;—"குடியேற நாடுகள் மிக அரிய சொத்துக்கள் என்பதை நான் நன்கு உணர்கிறேன் : அவற்றோடு நம் தொடர்பு அறக்கூடாதென்பதையும் நான் உறுதியாக நம்புகிறேன் ; எனினும், அவற்றின் உள்நாட்டுத் தேவைகளுக்கு ஏற்ப அவை சட்டமியற்றிக் கொள்வதில் நாம் குறுக்கிட்டுத் தலையிடல் எவ்வகையில் விரும்பக்கூடியதென்பது எனக்குப் புரியவில்லை. இக்குடியேற்ற நாட்டினர் தமக்கு எவை மிகச் சிறந்த சட்டங்கள் என்பதையோ, தங்கள் நாட்டின் காரியங்களைத் தங்களுள் எவர் மிகத் திர்மையாகக் கவனித்து நடத்தக்கூடியவர்கள் என்பதையோ சில சமயங்களில் உணராதிருக்கலாம். ஆயினும், பேரரசின் இப்பாகங்களில் நல்ல சட்டங்களோ கெட்ட சட்டங்களோ ஏற்படுவதால் மிகச் சிறிய அளவிலேயே பாதிக்கப்படுபவர்களைவிட, இவ்விஷயங்களைப்பற்றி ஒரு சரியான முடிவுக்குவருவதில் தங்களுக்கே அதிக அக்கரை இருக்கவேண்டியது இயற்கையாகையால் அவர்கள் அவற்றில் அதிக கவனம் செலுத்துவது நிச்சயம்."

## கு. 212. அரசியாரின் கணவர் (1819—1861).

விக்டோரியா அரசியாரின் அம்மான் மகனுன சாக்சிகோபர்க் ஆல்பர்ட் இளவரசர்[3] அவரை 1840-ல் மணந்தார். அவரது நம்பிக்கைவாய்ந்த காரியதரிசி நிலையிலிருந்தார். தாம் வரித்த நாட்டின் விவகாரங்களையும் நலன்களையும், சிறப்பாகக் கல்விப் பெருக்கத்தையும் தொழிலபிவிருத்திக்கான விஞ்ஞான அறிவு வளர்ச்சியையும், ஊக்கத்துடனும் சிரத்தையுடனும் உணர்ந்துகொள்ள முயன்றுர். அவருக்கு நகைச்சுவை[4]யில்லை ; மக்கள் விரும்பும வெளி விளையாட்டுக்களிலும் போதுபோக்குகளிலும் விருப்பமற்றவராயிருந்தார் ; ஆகவே, அவரைப் பொதுமக்கள் அதிகமாக விரும்பவில்லை.

சட்டவரம்புக்குட்பட்ட முடியரசிலும் அரசியாரின் மேன்மைப் பதவியை நிலைநாட்ட வேண்டுமென்று அவர் கருதியதால், வெளிநாட்டு விவகாரங்கள் விஷயமாக பாமர்ஸ்டன் அரசியாரை அசட்டையாக நடத்தியதை அவர் கண்டித்தார் (§ 291).

---

1. British North America Act. 2. Formally. 3. Prince Albert of Saxe-Coburg. 4. Sense of humour.

பெரிய பொருட்காட்சியை ஏற்படுத்தியதில் முக்கிய பொறுப்பேந்தினர் (§ 289).

க்ரைமியா போரின்போது அதிகமாக நாட்டுமக்களால் வெறுக்கப்பட்டார். ருஷ்யாவுக்கு அனுகூலமாக இருந்தார் என்றும், ஜெர்மனியின் நலத்தையே அதில் முக்கியமாக அவர் நாடினர் என்றும் கிளம்பிய புகார்கள் நியாயமற்றவை.

'ட்ரென்ட்' கப்பல் நிகழ்ச்சியில்[1] அமைதிக்காக அரும்பாடு பட்டார் (கு. 213).

டைபாய்ட் சுரத்தால் இறந்தார் (1861ஆ டிசெம்பர்மீ). அரசியாரின் ஆழ்ந்த பக்திக்காளானர்.

## கு. 213. பிரிட்டனும் அமெரிகா உள்நாட்டுப் போரும்.

மேல் வகுப்பினர் தெற்கு நாடுகளோடு சேர்ந்தனர்.

புதிய இங்லண்டிலுள்ள வாணிப மனப்பான்மை கொண்ட யான்கிகளைவிடத்[2] தெற்கத்தியாரே 'கனவான்கள்'[3] எனக் கருதப்பட்டனர்.

கீழ் வகுப்பினர் வடக்கு நாடுகளோடு சேர்ந்தனர்.

அங்கு அவர்களது நண்பர்கள் குடியேறினர், தெற்கு நாடுகளில் கூலிவேலை செய்ய வெள்ளையர்களுக்கு இடமில்லாததால்.

'அலபாமா' கப்பல் நிகழ்ச்சி.[4]—பிரிட்டிஷ் கப்பல் கட்டுந்துறைகளில் தெற்கு நாடுகளின் 'கான்பெடெரேட்' துரைத்தனத்துக்குத்[5] தேவையான போர்க்கப்பல்கள் கட்டப்பட்டதைப் பிரிட்டிஷ் துரைத்தனம் கண்டும் காணுமலிருந்தது.

பெடெரல் துரைத்தனத்தின்[6] கப்பல்களைத் தாக்க அலபாமா என்னும் போர்க்கப்பல் பர்க்கென்ஹெட்டில்[7] கட்டப்பட்டது. இதனல் மிக்க மனஸ்தாபம் ஏற்பட்டது. முடிவில் பிரிட்டன் அக்கப்பலால் நேர்ந்த சேதத்துக்கு நஷ்டஈடு கட்டித்தரவேண்டியதாயிற்று (§ 310).

'ட்ரென்ட்' கப்பல் நிகழ்ச்சி.—கான்பெடெரேட் துரைத்தனத்தின் தூதர்கள் யூரோப்புக்கு 'ட்ரென்ட்' என்னும்

1. The 'Trent' Incident. 2. 'Yankees.' 3. Gentlemen. 4. The 'Alabama' Incident. 5. The Confederate Government. 6. The Federal Government. 7. Birkenhead.

பிரிட்டிஷ் கப்பலில் போய்க்கொண்டிருந்தபோது நடுக் கடலில் அவர்களை பெடெரல் துரைத்தனத்தின் போர்க் கப்பல்கள் பிடித்துக் கொண்டன.

பிரிட்டிஷ் கொடிக்கு அவமதிப்பு[1] ஏற்பட்டுவிட்டதென்று நாட்டினர் சீற்றங்கொண்டனர். முடிவில், அரசியாரின் கணவரும் அமெரிகா ராயபாரியும்[2] நன்மனதுடன் தலையிட்டு இவ்விஷயத்தில் அமைதி ஏற்படுத்தினர். பிரெசிடென்ட் லின்கன்[3] பிடிக்கப்பட்ட தூதர்களை விடுவித்துவிட்டார்.

பருத்திப் பஞ்சம்.—பெடெரல் துரைத்தனம் தெற்குத் துறைமுகங்கள்மீது அடைப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டதால்[4] லான்கஷைர் வளத்துக்கு மிகத் தேவையான பருத்தி ஏற்றுமதி தடைப்பட்டுவிட்டது. ஆகவே, அப்பாகத்து மக்கள் பெரிதும் துன்பப்பட்டார்கள். பொது மக்களிடையே நன்கொடைகளை வசூலித்துத்தான் அவர்களது பஞ்சநிலை ஒருவாறு குறைக்கப்பட்டது.

தொழிலாளர்கள் இச்சமயத்தில் துயரங்களையெல்லாம் தாங்கிக்கொண்டு யாதொரு குழப்பமும் செய்யாமலிருந்ததை எல்லோரும் பாராட்டினர். அடிமை ஏற்பாட்டை நீக்க நிகழ்ந்த அப்போரினை நிறுத்தக்கூடிய எந்தக் கிளர்ச்சியையும் அவர்கள் ஆதரிக்காததன் காரணம் அடிமை யேற்பாட்டை ஒரேயடியாகத் தொலைக்கவேண்டுமென்று அவர்கள் ஆர்வங்கொண்டிருந்ததேயாம்.

**கு. 214. ஜான் பிரைட்[5] (1811—1889).**

பெரும் பேச்சாளர் 'க்வேக்கர்' மதக்கோட்பாட்டினர்[6]; அரசியலில் அடிப்படைக் கொள்கையினர்[7]; பருத்தியாடைகளில் அச்சடித்தல் தொழிலை மேற்கொண்டவர்[8]; 'இணங்காதவர் மனச்சாட்சியின் உருவம்'[9] எனப்பட்டவர். மூன்று புகழ்பெற்ற கிளர்ச்சிகளில் முதன்மையான பங்கெடுத்துக்கொண்டார் :—

(1) தானியச் சட்ட நீக்கத்துக்காக (காப்டெனுடன்);
(2) க்ரைமியா போரின்போது ருஷ்யாவுக்கு எதிரான போர்க் கிளர்ச்சியைத் தாக்க (காப்டெனுடன்);

---

1. 'Insult to the flag.' 2. The American ambassador. 3. President Lincoln. 4. Blockaded. 5. John Bright. 6. Quaker. 7. Radical. 8. Calico-printer. 9. The 'Nonconformist Conscience.'

தானியச் சட்ட நீக்கக் கிளர்ச்சியில் அவர் பெற்ற நற்பெயர் இந்த இரண்டாவது கிளர்ச்சியில் மங்கியது.

(3) பார்லமென்ட் சீர்திருத்தத்துக்காக (1860—67).

க்ளாட்ஸ்டன் அமைச்சுகளில் (1868—74, 1880—85) ஓரங்கத்தினராக இருந்தார். ஆயினும், அயர்லண்ட் உள்ளூர்ச் சுயாட்சி[1] விஷயத்தில் அவர் க்ளாட்ஸ்டனை எதிர்த்தார் (§ 318).

## கு. 215. ஹென்றி டெம்பில் வைஸ்கௌன்ட் பாமர்ஸ்டன்[2] (1784—1865).

விக்டோரியா காலத்து முற்பகுதியில் நாட்டினரிடையே காணப்பட்ட நம்பிக்கைமிக்க நிச்சயமான மனப்பான்மைக்கு[3] ஒரு எடுத்துக்காட்டானவர்.

எண்பத்தோராண்டுகள் வாழ்ந்தார்: பார்லமென்ட் அங்கத்தினராக அறுபதாண்டுகள்; உத்தியோக பதவிகளில் ஐம்பதாண்டுகள்; தலைமை யமைச்சராகப் பத்தாண்டுகள்.

லிவர்ப்பூல் அமைச்சில் போரமைச்சர் (போர்க்காரிய தரிசி)[4] (1812—27). பார்லமென்ட் சீர்திருத்த விஷயமாக டோரி கட்சியை விட்டு நீங்கினார் (§ 279).

கிரே, மெல்போர்ன், ரஸெல் அமைச்சுகளில் வெளிநாட்டு விவகார அமைச்சர் (1830—41).

வெளிநாட்டு அதிபர்களைப் பிரிட்டனின் வன்மையை உணரும்படி செய்தலில் அவர் களித்தார். வெளிநாட்டு விஷயங்களில் அவரது போக்குக்குக் கீழ்வனவற்றைச் சிறப்பான மாதிரிகளாகக் கூறலாம்:—

**பெல்ஜத்தின்[5] சுயேச்சை நிலை (1830—31).**—ஹாலண்டின் ஆளுகையினின்றும் பெல்ஜம் தனிப்பட்டுச் சுயேச்சை நிலையடைந்தபோது, அதன் அரச பதவிக்கு லூயி பிலிப்[6] தம் மகனை ஆதரிக்காமலிருக்குமாறு செய்து, இங்லிஷ் அரச குடும்பத்தினர்க்கு உறவான கோபர்க் லியோபால்ட்[7] தேர்ந்தெடுக்கப் பெறுமாறு முயன்று, இதர வல்லரசுகள் பெல்ஜம் சுயேச்சை நிலையைக் குலைக்காதவாறு பார்த்துக்கொண்டார்.

---

1. Home Rule. 2. Viscount Palmerston, Henry Temple. 3. Early Victorian National Complacency and 'Cocksureness.' 4. Secretary at War. 5. Belgium. 6. Louis Philippe. 7. Leopold of Coburg.

**இரு சைன போர்கள்.**—இந்தியாவிலிருந்து அபினி இறக்குமதியை நிறுத்த முயன்ற சைன துரைத்தனத்தின் எதிர்ப்பை 1840-ல் குலைத்தார். முடிவில் சைன ஹாங்காங்கைப்[1] பிரிட்டனுக்குக் கொடுத்து, ஐந்து 'உடன்படிக்கைத் துறைமுகங்'களைப்[2] பிரிட்டிஷ் கப்பல் வியாபாரத்துக்குத் திறந்துவைக்க ஒப்புக்கொண்டது. 1856-ல் சைன துரைத்தனம் 'ஆரோ'[3] என்னும் கப்பலை ஒரு கொள்ளைக் கப்பலெனப் பிடித்தது. அதன் சொந்தக்காரர்களும் மாலுமிகளும் சீனர்களேயாயினும், அது முதலில் ஒரு பிரிட்டிஷ் கப்பலாகப் பதிவு செய்யப்பட்டிருந்ததால் அதைப்பிடித்தது 'பிரிட்டிஷ் கொடியை அவமதித்ததாகும்'[4] என்று பிரிட்டிஷ் துரைத்தனம் சீறியது. சைன நஷ்டஈடு கொடுக்கச் சம்மதித்ததேனும், மன்னிப்பு கேட்டுக்கொள்ள மறுத்துவிட்டது. மற்ெறாரு சிறிய போர் மூண்டது. அதன்பயனாக சைன £ 4,000,000 நஷ்டஈடு கொடுக்கவேண்டியதாயிற்று.

**டான் பசிபிக்கோ விஷயம்**[5] (1850).—மால்டாவைச் சேர்ந்த டான் பசிபிக்கோ என்னும் ஒரு யூதர் ஆதென்ஸில் நடந்த ஒரு கலகத்தின்போது சில சொத்துக்களை இழந்தார். அவற்றிற்கு நஷ்டஈடாக அவர் க்ரீஸ் துரைத்தனத்திடமிருந்து மிகப் பெருந்தொகையினைக் கேட்டார். அதை அவருக்குக் கொடுக்காவிட்டால் பிரிட்டன் போர் தொடுக்குமென்று பாமர்ஸ்டன் மிரட்டினர்.

**டேனிய ட்யூக் நாடுகள்**[6] (1863).—ஷ்லெஸ்விக் ஹால்ஸ்டேன் ட்யூக் நாடுகளை[7] ப்ரஷ்யா பெறவேண்டுமென்று கூறியதை எதிர்க்க டென்மார்க்குக்குப் பிரிட்டிஷ் ஆதரவு கிடைக்குமென்று பாமர்ஸ்டன் ஒருவாறுகத் தெரிவித்தார். ஆயினும், அமைச்சர் குழுவும் பொதுமக்களும் அரசியும் (இவர் ஜெர்மெனிக்குச் சாதகமானவர்) இதுவிஷயமாகப் போர்தொடுக்க மறுத்துவிட்டதால் பாமர்ஸ்டன் வேறென்றும் செய்வதற்கில்லை.

வெளிநாட்டு விவகாரங்கள் விஷயமாக அரசியாரையும் தலைமை அமைச்சரையும் (ரசெல்) கலக்காததால் அவர்கள் கண்டனத்துக்கு ஆளானர்.

ப்ரெஞ்சு பேரரசரின் திடுஞ்செயலை[8] அமைச்சர் குழுவின் அனுமதியின்றி ஒப்புக்கொண்டதால் தம் பதவியை ராஜிநாமா செய்யவேண்டியவரானர் (§ 291)).

ஆபெர்டீன் கூட்டமைச்சில்[9] உள்நாட்டு அமைச்சர்[10] (§ 292).

---

1. Hong Kong. 2. 'Treaty Ports.' 3. The 'Arrow.' 4. 'An insult to the flag.' 5. The Don Pacifico Affair. 6. The Danish Duchies. 7. Schleswig-Holstein. 8. Coup detat. 9. Aberdeen Coalition. 10. Home Secretary.

கிழக்கு விவகாரத்தில்[1] ருஷ்யாவைத் தீவிரமாக எதிர்த்தார் (§ 293).

ஆபெர்டீனுக்குப் பிறகு தலைமையமைச்சரானார் (1855) (§ 295).

க்ரைமியா போரை வெற்றிகரமாக முடித்துவைத்தார் (§ 295).

கொலைச் சூழ்ச்சி மசோதா[2] சம்பந்தமாகத் தோல்வியுற்றார் (§ 303).

'மூவர் துரைத்தன அமைச்'சில்[3] தலைமையமைச்சர் பதவி வகித்திருந்தார் (1859—'65) (§ 304).

## கு. 216. மத இயக்கங்கள்[4]

இக்காலத்தில் இங்லண்ட் மதஸ்தாபனம் மூன்று விதமாக வளர்ச்சியுற்றது :—

1. எவான்ஜெலிகல் இயக்கம்[5].—வெஸ்லி பிரசாரத்தின் விளைவு (§ 211). வெஸ்லி இறந்தபிறகு அவர் எதிர்பார்த்தபடியே அவரது வேலையின்பயனாக இங்லண்ட் மதஸ்தாபனத்தினரின் மத வாழ்க்கை புத்துயிர் பெற்றது. (அவரும் அதைச் சார்ந்த ஒரு குருவே.)

பொதுப் பண்புகள்.—பாவத்தையும் அதன் நிவாரணத்தையும் அவரவரே உணர்தல்வேண்டும் ; பைபில் நூலே எதற்கும் ஆதாரம் ; தொழுகையை எளிய முறையில் நடத்துதல் ; தூய்மைத் தன்மை ; மக்கள் நலனில் பரிவு.

முக்கிய தலைவர்கள்.—வில்பர்போர்ஸ் (கு. 193) ; ஷாப்ட்ஸ்பரி[6] (§ 282) ; க்ளெனெல்க்[7] (§ 301).

தற்காலத்துக் 'கீழ் மதஸ்தாபனக்' கட்சியின்[8] தொடக்கம்.

2. 'ட்ராக்டேரியன்' இயக்கம்[9].—இந்நூற்றாண்டின் நான்காம் பத்தில்[10] ஆக்ஸ்பர்ட் குருக்கள்மார் பலர் ஆங்கிலிகன் மதஸ்தாபனம்[11] காத்தொலிக் மதஸ்தாபனத்தின் ஒருகிளையே என்றும், அதன் குருக்கள்மாருக்குக் கிறிஸ்து நியமித்து அனுப்பிய ஆதி குருக்கள்மாரின் (இவர்கள் 'அபாசில்ஸ்'[12]

---

1. The Eastern Question. 2. Conspiracy to Murder Bill. 3. The 'Triumvirate Ministry.' 4. Religious Movements. 5. The Evangelical Movement. 6. Shaftesbury. 7. Glenelg. 8. 'Low-Church' Party. 9. The Tractarian Movement. 10. The 'thirties. 11. The Anglican Church. 12. The Apostles.

எனப்பட்டனர்) காலம் முதல் அவர்களது வரன்முறையில்[1] வந்துகொண்டிருந்த தெய்விக சக்தி[2] இருக்கிறது என்றும் விளக்கி வரிசையாகப் பல கட்டுரைகள்[3] எழுதினார்கள். 90-ம் எண்கொண்ட கட்டுரை 'முப்பத்தொன்பது கொள்கைக'ளுக்கும்[4] ரோம மதஸ்தாபனத்தின் கொள்கைகளுக்கும் யாதொரு முரண்பாடுமில்லை யென்பதை விளக்கியது. இதனால் ஒரு கூப்பாடு கிளம்பியதால் அக்கட்டுரையைப் பரப்பாமல் அமுத்திவைத்தனர். எனினும், பல பெரிய மக்கள் ரோமன் காத்தொலிக் மதஸ்தாபனத்துக்கு மாறினர்.

**பொதுப் பண்புகள்.**—குருக்கள்மார் குழுவின்[5] தெய்விகத் தன்மையையும் கோயில் சடங்குகளின்[6] முக்கியத்துவத்தையும் வற்புறுத்தல்.

**முக்கிய தலைவர்கள்.**—ஜான் கெபில்[7]; எட்வர்ட் புசி[8]; ஜா. ஹெ. நியுமன்[9] (90-ம் எண்ணுள்ள கட்டுரையை எழுதியவர்); ஆர்ச்டீகன் மான்னிங். இவர்களனைவரும் ஆங்லிகன் மதஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களே: ஆயினும், கடைசியில் குறிப்பிட்ட இருவர் ரோமன் காத்தொலிக் மதஸ்தாபனத்தில் சேர்ந்துகொண்டு அதில் பிற்காலத்தில் கார்டினல்[10] பதவி பெற்றார்கள்.

**தற்காலத்து 'மேல் மதஸ்தாபன'க் கட்சியின்[11] தொடக்கம்.**

3. கிறிஸ்துவ சமூகநலன் இயக்கம்[12].—கிறிஸ்துவ கொள்கைகளை நித்திய வாழ்க்கையில் கையாளவேண்டும்—சிறப்பாகக் கல்வி, வீடமைப்பு, ஆரோக்கியம் முதலிய துறைகளில் ஏழைகளின் வாழ்க்கையைச் சீர்படுத்தவேண்டும்—என்று வற்புறுத்தியது.

**பொதுப் பண்புகள்.**—மேற்கூறியவாறு. ('உடலை வளர்க்கும் கிறிஸ்துவ மதம்'[13]).

**முக்கிய தலைவர்கள்.**—ரெவ. எப். டி. மாரிஸ்[14] (சிறப்பாகப் பெண்மக்கள் கல்விக்காக உழைத்தவர்); ரெவ. சார்லஸ் கிங்ஸ்லி[15]; டாமஸ் ஹ்யூஸ்[16].

**தற்காலத்து 'அகன்ற மதஸ்தாபன'க் கட்சியின்[17] தொடக்கம்.**

---

1. The Apostolic Succession. 2. Mystic Powers. 3. Tracts. 4. The Thirty-nine Articles. 5. The Holy Orders. 6. The Sacraments of the Church. 7. John Keble (*The Christian Year*-ன் ஆசிரியர்). 8. Edward Pusey. 9. J. H. Newman. 10. Cardinal. 11. 'High Church' Party. 12. The Christian Socialist Movement. 13. Muscular Christianity. 14. Rev. F. D. Maurice. 15. Rev. Charles Kingsley (*Alton Locke, Westward Ho!* முதலியவற்றின் ஆசிரியர்.) 16. Thomas Hughes (*Tom Brown's Schooldays*-ன் ஆசிரியர்). 17. Broad Church Party.

## கு. 217. பெரிய விஞ்ஞான வளர்ச்சிக் காலம்[1]

உலகத்தைப்பற்றிய அறிவும் அதன் சக்திகளின்மீது மக்கள்பெற்ற ஆதிக்கமும் இந்தக் காலத்தில் வளர்ந்ததைப் போல் இதற்குமுன் எப்போதும் வளரவில்லை. இந்த அறிவு வளர்ச்சியைப் பயன்படுத்தி ஆக்கத்தொழில்களை விருத்திசெய்து அக்காலத்தினர் பொருள் பெருக்கினர்.

தரை நூல்[2].—லயெல் என்பவர் தாம் எழுதிய 'தரைநூல் தத்துவங்கள்'[3] என்னும் நூலில் (1830–3) உலகம் தோன்றிச் சில ஆயிரம் ஆண்டுகளே ஆயின என்னும் பழைய கொள்கையை உண்மைக்கு மாறுதலானது என்று நிரூபித்து அதன் தொன்மையை விளக்கினர்.

உயிர் நூல்[4].—டார்வின் எழுதிய உயிரினங்களின் முதல் தோற்றம்[5] என்னும் நூலில் (1859) தற்போது காணப்படும் உயிரினங்களின் முதல் தோற்றத்தை விளக்கினர்.

ஒளி[6].—புகைப்படம் பிடித்தல்[7] தோன்றி வளர்ந்தது.

சூடு[8].—தற்காலத்திய இயந்திரக் கலையின்[9] அடிப்படையான சக்தியைச் சேமித்தல் விதியை[10] ஜவுல்[11] என்பவர் விளக்கினர்.

மின்சக்தி[12].—பாரடே[13] என்பவரின் ஆராய்ச்சிகள் தந்தியடித்தலுக்கு வழி காட்டின (1837). தந்திகள் முதலில் புதிய இருப்புப்பாதைகளில் உபயோகப்பட்டன. 1866-ல் அட்லாண்டிக் பெருங்கடலைக் கடக்கும் முதல் தந்திக்கம்பி[14] போடப்பட்டது.

உலோகங்களின் தன்மைகளில் ஆராய்ச்சி[15].—எஃகு செய்யும் பெசெமெர் முறையால்[16] (1855) நல்ல ரகத்து எஃகினை மற்ற நாடுகளைவிட நயமாகச் செய்யப் பிரிட்டனுக்கு அனுகூல மேற்பட்டது.

மருத்துவம்[17].—பாஸ்டர்[18] (1855) உயிரணுக்களால்[19] நோய்கள் தோன்றி மறையும் விதத்தை விளக்கினர். இதை ஆதாரமாகக்

---

1. The Great Age of Scientific Progress 2. Geology. 3. Lyell's *Principle of Geology*. 4. Biology. 5. Darwin's *Origin of Species*. 6. Light. 7. Photography. 8. Heat. 9. Modern Mechanical Engineering. 10. Law of the *Conservation of Energy*. 11. Joule. 12. Electricity. 13. Faraday. 14. The first Atlantic cable. 15. Metallurgy. 16. The Bessemer Process. 17. Medicine. 18. Pasteur. 19. Bacteria.

கொண்டு லிஸ்டர்[1] அழுகலில்லாத ரண சிகிச்சையைக்[2] கண்டு பிடித்துக் கையாண்டார். சர் ஜான் சிம்ப்சன்[3] இந்நூற்றுண்டின் நடுப்பாகத்தில் நோயுணர்ச்சியற்ற ரண சிகிச்சையைக்[4] கண்டு பிடித்துக் கையாண்டார்.

## கு. 218. இருப்புப்பாதைகளின் பெருக்கம்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் நான்காம் பத்திலும ஐந்தாம் பத்திலும்[5] இருபபுப்பாதைகள் பெருகின.

1830.—லிவர்ப்பூல் மான்செஸ்டர் இருப்புப்பாதை திறக்கப பட்டது.

1838.—லண்டனுக்கும் பர்மிங்காமுக்கும் (இது பிறகு 'லண்டன் வடமேற்கு இருப்புப்பாதை' [L. N. W. R.] என வழங்கலாயது.)

1838.—பெரிய மேற்கு இருப்புப்பாதை.[6]

1840.—லண்டனுக்கும் சௌதாம்டனுக்கும் (இது பிறகு 'லண்டன் தென்மேற்கு இருப்புப்பாதை' (L. S. W. R.) என வழங்கலாயது.)

1841.—தென்கிழக்கு இருப்புப்பாதை.[7]

'லேசேபேர்'[8] கொள்கைப்படி தனி நபர்களின் முயற்சிகள் கட்டுப்படுத்தப்படக் கூடாதாகையால் இவ் விருப்புப்பாதைகள் தனித்தனியாக ஏற்பட்டு வளர்ந்தன. ஆகவே, அவைகளிடையே மிகுந்த போட்டியும் முதல் நஷ்டமும் தோன்றின. எனினும், முடிவில் துரைத்தனம் தலையிட்டு இவ்விஷயங்களை ஒழுங்குபடுத்தியது.

1840.—இருப்புப்பாதைகளை ஒழுங்குபடுத்தும் சட்டம்[9] இருப்புப்பாதைகளையும் அவற்றில் ஓடும் வண்டிகளையும் பார்வையிடவும், போக்குவரத்தைப்பற்றியும் அபாய நிகழ்ச்சிகளைப்பற்றியும் விவரங்களை வெளியிடவும் வாணிப இலாக்காவுக்கு[10] அதிகாரமளித்தது.

1844.—இவ்வாண்டில் இயற்றப்பட்ட சட்டம் கட்டண விகிதங்களை மாறறியமைக்கவும் லாபங்களை வரையறுக்கவும் வாணிப இலாக்காவுக்கு அதிகாரமளித்ததோடு, ஒவ்வோர் இருப்புப்

---

1. Lister. 2. Antiseptic Surgery. 3. Sir James Simpson. 4. Anaesthetics. 5. The 'thirties and 'forties. 6. Great Western. 7. South Eastern. 8. *Laissez faire.* 9. Regulation of Railways Act. 10. Board of Trade.

பாதையிலும் ஒவ்வோர் தங்குமிடத்துக்கும்[1] குறைந்தது ஒரு வண்டித்தொடரேனும் நாள்தோறும் மைலுக்கு ஒரு பென்னி கட்டணத்துக்கு மணிக்குக் குறைந்தது 12 மைல் வேகத்தில் செல்லவேண்டுமென்றும் திட்டம் செய்தது. 'இவை பார்லமெண்ட் வண்டித்தொடர்கள்'[2] எனப்பட்டன.

**கு. 219. பார்லமெண்ட் சீர்திருத்தத்தின் வளர்ச்சி (1815-1867).**

**காத்தோலிக்கர் விடுதலை[3] (1829).**—இதனால் காத்தோலிக்கர் பார்லமெண்ட் அங்கத்தினர்கள் ஆக உரிமை பெற்றனர்.

**முதல் பெரிய சீர்திருத்தச் சட்டம் (1832).**—(1) 'சட்டைப்பை'ப் பட்டணங்கள், 'சொத்தை'ப் பட்டணங்கள்[4] ஆகியவற்றின் 143 இடங்கள் அதுவரை பிரதிநிதித்துவம் பெறாதிருந்த பெரிய பட்டணங்களுக்கும் கௌன்டிகளுக்கும்[5] கொடுக்கப்பட்டன. (2) ஓட்டுரிமைக்குப் பலதரப்பட்ட வாய்ப்புக்களை[6] ஒழித்து ஒரே வகையானதை ஏற்படுத்தியது: அதாவது, பட்டணங்களில் 10 பவுன் (அல்லது அதற்குமேல்) குடிக்கூலி கொடுப்பவர்களும், கௌன்டிகளில் 40 ஷில்லிங் வரிப் பெறுமானமுள்ள மானியங்களை அனுபவிப்பவர்களும் ஓர் ஆண்டில் 50 பவுன் (அல்லது அதற்குமேல்) குடிக்கூலி தருபவர்களுக்கும் ஓட்டுரிமை வழங்கப்பட்டது.

இதன் விளைவு: நடுத்தர வகுப்புக்களில் மேல் அடுக்குகளிலுள்ளவர்கள் ஓட்டுரிமை பெற்றனர். இதனால் நிலம் படைத்தவர்கள் மட்டுமே அரசியல் அதிகாரம் செலுத்துவதென்னும் பழைய நிலை மாறியது. 5,00,000 பேர் புதிதாக ஓட்டர்களாயினர். இதனால் ஓட்டர்களின் மொத்த தொகை 10,00,000 ஆயிற்று.

**யூதர்கள்[7] பார்லமெண்ட் அங்கத்தினர்கள் ஆக உரிமை பெற்றனர் (1858).**

**பார்லமெண்ட் அங்கத்தினர்க்குச் சொத்திருக்கவேண்டுமென்னும் நியதி நீக்கப்பட்டது (1858).**—அதுவரை ஓரளவு நிலம் படைத்தவர்களே பார்லமெண்ட் அங்கத்தினராக முடியும்.

**இரண்டாம் பெரிய சீர்திருத்தச் சட்டம் (1867).**—பட்டணங்களில் ஏழைகள்வரி[8] கொடுத்த எல்லா வீட்டுக்காரர்

1. Station. 2. 'Parliamentary Trains.' 3. Catholic Emancipation. 4. 'Pocket' and 'Rotten' Boroughs. 5. Counties. 6. Qualifications. 7. Jews. 8. Poor rates.

களும், 10 பவன் அல்லது அதற்குமேல் வாடகை[1] கொடுத்த எல்லாக் குடிக்கூலிக்காரர்களும், கௌன்டிகளில் 10 பவுன் மதிப்புகளுக்குமேல்[2] வரிகொடுத்த எல்லோரும் ஓட்டுரிமை பெற்றனர்.

இதன் விளைவு: தனித்திறன் வாய்ந்த வேலைப்பாடுகள் கற்றவர்களும்[3], கடைக்காரர்களும்[4], சிறிய பண்ணைக்காரர்களும்[5] ஓட்டுரிமை பெற்றனர். 10,00,000 பேர் புதிதாக ஓட்டர்களாயினர். இதனல் ஓட்டர்களின் மொத்த தொகை 23,00,000 ஆயிற்று.

---

1. Rent. 2. Assessment. 3. Artisans. 4. Shop-keepers.
5. Small farmers.

# ஒன்பதாம் பகுதியில் பரிக்ஷை வினாக்கள்

## (1815-1867)

1. இங்லண்டில் 1815 முதல் 1820 வரை சமூக நிலையில் அதிருப்தி[1] தோன்றியதன் காரணங்கள் என்ன?

2. வாடர்லூ வெற்றிக்கப்பால் விக் கட்சியினர் பதவி ஏற்க நேர்ந்த வரையில் துரைத்தனம் பிற்போக்கானதா[2] யிருந்ததென நீங்கள் கருதுகிறீர்களா?

3. நான்காம் ஜியார்ஜ் மன்னர் காலத்தில் என்ன சீர்திருத்தங்கள் நிறைவேறின?

4. வெளிநாட்டு விவகாரங்களில் காசில்ரேயின் செயற்போக்கையும்[3] கானிங்கின் செயற்போக்கையும் ஒப்பிட்டு விவரியுங்கள்.

5. i. கிரேக்கர் சுதந்தரப்போரிலும்[4], ii. பெல்ஜம் தனிநிலை முயற்சியிலும்[5] கிரேட் பிரிட்டன் செய்ததென்ன?

6. ஆக்கத்தொழிற் புரட்சியால்[6] சட்டமியற்றல் 1815 முதல் 1834 வரை எவ்வளவு பாதிக்கப்பட்டது?

7. காத்தொலிக்கர் விடுதலை[7] எவ்வாறு நிறைவேறியது? அதற்குமுன்னிருந்த அரசியல் நிலை எக்காரணங்களால் ஏற்பட்டது?

8. 1832-ம் ஆண்டின் சீர்திருத்த மசோதாவினை[8] ஆதரித்தவர்கள் சம்மாளிக்கவேண்டியிருந்த கஷ்டங்கள் எவை?

9. பார்லமென்ட் சீர்திருத்த இயக்கத்தின் வளர்ச்சியை முதல் சீர்திருத்தச் சட்டம் அமுலுக்கு வரும்வரை விவரியுங்கள்.

10. பார்லமென்டின் பிரதிநிதித்துவ ஏற்பாட்டிலிருந்த என்ன குறைகளை நீக்கச் சீர்திருத்த மசோதா தயாரிக்கப்பட்டது? எவ்வகைகளில் அது ஒரு முடிவான திட்டமாகவில்லை?

11. இங்லண்ட் சரித்திரத்தில் 1832-ம் ஆண்டு சீர்திருத்தச்சட்டம் ஏன் அவ்வளவு முக்கியமானதாகக் கருதப்படுகின்றது?

12. பார்லமென்ட் சீர்திருத்தத்துக்கு i. விக் கட்சியினரும், ii. அடிப்படைச் சீர்திருத்த வாதிகளும்[9] எடுத்துக்காட்டிய நியாயங்கள் எவை?

---

1. Social Discontent. 2. Reactionary. 3. Policy. 4. The Greek War of Independence. 5. The struggle for Belgian independence. 6. The Industrial Revolution. 7. Catholic Emancipation. 8. Reform Bill. 9. The Radicals.

13. 1832-ம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தால் நாடு பொதுவில் அடைந்த நன்மைகள் எவை?

14. முதல் சீர்திருத்த பார்லமென்ட்[1] சாதித்தவைகளைச் சுருக்கிக் கூறுங்கள்.

15. பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்க ஆண்டுகளில் ஏழைகள் சட்டச் சீர்திருத்தம் ஏன் அவசரமாகத் தேவையா யிருந்தது?

16. i. கூட்டுறவு இயக்கம்[2], ii. 1834-ல் ஏழைகள் சட்டச் சீர்திருத்தம்—இவைகளைப்பற்றி விவரித்து எழுதுங்கள்.

17. தொழிற்கூடச் சட்டங்கள்[3] ஏன் அவ்வளவு அவசியமாயிருந்தன? அவை புகுத்திய சீர்திருத்தங்கள் எவை?

18. உரிமைகள் பத்திர இயக்கத்தின் நோக்கங்களையும் வரலாற்றினையும் சுருக்கிக் கூறுங்கள்.

19. உரிமைகள் பத்திர இயக்கத்துக்குச் சமூக நிலை சம்பந்தமான அதிருப்தி காரணமாகுமா? உங்கள் விடைக்கு நியாயங்கள் கூறுங்கள்.

20. உரிமைகள் பத்திர இயக்கத்தின் திட்டங்கள் எவ்வளவிற்குப் பிற்காலத்தில் சட்டமாக்கப்பட்டன?

21. பாமர்ஸ்டன் பிரபுவின் நோக்கங்களையும் முறைகளையும் ஆராய்ந்து உங்கள் அபிப்பிராயத்தைக் கூறுங்கள்.

22. பாமர்ஸ்டன் பிரபு வெளிநாடுகளில் கொடுங்கோன்மையை அடக்க எவ்வெப்போது தலையிட்டார்? எப்பயனுடன்?

23. 'பாமர்ஸ்டன் பிரபு வெளிநாட்டு விஷயங்களில் தாராளப்போக்கினராகவும்[4] உள்நாட்டு விஷயங்களில் நிதானப்போக்கினராகவும்[5] இருந்தார்' என்பதை உதாரணங்களுடன் விளக்குங்கள்.

24. பத்தொன்பதாம் நூற்றுண்டில் மதவிஷயங்களில் புத்துணர்ச்சி தோன்றியதன் காரணத்தை விளக்கி அதன் வரலாற்றை ஆக்ஸ்பர்ட் இயக்கம்[6] தோன்றிய வரைக்கும் விவரித்துக் கூறுங்கள்.

25. 1832 முதல் 1852 வரை கிளம்பிய மத இயக்கங்களை விளக்குங்கள்.

26. பத்தொன்பதாம் நூற்றுண்டின் நடுவில் கிரேட் பிரிட்டனில் வாணிபப் பாதுகாப்பு[7] கவிழ்ந்துவிட்டதன் வரலாற்றையும் காரணத்தையும் சுருக்கமாக விளக்குங்கள்.

---

1. First Reformed Parliament. 2. The Co-operative Movement. 3. Factory Acts. 4. Liberal abroad. 5. Conservative at home. 6. The Oxford Movement. 7. Protection.

27. பீல் ஒரு பெரிய அரசியல் நிபுணர்[1] எனக் கருதுவதேன் ?
28. பீல் அமைச்சின் வரலாற்றைச் சுருக்கி யெழுதுங்கள்.
29. பீல் i. தமது கட்சிக்கும், ii. நாட்டுக்கும் செய்த தொண்டுகளைச்[2] சீர் தூக்கிக் கூறுங்கள்.[3]
30. சர் ராபர்ட் பீலின் நோக்கங்களையும் அவரது செயற்போக்கின்[4] விளைவுகளையும் விவரித்துக் கூறுங்கள்.
31. 1846 வரை பிரிட்டனில் கட்டுப்பாடற்ற வாணிப இயக்கம்[5] எவ்வளவுக்கு விருத்தியடைந்திருந்தது ?
32. 'தானியச் சட்டங்கள்'[6] என்பவை எவை? அவைகளை நீக்குவதற்காக நடந்த கிளர்ச்சியை விவரித்து, அதன் நன்மை தீமைகளைப்பற்றி எதிர்பார்த்தவை எவ்வளவுக்கு உண்மையாயின என்பதையும் விளக்குங்கள்.
33. 1851-ல் ஹைட் பார்க்கில் ஏற்பாடான பொருட்காட்சியை[7] விவரியுங்கள். அதை ஏற்பாடுசெய்தவர்கள் அதன்மூலம் என்ன பாடங்களைக் கற்பிக்க எண்ணினர்கள் ?
34. டராம் அறிக்கையின்[8] வரலாற்றைக் கூறுங்கள்.
35. பென்டின்க்கும் டல்ஹௌஸியும் இந்தியாவில் செய்த வேலையின் சிறப்பினைச் சீர் தூக்கிக் கூறுங்கள்.
36. கானடா வரலாற்றில் (1837-67) முக்கியமான நிகழ்ச்சிகள் எவை?
37. பிரிட்டன் க்ரைமியாபோரைத் தொடங்கி நடத்தியதன் காரணமென்ன ?
38. க்ரைமியா போரின் ராணுவ நிகழ்ச்சிகளை விவரித்து எழுதுங்கள்.
39. க்ரைமியா போரால் பிரிட்டிஷ் அரசியல் விவகாரங்கள் எவ்விதம் பாதிக்கப்பட்டன ?
40. இந்திய சிப்பாய்கள் கலகத்தின் காரணங்களையும் முக்கிய நிகழ்ச்சிகளையும் ஆராய்ந்து கூறுங்கள்.
41. சிப்பாய்கள் கலகம் தோன்றியதன் காரணங்களையும் அது தோல்வியுற்றதன் காரணங்களையும் கூறுங்கள்.
42. சிப்பாய்கள் கலகத்தால் வெளிப்படையாக முன்னுக்குக் கொண்டு வரப்பட்ட பிரச்னைகள்[9] பிற்பாடு எவ்வாறு தீர்ந்தன ?

---

1. Statesman. 2. Services. 3. Estimate. 4. Policy. 5. Free Trade Movement. 6. Corn Laws. 7. Hyde Park Exhibition. 8. The Durham Report. 9. Problems.

43. பிரிட்டனின் உள்நாட்டு விவகாரங்களிலும் வெளிநாட்டு விவகாரங்களிலும் அரசியாரது கணவரின் செல்வாக்கு எவ்விதம் உணரப்பட்டது?

44. i. அயர்லாண்டில் உருளைக்கிழங்குப் பஞ்சம், ii. டராம் பிரபுவின் அறிக்கை, iii. 'ட்ரென்ட்' கப்பல் பிடிபடல்—இவை எவ்வகையில் முக்கியமான நிகழ்ச்சிகளாகக் கருதப்படுகின்றன?

45. இங்லண்ட் சரித்திரத்தில் 1830 முதல் 1859 வரை ப்ரான்ஸ் எவ்வித செல்வாக்கு செலுத்தியது?

46. பாமர்ஸ்டன் பிரபுவின் வெளிநாட்டு விவகாரப்போக்கை[1] விவரித்துக் கூறுங்கள். அதை விளக்கும்போது அவர் அரசியல் வாழ்க்கையின் சில முக்கியமான நிகழ்ச்சிகளையும் குறிப்பிடுங்கள்.

---

1. Foreign policy.

# பத்தாம் பகுதி

## குடியாட்சியும் பேரரசும்

(1867—1914)

# பத்தாம் பகுதி

## குடியாட்சியும் பேரரசும்[1]

## (1867—1914)

இரண்டாவது சீர்திருத்தச் சட்டம் நிறைவேறியது முதல் (1867) பெரிய உலகப்போரின் தொடக்கம் வரையில் (1914) அடங்கிய காலப்பகுதியில் பிரிட்டன் வரலாற்றில் மூன்று சிறப்பியல்புகளைக் காண்கிறோம்: i. குடியாட்சி வளர்தல் (குடிகள் தங்களுக்கான துரைத்தனத்தைத் தாங்களே நடத்துதல்); ii. பேரரசு உணர்ச்சியும் அதில் பெருமையும் வளர்தல்; iii. அயர்லண்டை ஆளுவதில் பல நூற்றாண்டுகளாகக் குவிந்துவந்திருந்த சிக்கல்களைத் தீர்க்க வீண் முயற்சி.

1. Democracy and Empire.

எழுபதாம் அத்தியாயம்

# இரண்டாவது பெரிய சீர்திருத்தக் காலம்[1]

## (1868—1874)

**§ 307.** அயர்லண்ட் சிக்கலை க்ளாட்ஸ்டன்[2] தீர்க்க முயல்தல் :—இரண்டாம் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறியதும் (1867) 'பென்னியன்' கூட்டத்தினரின் 'அட்டூழியங்க'ளால்[3] அயர்லண்ட் விஷயம் பொதுமக்கள் கவனத்தை ஈர்க்கலாயது. உருளைக்கிழங்குப் பஞ்சம் ஏற்பட்டபோது (§ 287) ஆயிரக்கணக்கான ஐரிஷ் குடும்பங்கள் அமெரிகாவுக்குச் சென்று அங்கு குடியேறினர். அவர்களுள் இளம் வயதினராக இருந்தவர்கள் அமெரிகா உள்நாட்டுப் போரில் போர்ப்பயிற்சி பெற்றனர். அப்போர் முடிந்ததும் அவர்கள் அயர்லண்டில் பிரிட்டிஷ் ஆட்சியைக் கவிழ்க்க ஒரு சூழ்ச்சி செய்தனர். அவர்களுள் உளவறிபவர்களும் இருந்ததால் அவர்கள் சூழ்ந்த ஆயுதம் தாங்கிய கலவரம் நடைபெறுமலேயே முறிக்கப்பட்டது. ஆயினும், மான்செஸ்டரிலும் க்ளார்க்கென்வெல்லி[4]லுமிருந்த கைதிகளை விடுவிக்க அவர்கள் செய்த பலாத்காரமான முயற்சிகள் இங்லிஷ் மக்களை இத்தகைய நிகழ்ச்சிகளுக்குக் காரணமான குறைகளை உடனே ஒழிக்க வேண்டிய அவசியத்தை உணரச் செய்தன.

அதுமுதல் க்ளாட்ஸ்டன் அயர்லண்ட் விஷயத்தை ஊன்றிக் கவனிக்கலானார். அவர் ஆயுள் முடியும் வரை அது அவரது முக்கிய வேலையாக இருந்தது. இச்சிக்கல்

---

1. The Second Great Era of Reform. 2. Gladstone. 3. The 'Fenian outrages.' 4. Manchester, Clerkenwell.

கள் பெரும்பான்மையும் மத சம்பந்தமாகவும் நில சம்பந்த மாகவுமே இருந்தன என்பதை அவர் நன்குணர்ந்தார். (1) அயர்லண்ட் மதஸ்தாபனம் இங்லண்ட் மதஸ்தாபனத் தைப் போலவே பிஷப்புகளின் ஆதிக்கத்தின்கீழுள்ள ஒரு எதிர்ப்புமதஸ்தாபனம்[1]. அது பலவகையான உரிமைகளை யும் ஏராளமான செல்வத்தையும் அநுபவித்துக்கொண் டிருந்தபோதிலும், நாட்டுமக்களின் பத்திலொரு கூறின ரின் மதத்தேவைகளைமட்டுமே கவனித்துக்கொண்டு வந் தது. ஏனெனில், அவர்களுள் ஐந்தில் நான்கு கூறினர் ரோமன் காத்தொலிக்கர்கள்; எஞ்சிய ஐந்திலொரு கூறின ருள் பாதிபேர் ப்ரெஸ்பிடீரியர்கள்[2]. ஐரிஷ் மக்களின் வெறுப்பைத் தூண்டிய இங்லிஷ் ஆளும்வகுப்பினரது ஆதிக்கத்தின் சின்னமாக அது அமைந்திருந்தது. (2) அயர் லண்டின் ஏழை மக்கள் நிலமின்றி வாழமுடியாது. பயிர்த் தொழிலுக்குப் பதிலாக அவர்களை ஆதரிக்கக்கூடிய பட்ட ணத்து ஆக்கத்தொழில்கள் அங்கு இல்லை. ஆகவே, அங்கு நிலங்களுக்கு அதிக தேவை இருந்ததால், நிலம் படைத்தவர்கள் தங்களுக்கு இஷ்டமானபடி வாடகை கேட்டனர். குடியானவர்களும் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக்கொண்டு அளவுக்கு மிஞ்சிய வாடகைத் தொகைகளைக் கொடுக்க முன் வந்தனர். அப்படியும் அவர்களுக்குப் பாதுகாப்பு ஒன்றுமில்லை. நிலம் படைத் தவர்கள், போதிய முன்னெச்சரிக்கையின்றியும், நிலத்தின் வளத்தைப் பெருக்கச் செய்த செலவுகளுக்கு யாதொரு ஈடுத்தொகை கொடாமலும் அவர்களை ஓட்டிவிடலாம்.

க்ளாட்ஸ்டன் இங்லண்ட் மதஸ்தாபனத்தின் பக்தி மிக்க அங்கத்தினராக இருந்தாரேனும், அயர்லண்ட் மத ஸ்தாபனம் அநுபவித்துக்கொண்டிருந்த உரிமைகள் நியாயமற்றவை என்பதை உணர்ந்தார். ஆகவே, அவர்

1. A Protestant Episcopal Church. 2. Presbyterians.

காமன்ஸ் சபையில் அயர்லண்ட் மதஸ்தாபனத்தின் ஆதிக்கத்தை அகற்றத் தீர்மானங்கள் கொண்டுவந்தார். அவற்றின் பலனாக அதுவும் மற்ற தொழுகைக் கூட்டங்களோடு சமமாகப் பாவிக்கப்பட்டது. அப்போதிருந்த நிதானப் போக்கினர் துரைத்தனம் அத்தீர்மானங்களை எதிர்த்த போதிலும் காமன்ஸ் சபையார் அவற்றை ஏற்றுக்கொண்டனர். இதனால் டிஸ்ரேலி அந்தப் பார்லமெண்டைக் கலைத்துவிட்டார். தமது சீர்திருத்தச் சட்டத்தினால் சமீபத்தில் ஓட்டுரிமை பெற்ற(§ 306) தொழிலாளர் வகுப்பினர் தமக்கு நன்றிசெலுத்தும் வகையில் தம்மையே பதவிக்கு மீண்டும் அனுப்பிவைப்பார்கள் என்று அவர் எதிர்பார்த்தார். ஆனால், புதிதாக ஓட்டுரிமை பெற்றவர்கள், அச் சீர்திருத்தச் சட்டம் முக்கியமாக க்ளாட்ஸ்டனின் முயற்சியால்தான் உருவாயிற்றென்பதை உணர்ந்திருந்தார்களாகையால், அவர் ஐரிஷ் மக்களின் குறைகளை நீக்கக் கொண்டுவரவிருந்த சீர்திருத்தங்களை ஆதரிக்கவேண்டுமென்று அவர்கள் உறுதிகொண்டனர். ஆகவே, புதிய பொதுத் தேர்தலில் தாராளப் போக்கினர்களுக்கு அதிக இடங்கள் கிடைத்தன. புதிய காமன்ஸ் சபையில் தோல்வியடைவதன்முன் தம் பதவியை ராஜிநாமா செய்துவிடுவதுமேலென டிஸ்ரேலி அவ்விதமே செய்துவிட்டார்.

க்ளாட்ஸ்டன் உடனே செய்யவேண்டியிருந்தது அயர்லண்டைத் தணிப்பதே. அயர்லண்ட் மதஸ்தாபனத்தின் ஆதிக்கத்தை அகற்ற[1] அவர் ஒரு மசோதா தயாரித்தார் (1869). அதோடு அதன் நிதிகளைக் குறைக்கவும்[2] மற்றொரு மசோதா தயாரித்தார். இதன்படி, அதன் குருமார்களுக்கு நியாயமான ஊதியம் கிடைக்குமாறு ஏற்பாடு செய்து எஞ்சி நின்ற நிதிகளை அயர்லண்ட் மக்களின் ஏழ்மையைத் தவிர்க்க உபயோகப்படுத்த வழியேற்பட்டது.

1. Disestablishment of the Irish Church. 2. Disendowment.

பிறகு நிலச்சட்டமொன்றையும்[1] அவர் இயற்றினர் (1870). அதன்படி, ஒப்பந்தப்படி ஏற்பட்ட வாடகையைக் கொடுத்துக்கொண்டு வரும் எந்தக் குடித்தனக்காரனும் அப்புறப்படுத்தப்படலாகாது; குடித்தன ஒப்பந்தம் முடியும்போது நிலத்தின் அபிவிருத்திக்காகக் குடித்தனக்காரன் செய்துள்ள முயற்சிக்கு அவனுக்கு ஈடுப்பணம் கொடுக்கவேண்டும்.

§ 308. 'எஜமானர்களுக்குக் கல்வி புகட்டல்'[2].—ஐரிஷ் மக்களின் அதிருப்தியைத் தணித்தல் அக்காலத்தில் மிக அவசியமான வேலைகளுள் ஒன்றே. பாமர்ஸ்டன் உயிருடன் இருந்தவரையில் உள்நாட்டு விஷயங்களில் அவரது நிதானப்போக்கு (§290) எந்தச் சீர்திருத்த முயற்சிக்கும் இடைஞ்சலாகவே இருந்தது. க்ளாட்ஸ்டனே சீர்திருத்தங்களை இயற்றத் தம் அமைச்சர் குழுவினர்க்குத் தாராளமாக இடங்கொடுத்தார். ஆகவே, அடுத்த சில ஆண்டுகளில் பல முக்கிய சீர்திருத்தங்கள் நிறைவேற்றப் பட்டன. புதுச் சட்டங்கள் இயற்றப்பட்ட விஷயத்தில் அக்காலத்தை அந்நூற்றாண்டின் நான்காம் பத்துக்கு ஒப்பிடலாம் (கு .197). ஆகவே, அதை 'இரண்டாவது பெரிய சீர்திருத்தக் காலம்' என்று கூறுவதுண்டு.

நாட்டு மக்களிடையே கல்வியைப் பரப்புதல் அவற்றுள் மிக முக்கியமான சீர்திருத்த மாகும். தம்மிச்சையாக நிறுவப்பட்ட இரண்டு கல்விச்சங்கங்களுக்கும்[3] (கு. 193) துரைத்தனத்தார் கொடுத்துவந்த பணவுதவி 1833 முதல் சிறிது சிறிதாக உயர்த்தப்பட்டு வந்தது. அப்படியும் பல நிலப்பிரிவுகள் பள்ளிக்கூடங்களே இல்லாதிருந்தன. இரண்டாம் சீர்திருத்தச் சட்டத்தின்படி தொழிலாளர் வகுப்பினர் ஓட்டுரிமை பெற்றுவிட்டதால் இனி நாட்டின் விதியை உருவாக்கும் பொறுப்பினைப் பெற்றுள்ள அவர்

1. Land Act. 2. Educating our Masters. 3. Voluntary Societies.

கள் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருப்பது பேராபத்தேயாகும். ஒரு பெரிய மனிதர் கூறியபடி, அவர்களது 'எஜமானர்க'ளுக்குக் கல்வி புகட்டிவைக்கவேண்டிய காலம் வந்துவிட்டது.

இதற்குப் பரிகாரம் தேடியவர் க்ளாட்ஸ்டன் அமைச்சில் சபைத் தலைவர் பதவி பெற்றிருந்த பார்ஸ்டர்[1] என்பவர். அவர் முதலில் தீர்மானிக்க வேண்டியிருந்தது ஏற்கெனவே தம்மிச்சையாக ஏற்பட்டிருந்த பள்ளிக்கூடங்களுக்குப் பணவுதவியை உயர்த்திக் காலியிடங்களை நிரப்பினுல்மட்டும் போதுமா? அல்லது அப்பள்ளிக்கூடங்களுக்கு அளித்துவரும் உதவியை நிறுத்திப் புதிய திட்டம் ஒன்று வகுப்பதா? என்பதே. முதல் யோசனைப்படி செய்தால் பணச்செலவு குறையும்; ஆனுல், அதில் ஒரு குறைமட்டு மிருந்தது. தம்மிச்சையாகத் தொடங்கப்பெற்ற பள்ளிக்கூடங்களுள் இங்லண்ட் மதஸ்தாபனத்தாரின் பள்ளிக்கூடங்களே எண்ணிக்கையில் பெருகியிருந்தன. இணங்காதவர் கூட்டங்களின்[2] பள்ளிக்கூடங்கள் குறைவே. ஆகவே, இணங்காதவர்கள் தங்களுக்கு நம்பிக்கையில்லாத கொள்கைகளைப் பரப்புவதில் பொதுப் பணத்தை அதிகமாகச் செலவிடுதலை வன்மையாகக் கண்டித்தனர். இந்த இணங்காதவர்களே தாராளப்போக்கினர் கட்சியை முக்கியமாக ஆதரித்தவர்களாகையால் துரைத்தனம் அவர்களுக்குப் பிடிக்காததைச் செய்வதற்கில்லை. ஆகவே, பார்ஸ்டர் பார்லமென்ட் அங்கத்தினருள் பெரும்பான்மையோர் ஆதரவைப் பெறக்கூடிய ஒரு சட்டத்தைத் தயாரித்தார். அவரது கல்விச் சட்டத்தில்[3] (1870) சுயேச்சையாக ஏற்பட்ட கல்விச் சங்கங்கள் புதிய பள்ளிக்கூடங்களைக் கட்ட ஒரு வருஷகாலம் கொடுக்கப்பட்டன. அதன் பிறகு பள்ளிக்கூடங்கள் இல்லாத இடங்களில்

1. W. E. Forster. 2. Nonconformist bodies. 3. Education Act.

துரைத்தனமே பள்ளிக்கூடங்களைக் கட்டி அவைகளை அந்தந்த இடங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட கண்காணிப்புச் சபைகளின்[1] அதிகாரத்தின்கீழ் வைக்கவேண்டும். இந்தப் பொதுமக்கள் ஆரம்ப பள்ளிக்கூடங்கள்[2] துரைத்தனப் பணவுதவி பெறும். அதற்கு மேலும் வேண்டிய பணத்துக்கு ஆங்காங்கே கல்வி வரி[3] விதித்து வசூலித்துக் கொள்ளவேண்டும்.

பிறகு பாட திட்டங்களை வகுத்தல், ஆசிரியர்களின் பயிற்சிக்கு ஏற்பாடு செய்தல், நூற்றுக்கணக்கான புதுப் பள்ளிக்கூடங்களுக்குக் கட்டடங்கள் கட்டல், பள்ளிக்கூடங்கள் தீர்மையாக நடைபெறுகின்றனவா என்று அப்போதைக்கப்போது சென்று பார்வையிடத் தக்க கண்காணிப்பு உத்தியோகஸ்தர்களை நியமித்தல் முதலிய வேலைகள் பாக்கி யிருந்தன. அவற்றையெல்லாம் அதிக ஊக்கத்துடனும் விரைவாகவும் பார்ஸ்டர் செய்து முடித்தார். அவரது இடைவிடா முயற்சியின் பயனாகச் சில ஆண்டுகளுள் நாட்டில் பதினான்கு வயதுக்குட்பட்ட பிள்ளைகளனைவரும் கட்டாயமாக ஆரம்ப கல்வி புகட்டப் பெற்றனர்.

§309. கார்ட்வெல்[4] சேனை நிருவாகத்தில் செய்த சீர்திருத்தம் :—இதற்கிடையே சேனையின் நிருவாகத்தில் அடிப்படையான பல சீர்திருத்தங்கள் நிறைவேற்றப் பட்டன. க்ரைமியா போரும் இந்திய சிப்பாய்கள் கலகமும் பிரிட்டிஷ் சேனையின் நிருவாகம் கர்நாடக நிலையிலிருந்ததென்பதை வெளிப்படுத்தின. இந்த உண்மையை ஆஸ்ட்ரியாவோடும் (1866) ப்ரான்ஸோடும் (1870) தொடுத்த போர்களில் பிரஷ்ஷியர் படை அடைந்த ஆச்சரியகரமான வெற்றி மேலும் வலிவுறுத்தியது. பிரஷ்ஷி

1. Locally elected 'Boards.' 2. Public Elementary Schools. 3. Education Rates. 4. Cardwell.

யர் படைகளுக்கும் பிரிட்டிஷ் படைகளுக்கும் ஒரு முக்கியமான வேறுபாடு இருந்தது. பிரஷ்ஷியாவில் போர் வீரர்கள் இரண்டு மூன்று ஆண்டுகள் பயிற்சிகொடுக்கப் பட்டுப் பிறகு அவர்களது சாதாரண வாழ்க்கையை நடத்த விடுவிக்கப்பட்டனர். ஆகவே, அவர்கள் நாட்டின் செல்வத்தை இருந்த இடத்திலேயே தின்று ஒழிக்காமல் அதை உண்டாக்குவதிலும் ஈடுபட முடிந்தது. குறிப் பிட்ட காலங்களில்மட்டும் அவர்கள் படைப்பயிற்சிக்கு அழைக்கப்பட்டனர். இந்த ஏற்பாட்டால் அவர்கள் சாதாரண வாழ்க்கையிலிருந்துகொண்டே எந்தச் சமயத்தி லும் போர்ச் சேவைக்கும் அருகதையுள்ளவர்களாக இருந் தனர். பிரிட்டிஷ் சேனையிலோ போர்வீரர்கள் இருப தாண்டு சேவைக்குச் சேர்க்கப்பட்டனர். இதனால் அவர்களுள் பலர் போரிட நேரும்போது அதற்கு வேண்டிய வயதும் வன்மையுமில்லாத கிழவர்களாயிருந்த னர். போர்க்காலங்களில் அவசரத்துக்கு அழைத்துக் கொள்ள ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும்[1] படைகளில்லை. சேனையென்பது 'கிழவர்களை அதிக சம்பளத்துக்கு வைத் துக்கொண்டிருக்கு மிடமாக இல்லாமல், உண்மைப் போர் வீரர்களைப் பயிற்றுவித்துக் குவித்துக்கொண்டிருக்கும் சாதனமாக இருக்கவேண்டு'மென்று எல்லோரும் இப் போது கருதலாயினர்.

இந்தச் சீர்திருத்தத்தை ஏற்றுக்கொண்டவர் எட்வர்ட் கார்ட்வேல் என்பவர். அவர் பீலைப் பின்பற்றிய க்ளாட்ஸ் டனின் பழைய தோழர்களுள் ஒருவர். இப்போது அவர் போரமைச்சராக (போர்க் காரியதரிசியாக)[2] இருந்தார். அவரது சீர்திருத்தங்கள் நான்கு வகைப்பட்டன: (1) குறைந்தகாலப் போர்ச்சேவைத் திட்டமொன்றை[3] அவர் அமைத்தார். அதன்படி போர்வீரர்கள் பன்னிரண்டு

1. Reserves. 2. Secretary for War. 3. A short service system.

ஆண்டுகள் சேவைக்குச் சேர்க்கப்பட்டனர். அவற்றுள் முதல் சில ஆண்டுகள் போர்ச் சேவைக்கான படைகளிலும் மற்ற ஆண்டுகள் அவசரத்துக்கு ஒதுக்கப் பட்டுள்ள படைகளிலும் அவர்கள் இருக்கவேண்டும். (2) காலாட்படைகள்[1] அதுவரையில் எண்களால் குறிப் பிடப்பட்டு வந்தன. இனி அவைகளை இரண்டிரண்டாகப் பிணைத்து ஒவ்வொரு ஜோடியையும் அது திரட்டப்படும் நிலப்பிரிவில்[2] நிறுத்தி அதற்கு அந்நிலப்பிரிவின் பெயரை யிட்டு அங்கு அதற்கு ஓர் நிலையான உறைவிடமும்[3] அளிக் கப்பட்டது.* பிரிட்டிஷ் சேனையின் பெரும்பாகம் எப் போதும் அக்கரை நாடுகளில்[4] (சிறப்பாக, இந்தியாவில்) சேவைசெய்துகொண்டிருக்கவேண்டியது அதன் சிறப் பியல்புகளில் ஒன்று. இந்தப் புது ஏற்பாட்டின்படி ஒரு படையின் ஒரு பகுதி வெளிநாடுகளில் சேவைக்குப் போயிருக்க மற்றொரு பகுதி அதன் நிலையான உறை விடத்தில் இருந்தது. இதனால் அது எப்போதும் தொகை யிலும் பயிற்சித் தீர்மையிலும்[5] யாதொரு குறையுமின்றி இருக்க முடிந்தது. (3) சேனை உத்தியோகஸ்தர்கள் தங்கள் பதவிகளைப் பணத்துக்கு வாங்குவதும் விற்பது மான பழைய ஊழலான ஏற்பாடு தொலைந்தது. (4) அது வரையில் பிரிட்டிஷ் சேனை, ஆட்கள் சேர்த்தல் உத்தி யோகஸ்தர்களை நியமித்தல் முதலியவற்றைப் பார்த்துக் கொள்ள ஒருவர், உடுப்பு உக்கிராணம் முதலியவற்றைப் பார்த்துக்கொள்ள ஒருவர் என்றவாறு தனிப்பட்ட அதி

---

* உதாரணமாக, 64-ம் காலாட்படையும் 98-ம் காலாட்படையும்[6] வட ஸ்டாபர்ட்ஷைர் படை[7] என்னும் பெயருடன் ஒன்றாக இணைக்கப்பட்டு லிச்பீல்ட்[8] என்னுமிடத்தில் நிலையான உறைவிடம் பெற்றது.

1. Infantry regiments. 2. Recruiting area. 3. Depot. 4. Overseas. 5. Efficiency. 6. The 64th foot and the 98th foot. 7. The North Staffordshire Regiment. 8. Lichfield.

காரம் பெற்ற மூன்று நான்கு தலைவர்களின்கீழ் நிருவகிக்கப் பட்டு வந்தது. இனிப் போர் அமைச்சரே அனுபவம் நிறைந்த சேனை உத்தியோகஸ்தர்கள் சேர்ந்த ஒரு ராணுவச் சபையின்[1] உதவிகொண்டு மொத்த ராணுவ அமைப்புக்கும் தனித் தலைவராக இருந்து அதை நிருவகிப் பார்.

இச்சீர்திருத்தங்களால் பல நன்மைகள் ஏற்பட்டன. சேனை உத்தியோகஸ்தர்கள் தங்கள் உத்தியோகப்பொறுப் பில் அதிக ஊக்கங்கொள்ள லாயினர். அதுவரையில் 'குடிக்கு ஆசைப்பட்டு வந்துசேரும் உலகக் கழிச்சல்க'ளுக் குப்[2] புகலிடமா யிருந்த பிரிட்டிஷ் சேனை (இது வயோதிக ராயிருந்த வெல்லிங்ட்டன் ட்யூக் ஒரு சமயம் கூறியது) இனித் தன்மதிப்புகொண்ட வாலிபர்களுக்குத் தகுந்த தொழிலை யளிப்பதாயிற்று.

§ 310. எதிர்ப்பு:—எந்த அமைச்சுக்கும் அது செய்த வைகளையொட்டியோ செய்யாதவைகளையொட்டியோ சமூ கத்தின் ஏதாவதொரு பிரிவினரிடமிருந்து அதிருப்தி தோன்றுவது இயற்கையே. (அதன் செயல்களுள் ஒவ் வொன்றும் சில பிரிவினரைத் திருப்திசெய்வதும் இயற் கையே. ஆயினும், இந்தத் திருப்தியைவிட மேற்கூறிய அதிருப்தியே அதிக வன்மைகொண்ட உணர்ச்சியாகும்.) ஆகவே, பதவியேற்றநாள் தொடங்கியே ஒவ்வொரு அமைச்சினுக்கும் பொதுமக்களிடையே ஏதாவதொரு வகையில் ஆதரவு குறையலாகிறது; சில ஆண்டுகள் அது பதவி வகித்தபிறகோ மற்றொரு கட்சிக்கும் சந்தர்ப்ப மளிக்க வேண்டுமென்னும் உணர்ச்சி பொதுமக்களிடையே தோன்றி வன்மையடையலாகிறது. இதனால்தான், 1867-ம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் துரைத்தனங்களுக்குப் பொதுமக்கள் ஆதரவு அவசியம் என்னும் நிலையை

1. Army Council. 2. 'The scum of the earth, enlisted for drink.'

ஏற்படுத்திவிட்டதிலிருந்து, தாராளப் போக்கினரும் நிதானப்போக்கினரும்[1] ஒரு முன்னேற்பாட்டின்படிபோல் அவ்வளவு ஒழுங்காக மாறிமாறிப் பதவிவகித்துக்கொண்டு வந்திருக்கின்றனர்.

பொதுவாகக் கூறினல், ஓரமைச்சு எவ்வளவு அதிகமாக முனைந்து சீர்திருத்தங்களை இயற்றிக்கொண்டு போகிறதோ அவ்வளவு அதிகமாக அது வாக்காளர்களைப் பகைத்துக்கொள்ளுகிறது எனல் பொருந்தும். 1868 முதல் 1874 வரை பதவிவகித்திருந்த க்ளாட்ஸ்டன் அமைச்சு இத்துறையில் மிகவும் சுறுசுறுப்பாக வேலை செய்தது. டிஸ்ரேலி கூறியபடி, 'அவர்கள் எல்லாத் தொழில்களையும் எல்லா அக்குகளையும் முடுக்கிவிட்டனர்.' அயர்லண்ட் மதஸ்தாபனத்தின் ஆதிக்கத்தை அகற்றியது அடுத்தபடியாகத் தமக்கும் அக்கதி நேருமோ என்று இங்லிஷ் மதஸ்தாபனத்தினரைத் திபலடையச் செய்தது. ஐரிஷ் நிலச் சட்டம் நிலம்படைத்தவர்கள் அனைவரையும் 'தங்கள் சொத்துக்களைத் தங்களிஷ்டப்படி செய்யும்' உரிமையை இழக்கவேண்டி வருமோ என்று கவலைப்படச் செய்தது. சேனை உத்தியோகஸ்தர்கள் கார்ட்வெல் இயற்றிய சீர்திருத்தங்கள் சேனையைப் பாழாக்கிவிடுமென்று கூறினர். இணங்காதவர்கள் பார்ஸ்டரின் கல்விச் சட்டம் மதஸ்தாபனத்தின் பள்ளிக்கூடங்களுக்குப் பொதுப் பணத்திலிருந்து உதவி அளித்தது அக்கிரமம் என்றனர். கள்ளுக் கடைகளுக்குச் சமானமான குடிச்சாலைகளின்[2] எண்ணிக்கையைக் குறைத்து அவை திறந்திருக்கவேண்டிய நேரத்தையும் கட்டுப்படுத்திய அனுமதி மசோதா[3] (1872) குடி வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் அதிருப்தியையும் மிதக்குடிச் சீர்திருத்தக்காரர்கள்[4] அதிருப்தியையும்

1. Liberals and Conservatives. 2. Public houses. 3. Licensing Bill. 4. Temperance Reformers.

துரைத்தனத்துக்கு ஒருங்கே சம்பாதித்துத் தந்தது. குடியாபாரிகள் அது மிக அதிகம் என்றனர்; மிதக்குடிச் சீர்திருத்தக்காரர்கள் அது போதாது என்றனர். சிலர் இரகசிய ஓட்டுப்பதிவுச் சட்டம்[1] வாக்காளரின் ஆண்மையையும் சுயேச்சையையும் உறிஞ்சிவிடுமென்றனர். இவ்விதமான குறை கூறலுக்கு அளவே இல்லை.

வெளிநாடுகள் விஷயமாகத் துரைத்தனம் நடந்துகொண்டதும் குற்றங்கூறலுக்கு இடந் தந்தது. அக்காலம் யூரோப்பில் நிகழ்ந்த பெருநிகழ்ச்சி ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்குமிடையே மூண்ட போரே. அதன் விளைவாக மூன்றும் நெப்போலியனின்கீழ் ஏற்பட்ட ப்ரெஞ்சு பேரரசு கவிழ்ந்துவிட்டது. முதலாம் வில்லியத்தின்கீழ் ஒரு ஜெர்மன் பேரரசு தோன்றியது. பிரிட்டன் இந்தப் போரில் கலக்கவில்லை. போரிட்ட நாடுகள் பெல்ஜத்தில் நுழையக் கூடாது என்றுமட்டும் அவர்களிடமிருந்து உறுதி பெற்றுக்கொண்டது. ஆயினும், இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ருஷ்யாவின் சார் மன்னர் கருங்கடலில் தாம் போர்க்கப்பல்களை வைத்துக்கொண்டிருக்கக் கூடாது என்று பாரிஸ் உடன்படிக்கை (§ 295) விதித்த நிபந்தனையை மீறி நடந்தார். ப்ரான்ஸின் துணையின்றிப் பிரிட்டன் தனிமையாக நின்று ருஷ்யாவோடு போரிட முடியாதாகையால் இதற்குப் பிரிட்டன் இணங்கவேண்டியதாயிற்று. ப்ரான்ஸ் போரிடக்கூடிய நிலையிலில்லை.

அடுத்தபடி அலபாமா விஷயம். இது, அமெரிகா உள்நாட்டுப் போரின்போது தென்துரைத்தனத்துக்காகப்[2] பர்க்கன்ஹெட் கப்பல்கட்டுந் துறையில் கட்டப்பட்ட ஒரு போர்க்கப்பல். இது பெடெரல்[3] துரைத்தனத்தின் போர்க்கப்பலொன்றால் மூழ்க்கடிக்கப்படுவதன்முன் பல பெடெரல் துரைத்தனக் கப்பல்களைப் பலி வாங்கியது.

1. The Ballot Act. 2. The Southern Government. 3. Federal.

இந்தக் கப்பலைக் கட்டவிட்டதனால் பிரிட்டன் நாடுக ளிடையே வழங்கும் பொதுச் சட்டத்தை[1] மீறியதாகவும், அதனால் ஏற்பட்ட சேதத்துக்குச் சேதஈடு கட்டித்தரக் கடமைப்பட் டிருப்பதாகவும் அமெரிகா துரைத்தனம் கருதியது. இதனால் இவ்விருநாடுக ளிடையே மனஸ்தாபம் வளர்ந்தது. க்ளாட்ஸ்டன் தமது அமைச்சர் குழுவினை யும் அமெரிகா துரைத்தனத்தையும் இதை நாடுகளின் நடுநிலை மன்றம் ஒன்றின்[2] தீர்ப்புக்கு விட்டுவிட ஒப்புக் கொள்ள வைத்தார். ஸ்விட்செர்லண்ட், ப்ரெஜீல், ஐக்கிய நாடுகள், கிரேட் பிரிட்டன் பிரதிநிதிகள் கொண்ட அம் மன்றம் ஜெனிவாவில் கூடிப் பிரிட்டன் 30,00,000 பவுன் சேதஈடு கட்டித்தரவேண்டுமென்று தீர்ப்பு கொடுத்தது. இது ஒரு பெருந்தொகையே யாயினும், ஒரு போர் மூளு மானால் இதைவிட எத்தனையோ மடங்கு அதிகமாகச் செலவிடவேண்டி இருக்கு மல்லவா? மேலும், போரென் றால் பொருட் செலவு மட்டுமா நேரும்?

இவ் விஷயங்களை யெல்லாம் தனித்தனியாக எடுத்து ஆராய்வோமானால் க்ளாட்ஸ்டன் வேறு எவ்விதமாக விவ காரங்களை முடித்திருக்க முடியுமென்று கூறல் கடினமே. ஆயினும், இவற்றால் உலகத்தில் பிரிட்டனுக்கு மதிப்பு குறைந்தது என்பதை மக்கள் உணராமலிருக்க முடிய வில்லை; பாமர்ஸ்டன் காலத்தில் பிரிட்டனின் கொடி எவ் வளவு உயரமாகப் பறந்துகொண்டிருந்தது என்பதையும் அவர்களால் மறக்க முடியவில்லை.

ஆகவே, க்ளாட்ஸ்டன் அமைச்சுக்குப் பல திசை களிலிருந்தும் எதிர்ப்பு கிளம்பியது. டிஸ்ரேலியின் சாமர்த்தியமிக்க தலைமையின்கீழ் எதிர்ப்புக்கட்சியிலிருந்த நிதானப்போக்கினர் இதை இலேசில் பயன்படுத்திக் கொண்டனர். 1874-ன் தொடக்கத்தில் நடந்த அடுத்த

1. International law. 2. International Arbitration Court.

பொதுத்தேர்தலில் தாராளப்போக்கினர்க்கு ஆதரவு கிடைக்கவில்லை. தமது கட்சியைச் சேர்ந்தவர்களுள் பலர் அப்போதைக் கப்போது எதிர்ப்புக்கட்சியோடு சேர்ந்து தமது திட்டங்கள் பலவற்றிற்கும் பாதகமாக ஓட் கொடுத்தது க்ளாட்ஸ்டனுக்கு அதிருப்தி யளித்தது. ஆகவே, அவர் தம் கட்சித் தலைமையைவிட்டு நீங்கினர்.

---

எழுபத்தொன்ரும் அத்தியாயம்

## டிஸ்ரேலி அமைச்சு

(1874—1880)

§ 311. 'டோரி குடியாட்சி'[1] :—காமன்ஸ் சபையில் டிஸ்ரேலி இருபத்தெட்டாண்டுகள் நிதானப்போக்கினர் கட்சியின் தலைவராக இருந்தார். அவற்றுள் இருபத்தைந்து ஆண்டுகள் அவர் துரைத்தனத்தை எதிர்த்து நின்ருர். டார்பி பிரபு தலைமையமைச்சராக இருந்த போது அவர் மும்முறைச் சிறிது சிறிதுகாலம் அமைச்சர் பதவி யேற்க நேர்ந்தும், அடுத்த தேர்தலில் அவர் பதவி யிழக்கவேண்டியவரானுர். அக்குறுகிய இடைக்காலங்களிலும் தாராளப்போக்கின ரிடையே ஏற்பட்ட பிளவுகளே அவர் கட்சியாருக்கு இடங் தந்தன. எதிர்ப்புக் கட்சியின் தலைவராக டிஸ்ரேலி பெரும் புகழ் படைத்திருந்தார். எந் நிலையிலும் அவர் தளராத திடமும் விடா முயற்சியும் காட்டினுர். பார்லமென்டில் சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு காரியங்களைச் சாதிக்கும் சாமர்த்தியமும் விவாதங்களில் சிறந்த சொல்லாற்றலும் அவரிடம் மிகுதியாக விளங்கின. ஆகவே, முதலில் அவர் யூதர் என்பது

1. Tory Democracy.

காரணமாகவும், அவர் தோற்றமும் போக்கும் வேறுபட்டிருந்தன என்பது காரணமாகவும் அவரிடம் 'இங்லண்ட் கனவான்கள்' கொண்டிருந்த அசட்டையும் அவமதிப்பும் நாளடைவில் மாறிவிட்டன. முக்கியமாக, அவர் தம் கட்சியின் கொள்கைகளை உருவாக்கினார். அவர் வருணித்தபடி நிதானப்போக்கினரின் முக்கிய கொள்கைகளாவன: நாட்டின் பழைய அமைப்புக்களைப் பாதுகாத்தல்; பேரரசை நிலைக்கச் செய்தல்; நாட்டு மக்களின் நிலையை வளமுறச் செய்தல். பேரரசைப்பற்றி அவர் விசேஷ கவனம் செலுத்தினர்: அதுவரையில் தோன்றிய அமைச்சுக்கள் (அவை எக் கட்சியைச் சேர்ந்தவையாயினும்) குடியேற்றங்களைப்பற்றி அதிகமாகக் கவனிக்கவில்லை. மேலும், க்ளாட்ஸ்டனைவிட டிஸ்ரேலி வெளிநாட்டு விவகாரங்களில் சிறிது பகட்டான போக்கையே கொண்டிருந்தார். பிரிட்டனை மரியாதையாக நடத்த வேண்டுமென்பதை வெளிநாட்டு அதிபதிகள் நன்றாக உணரும்படி செய்யவேண்டுமென்னும் பாமர்ஸ்டன் கொள்கையை அவர் பின்பற்றினர்.

§ 312. மீண்டும் கிழக்கு விவகாரம்[1]:—சமூக நிலையைச் சீர்திருத்துவதாக டிஸ்ரேலி கூறிய வாக்குறுதி தொழிலாளர் வகுப்பினரின் ஆரோக்கியத்தையும் பாதுகாப்பினையும் ஒட்டி ஐந்தாறு முக்கியமான சட்டங்களை இயற்றி நிறைவேற்றப்பட்டது (கு. 223). அவை அநேகமாக உள்நாட்டு அமைச்சராக இருந்த ரிச்சர்ட் க்ராஸ்[2] என்பவரின் வேலை. தலைமை யமைச்சர் அவற்றை முழு மனதுடன் ஆதரித்தார். எனினும், புதுச் சட்டங்களின் விவரங்களில் க்ளாட்ஸ்டன் காட்டிய ஆர்வம் டிஸ்ரேலிக்கு இல்லை. வெளிநாடுகள் விவகாரங்களிலும் பேரரசின் விஷயங்களிலும் அவர் காட்டிய கற்பனு சக்தியும் நுண்

1. The Eastern Question. 2. Richard Cross, Home Secretary.

ணறிவுமே அவரது அமைச்சின் சிறப்பியல்புகள். முக்கிய மாக, இந்தியாவின்மீதிருந்த பிடியை விடக்கூடாதென் பதில் அவர் மிகுந்த ஊக்கங் காட்டினர். இந்தியாவுக்குச் செல்லும் குறுக்கு வழியாகிய சூயெஸ் கால்வாயைப் பிரிட்டன் வசத்தில் வைத்துக்கொள்ளும் நோக்கத்துடன் அதில் ஈஜிப்ட் நாட்டின் கெடீவுக்கு[1] இருந்த அக்குகளை யெல்லாம் விலைக்கு வாங்கிவிட்டார் (1876). வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்குப் போய்வரவேண்டுமென்றும் அவர் ஏற்பாடு செய்தார். பிரிட்டிஷ் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பிரிட்டனின் அக்கரை நாடுகளைப் பார்க்கச் சென்றது அதுவே முதல் முறை. பார்லமென்டைப் போன்ற ஒரு சபையின் ஆதிக்கத்தைவிட ஒரு அரசர் அல்லது அரசியாரின் ஆதிக்கத்தை இந்திய மக்கள் புரிந்து கொள்வார்கள் என்னும் கருத்துடன் பிரிட்டிஷ் அரசியா ருக்கு 'இந்தியாவின் பேரரசி'[2] என்னும் பட்டத்தை வழங்க டிஸ்ரேலி ஒரு சட்ட மியற்றிவைத்தார்.

இந்தியாவைப் பற்றிய கவலையாலேயே பால்கன் நாடு கள் விஷயமாக ருஷ்யா கொண்டிருந்த எண்ணங்களை நிறை வேறவிடாமல் தடுக்கவேண்டுமென்று அவர் பாடுபட் டார். இதுவே அவர் அமைச்சின் சிறப்பான வேலை. ருஷ்ய சார்களுக்கு இந்தியாவின்மீது ஒரு கண் இருந் தது என்றும், கிழக்கு நாடுகளில் ருஷ்யாவின் செல் வாக்கு பரவாமலிருக்கத் துருக்கியை நிமிர்த்திவைக்க வேண்டுமென்றும் பாமர்ஸ்டன் நினைத்தது போலவே டிஸ்ரேலியும் நினைத்தார் (§ 293).

க்ரைமியா போரை முடிவுக்குக்கொண்டுவந்த பாரிஸ் உடன்படிக்கைப்படி (§295) துருக்கி சுல்தான் தமது கிறிஸ் தவ குடிகளை ஒழுங்காக நடத்துவதாக அளித்த உறுதி மொழியை நிறைவேற்ற அவர் யாதொரு முயற்சியும் செய்ய

1. The Khedive of Egypt. 2. "Empress of India."

வில்லை. ஆகவே 1876-ல் பால்கன் நாடுகளில் கிளர்ச்சியும் குழப்பமும் கிளம்பின. அவற்றைச் சுல்தானின் படைகள் மிகக் கொடூரமாக ஒடுக்கின. இந்நிகழ்ச்சிகளைப்பற்றிய கதைகளால் யூரோப்பியர்கள் பெரிதும் சீற்றமுற்றனர். ருஷ்யாவும் ஆஸ்ட்ரியாவும் ஜெர்மனியும் இங்லண்டும் ஒன்று சேர்ந்து அவைகளைக் கண்டிக்கவேண்டுமென்று சார் மன்னர் இரண்டாம் அலெக்சாண்டர் கூறினார். அதனால் சுல்தானின் செல்வாக்கு குறைந்துவிடுமென்று நினைத்த டிஸ்ரேலி அக்கண்டனத்தில் சேர மறுத்துவிட்டதனால் அந்நாடுகள் ஒன்று சேர்ந்து எதுவும் செய்வதற்கில்லை. ஆகவே, சார் மன்னர் மட்டும் இதில் தாமே தனியாகத் தலையிடத் தீர்மானித்தார். டிஸ்ரேலி உடனே மால்டாவில் ஒரு சேனையைச் சேகரித்ததோடு, கான்ஸ்டான்டிநோப்பிளின் பாதுகாப்புக்காக ஒரு கப்பல்படையையும் அனுப்பி வைத்தார்.

அரசியல் விவகாரங்களில் கலக்காமல் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த க்ளாட்ஸ்டன் இச்சமயம் முன்னுக்கு வந்து, யூரோப்பில் 'கொடுங்கோன்மைக்குட்பட்டிருந்த நாட்டினரின் சார்பாகவும், துருக்கியர்களை அவர்கள் பாழாக்கிய மாகாணங்களினின்றும் 'மூட்டை முடிச்சுக'ளுடன் ஓட்டிவிட சாரை ஆதரிக்கவேண்டு மென்றும் பிரசாரஞ் செய்யலானார். 'பல்கேரியா அட்டூழியங்க'ளைப்பற்றி அவர் எழுதி வெளியிட்ட கட்டுரையும் அவரது உணர்ச்சிமிக்க சொற்பொழிவுகளும் வடக்கிலும் நடுநாட்டிலும் மக்கள் மனதை மாற்றியபோதிலும், ஆளும் வகுப்பினருள்ளும் லண்டன் நகரத்திலும் க்ரைமியா போரின்போது இருந்தபடியே (§293) இப்போதும் ருஷ்யப் பீதியொன்று தாண்டவமாடிக் கொண்டிருந்தது. இந்தப் பீதியால் தூண்டப்பட்டு இங்லண்ட் தனது பழைய நட்பரசுக்குத் துணையாகப் போரில் இறங்கிவிடும்போல் தோன்றியது. அரசியாரே இவ்விஷய

மாகத் தமது தலைமை அமைச்சரை முதன்மையாகத் தூண்டலானார். டிஸ்ரேலிக்கு பீக்கன்ஸ்பீல்ட் ஏர்ல்[1] என்னும் பட்டமும் சமீபத்தில் அளிக்கப்பட்டது.

§313. ‘கண்ணியத்துடன் சமாதானம்’[2]:—ஆயினும், பீக்கன்ஸ்பீல்ட் ஏர்லுக்குப் போர்தொடுக்கும் நோக்கமில்லை. பிரிட்டனில் தோன்றிய போராவேசம் சாரைப் பயமுறுத்தியது ஓரனுகூலமே. 1854-ல் போல், பிரிட்டனின் உதவி கிடைக்குமென்னும் நம்பிக்கையுடன் துருக்கியர்கள் ருஷ்யர்களை எதிர்த்து நின்றார்கள் (கு. 205). ஆயினும், அவர்கள் கண்டது பன்முறைப் படுதோல்வியே. ருஷ்யப் படைகள் கான்ஸ்டான்டிநோப்பிலை அணுகிவிட்டன. எனினும், பிரிட்டன் போரில் கலந்துவிடுமோ என்னும் அச்சத்துடன் சார் கான்ஸ்டான்டிநோப்பிலைத் தாக்காமல் உடனே துருக்கியுடன் சமாதானம் செய்து கொண்டார். 1878-ல் முடிந்த சான் ஸ்டீபானோ உடன்படிக்கைப்படி[3] சுல்தானின் பால்கன் நாடுகள் சுயேச்சை பெற்ற பல்கேரியா செர்பியா நாடுகளாகவேண்டும்.

இதைத்தான் பீக்கன்ஸ்பீல்ட் தடுக்கவேண்டுமென்றிருந்தார். ஆகவே, அவர் அச்சமயம் தலையிட்டார். பாரிஸ் உடன்படிக்கைப்படி (1856) துருக்கிப் போரின் எல்லைகள் ஏற்கெனவே வரையறுக்கப்பட்டுள்ளன வென்றும், அவைகளை மாற்றுவதென்றால் அவ்வுடன்படிக்கையைச் செய்துகொண்ட வல்லரசுகளின் அமைதி அவசியமென்றும் அவர் கூறினார். பிரிட்டன் தன் நோக்கப்படியே காரியங்களைச் சாதித்துக்கொள்ளும் உறுதியுடன் இருப்பதாக யூரோப்பிய நாடுகளுக்கு விளங்கிவிட்டது. யூரோப்பிய நாடுகளின் பிரதிநிதிகள் பெர்லினில் கூடினர். பிஸ்மார்க் இந்த பெர்லின் காங்கிரஸில்[4] தலைமை

1. Earl of Beaconsfield. 2. ‘Peace with honour’. 3. Treaty of San Stephano. 4. Congress of Berlin.

வகித்தார் (1878). அதில் பல்கேரியாவின் பெரும்பாகம் துருக்கி சுல்தானின் ஆளுகையின்கீழ்ப் பழையபடி இருக்க வேண்டுமென்றும், பாஸ்னியாவைத் துருக்கியின் ஆதிக்கத்தினின்றும் நீக்கிவிடவேண்டுமானால் அதை ஆஸ்ட்ரியாவின் ஆதிக்கத்தின்கீழ் வைக்கவேண்டுமென்றும் பீக்கன்ஸ்பீல்ட் வாதித்தார். ஆஸ்ட்ரியாவின் அதிகாரத்தைப் பெருக்கல் ருஷ்யாவின் அதிகாரத்தைச் சமன் செய்தலாகும் என்பது அவரது எண்ணம். பிரிட்டன் ஈஜிப்டைச் சேர்த்துக்கொள்ளலாம் என்ற யோசனையை அவர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டு, சைப்ரஸைச்[1] சேர்த்துக் கொள்ள ஒப்புக்கொண்டார்.

கண்ணியத்துடன் கூடிய இந்தச் சமாதான ஏற்பாட்டை முடித்துவைத்து பீக்கன்ஸ்பீல்ட் நாடு திரும்பிய போது அவரை நாட்டுமக்கள் மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றனர். அரசியாரும் பெரு மகிழ்ச்சியுடன் அவருக்குக் கார்ட்டர் வீரர் பதவியை[2] அளித்தார்.*

§314. ஊசலின் பிற்போக்கு :—'வீம்புக்குப் பின் வீழ்ச்சி' என்பர். இதுமுதல் நிதானப் போக்கினர் அமைச்சு பல கோளாறுகளில் சிக்கிக்கொண்டது. தானியச் சட்டங்களின் நீக்கத்துக்குப் பிறகு பிரிட்டனில் தோன்றிய வெளிநாட்டுக் கோதுமையின் போட்டியைப் பிரிட்டிஷ் உழவர்கள் அப்போதுதான் உணரலாயினர். பயிர்த்தொழிலுக்கு ஏற்பட்ட இந்த வளவொடுக்கத்தினால்

---

* பெர்லின் காங்ரெஸ் முடிவுகட்டிய ஏற்பாடு அப்போது எதிர் பார்த்தபடி நடைமுறையில் அவ்வளவு பயனளிக்கவில்லை, சில ஆண்டுகளில் 'பெரிய பல்கேரியா'[3] தோன்றிவிட்டது; ஈஜிப்டை பிரிட்டன் சேர்த்துக்கொண்டிருந்தால் பின்னர் ஏற்பட்ட பல தொல்லைகளுக்கு இடமில்லாமல் போயிருக்கும்; பால்கன் நாடுகளில் ஆஸ்ட்ரியாவின் செல்வாக்கை வளரவிட்டதே 'பெரும் போ'ரைத்[4] தூண்டியது.

1. Cyprus. 2. Order of the Garter. 3. 'Big Bulgaria'.
4. The Great War.

வாணிபத்திலும் ஒடுக்கம் தோன்றியது. ஆக்கத்தொழில் களில் ஈடுபட்டிருக்கும் நாடுகளில் சில தருணங்களில் இவ் விதம் நேருவது இயற்கையே. ஆயினும், இக்கஷ்ட காலங் களின்போதெல்லாம் மக்கள் சாதாரணமாகத் துரைத் தனத்தைப் பழிப்பதுண்டு. சில சமயங்களில் இப்பழிக் குக் காரணமே இல்லாமலு மிருக்கும்.

மேலும், பேராசு மனப்பான்மையுடன் பீக்கன்ஸ் பீல்ட் போட்ட திட்டங்கள் பல நல்ல முடிவை யடைய வில்லை. இந்தியாவைக் கைப்பற்ற ருஷ்யாவுக்கு எண்ண மிருக்குமென்னும் நம்பிக்கை அவர் மனதில் வேரூன்றி விட்டதால், அவர் தமது நண்பரான லிட்டன் பிரபுவை[1] இந்தியாவுக்கு இராஜப்பிரதிநிதியாக அனுப்பி அவரை ஆப்கானிஸ்தானத்தில் சாரின் ஆதிக்கம் பரவாதிருக்கு மாறு பார்த்துக்கொள்ளச் சொன்னார். லிட்டன் ஆப்கன் அமீர் ஒரு பிரிட்டிஷ் பிரதிநிதியைத் தம் தலைநகரத்தில் ஏற்றுக்கொள்ளுமாறு செய்தார். அவ்வுத்தியோகஸ்தர் ஆப்கானிஸ்தானத்தின் வெளிநாட்டு விவகாரங்களை பிரிட் டிஷார் கருத்துக்களுக்கு ஏற்ப உருவாக்கவேண்டும். ஆயினும், அவர் காபூலை யடைந்த சில மாதங்களுள் கலகம் விளைத்த ஒரு ஆப்கன் படையால் தமது சிப்பந்திகளுடன் கொலையுண்டார். சர் ப்ரெடெரிக் ராபர்ட்ஸ்[2] ஆப்கானிஸ் தானத்தில் நிகழ்த்திய போரில் காபூலிலிருந்து காண்ட ஹார் வரையில் கட்டாந்தரையான பாகங்களில் துணிச்ச லோடு படைகளைச் செலுத்திக்கொண்டு போய் பிரிட் டிஷ் வீரத்தின் பெயரைக் காப்பாற்றினார். எனினும், ஆப்கனிஸ்தானத்தின் வெளிநாட்டுத் தொடர்புகளை பிரிட் டிஷ் நோக்கங்களுக்கு ஏற்ப இருக்குமாறு செய்துவைத் துக்கொள்ளவேண்டுமானால், அங்கு ஒரு நிலையான பிரிட் டிஷ் பாதுகாவல் படை இருக்கவேண்டியது அவசியம்

1. Lord Lytton. 2. Sir Frederick Roberts.

என்பது வெளிப்படையாயிற்று. அதனால், இந்தியா துரைத்தனத்துக்கு அபரிமிதமான செலவேற்படுவது நிச்சயம். ஆகவே, பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் ஏஷியா கண்டத்து ருஷ்யாவுக்கும் இடையே ஆப்கானிஸ்தானத்தைப் பழையபடி நட்புமிக்க ஒரு இடைத்தடை நாடாக[1] வைத்திருப்பதே சிறந்த வழியாகுமென்பது மீண்டும் வற்புறுத்தப்பட்டது.

சரித்திரப் போக்கும் நிகழ்ச்சிகளும் மக்கள் விருப்பங்களுக்கு மாறாக அப்படியே திரும்பித் திரும்பி நிகழக்கூடியன என்பதற்கு மற்றோர் உதாரணமும் ஏற்பட்டது. 1852-4-ல் சுயேச்சைபெற்ற போயெர்கள்[2] (§ 301) சூலூ மக்களின் எதிர்ப்புக்களினின்றும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள முடியாதவர்களாய்த் தவிக்கலாயினர். சூலூ மக்களோ புகழ்மிக்க தங்கள் தலைவர் சிடெவாயோவின்கீழ்[3] அவர்களை நாளுக்குநாள் மும்முரமாகத் தாக்கலாயினர். டச்சுக்குடியரசுகள் சூலூ படையெழுச்சியால் முடிசாய்ந்துவிடுமானால் பிறகு பிரிட்டிஷ் குடியேற்றங்களை அவர்களது எதிர்ப்புக்களினின்றும் பாதுகாப்பது கடினமாய்விடும். டிஸ்ரேலி பேரரசின் பந்தங்களை இறுக்கிப் பிணைக்கவேண்டுமென்று நெடுநாட்களாகவே கூறிக்கொண்டிருந்தார். ஆகவே, தென் ஆபிரிகா முழுமைக்கும் ஒரு கூட்டரசினை[4] அமைக்க ஒரு ஹை கமிஷனர்[5] அனுப்பப்பட்டார். முதலில், 1877-ல் டச்சுக் குடியரசுகள் பிரிட்டிஷ் பேரரசில் சேர்த்துக்கொள்ளப்பட்டன. இதை வெளியிட்ட அறிக்கையிலேயே போயெர்களுக்குக் கூடிய விரைவில் உள்நாட்டுச் சுயாட்சி அளிக்கப்பெறுமென்னும் வாக்குறுதியும் இருந்தது. ஆயினும், சூலூ படைகளை எதிர்க்கச் சென்ற பிரிட்டிஷ் படை இசாண்டில்வானு[6] என்னுமிடத்தில்

---

1. A friendly buffer-state. 2. The Boers. 3. Cetewayo.
4. Federation. 5. High Commissioner. 6. Isandlwana.

படுதோல்வியுற்றது (1879). விரைவிலேயே உலுண்டி[1] என்னுமிடத்தில் சிடேவாயோ முறியுண்டு பிடிபட்ட போதிலும், மேற்குறிப்பிட்ட தோல்வியால் போயர்கள் கண்ணில் பிரிட்டிஷ் வீரத்தின் புகழ் பெரிதும் மங்கி விட்டது.

இதற்குள்ளாக அரசியல் துறையினின்று விலகி ஓய் வெடுத்துக்கொள்ளவேண்டுமென்று க்ளாட்ஸ்டன் முத லில் கொண்ட தீர்மானம் மாறிவிட்டது. அடுத்த பொதுத் தேர்தல் விரைவிலேயே நடக்க இருந்ததால், 1832 முதல் நிதானப்போக்கினர்க்கு ஒரு இலேசான இடமாக இருந்துவந்த மிட்லோத்தியன்[2] பிரதிநிதியாகவே தாம் தேர்தலுக்கு நிற்கப்போவதாக க்ளாட்ஸ்டன் திடுமென வெளியிட்டார். இது துரைத்தனத்துக்கு அச்சமுண்டாக் கியது இயற்கையே. 1879-ம் ஆண்டின் இலையுதிர் காலம் முழுமையும் அவர் அங்கு சென்றிருந்துகொண்டு துரைத்தனம் துருக்கியர், ஆப்கானியர், போயர் விஷயங் களில் நடந்துகொண்ட மாதிரியை அதிக உணர்ச்சியுடன் சுடச்சுடத் தாக்கிப் பேசலானர். பிரிட்டிஷ் அரசியல் சரித்திரத்தில் அதைப்போன்ற புகழ்பெற்ற தேர்தல் பிர சாரம் வேறொன்றுமில்லை யெனலாம். செய்தித் தாள்கள் மூலம் அவரது சொற்பொழிவுகளைப்பற்றி அறிந்து கொண்ட பிரிட்டிஷ் பொதுமக்களுக்கு ஒரு பெரிய மன மாற்ற மேற்பட்டது. அதன் பலனாக, 1880-ல் நடந்த பொதுத் தேர்தலில் தாராளப்போக்கினர்க்கு 140 அதிக இடங்கள் கிடைத்ததால், அவர்களே பதவியேற்கவேண்டி யவர்களாயினர்.

---

1. Ulundi. 2. Midlothian.

எழுபத்திரண்டாம் அத்தியாயம்

# தாராளப் போக்கினரின் ஒடுக்கமும் வீழ்ச்சியும்

## (1880—1886)

§ 315. தொல்லைகளில் தோய்ந்த அமைச்சு:— க்ளாட்ஸ்டனின் இரண்டாவது அமைச்சுக்கும் (1880—5) அவரது முதல் அமைச்சுக்குப் போலவே (1868—74) பார்லமெண்டில் அதிக ஆதரவு இருந்தது. அதில் முன் போலவே ஆற்றல் மிக்கவர்கள் பலர் சேர்ந்திருந்தனர். ஆயினும், அது தொல்லைகளைத் தாங்கவே பிறந்ததுபோல் தோன்றியது. அது வெற்றிகரமாக இயற்றிய சட்டம் கௌன்டி ஓட்டுரிமைச் சட்டம்[1] ஒன்றே (1884). அது 1867-ம் ஆண்டின் சட்டம் பட்டணங்களில் வாழ்ந்திருந்தவர்களுக்கு அளித்த உரிமைகளை நாட்டுப்புறத்தில் வாழ்ந்திருந்தவர்களுக்கும் அளித்தது (கு. 236). இவ்வமைச்சு பலவீனமாயிருந்ததற்கு ஒரு காரணம் அதன் அங்கத்தினர்க்குள் ஒற்றுமை இன்மையே. அதில் ஹார்ட்டிங்ட்டன் பிரபுவைப்போன்ற[2] பழைய காலத்து விக்குகளும் ஜோசெப் சேம்பெர்லினைப் போன்ற[3] முற்போக்குள்ள அடிப்படைச் சீர்திருத்த வாதிகளும் கலந்திருந்தனர் (கு. 232). அவர்களைச் சேர்த்து வைத்திருந்த பந்தம் க்ளாட்ஸ்டனின் பெரும் புகழே. அவரை மெச்சியவர்கள் அவரைப் "பெருங்கிழவர்"[4] என்றே குறிப்பிட்டனர். ஆயினும், ஆட்களை உணர்ந்துகொண்டு அவர்களைத் தக்கபடி

---

1 County Franchise Bill. 2. Lord Hartington. 3. Joseph Chamberlain. 4. "Grand Old Man."

நடத்துவதில் பீக்கன்ஸ்பீல்டின் சாமர்த்தியம் க்ளாட்ஸ்டனுக்கு இல்லை. அப்போது அவருக்கு வயது எழுபதுக்கு மேலிருக்கும். பரந்த அரசியல் அனுபவமும் அச்சத்தைத் தூண்டும் குணமேம்பாடும் அவர் சகாக்களுக்குமேல் அவரை மிக மிக உயர்ந்த நிலையில் வைத்துவிட்டன. இதனால் அவர்களோடு தாராளமாகப் பழகி அவர்களது கோட்பாடுகளை உணர்ந்துகொண்டு அவரவர் தனித் திறமைகளுக்கு ஏற்ப அவர்களிடமிருந்து வேலைகளை வாங்கி ஜோடித்துக்கொள்ள அவரால் முடியாமல் போய்விட்டது.

இந்தக் குறைபாடுகளோடு இவ்வமைச்சைத் துரதிர்ஷ்டமும் சூழ்ந்துகொண்டது. சென்ற துரைத்தனத்துப் பேராசுப்போக்கின் விளைவான சில கஷ்டங்களை இவ்வமைச்சு சமாளிக்கவேண்டியிருந்தது. உதாரணமாக, தென் ஆபிரிகாவில் கூட்டரசுத் திட்டமொன்று[1] அமைப்பதற்கு அடிப்படையாக ட்ரான்ஸ்வால் குடியரசு பிரிட்டிஷ் பேரரசில் சேர்த்துக்கொள்ளப்பட்டது (§ 314). க்ளாட்ஸ்டன் தமது மிட்லோத்தியன் பிரசாரத்தில் இந்த 'பீக்கன்ஸ்பீல்ட்தன'த்தைக்[2] கண்டித்தபோதிலும் தென் ஆபிரிகாவில் பிரிட்டிஷ் துரைத்தனத்தின் பிரதிநிதிகளாக இருந்தவர்கள் அதற்குப் போயர்கள் சம்மதித்துவிட்டார்கள் என்று கூறியதால் அவர் அதை மாற்ற நினைக்கவில்லை. இது மிகத் தவறான செய்தி என்பது விரைவிலேயே வெளிப்படையாயிற்று. போயர்கள் நேட்டால் எல்லையில் ஒரு படையைத் திரட்டலாயினர். நேட்டால் கவர்னரான ஜெனரல் கோலே[3] ஒரு பாதுகாப்புப் படையைத் திரட்டினர். போயர் குடியரசின் தலைவரான க்ரூகரோடு[4] சமரசப் பேச்சுக்கள் நிகழ்ந்துகொண்டிருந்ததால் சிறிது காலம் போரை நிறுத்திவைப்பதென்று ஏற்பாடாயிற்று.

---

1. A Scheme of Federation. 2. "Beaconsfieldism". 3. General Colley. 4. President Kruger.

அக் காலவரம்பு கடந்ததும் கோலே படையெடுத்துச் சென்று போயர் பாசறைக்கு எதிரிலிருந்த மாஜுபா குன்றைக்[1] கைப்பற்றிக்கொண்டார். அடுத்தநாள் போயர்கள் அக் குன்றிலிருந்து பிரிட்டிஷ் படைகளை விரட்டியோட்டிவிட்டனர். அப்போரில் கோலே மாண்டார். சமரச நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு க்ரூகர் அனுப்பிய பதில் வழியில் வந்துகொண்டிருந்தபோதே இவ்வளவும் நிகழ்ந்துவிட்டது.

இப்போது துரைத்தனம் செய்யக்கூடியதென்ன? குடிகளின் விருப்பத்துக்கு மாறாக ட்ரான்ஸ்வாலைச் சேர்த்துக்கொள்ளுதல் தாராளப்போக்கினர் கொள்கைகளுக்கு முரணானது; ஆயினும், முன்னரே சேர்த்துக்கொள்ளப்பட்ட நாட்டைப் போர்க்களத்தில் தோல்வியுற்ற பிறகு விட்டுவிடுதல் அவமானமிக்க காரியம். அமைச்சர் குழுவின் அங்கத்தினர் சிலர் போயர்களைத் தோற்கடித்துவிட்டுப் பிறகு அவர்களுக்குச் சுயாட்சி அளித்துவிடலாமென்று ஒரு யோசனை கூறினர். ஆயினும், சில டச்சு உழவர்களைவிடப் பிரிட்டிஷ் பேரரசு வன்மைமிக்கதென்பதை ரூபிப்பதற்காக நூற்றுக்கணக்கான உயிர்களைப் பலியிடல் அவ்வளவு பெருமைமிக்க காரியமாக எவருக்கும் தோன்றவில்லை. ஆகவே, க்ளாட்ஸ்டன் ஒரு கிறிஸ்தவ மக்கள் கூட்டத்துக்கு எது மிக்க கண்ணியமானதோ அதுவே அறிவுமிக்க செயலுமாகும் என்று தீர்மானித்தார். அதன்படி போயர்களோடு ஒரு உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. இரு நிபந்தனைகளுக்கு உட்பட்டு அவர்கள் சுயேச்சை பெற்றனர். மற்ற யூரோப்பிய அரசுகளோடு அவர்கள் தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது; தங்கள் நாட்டில் வந்து குடியேறும் எல்லா

1. Majuba Hill.

வெள்ளைக்காரர்களுக்கும் அவர்கள் தம்மோடு சம அரசியல் உரிமைகளை வழங்கவேண்டும்.

இதைவிடக் கண்ணியமாகவும் புத்திசாலித்தனமாகவும் எவரேனும் நடந்துகொள்ள முடியுமா? எனினும், க்ளாட்ஸ்டனின் எதிரிகள் அவரை இதற்காகப் பழித்தனர்; அந்நியரிடையே பிரிட்டனின் பெருமையை அவரால் நிலைநாட்ட முடியாதென்றனர் (§ 310).

§ 316. அயர்லண்டில் தொல்லை:—அயர்லண்ட் விஷயமும் இன்னும் சிக்கலான நிலையிலேயே இருந்தது. 1870-ல் க்ளாட்ஸ்டன் இயற்றிவைத்த நிலச் சட்டம் (§ 307) அந்நாட்டுத் தொல்லைகளுக்குப் போதுமான பரிகாரம் தேடவில்லை. ஆயினும், தங்கள் சொத்துரிமைகளைப் பாதுகாக்கவே கங்கணங் கட்டிக்கொண்டிருந்த பிரபுக்கள் சபையாரின் எதிர்ப்புக்கிடையே அதற்குமேல் அவரால் ஒன்றும் சாதிக்க முடியவில்லை. 1879—80-ல் மற்றோர் உருளைக்கிழங்குப் பஞ்சம் நேர்ந்ததால் நிலைமை மேலும் மோசமாய்விட்டது. குத்தகைப் பணத்தைக் கொடுக்கமுடியாத ஆயிரக்கணக்கான குடும்பங்கள் தங்கள் பண்ணைகளிலிருந்து விரட்டியடிக்கப்பட்டதால் உணவும் உறைவிடமுமின்றி அவர்களுள் பலர் அல்லற்பட்டனர். பட்டினி தாங்கமாட்டாமல் பலர் கொலையிலும் களவிலும் ஈடுபட்டனர். முப்பது பேருக்கு ஒரு படைவீரனோ போலீஸ்காரனோ இருந்தபோதிலும் அவர்களாலும் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்ட முடியவில்லை. பழைய பெனியன் கூட்டத்தைச் சேர்ந்த மைக்கேல் டேவிட்[1] என்பவர் ஒரு நிலச்சங்கம்[2] நிறுவினார். குடியானவர்கள் அதில் சேர்ந்து நிலத்துக்காக ஒருவர்மீதொருவர் போட்டியிட்டுக் குத்தகைத் தொகையை ஏற்றுவதில்லையென்றும், கடின மனதுடைய நிலச்சொந்தக்காரர்களுக்

1. Michael Davitt. 2. Land League.

குக் குத்தகைப்பணமே கொடுப்பதில்லையென்றும் ஒப்புந் தஞ் செய்துகொண்டனர். சங்கத்தின் அதிருப்திக்கு ஆளானவர்கள் தள்ளிவைக்கப்பட்டனர் ('பாய்காட்' செய்துவைக்கப்பட்டனர்[1]). அவர்களோடு எவரும் எத் தகைய தொடர்பும் வைத்துக்கொள்ளக்கூடாது.

அயர்லண்டின் இன்னல்களைப் பார்லமெண்ட் கவனிக்குமாறு செய்ய அயர்லண்ட் அங்கத்தினர்கள் ஒரு விசித்திர முறையைக் கையாண்டார்கள். அவர்கள் சுமார் அறுபது பேர். சார்ல்ஸ் ஸ்டேவர்ட் பார்னேல்[2] என்பவர் தலைமையில் 'நாட்டினர் கட்சி'[3] என்று பெயர் வைத்துக் கொண்டு அவர்கள் ஒரு கட்டுப்பாடாகப் பார்லமெண்டில் அயர்லண்ட் விஷயந் தவிர வேறெந்த விஷயமும் கவனிக்கமுடியாதபடி செய்துகொண்டுவந்தனர். அவர்கள் கையாண்ட முறை ஒரு முன்னேற்பாட்டின்படி இடைவிடாமல் ஒருவர் மாறி ஒருவர் அயர்லண்ட் விஷயங்களைப் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்திக்கொண்டிருப்பதே யாம்.

1870-ல் இயற்றப்பட்ட கல்விச் சட்டத்தினை உருவாக்கிய பார்ஸ்டர்[4] இப்போது அயர்லண்ட் தலைமைக் காரியதரிசியாக இருந்தார். அவர் ஒரு முற்போக்கான அடிப்படைச் சீர்திருத்தவாதியாக இருந்தபோதிலும், அயர்லண்டுக்கு எது செய்வதற்கும் முன் அங்கு நிகழ்ந்து கொண்டிருந்த ஒழுங்கீனங்களை அடக்கவேண்டுமென்று கருதினார். ஆகவே, அவர் 1881-ல் 'அடக்குமுறைச் சட்டம்'[5] ஒன்று இயற்றி மக்களை விசாரணையின்றிச் சிறையிலிட அமைதித் தலைவர்களுக்கு[6] அதிகாரம் அளிக்கவேண்டுமென்றார். அயர்லண்ட் அங்கத்தினர்கள் அதை ஆவேசத்துடன் தாக்கினார்கள். திங்கட்கிழமை நான்கு மணிக்குத்

1. Boycotted. 2. Charles Stuart Parnell. 3. 'Nationalist Party.'
4. W. E. Forster. 5. Coercion Bill. 6. Magistrates.

தொடங்கப்பெற்ற விவாதம் அவர்களது தடைமுறைக ளால் அடுத்த புதன்கிழமை ஒன்பது மணிவரை வளர்ந் தது. முடிவில் அது சட்டமாயிற்று. இதற்காக க்ளாட்ஸ்டன் பார்லமென்டின் விவாத நடைமுறையில் ஒரு மாறுதலைப் புகுத்தவேண்டியதாயிற்று. அதன்படி அநாவசியமாக நீளும் விவாதங்களை முடித்துவிட[1] அவைத் தலைவர்க்கு[2] அதிகார மளிக்கப்பட்டது.

இதற்கிடையே முதல் நிலச் சட்டத்தின் குறை பாடுகளைக் களையத் தலைமை அமைச்சர் இரண்டாம் நிலச் சட்டமொன்றைத் தயாரித்துக்கொண்டிருந்தார் (1881). அதைப் போன்ற நீண்ட சட்டம் அதுவரை பார்லமென் டில் நிறைவேறியதில்லை. அது குடியானவர்களுக்கு மூன்று உரிமைகளை* அளிக்க முயன்றது: தனிப்பட்ட நடுநிலை மன்றங்களால் நியாயமான குத்தகைத் தொகை கள் தீர்மானமாக வேண்டும்; குத்தகைப் பணத்தை ஒழுங் காகக் கொடுத்துக்கொண்டுவரும் வரையில் எந்தக் குடித்தனக்காரனையும் நிலத்தைவிட்டு ஓட்டக்கூடாது; தன் குத்தகை உரிமைகளை எவனும் தடையின்றி விற்க லாம். ஆயினும், பார்னெலுக்கு இது திருப்தி யளிக்காத தால் அவர் கட்டளையின்மேல் ஐரிஷ் குடியானவர்கள் இந்தச் சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட்ட நில வழக்கு மன்றங்களின்[3] உதவியை நாட மறுத்துவிட்டனர். இதனால் அதிருப்தியடைந்த க்ளாட்ஸ்டன் அடக்குமுறைச் சட்டத் தின்கீழ்ப் பார்னெலைச் சிறையிலிட பார்ஸ்டருக்கு அனு மதியளித்தார். உடனே நாடெங்கும் குழப்பங்கள் முன்னை விட அதிகமாய்ப் பெருகின. இதனால் பார்னெல் தம் செல் வாக்கினால் பலாத்கார நிகழ்ச்சிகளை அடக்கி வைத்திருந்

---

* இவை "மூன்று 'F' கள்" எனப்பட்டன: 'Fair Rents', 'Fixity of Tenure,' 'Free Sale.'

1. to apply 'the closure.' 2. The Speaker. 3. Land Courts

தார் என்பது வெளிப்படையாயிற்று. க்ளாட்ஸ்டனுக்கு எப்போதுமே அடக்குமுறைகள் பிடிப்பதில்லை. ஆகவே, அயர்லண்டில் அம்முறைகளைக் கையாளத் தம் அமைச்சு முற்பட்டது தவறென்று அவர் கருதலானார். ஆகவே, பார்னெலோடு ஒரு சமரச ஒப்பந்தஞ் செய்துகொள்ள அவர் அனுமதித்தார். அதன்படி, குத்தகைப் பாக்கிகளைக் கொடுக்கமுடியாத நிலையிலிருந்த குடியானவர்களுக்கு ஆதரவளிக்க ஒரு சட்ட மியற்றித்தருவதாகத் துரைத் தனத்தார் ஒப்புக்கொண்டனர்; சட்டத்துக்கு அடங்காத கிளர்ச்சியை நிறுத்துவதாகப் பார்னெல் ஒப்புக்கொண்டார். (இது கில்மெயின்ஹாம் உடன்படிக்கை[1] எனப்பட்டது. அது பார்னெல் சிறையிருந்த இடத்தின் பெயர்). தமது அடக்குமுறைப் போக்கு மாற்றப்பட்டது பார்ஸ்டருக்குப் பிடிக்காததால் அவர் தம் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். பிறகு அப்பதவியை ஏற்ற ப்ரெடெரிக் காவெண்டிஷ் பிரபு[2] பெருந்தன்மையுள்ளவர். அவரை எல்லோரும் விரும்பி மதித்தார்கள். இந்த நிலையில் இரு நாடுகளுக்கும் மாறாத அமைதி ஏற்பட்டுவிட்டதுபோலச் சில காலம் தோன்றியது. ஆயினும், திடீரென ஒரு நாள் பட்டப்பகலில் 'தோல்வியுறாதவர்கள்'[3] என்று தங்களைத் தாங்களே கூறிக்கொண்ட ஒரு காலிகள் கூட்டம் டப்ளின் நகரத்துச் சிங்காரத் தோட்டத்தில் ப்ரெடெரிக் பிரபுவையும் மற்றொரு துரைத்தன உத்தியோகஸ்தரையும் கொலைசெய்துவிட்டனர். பார்னெல் இச்செயலை வெறுத்தார் எனினும், அவர்மீதும் அவர் தோழர்கள் மீதும் சந்தேகம் தோன்றியது. துரைத்தனம் முன்னதை விடக் கடுமையான மற்றோர் அடக்குமுறைச் சட்டத்தை இயற்றவேண்டியதாயிற்று.

1. The Kilmainham Treaty. 2. Lord Frederick Cavendish.
3 'The Invincibles.

§317. ஈஜிப்டில் தொல்லை :—இத்தொல்லைகளோடு ஈஜிப்டிலும் தொல்லைகள் குவிந்தன. பத்தாண்டுகளுக்கு முன்னே அங்கு ஆண்டுகொண்டிருந்த ஒரு ஊதாரிக் கெடீவ் கடனில் மூழ்கிக்கிடந்தார். அவருக்குக் கடன் கொடுத்திருந்தவர்கள் பெரும்பான்மையும் இங்லிஷ்கார ரும் ப்ரெஞ்சுக்காரருமே. சூயெஸ் கால்வாயில் அவருக் கிருந்த அக்குகளை விற்றும் அவர் கடன் சுமை சிறி தளவுதான் குறைந்தது. ஆகவே, அவரது குடிகள்மீது அளவுக்கு மீறிய வரிச்சுமை வந்திறங்கியது. அப்படியும் அவர் கடனைத் திருப்பிக்கொடுக்கும் நிலையிலில்லை. முத லுக்கே மோசம் வந்துவிடுமோ என்று அஞ்சிய அவரது கடன்காரர்கள் தத்தம் துரைத்தனத்தாரை இவ்விஷயத் தில் தலையிடுமாறு தூண்டினர். இதன் பலனாகக் கைரோ வில் ஒரு சர்வதேசச் சபை[1] எற்பட்டது. ஈஜிப்ட் துரைத் தனத்தின் செலவுகளில் கடனுக்கு வட்டிகொடுத்தல் முதல் செலவாக இருக்குமாறு பார்த்துக்கொள்ளுதலே அச்சபையின் வேலை. கெடீவ் இந்தக் கட்டுப்பாட்டை உதறிவிடப் பார்த்தார். அவரைத் தள்ளிவிட்டு மற்றொரு அடக்கமான கெடீவை ப்ரெஞ்சு பிரிட்டிஷ் 'இரட்டை அதிகார'த்தின்கீழ்[2] நியமித்துக்கொண்டனர்.

தேர்தலுக்குமுன் இந்த ஏற்பாடுகளை க்ளாட்ஸ் டன் பலமாகக் கண்டித்துக்கொண்டிருந்தார். ஆயினும், ட்ரான்ஸ்வால் விஷயத்தில்போல் இவ்விஷயத்திலும் முன் துரைத்தனத்தின் செயல்களை மாற்றுதல் எளிதாக இல்லை. அவர்களைவிட அவர் ஒரு படி முன்னேறிச்செல்லவும் வேண்டியவரானார். அரபி பாஷா[3] என்பவர் தலைமையில் ஈஜிப்ட் படைவீரர்கள் ஒரு கலகம் விளைத்தனர். பிறகு அவர்கள் நாட்டின் வரிவருமானத்தைத் தங்கள் கடன்

1. International Commission. 2. 'Dual Control.' 3. Arabi Pasha.

களின் வட்டிக்காகவென உறிஞ்சிக்கொண்டிருந்த அந்நியர் களைத் தாக்க முற்பட்டனர். அலெக்சாண்ட்ரியாவில்




நிகழ்ந்த ஒரு குழப்பத்தின் விளைவாகச் சில யூரோப்பியர் கொலையுண்டனர். ஈஜிப்டில் அராச்சியக் கூட்டத்தினர் குழப்பம் பரவி நீடிக்குமானல் சூயெஸ் கால்வாய் அடை

பட்டுவிடும்; ப்ரான்ஸேனும் ருஷ்யாவேனும் இதில் தலையிடலாம். பிரிட்டனது வியாபார வழிகளின் கழுத்தைப் போன்றிருந்த அப்பாகத்தை மற்ற வல்லரசுகள் கையில் விழுமாறு விட்டுவிடலாமா? ஆகவே, கெடீவின் துரைத்தனம் வன்மை பெற்று நிலைக்கும்வரையில் பிரிட்டன் அதை ஆதரித்துத் தீரவேண்டுமென்று க்ளாட்ஸ்டன் கருதினார். இதில் ப்ரான்ஸ் ஈடுபட மறுத்துவிட்டதால், ஈஜிப்டில் அமைதியை உண்டாக்க ஒரு நிலப்படையையும் கடற்படையையும் பிரிட்டனே அனுப்பிவைக்கவேண்டியதாயிற்று. அக்கடற்படை அலெக்சாண்ட்ரியா கோட்டையைத் தகர்த்தது. சர் கார்னெட் வுல்ஸ்லெ[1] தலைமையில் வந்த நிலப்படை அரபி பாஷாவையும் அவர் தலைமையிலிருந்த கலகக்காரர்களையும் டேல்-எல்-கேபீர்[2] என்னுமிடத்தில் முறியடித்தது (1882). சர் எவெலின் பாரிங்[3] (இவர் பிறகு க்ரோமர் பிரபு[4]வானார்) ஈஜிப்ட் துரைத்தனத்தையும் அதன் பொருள்நிலையையும் சீர்திருத்தி யமைக்கக் கெடீவின் ஆலோசனையாளராக[5] வந்து சேர்ந்தார்.

இதற்கிடையே ஈஜிப்டின் அப்புறமாகாணமாகிய சூடானில்[6] புதிய சிக்கலொன்று வளர்ந்துகொண்டு வந்தது. அதுவரை அது மிக ஒழுங்கீனமாக ஆளப்பட்ட பாகம். கெடீவின் சேவையிலிருந்த பிரிட்டிஷ் படைத்தலைவர்களின்கீழுள்ள காவல்படைகளால்தான் அது அடக்கி வைக்கப்பட்டிருந்தது. 'மாஹ்தி'[7] என்ற பட்டத்துடன் அங்கொரு மதவைராக்கியமிக்க முகம்மதியத் தலைவர் தோன்றி ஒரு பெரிய கலகத்தை விளைத்தார். அக்கலகத்தை அடக்கக் கெடீவிடம் போதிய முஸ்திப்பில்லை. பிரிட்டிஷ் மக்களின் உயிர்களையும் பணத்தையும் கொண்டு அம்மாகாணத்தை மீட்டு மீண்டும் அவாது ஒழுங்கீனமான

1. Sir Garnet Wolseley. 2. Tel-el-Kebir. 3. Sir Evelyn Baring.
4. Lord Cromer. 5. 'Adviser.' 6. Sudan 7. Mahdi

ஆளுகையின்கீழ் வைத்தலில் யாதொரு புண்ணியமுமில்லை. ஆகவே, கெடீவ் தமது சொந்த முயற்சியால் அதை மீட்டுக் கொள்ளும் வன்மையை அடையும் வரையில் அங்குள்ள காவல்படைகளைக் காலிசெய்து வைத்திருப்பதென்று க்ளாட்ஸ்டன் அமைச்சு தீர்மானித்தது; மாஹ்திபின் படைகள் அவர்களைச் சூழ்ந்துகொண்டு ஆபத்து விளைப்பதன் முன்னமேயே அவர்களை மீட்டுக்கொள்ளும் வழியை ஆராய்ந்து அறிவிக்க ஜெனேரல் சார்ல்ஸ் கார்டன்[1] என்பவரை அனுப்பிவைத்தது. அவரை அனுப்பியது ஒரு பெருந் தவறு. கார்டன் முன்னர்க் கெடீவின்கீழ்ச் சூடான் கவர்னராக இருந்தவர். அப்போது அவர் சூடான் மக்களிடையே நாகரிகத்தையும் கிறிஸ்து மதத்தையும் பரப்புவதில் மிக்க ஊக்கங் காட்டினார். ஆகவே, அவருக்கு அம் மக்களை 'நாற்றம் பிடித்த பக்கிரிகள் கூட்டம்' ஒன்றின்[2] அதிகாரத்துக்கு விட்டுவிடுவதென்பது பிடிக்கவில்லை. அவர் ஆற்றலும் அனுபவமும் நிறைந்த போர்வீரர்; கிறிஸ்து மதத்தில் ஆர்வ மிக்கவர். தமக்குப் பிடிக்காததொன்றைச் செய்ய அவர் இணங்குவதில்லை. ஆகவே, அவர் கார்ட்டூமுக்குச்[3] சென்றதும் தமக்கு இடப்பட்ட கட்டளையை நிறைவேற்றாமல், விரைவிலேயே துரைத்தனம் மாஹ்தியைத் தோற்கடிக்கத் தமக்கொரு துணைப் படையினை அனுப்பிவைக்கத் தூண்டப்படுமென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

தமது அமைச்சிலுள்ள சில அங்கத்தினர்க்குச் சூடானை விட்டுவிடுதல் பிடிக்கவில்லை என்பதை க்ளாட்ஸ்டன் உணர்ந்திருந்தாராதலால், நடக்கப்போவதை எதிர்பார்த்தே கார்டன் நியமனத்தையும் அவர்களே சூழ்ந்திருக்க வேண்டுமென்று அவர் கருதினர். இவ்விதம்

1. General Charles Gordon. 2. 'A lot of stinking dervishes.'
3. Khartoum.

தமது கொள்கைகளுக்கு மாறாக நடக்குமாறு கட்டாயப் படுத்தப்படுதலை வெறுத்த க்ளாட்ஸ்டன் கார்டனுக்குத் துணைப்படை அனுப்ப உடனே ஒப்புக்கொள்ளவில்லை; கடைசியில் அவர் ஒப்புக்கொண்டபோது காரியம் மிஞ்சி விட்டது. சில நாட்களுக்குமுன்தான் மாஹ்தியின் படைகள் கார்ட்டூமைச் சூழ்ந்துகொண்டு தாக்கி கார்டனைக் கொன்றுவிட்டன. பிரிட்டிஷ் மக்கள் துக்கமும் சீற்றமும் கொண்டனர். அரசியாரும் க்ளாட்ஸ்டனைப் பழித்தார். அவர் தமது தலைமையமைச்சரைக் 'கொலைபாதகர்' என்று கூறுதலொன்றுதான் பாக்கி. துரைத்தனத்துக்குப் பார்லமென்டிலிருந்த பேராதரவு குலைந்துவிட்டது. (தாராளப் போக்கினர் துரைத்தனத்தைவிட நிதானப்போக்கினர் துரைத்தனமே அயர்லண்டுக்கு அதிகமாகச் செய்யலாம் என்னும் நம்பிக்கையுடன்) பார்னெலும் எதிர்ப்புக்கட்சியை ஆதரிக்கத் தீர்மானித்துவிட்டதால், க்ளாட்ஸ்டனின் இரண்டாம் அமைச்சு தோல்வியுற்றது.

§318. சுயாட்சி[1]:—அயர்லண்டின் குறைகளைத் தீர்க்க க்ளாட்ஸ்டன் ஒரு துணிச்சலான ஏற்பாட்டைச் செய்ய முன் வந்தார். ஓக்கானெல்[2] காலந்தொடங்கி அயர்லண்ட் அங்கத்தினர்கள் இணைப்புச் சட்டம் (§ 250) ரத்தாக வேண்டுமென்று மன்றாடிக்கொண்டிருந்தனர். இதுவரை அதற்கு ஆதரவில்லாதிருந்த போதிலும், இரு கட்சிக்காரர்களுள்ளும் சிலர் அயர்லண்டின் தற்போதைய கேவல நிலையையும் அதன் அங்கத்தினர்கள் காமன்ஸ் சபையில் நடந்துகொள்ளும் விதத்தையும் கவனித்து அவர்கள் கேட்கிறபடியே செய்துவிட்டால் நிலைமை மாறலாமோ என்று யோசிக்கலாயினர்.

க்ளாட்ஸ்டன் 1885-ல் விலகியதும் உடனே பொதுத் தேர்தல் நடத்துவதற்கில்லை. கௌன்டி ஓட்டுரிமைச் சட்

1. Home Rule. 2. O'Connell.

டம்[1] நிறைவேறிய பிறகு (§ 315) புதிய ஓட்டர் ஜாபிதாக்கள் தயாராகவேண்டியிருந்தன. ஆகவே, சால்ஸ்பரி பிரபுவின்[2] தலைமையில் நிதானப்போக்கினர் சிறிதுகாலம் பதவி ஏற்றனர். ஆயினும், தேர்தலின் விளைவாகத் தாராளப் போக்கினர்க்கே மீண்டும் அதிக இடங்கள் கிடைத்ததால் க்ளாட்ஸ்டன் மூன்றும் முறை தலைமையமைச்சரானார். பதவியேற்றுக்கொள்வதன்முன் கானடாவிலும் ஆஸ்ட்ரேலியாவிலும் போல அயர்லண்ட் விஷயங்களையும் அதன் மக்களின் கையிலேயே விட்டுவிடுதல்தான் சரியான வழியென்று அவர் கூறினார். ஆயினும், அக்கொள்கையை அவர் கட்சியைச் சேர்ந்த பெரும் பகுதியினர் ஆதரிக்கவில்லை என்பது அவருக்கு விரைவிலேயே விளங்கிவிட்டது. ஹார்ட்டிங்ட்டன்[3] அவரமைச்சில் பதவியேற்க மறுத்துவிட்டார். சேம்பர்லின்[4] சில வாரங்களுக்குப்பின் ராஜிநாமா செய்துவிட்டார்; க்ளாட்ஸ்டனின் பழைய தோழரும் அவரை நிலையாக ஆதரித்துவந்தவருமான ஜான் பிரைட்டும்[5] அதைக் கண்டிக்கலானார். அவர் வெஸ்ட்மின்ஸ்டரிலும்[6] அயர்லண்டிலும் ஒழுங்கற்ற முறைகளைக் கையாண்டு வருபவர்களைப்போன்ற காத்தொலிக் நாட்டுக்கட்சியினர் பார்லமெண்ட் ஒன்றின் அதிகாரத்தின்கீழ் அல்ஸ்டர் ப்ரெஸ்பிடீரியர்களை[7] ஒப்படைத்தல் அநீதியாகுமென்றார். எனினும், பெருங்கிழவர் தளர்ந்து இறங்கிவிட்டார்: அவர் பின்வாங்கப் போவதில்லை. அவர் கொண்டுவந்த சுயாட்சி மசோதா[8] (1886) நிலப்படை, கடற்படை, சுங்க வரிகள், வெளிநாட்டு விவகாரங்கள் ஆகியவற்றைமட்டும் வெஸ்ட்மின்ஸ்டரில் கூடும் பேரரசுப் பார்லமெண்டின் அதிகாரத்தின்கீழ் நிறுத்திவைப்பதென்றும், அயர்லண்டைப்

1. County Franchise Act. 2. Lord Salisbury. 3. Hartington. 4. Chamberlain. 5. John Bright. 6. Westminster. 7. Ulster Presbyterians. 8. Home Rule Bill.

பொருத்த மற்ற விஷயங்களையெல்லாம் டப்ளினில்கூட இருக்கும் ஒரு தனிச்சபையின் பொறுப்புக்கு விட்டுவிடுவ தென்றும் கூறியது. அம் மசோதா ஓட்டுக்கு விடப்பட்ட போது எண்பது தாராளப்போக்கினர் எதிர்ப்புக்கட்சி யினரோடு சேர்ந்து ஓட்டுகொடுத்ததால் அது தள்ளுபடி யாயிற்று. க்ளாட்ஸ்டன் அப்பார்லமென்டைக் கலைத்து விட்டு 'நாட்டின்முன் முறையிட்டார்'[1]. ஆயினும், நாட்டின ருள் பெரும்பாலோர் அயர்லண்ட் சுயாட்சி பேரரசின் ஒற்றுமையைக் கலைத்துவிடுமென்று கருதினர். புதிய பார்லமென்டில் நிதானப்போக்கினர்க்கு இருநூறு அதிக இடங்கள் கிடைத்தன. ஆகவே, க்ளாட்ஸ்டன் விலகிக் கொண்டார். அவ்வாண்டு முடிவதன்முன் நிதானப்போக் கினர் இரண்டாம் முறையும் பதவியேற்கலாயினர்.

---

## எழுபத்துமூன்றாம் அத்தியாயம்

# புதிய அரசியல் கொள்கைகள்

## (1886—1895)

§ 319. 'உறுதியான ஆளுகை'[2]:—மறுபடியும் சால்ஸ்பரி பிரபு தலைமை அமைச்சரானார். இப்போது அவருக்குப் பார்லமென்டில் அதிக பலம் இருந்தது. வெளி நாட்டு விவகாரங்களை அவரே கவனித்துக்கொண்டார். ஆயினும், அப்போது மிக முக்கியமாகத் தீர்மானமாக வேண்டியிருந்த விஷயம் ஓட்டர்கள் அவ்வளவு தெளிவாக நிராகரித்துவிட்ட சுயாட்சித் திட்டத்துக்குப்பதில் அயர் லண்டில் துரைத்தனம் என்ன ஏற்பாடு செய்யவேண்டு மென்பதே. சால்ஸ்பரி அபிப்பிராயப்படி, அயர்லண்டுக்

1. 'Appealed to the country.' 2. 'Resolute Government'.

குத் தேவையானது 'இருபதாண்டுகள் உறுதியான ஆளுகை'யே. ஒழுங்கீனமும் அமைதிக்குலைவும் கண்டிப்பான முறைகளால் அடக்கப்படவேண்டும். உடனுக்குடனே குடியானவர்களின் அவதிகளும் குறைக்கப்படவேண்டும். இந்த நோக்கத்துடன் காரியங்களை நடத்த அவர் தமது மைத்துனர் பால்பர்[1] என்பவரை அயர்லண்ட் தலைமைக் காரியதரிசியாக நியமித்தார். அதுவரை பால்பர் மிக்க நாசூக்கான சாதுவென்றே பெயரெடுத்திருந்தார். அரசியல் வாழ்க்கையின் அல்லற்பாடுகளை அவர் தாங்கமாட்டார் என்றும் சிலர் கருதினர். ஆயினும், அவரது ஆற்றலும் வன்மையும் விரைவிலேயே எல்லோருக்கும் புலப்பட்டன. 1888-ல் அவர் மிகக் கடினமான குற்றங்கள் சட்டம்[2] ஒன்றை இயற்றிவைத்தார். அதன்படி மெய்விளம்பிகளால் விசாரணை செய்யப்படும்[3] உரிமை காலவரையறையின்றி தள்ளிவைக்கப்பட்டது; அமைதியைக் குலைக்கும் குற்றங்களைத்[4] துரைத்தனத்தார் அங்கங்கே நியமிக்கும் இட அமைதித் தலைவர்களே[5] விசாரிக்கவேண்டும். லிபெரல் கட்சியினரும் நாட்டினர் கட்சியினரும்[6] பால்பரை மிக்க ஆக்திரத்துடன் பழித்தனர். ஆயினும், அவர் ஒரே உறுதிப்பாட்டுடன் தமது காரியங்களைத் தயக்கமின்றி நடத்திக் கொண்டுபோனார். அவர் திட்டங்களால் அயர்லண்டில் அமைதியேற்பட்டதென்பதை மறுப்பதற்கில்லை. இரண்டொரு ஆண்டுகளில் துரைத்தனம் நிலம் வாங்கல் சட்டம்[7] ஒன்றையும் இயற்றிவைத்தது (1890). அதன்படி நிலத்தின் சொந்தக்காரர்கள் விற்பதற்குத் தயாராயிருந்தால் அதைப் பயிரிட்டுக்கொண்டிருக்கும் குடித்தனக்காரர்களே அதை வாங்கிக்கொள்ளத் துரைத்தனக் கஜானாவிலிருந்தே கடன் கொடுக்கப்பட்டது.

---

1. A. J. Balfour. 2 Crimes Act. 3. Trial by jury. 4. Offences against order. 5 Resident Magistrates. 6. Liberals and Nationalists. 7. Land Purchase Act.

இவ்வமைச்சு இங்லண்டுக்காக இயற்றியது கௌன்டி சபைகளை[1] ஏற்படுத்திய சட்டமொன்றே (1888). குடியாட்சி நாட்டில் லக்ஷக்கணக்கான மக்கள் தாம் கொடுக்கும் இடவரிப்பணங்களைச்[2] செலவிடுதலில் யாதொரு அக்கும் அதிகாரமும் இல்லாதிருப்பது ஊனமன்றோ? இதற்காக இடவரிகளைக் கொடுப்போரால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் கொண்ட கௌன்டி சபைகள் ஏற்படுத்தப்பட்டன (கு. 224).

§320. புதிய பேரரசு மனப்பான்மை[3] :—க்ளாட்ஸ்டனின் சுயாட்சித் திட்டத்தை நாட்டினர் ஆதரிக்காததன் காரணங்களுள் முக்கியமானதொன்று அவர்கள் இப்போது பேரரசில் பெருமைகொள்ளத் தொடங்கியிருந்ததேயாம். இந்த விஷயத்தில் இதுவரை கிப்பன் வேக்பீல்ட், டராம் பிரபு[4] முதலிய சிலரே ஊக்கங் காட்டினர் (§298, §302). டிஸ்ரேலி பேரரசைப் பாதுகாக்கவேண்டுமென்று கூறினார் (§311); ஆயினும், அத்துறையில் அவர் செய்ததெல்லாம் தென் ஆபிரிகா குடியேற்றங்களை இணைத்து ஒரு கூட்டாட்சி[5] அமைக்கவேண்டுமென்று ஒரு திட்டம் வகுத்ததேயாம். அதன் விளைவு உற்சாகமூட்டுவதாக இல்லை. விக்டோரியா ஆட்சிக்காலத்தின் முதற் பாதியைச் சேர்ந்த மற்ற அரசியல் பெருமக்களுள், பாமர்ஸ்டன் யூரோப்பிய விவகாரங்களிலும், ஜான் ரஸெல் பார்லமென்ட் சீர்திருத்தத்திலும், க்ளாட்ஸ்டன் பொருளாதார விஷயங்களிலும் அயர்லண்டிலுமே மிக்க ஊக்கங் காட்டினர். ஐம்பது ஆண்டுகளுள் (1760-1810) ப்ரான்ஸும் இங்லண்டும் ஸ்பெயினும் தத்தம் அக்கரைப் பேரரசுகளை[6] இழந்துவிட்டதால் யூரோப்பிய நாடுகளில் குடியேற்றங்களில் ஆர்வமில்லை. மேலும், அதிக மக்கட் கூட்டமோ, அதிக மூலப்

1. County Councils. 2. The rates. 3. Imperialism. 4. Gibbon Wakefield, Lord Durham. 5. Federation. 6. Overseas empires.

பொருள்களைப் பெறவேண்டிய ஆக்கத்தொழில்களோ அங்கு இல்லாததால் குடியேற்றங்களின் தேவை அவர்களுக்கு ஏற்படவில்லை.

ஆயினும், அந் நூற்றாண்டின் எட்டாம் பத்தின் முடிவில் நிலைமை மாறத் தொடங்கியது. அதற்குள் ஆக்கத் தொழிற் புரட்சி பெல்ஜத்திலும் ப்ரான்ஸிலும் ஜெர்மனியிலும் விரைவாகப் பரவலாயது. லிவிங்ஸ்டனும் ஸ்டான்லியும்[1] ஆபிரிகா ஆராய்ச்சி செய்ததன் பயனாகப் புதிய வளர்ச்சிகளுக்குப் பெரும் பரப்பான இடங்கள் காத்துக் கொண்டிருப்பது எல்லோருக்கும் புலப்பட்டது (கு. 230). முதன் முதலில் ஆபிரிகாவால் வளம்பெறலாமென்று உணர்ந்தவர் பெல்ஜம் மன்னர் இரண்டாம் லியொபால்டே.[2] காங்கோ பாகத்து மக்களோடு வியாபாரத் தொடர்பு வைத்துக்கொள்ளச் சில வியாபாரத் தலங்களை ஏற்படுத்த அவர் ஸ்டான்லியை அங்கு அனுப்பினார். இந்த முயற்சியின் பயனாகப் பெறப்பட்ட ரப்பர், பனையெண்ணெய், மரம், தந்தம் முதலியவைகளைக் கண்டு மற்ற யூரோப்பியர்கள் வியப்படைந்தனர். உடனே எல்லோரும் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக்கொண்டு ஆபிரிகாவின் வளமான பாகங்களில் அக்குபெறத் தொடங்கினர். இந்தப் போட்டிகளால் நாடுகளிடையே மனஸ்தாபங்களும் சிக்கல்களும் கிளைத்துப் போரும் நிகழும்போ லிருந்தது. ஆகவே, 1871-ல் ஜெர்மன் பேரரசினை நிறுவிய பெரிய அரசியல் நிபுணரான பிஸ்மார்க்[3] பெர்லினில் யூரோப்பிய நாடுகளின் மகாநாடு[4] ஒன்றைக் கூட்டினர் (1884). அதில் ஒவ்வொரு நாட்டுக்கும் ஆபிரிகாவில் ஒரு 'செல்வாக்கு வட்டம்'[5] வகுக்கப்பட்டது.

இந்த ஏற்பாட்டின்படி அடுத்த பத்தாண்டுகளில்

1. Livingstone and Stanley. 2. Leopold II. 3. Bismarck.
4. Conference at Berlin. 5. 'Sphere of influence.'

ஆபிரிகா கண்டம் முழுமையும் யூரோப்பிய அரசுகளுக் கிடையே பங்கிடப்பட்டது. வட கிழக்குக் கடற்கரை யோரமுள்ள பாகத்தை ஸ்பெயின் பெற்றது; செங்கட லுக்கு அருகிலுள்ள ஒரு பாகத்தை இட்டலி கைப்பற்றிக் கொண்டது; ப்ரான்ஸ் சஹாராவுக்கும் ஆல்ஜியர்ஸுக்கும் உரிமை பாராட்டியது; ஜெர்மனியும் போர்ட்டுகலும் இரு கடற்கரைப் புறங்களிலும் நிலங்கள் பெற்றன; பெல்ஜம் 'காங்கோ சுயேச்சை நாட்'டை[1] நிறுவியது. ஆயினும், பிரிட்டன் பெற்ற பங்குதான் மிகப் பெரியது. பிரிட்டன் பொன் கடற்கரைப்[2] பாகத்திலும், நைஜீரியாவிலும், இப் போது கென்யா[3] எனப்படும் பாகத்திலும் வளமிக்க பிரிவு களைப் பெற்றதோடு, ஆபிரிகாவில் வெள்ளைக்காரர்கள் நிலையாகக் குடியேறி வாழக்கூடிய மீதி பாகத்துக்குத் தான் பாராட்டிய உரிமையையும் உறுதிப்படுத்திக்கொண்டது. இவ்விஷயத்தைப்பற்றி மற்றோர் அத்தியாயத்தில் இன் னும் விவரமாகப் படிப்போம் (§324).

இவ்விதம் பிரிட்டன் ஆபிரிகாவில் பெற்றவைகளை அதன் 'மூன்றும் பேரரசு'[4] என்றும் கூறுவதுண்டு. இவை மற்ற பெரிய பேரரசு மாகாணங்களினின்றும் ஒரு வகை யில் மாறுபட்டுள்ளன. இவைகளைத் துரைத்தனம் ஒரு நிர்ணயமான நோக்கத்துடன் பெற்றது. 1884-ல் 'பேர சுக் கூட்டாட்சிச் சங்கம்'[5] ஒன்று நிறுவப்பட்டது. பிரிட்ட னின் 'பேரரசு ராசி'யைப்பற்றி[6] மக்கள் பேசலாயினர்; 'சூரிய அஸ்தமனம் காணாத' தங்கள் பேரரசில் பெருமை கொள்ளலாயினர்; 'கொடியைப் பின்பற்றி வாணிபம் சென்ற' தென்றனர். 1887-ல் விக்டோரியா அரசி ஆட்சி யின் ஐம்பதாம் ஆண்டு நிறைவினை லண்டனில் மிகக் குதூ கலத்துடன் கொண்டாடினர். அக்கொண்டாட்டத்தின்

1. Congo Free State. 2. Gold Coast. 3. Kenya. 4. 'Third Empire.'
5. Imperial Federation League. 6. Britain's 'Imperial Destiny.'

போது அரசியாரின் எல்லா அக்கரை நாடுகளினின்றும் பிரதிநிதிகள் வந்து சேர்ந்தனர். அவற்றின் பெரும் பரப்பும் பலதரப்பட்ட தன்மையும் அப்போது எல்லோருக்கும் தெளிவாக விளங்கின.

இந்தப் புதிய பேரரசு மனப்பான்மையால் ஊக்கப்பட்டுக் கொள்கைமாறியவர்களுள் மிக முக்கியமானவர் ஜோசெப் சேம்பர்லின்.[1] தாராளப்போக்கினர் (லிபெரல்) கட்சியினின்றும் அயர்லண்ட் சுயாட்சி விஷயமாகப் பிரிந்துவிட்டவர்களுக்கு அவர் தலைவரானார் (§318). இது 'தாராள இணைப்பினர்' (லிபெரல் யூனியனிஸ்ட்)[2] கட்சி என வழங்கப்பட்டது. அவர்கள் நிதானப்போக்கினரோடு சேர்ந்துகொள்ளாமல் தனிக் கட்சியாக இருந்தபோதிலும், பார்லமென்டில் அவர்கள் பொதுவில் சால்ஸ்பரி துரைத்தனத்தை ஆதரித்துக்கொண்டு வந்தார்கள். சேம்பர்லினது செல்வாக்கினால் துரைத்தனம் மேலும் மேலும் 'பேரரசு வளர்ச்சி'யில்[3] ஊக்கங்காட்ட முற்பட்டது.

§ 321. புதிய சமூகநலன் இயக்கம்[4] :—இந்தச் சமயத்தில் கிரேட் பிரிட்டனில் மற்றோர் இயக்கம் தலையெடுக்கலாயது. 1878-80ம் ஆண்டுகளில் காணப்பட்ட வியாபார மந்தத்தின் கொடிய பலன்கள் (§ 314) சிறிது காலத்துள் தொழிலாளர்கள் வகுப்பினரைப் பாதித்தன. இதனால் சமூக நலன் சம்பந்தமான விஷயங்களில் ஊக்கம் பிறக்க, சமூக இன்னல்களுக்குப் பரிகாரந் தேட 'சோஷியலிசம்' எனப்பட்ட ஒரு சமூகநலன் இயக்கம் தோன்றியது. அதன் கொள்கைகள் கார்ல் மார்க்ஸ்[5] என்ற ஒரு ஜெர்மன் யூதர் எழுதிய 'தஸ் காபிட்டல்'[6] என்னும் நூலில் விளக்கப்பட்டிருந்தன. அவர் தமது புரட்சிகரமான அரசியல் கொள்கைகளுக்காகத் தாம் பிறந்த நாட்டி

---

1. Joseph Chamberlain. 2. 'Liberal Unionists.' 3. Imperial Expansion. 4. Socialism. 5. Karl Marx. 6. *Das Capital.*

விருந்து துரத்தப்பட்டு லண்டனில் வாழ்ந்திருந்த சமயம் 1869-ல் அச்சிறந்த நூலை இயற்றினார். அதில் அவர், ஆக்கத்தொழில் முயற்சியில் முதல் வைத்துள்ளவர்களின் ஆதிக்கம் தொழில் முயற்சிக்கு வேண்டிய கருவிகள் தொழிலாளர்களுக்கே பொதுவில் சொந்தமாயிருக்க வேண்டிய ஒரு அமைப்புக்கு எதிர்காலத்தில் கட்டாயம் இடங்கொடுக்க நேரிடும் என்ற கருத்தைச் சரித்திர வாயிலாகப் பல நியாயங்களை எடுத்துக் காட்டித் தெளிவாக்கினார். ஆகவே, அந்நிலையைச் சீக்கிரமே பெற முதலாளிகள்-தொழிலாளர்கள் போராட்டத்துக்குத் தயாராவது நன்னோக்கமுள்ளவர்களின் கடமையாகுமென்றும் அவர் வற்புறுத்தினார். இங்லண்டில் சிலகாலம் அக்கொள்கைகளில் எவரும் ஊக்கங் காட்டவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஒன்பதாம் பத்தின் தொடக்கத்தில்[1] தொழில் கட்டுப்பாடு சங்கங்களின்[2] தலைவர்களுள் இளம் வயதினர் சிலர் அவற்றைப் பின்பற்றலாயினர். அப்போதிருந்த தொழிற் கட்டுப்பாடு சங்கங்களுள் பெரும்பான்மையன திறமைமிக்க தொழிலாளர்கள்[3] சங்கங்களாகவே இருந்தன. அவர்கள் வாரத்துக்கு ஒரு முறை ஒரு ஷில்லிங்கோ அதற்கு மேற்பட்ட தொகையோ சங்கக் கட்டணமாகச் செலுத்திக்கொண்டு வந்தனர். இதைக் கொண்டு அச்சங்கங்கள் அவர்களை நோய்வாய்ப்பட்ட சமயங்களிலும் வேலையில்லாத சமயங்களிலும் பாதுகாக்க ஒப்புக்கொண்டன. திறமையற்ற சாதாரண வேலையாட்களுக்கோ இத்தகைய பாதுகாப்பினைத் தேடிக்கொள்ளப் போதிய வருமானமில்லை.

லண்டன் கப்பல் துறைகளில் வேலை செய்திருந்தவர்கள்[4] ஒரு பெரிய வேலை நிறுத்த ஏற்பாடு[5] செய்தபோது

1. The early eighties. 2. Trade Unions. 3. Highly skilled workers.
4. Dock-workers. 5. Strike.

இவ்விஷயங்களைப்பற்றி எல்லோரும் தீவிரமாகச் சிந்திக்க நேர்ந்தது. இந்த வேலை நிறுத்தத்தை மிக்க திறமையோடு திட்டஞ்செய்தவர்கள் புதிய 'சமூகநலன்' தொழிற் கட்டுப்பாடு சங்கங்களின்[1] தலைவர்களுள் சிலர். அவர்களுள் முக்கிய மானவர்கள் ஜான் பர்ன்ஸ், டாம் மான்[2] என்பவர்கள். கப்பல் துறை வேலையாட்களின் குறைகள் உண்மையான படியால் பொதுமக்கள் அவர்கள் விஷயத்தில் மிக்க அநுதாபங் காட்டினர். முடிவில் அவர்கள் தாங்கள் கேட்டவை யனைத்தையும் அநேகமாகப் பெற்றனர். அவையாவன: ஒரு மணி நேர வேலைக்கு ஆறு பென்னி கூலி கொடுக்க வேண்டும்; ஒரே தொடர்ச்சியாக நான்கு மணி நேரங் களுக்குமேல் வேலையிடக்கூடாது. அவர்கள் பெற்ற வெற்றி புதிய தொழிற் கட்டுப்பாடு சங்க இயக்கத்துக்கு[3] மிக்க உற்சாகம் ஊட்டியது. திறமையற்ற சாதாரண வேலையாட்கள்கூட வாரத்துக்குச் சில பென்னிகள் கட்டண மாகச் செலுத்த ஒப்புக்கொண்டு தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் நிறுவினர். இவை முதலாளிகளோடு தகராறு ஏற்படும் சமயங்களில் தொழிலாளர்களுக்கு ஆதரவாக இருக்கவே ஏற்பட்டபோதிலும், முடிவில் முதல் வைப்பவர் கள் ஆதிக்கம் ஒழிந்து தொழில் முயற்சிக்கான கருவிகள் பொதுவில் தொழிலாளர்களுக்கே சொந்தமாக இருக்கக் கூடிய நிலையை அமைத்துக்கொள்ளும் நோக்கத்தையும் கொண்டிருந்தன. இதுமுதல் தொழிற் கட்டுப்பாடு இயக் கம் சமூகநலன் கொள்கைகளை அதிகமாக மேற்கொள்ள லாயது.

§ 322. க்ளாட்ஸ்டன் மீண்டும் முயல்கிறார்:—க்ளாட் ஸ்டனுக்கு இப்போது எண்பது வயதுக்குமே லாய்விட்ட போதிலும் அயர்லண்டுக்குச் சுயாட்சி வழங்க மற்றொரு

1. Socialist Trade Unions. 2. John Burns, Tom Mann. 3. New Trade Unionism.

முயற்சி செய்ய வேண்டுமென்னும் உறுதிப்பாட்டுடன் இருந்தார். பொதுமக்கள் அபிப்பிராயம் அதற்கு அனுகூலமாகத் திரும்பும்போல் தோன்றியது. சிறைக் கூடங்களில் அரசியல் கைதிகள் நிரம்பிக் கிடந்தனர். அவர்களுள் பார்லமென்ட் அங்கத்தினரும் சிலர் இருந்தனர். இத்தகைய அடக்குமுறைகள் பிரிட்டிஷ் மக்களுக்கு எப்போதும் வெறுப்பை யுண்டாக்கின. மேலும், நாட்டினர் கட்சியைத்[1] தாக்கித் தொடர்ச்சியாகக் கட்டுரைகள் எழுதிக்கொண்டு வந்த டைம்ஸ் பத்திரிகை[2] பீனிக்ஸ் சிங்காரத் தோட்டக் கொலைகளை[3] (§ 316) ஆதரித்துப் பார்னெல்[4] எழுதியதாகப் பாவிக்கப்பட்ட கடிதமொன்றைப் பிரசுரித்திருந்தது. அது ஒரு பொய்க் கடிதமென்பது பிறகு கண்டுபிடிக்கப்பட்டது. இதனால் பார்னெலைப் பற்றி மக்கள் மீண்டும் நல்ல அபிப்பிராயம் கொள்ளலாயினர். ஆகவே, லிபெரல் கட்சியாரும் (தாராளப் போக்கினர்) அவர்களின் ஐரிஷ் தோழர்களும் அடுத்த பொதுத் தேர்தலில் அயர்லண்ட் சுயாட்சிக்கு அதிக ஆதரவு கிடைக்குமென்று எதிர்பார்க்கத் தொடங்கினர். இங்கிலையில் பார்னெல் ஒரு விவாகரத்து வழக்கில் சிக்கிக்கொண்டு பொதுமக்களின் நன்மதிப்பை இழக்கலானார். இனி அவரை நாட்டினர் கட்சியின் தலைவராக வைத்திருக்கலாமா என்பதுபற்றி லிபெரல் கட்சியினருள்ளும் நாட்டினர் கட்சியினருள்ளும் தீவிரமான கருத்துவேறுபாடுகள் கிளைத்தன.

இந்தக் கருத்துவேறுபாடுகள் 'திரும்பிய ஊசலி'ன் போக்கைத் தடுத்தன. 1892-ல் நடந்த பார்லமென்ட் தேர்தலில் தாராளப் போக்கினரும் நிதானப்போக்கினரும் (கன்செர்வெடிவ் கட்சியார்)[5] ஏறக்குறைய சம இடங்

1. The Nationalist party. 2. *The Times*. 3. The Phoenix Park murders. 4. Parnell. 5. Liberals and Conservatives.

களைப் பெற்றனர். இதனல் அயர்லண்டின் நாட்டினர் கட்சியார் இவ்விரு இங்லிஷ் கட்சியினருக்கு மிடையே மிகுந்த முக்கியத்துவம் பெறலாயினர். அவர்களது ஆதரவைக் கொண்டு க்ளாட்ஸ்டன் நிதானப்போக்கினரைத் தோற்கடித்துத் தமது நான்காவது அமைச்சினை நிறுவினர். தலைமை அமைச்சருக்கு அடுத்தபடியாக அதில் செல்வாக்கு நிறைந்திருந்தவர் கருவூலமன்றத் தலைவராகிய (சான்செலர் அப் தி ஏக்ஸ்செக்கர்)[1] சர் வில்லியம் ஹார்க்கோர்ட்[2] என்பவர். அவர் 1894-ல் தயாரித்த துரைத்தன வரவு செலவுத் திட்டம்[3] சாவுத்தீர்வைகளை[4] (ஒருவர் இறந்தபின் அவரது வாரிசுகள் அடையும் சொத்துக்களின்மீது விதிக்கப்படும் வரிகளை) அதிகரித்துப் பிரிட்டிஷ் துரைத்தனத்துப் பொருளாதாரத் திட்டத்தில் ஒரு சிறப்பான ஏற்பாட்டை உறுதிப்படுத்தியது. இதைச் 'செத்தவர்களைக் கொள்ளையிடல்' என்று எல்லோரும் கண்டித்தனர். எனினும், இன்றைக்கும் அதனல் துரைத்தனத்துக்கு நல்ல பொருள் வருவாய் கிடைத்துக்கொண்டிருக்கிறது.

க்ளாட்ஸ்டன் இப்போது தமது இரண்டாவது அயர்லண்ட் சுயாட்சி மசோதாவைக்[5] கொண்டுவந்தார் (1893). அதன்படி அயர்லண்டுக்குத் தனது சொந்த பார்லமென்டில் பிரதிநிதித்துவம் இருப்பதோடு வெஸ்ட்மின்ஸ்டர் பார்லமென்டிலும் பிரதிநிதித்துவம் இருக்கவேண்டுமென்று அவர் திட்டம் வகுத்தார். பேரரசு சம்பந்தமான ஆலோசனைகளிலும் அயர்லண்ட் கலந்துகொள்ளவேண்டுமென்பது அவர் கருத்து. காமன்ஸ் சபையில் அது தப்பித்துக்கொண்ட போதிலும் பிரபுக்கள் சபை அதைப் பத்து அதிக ஓட்டுக்களால் தள்ளிவிட்டது. இந்தத் தோல்வியுடன் 'பெருங் கிழவர்'[6] அரசியல் வாழ்க்கையினின்றும்

1. The Chancellor of the Exchequer. 2. Sir William Harcourt.
3. Budget. 4. Death Duties. 5. Second Home Rule Bill.
6. The 'Grand Old Man.'

விலகிக்கொண்டார். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் இறந்துவிட்டார். அதன் பிறகு தலைமை அமைச்சரானவர் ரோஸ்பெரி பிரபு.[1] ஆயினும், அப்பெருந்தலை மறைந்ததும் அமைச்சர்களிடையே சச்சரவுகள் தோன்றியதால் அவர்கள் இரண்டோராண்டுகளில் பதவி யிழந்தனர்.

---

ஏழுபத்துநான்காம் அத்தியாயம்

## பிரிட்டனும் போயெர்களும்
## (1895—1902)

§ 323. சால்ஸ்பெரி பிரபுவும் வெளிநாட்டு விவகாரங்களும் :—லிபெரல் கட்சியின் வீழ்ச்சிக்குப் பிறகு 1895-ல் சால்ஸ்பெரி பிரபு தமது மூன்றும் அமைச்சினை நிறுவிய போது லிபெரல் யூனியனிஸ்ட்[2] (தாராள இணைப்புக்) கட்சியினர் அவர் தலைமையில் பதவி யேற்றனர். நிதானப் போக்கினர் கட்சியில் இணைப்புக்கொள்கைக்குத் தீவிர ஆதரவிருந்ததால் அதன் பெயரே 'இணைப்புக் கட்சி'[3] என்று மாறியது. ஆகவே, சேம்பர்லின்[4] அவ்வமைச்சில் மிகுந்த செல்வாக்குள்ளவரானார். அவர் பெரிய பதவிகளைப் பெறக்கூடியவராக இருந்தும் குடியேற்றங்கள் காரியதரிசி[5] பதவியே தமக்கு வேண்டுமென்று கேட்டு அதில் அமர்ந்ததைக் கவனிக்கும்போது, பேரரசு மனப்பான்மையே அவரது அரசியல் கருத்துக்களை அப்போது பெரிதும் தூண்டிக்கொண்டிருந்தது என்பது விளங்கும். அதுவரை அப்பதவிக்கு அதிக பெருமை இருந்ததில்லை. சேம்பர்லினின் போற்றல் அதற்கு மிக்க உயர்வினை அளித்தது.

---

1. Lord Rosebery. 2. 'Liberal Unionist.' 3. 'Unionists.'
4. Chamberlain. 5. Colonial Secretary.

சால்ஸ்பரி பிரபு பழைபபடி வெளிநாட்டு விவகாரங்களைக் கவனித்துக்கொண்டார். தென் அமெரிகாவில் பிரிட்டிஷ் கயனாவுக்கும் வெனிஜுலாயெல்லாவுக்கும்[1] இடையே தோன்றிய ஒரு எல்லைத் தகராறு அவரது கவனத்தை உடனே ஈர்த்தது. ஐக்கிய நாடுகள் குடியரசுத் தலைவர் க்ளீவ்லண்ட்[2] இந்தச் சிக்கலைத் தீர்க்க ஒரு ஆராய்வுக்குழுவினை[3] நியமிக்கப்போவதாகவும், பிரிட்டன் தானே இது விஷயமாக எதைச் செய்யப் புகுந்தாலும் அது 'மன்றோ கொள்கை'யைப்[4] (§ 273) புறக்கணிப்பதாகும் என்றும் அறிவித்தனர். இது ஒரு போர் மிரட்டலைப் போன்றிருந்த போதிலும், சால்ஸ்பரி தமது சாந்தத்தினால் அவ்வேற்பாட்டை ஒப்புக்கொண்டு எல்லோர் கோபத்தையும் தணித்துவிட்டார். ஆராய்வுக் குழு பிரிட்டனுக்கு அனுகூலமாகவே தீர்ப்பளித்தது.

சில ஆண்டுகளுள் ப்ரான்ஸுடன் போர் மூளும் போலிருந்தது. சென்ற பதினைந்து ஆண்டுகளில் ஈஜிப்டின் துரைத்தனத்திலும் படைப்பலத்திலும் க்ரோமர் பிரபுவும் கர்னல் கிச்செனரும்[5] இயற்றிய சிறந்த சீர்திருத்தங்களின் பலனாக(§ 317) நெடுங்காலமாக மீட்கமுடியாமலிருந்த சூடான் மாகாணத்தினை இப்போது மீட்க முடிந்தது. கிச்செனர் ஒரு ஒழுங்கான திட்டத்தினை வகுத்துக்கொண்டு தம் வேலையிலிறங்கினர். சூடானை ஈஜிப்டுடன் நிலையாக இணைத்துவைக்க அவர் முதலில் ஒரு இருப்புப் பாதையினைப் போட்டுக்கொண்டே சென்றார். அவர் இருப்புப்பாதையுடன் கார்ட்டூமை நெருங்க மூன்று ஆண்டுகளாயின. அங்கிருந்த மாஹ்தியின் படைகள் பலமாகத் தாக்குண்டன. ஆம்டர்மான்[6] என்னுமிடத்தில் நடந்த ஒரு போரில் அவை முற்றிலும் முறியடிக்கப்பட்டன (1898).

1. Venezuela. 2. President Cleveland. 3. A Commission.
4. 'Monroe Doctrine.' 5. Lord Cromer and Colonel Kitchener.
6. Omdurman.

ஈஜிப்ட் விவகாரங்களைப் பிரிட்டன் கையில் விட்டு விட்டதற்காகப்ப்ரெஞ்சு துரைத்தனத்தார் சில காலமாகவே வருத்தப்பட்டுக்கொண்டிருந்தனர். நைல் ஆற்றங்கரையோரமாகப் பிரிட்டிஷ் படைகள் தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்டிக்கொண்டு சென்றன. ப்ரெஞ்சுக்காரர் தங்கள் ஆதிக்கத்தை சஹாராவிலிருந்து செங்கடல் வரைக்கும் பரப்புவதற்காகப் போட்டுவைத்திருந்த ஒரு திட்டத்தை அது குலைத்துவிடும்போல் தோன்றியதால், அவர்கள் தங்கள் மூன்நிறக் கொடியை[1] மேல்நைலின்மீதுள்ள பஷோடா[2] என்னுமிடத்தில் நாட்ட மேஜர் மார்ஷண்ட்[3] என்பவரை ஒரு படையுடன் அனுப்பி வைத்தனர். கிச்செனெர் மார்ஷண்டை அங்கிருந்து போய்விடக் கேட்டுக்கொண்டார். எந்த ஆற்றின் நீரால் ஈஜிப்ட் மக்களின் வாழ்க்கையே உருவாகவேண்டியிருக்கிறதோ அந்த ஆற்றின் மேல்பாகங்களில் ஓர் அந்நிய அரசாங்கம் அதிகாரம் செலுத்துதலை ஈஜிப்ட் துரைத்தனம் ஒப்புக்கொள்ள முடியாதென்று அவர் எடுத்துக் காட்டினர். அந்நிலையில் சில வாரங்களில் போர் மூண்டுவிடும்போல் தோன்றியது. ஆயினும், ப்ரெஞ்சு துரைத்தனம் தீர்க்காலோசனைசெய்து அங்கிருந்த படைகளைத் திரும்பிவந்துவிடக் கட்டளையிட்டது.

சூடானை ஆள இங்லிஷ் அதிகாரிகளும் ஈஜிப்ட் அதிகாரிகளும் சேர்ந்த ஒரு கூட்டுத்துரைத்தனம்[4] நியமனமாயிற்று. அதில் ஹை கமிஷனர்[5] பதவி வகித்த சர் ப்ரான்ஸிஸ் வின்கேட்டின்[6] கவனிப்பின்கீழ் அந்நாடு மிக்க வளமுற்றது.

§ 324. ரோடீஷியா[7] :—இதற்கிடையே ஆபிரிகாவின் மற்றோர் பாகத்தில் ஒரு சிக்கலான நிலை தோன்றியது. அந்நூற்றாண்டின் ஒன்பது பத்தாம் பத்துக்களில் போராக

1. The Tricolor. 2. Fashoda. 3. Major Marchand. 4. A joint Anglo-Egyptian administration. 5. High Commissioner. 6. Sir Francis Wingate. 7. Rhodesia.

இயக்கத்தின் பெருந்தலைவரா யிருந்தவர் சேசில் ரோட்ஸ்[1] (1853—1902). அவர் சாதாரண மதஸ்தாபன கிராம குரு ஒருவரின் மகன். தமது உடல்நலனுக்காகத் தென் ஆபிரிகாவுக்குச் சென்றவர் அங்கே வைரக் கனிகளில் பெரும்பொருள் சம்பாதித்தார். பிரிட்டிஷ் பேரரசின் பெருக்கம் அவருக்கு ஒரு மதத்தைப்போன் றிருந்தது. வட அமெரிகாவில் பிரிட்டிஷ் மக்களும் ப்ரெஞ்சு மக்களும் ஒன்றுசேர்ந்து ஒரு புதிய கானடா நாட்டை நிறுவியதுபோல், தென் ஆபிரிகாவிலும் பிரிட்டிஷ் மக்களும் போயெர் மக்களும் ஒன்றுசேர்ந்து தென் ஆபிரிகா ஐக்கிய நாடுகளெனக் கூடிய ஒரு புதிய நாட்டை நிறுவ வேண்டுமென்பது அவர் கோரிக்கை. குடியேற்ற நாடுகளைக் குடியேற்ற நாடுகள் இலாக்காவின் மூலம் ஆளுதலில்[2] அவருக்கு ஆர்வமில்லை. தென் ஆபிரிகாவிலும் ஒரு சுயாட்சி பெற்ற பேரரசு மாகாணம்[3] தோன்றி, முடிவில் ஆஸ்ட்ரேலியா, நியு சீலண்ட், கானடா மாகாணங்களோடு ஒரு பிரிட்டிஷ் நாடுகளின் பொதுநல அமைப்பில்[4] ஒன்று சேர்ந்து உலக அமைதியையும் நாகரிக வளர்ச்சியையும் பாதுகாக்கவுழைக்கவேண்டுமென்பது அவர் எண்ணம்.

பெச்சுவானாலண்டைச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று அவர் முனைக் குடியேற்றநாட்டுப் பார்லமென்டில்[5] வற்புறுத்தலானார். (1880 முதல் அவர் அதன் அங்கத்தினராக இருந்தார்.) அவ்விதம் செய்யாவிட்டால் அது ஜெர்மன் மேற்கு ஆபிரிகாவில் சேர்த்துக்கொள்ளப்படலாமென்றும், அதனால் பிரிட்டிஷ் அதிகாரம் வடக்கு நோக்கிப் பாவுதல் தடைபடுமென்றும் அவர் விளக்கினார். ஆயினும், முனைக் குடியேற்றநாட்டுத் துரைத்தனத்துக்கு[6] அவ்வளவு துணிச்சலில்லை. ஆகவே, அந்நாட்டைக் குடியேற்ற நாடு

1. Cecil Rhodes. 2. Colonial Office Administration. 3. A Self-governing Dominion. 4. A British Commonwealth of Nations. 5. The Cape Parliament. 6. The Cape Government.

கள் இலாக்காவின் பாதுகாப்பின்கீழ் கொண்டுவரும் முயற்சியோடு அவர் திருப்தியடையவேண்டியவ ரானார். இந்த அனுபவம், அவர் தம் எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்வதற்கு அரசியல் வாதிகளின் ஆதரவை நாடாமல் தமது தனிப்பட்ட முயற்சியையே ஆதாரவாகக் கொள்ள வேண்டுமென்பதையும், அதற்கு அளவற்ற பணமே தமக்கு வேண்டிய வன்மையை அளிக்கவல்லதென்பதையும் அவருக்குத் தெளிவாக எடுத்துக்காட்டியது. ஆகவே, வைர வியாபார முழுவதையும் தம் கைக்குள் அடக்கிக்கொள்ள முயன்று[1] மூன்று ஆண்டுகளுள் தம் எண்ணத்தை நிறைவேற்றிக்கொண்டார். அப்போது அவரது வருமானம் ஓராண்டில் பத்து லக்ஷம் பவுன்களுக்கு மேலாகவே இருந்தது. அந்நிலையில் அவர் லிம்போபோ ஆற்றுக்கும் பெரிய ஏரிகளுக்கு மிடையிலிருக்கும் வளமான உயரமிக்க நிலங்களை விருத்திசெய்ய ஒரு பெரும் திட்டத்தை வகுத்து அதில் மும்முரமாக ஈடுபடக்கூடிய வன்மையுடனிருந்தார். அதற்காக ஒரு கம்பெனி நிறுவி அதன் மூலம் அந்நிலங்களில் இருப்புப்பாதையும் தந்தி வசதியும் கொண்டுவந்து அதன் கனிப்பொருள்களைத் தோண்டியெடுத்து அங்கு வியாபாரத்தையும் மக்கள் குடியேற்றத்தையும் பரப்ப அவர் எண்ணினார். இதற்கெல்லாம் துரைத்தன அனுமதியும் தனியுரிமையும் அக்கம்பெனிக்குக் கிடைத்தன. 1890-ல் வழிகாட்டிகளாகச் சில இங்கிலீஷ் மக்களும் டச்சு மக்களும் அங்கு குடியேற்றப்பட்டனர். முதலில் மாடாபெலெ[2] பழங்குடிகளோடு சச்சரவுகள் தோன்றின. பிறகு அவர்கள் ஒடுக்கப்பட்டனர். புதிய குடியேற்றம் விரைவிலேயே விருத்தியடைந்தது. 1895-ல் அரசியார் அறிக்கையொன்றால் அதற்கு ரோடீஷியா என்னும் பெயர் வழங்கப்பட்டது. ரோட்ஸின் வாழ்க்கையில்

1. 'Cornering' the diamond market. 2. Matabele.

அதுவே மகோன்னதமான நாள். முனைநாட்டுத் துரைத்தனத்துக்குத் தலைமை அமைச்சர், தனியுரிமை பெற்ற ஒரு பெரிய குடியேற்றக் கம்பெனியின் தலைவர், உலகத்து வைரக்கனித் தொழிலைத் தம்மிஷ்டப்படி ஆட்டிவைக்க வல்லவர்—ஆக அப்போது ரோட்ஸுக்கு அமைந்திருந்த செல்வமும் செல்வாக்கும் உலகத்தில் வேறு எந்தத் தனி மனிதருக்கும் அமைந்ததில்லை. ஆயினும், விரைவிலேயே அவர் எண்ணங்களும் திட்டங்களும் வியர்த்தமாயின.

§ 325. ஜேம்சன் பாய்ச்சல்[1]:—போயர் குடியரசுகள் ரோட்ஸின் கருத்துக்களுக்கு இடைஞ்சலாயிருந்தன. பொதுவாக இருப்புப்பாதைகளையும் தபால் ஏற்பாடுகளையும் அமைத்துக்கொள்வதில்கூட அவை பிரிட்டிஷ் குடியேற்றங்களோடு சேர மறுத்துவிட்டன. 1889-ல் டிரான்ஸ்வாலின் தென்மேற்கு மூலையில் ஜொஹான்ஸ்பர்க்குக்கு[2] அருகில் பொன் இருப்பது தெரிந்ததும் அங்கொரு சிக்கலான நிலைமை ஏற்பட்டது. உலகத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் பொன்னைத் தேடிக்கொண்டு பலர் அங்கு வந்து சேர்ந்தனர். அவர்களுள் பெரும்பான்மையோர் ஒழுங்கீனமாக வாழ்பவர்கள். விரைவிலேயே இக்கூட்டம் பழைய போயர் மக்களின் தொகையைவிட அதிகமாகப் பெருகிவிட்டது. அக்குடியரசுகளின் அப்போதைய அமைப்புப்படி இந்த அந்நியர்கள் (வெளிநாட்டார்,[3] துரைத்தனத்தைக் கைப்பற்றிக்கொள்ள முடியும். இதைத் தடுக்க வெளிநாடுகளில் பிறந்தவர்களுக்கு அங்கு ஓட்டுரிமையில்லை என்று போயர்கள் ஒரு சட்டமியற்றிக்கொண்டார்கள். வரிப்பணத்தில் இருபதில் பத்தொன்பது பங்கு கொடுக்கும் 'வெளிநாட்டார்' அதைச் செலவிடுவதில் யாதொரு வாக்கும் பெறக்கூடாதென்பது அவர்களுக்கு அக்கிரமமாகத் தோன்றியது. (பொன் கண்டு

1. 'The Jameson Raid.' 2. Johannesburg. 3. 'Uitlanders.'

பிடிக்கப்பட்ட பிறகு குடியரசின் வருமானம் 1,50,000 பவுனிலிருந்து 30,00,000 பவுனுக்கு உயர்ந்தது.) ஆயினும், குடியரசுத் தலைவர் க்ரூகெர்[1] அவர்கள் முறையீடுகளைக் கவனிக்கவில்லை. நியாய வரம்புக்குட்பட்ட வழிகளில் தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொள்ள அவர்களால் முடியவில்லையாதலால், போயெர் துரைத்தனத்தைக் கவிழ்த்துவிட அவர்கள் சூழ்ச்சிசெய்ய லாயினர்.

தமது திட்டங்களுக்கு ஏற்பட்டிருந்த போயெர் எதிர்ப்பினை ஒரே வழியாக ஒழித்துவிடலா மென்ற ஆசையுடன் ரோட்ஸ் இந்தச் சூழ்ச்சியில் கலந்துகொண்டு அவ்வெளிநாட்டார்களுக்குத் துப்பாக்கிகளும் வெடி மருந்துகளும் உதவியதுடன், தமது கம்பெனியின் சிப்பந்திகளுள் 1500 பேரை ஒரு படையாகத் திரட்டி யனுப்புவதாகவும் ஒப்புக்கொண்டார். இந்தப் படை பெச்சுவானுலண்டின் எல்லைப்புறத்திலிருந்து பாய்வதென்றும், அதற்கு அவரது ஆப்த நண்பரும் ரோடீஷியா மேல்பார்வையாளருமான டாக்டர் ஸ்டார் ஜேம்சன்[2] என்பவர் தலைமை வகிப்பதென்றும் ஏற்பாடாயிற்று. முனைநாட்டுத் துரைத்தனத்தின் தலைமை யமைச்சரே (ரோட்ஸ் அப்போது அப்பதவியி லிருந்தார்) இவ்விதம் செய்வதென்பது நீதிக்கடுக்காது; ஆயினும், வைத்தியர்கள் ரோட்ஸ் இனி நெடுங்காலம் உயிர்வாழ்ந்திருப்பது அரிதென்று கூறியதால், எப்படியாவது விரைவிலேயே தமது திட்டங்களை நிறைவேற்றிவைத்துவிடவேண்டு மென்று அவர் கருதினர். ஆயினும், இந்த முயற்சியின் விளைவாக நேர்ந்த விபத்துக்களின் விவரங்கள் அவருக்குத் தெரிந்ததும் தமது தவறினை உணர்ந்து அவ்வேற்பாடுகளைத் தாம் ரத்து செய்துவிட்டதாகச் செய்தி அனுப்பினர். இதற்குள் காத்துக் காத்துப் பொறுமை இழந்துவிட்ட ஜேம்சன்

1. President Kruger. 2. Dr. Starr Jameson.

'வெளிநாட்டா'ரோடும் கலக்காமல் போயர் குடியரசுக்குள் பாய்ந்தார். பாய்ந்தவர்களைப் போயர்கள் வெகு எளிதில் பிடித்துக்கொண்டனர். ரோட்ஸ் இதனால் மிகுந்த அவமான மடைந்தார். அவரது கனவுகளெல்லாம் ஒரு நொடியில் தலைகீழாகக் கவிழ்ந்துவிட்டன. சமூகத்தில் வகித்திருந்த பதவிகளையெல்லாம் அவர் விட்டுவிட வேண்டியதாயிற்று. பிரிட்டிஷாரும் போயெரும் இனி ஒன்று சேர முடியாதபடி அவர்களிடையே பிளவு ஏற்பட்டுவிட்டது. ரோட்ஸின் பேரரசுக் கோட்பாடுகள் அவமதிப்புக்கும் பரிகாசத்துக்கும் உட்படுத்தப்பட்டன.

§ 326. தென் ஆபிரிகா போர் :—ஜேம்சன் பாய்ச்சலினால் இரு மக்களுக்குமிடையே நல்லுணர்ச்சி தோன்றுவது இயலாததாய்விட்டது. ட்ரான்ஸ்வால்[1] துரைத்தனத்தார் தங்கள் நாட்டின்மீது பிரிட்டிஷார் கண்வைத்திருக்கிறார்கள் என்று நினைத்துத் தாங்கள் 'வெளிநாட்டா'ரிடமிருந்து அதிகமாக வசூலித்த வரிப்பணத்தையெல்லாம் புதிய போர்த்தளவாடங்களையும் புதிய போர் முறைகளைக் கற்றுக்கொடுப்போர்களையும் ப்ரான்ஸ் ஜெர்மனி நாடுகளிலிருந்து பெறுவதில் செலவிடத் தொடங்கினர். அவ் வெளிநாட்டார் அநீதியாக நடத்தப்பட்டார்கள் என்ற முறையீடுகளும் நாளுக்கு நாள் அதிகரிக்கலாயின. 1897-ல் அவர்கள் தங்கள் சார்பில் தலையிட்டு நிலையினை ஒழுங்குபடுத்தி வைக்கப் பிரிட்டிஷ் துரைத்தனத்தைக் கேட்டுக்கொண்டனர். சேம்பர்லின் அவர்கள் முறையீட்டில் மிக்க அனுதாபங் காட்டினார். 1881-ல் ஏற்பட்ட உடன்படிக்கைப்படி (§ 315) போயர்களுக்கு ஏறக்குறைய முழு சுயாட்சி வழங்கப்பட்டிருந்ததால், அவர்கள் துரைத்தன விஷயங்களில் தலையிட பிரிட்டனுக்கு எவ்வளவு உரிமையுண்டு என்ற கேள்வி கிளம்பியது. இதைப்பற்றிப் பல

1. Transvaal.

கருத்து வேறுபாடுகள் தோன்றின. முடிவில் பிரிட்டிஷ் துரைத்தனம் தென் ஆபிரிகா முழுமையிலும் பிரிட்டனே தலைமையாதிபத்தியம்[1] பெற்றுள்ளது என்று ஒப்புக் கொள்ளுமாறு க்ரூகெரைக் கேட்டது. பிரிட்டிஷ் துரைத்தனம் இத்தகைய மிரட்டல்களையெல்லாம் விட்டுவிட வேண்டுமென்று க்ரூகெர் கூறினர். போர் மூண்டது (1899ஆ அக்டோபர்மீ). இந்தச் சச்சரவுகளில் அது வரையில் கலக்காதிருந்த ஆரஞ்சு சுயேச்சை நாடு[2] (அதில் பொன் கனிகளில்லாமையால் 'வெளிநாட்டா'ரு மில்லை) இப்போது ட்ரான்ஸ்வாலோடு சேர்ந்து போரில் கலந்து கொண்டது.

இவ்விரு நாடுகளிலும் சேர்ந்து மொத்தம் 1,00,000 மக்களுக்குமே லிரார். அவ்வளவு சிறிய நாடுகள் பிரிட்டிஷ் பேரரசினையே எதிர்த்துப் போரிடத் துணிந்தமை எல்லோருக்கும் வியப்பாகவே இருந்தது. ஆகவே, சில மாதங்களில் அப்போர் முடிந்துவிடுமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆயினும், போயெர்கள் பல அனுகூலங்களைப் பெற்றிருந்தனர். மிகச் சிறிய மக்கட்கூட்டத்தினைக் கொண்ட பெரும்பரப்பான நாட்டினைக் கைப்பற்றல் மிகக் கடினமான செயல் என்பதை அமெரிகா சுயேச்சைப் போரிலேயே பிரிட்டிஷார் உணர்ந்திருக்கவேண்டும் (§ 230). தனித்தனியாகத் துண்டிக்கப்பட்டிருக்கும் சிறு சிறு கூட்டங்கள் நடத்தக்கூடிய கெரில்லா போராட்டத்துக்கு[3] அப்பாகம் மிகவும் ஏற்றதாக இருந்தது. அத்தகைய போராட்டத்தில் போயெர்கள் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தனர். அவர்களுடைய நித்திய தொழில்களிலேயே அவர்களுக்குக் குதிரைச் சவாரியிலும் நன்றாகக் குறி பார்த்து எய்வதிலும் ஏற்கெனவே நல்ல பயிற்சி ஏற்பட்டிருந்தது. நாட்டின் ஒவ்வொரு மூலைமுடுக்கும் அவர்

1. Paramount Power. 2. Orange Free State. 3. Guerrilla warfare.

# தென் ஆபிரிகா (சுமார்) 1900



களுக்கு நன்ருகத் தெரியும். தங்கள் சொந்த மக்களிடையே இருந்துகொண்டே அவர்கள் போரிட்டார்கள். மிக்க நூதன மான போர்க்கருவிகளையும் போர்ப்பயிற்சியில் நூதன மான முறைகளைச் சொல்லிக்கொடுக்கக்கூடிய திறமை மிக்க அந்நிய நாட்டுப் படைத்தலைவர்களையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். போகவேண்டிய இடங்களிலெல்லாம் அவர்கள் கணக்கற்ற முஸ்திப்பு வண்டிகளை[1] இழுத்துக் கொண்டு செல்லவேண்டியதில்லாததால், அவர்களால் மிக விரைவாக நடமாட முடிந்தது. பழைய போர் வழக் கங்களைப் பின்பற்றிப் பட்டாளங்களாக நடந்து சென்ற பிரிட்டிஷ் சேனைகளுக்கு இந்த முஸ்திப்பு வண்டிகள் பேரிடைஞ்சலாக இருந்தன.

இப்போரின் நிகழ்ச்சிகள் இந்நூலின் மற்ருேரிடத் தில் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன (கு. 233). முத லில் சில மாதங்கள் பிரிட்டிஷ் படைகள் மிகுந்த அல்லற் பட்டன; ஆயினும், எண்ணிக்கையினும் தளவாடங்களி லும் அவை பெற்றிருந்த மேன்மையால் போயெர்கள் நாளடைவில் சோர்ந்து ஒடுங்கினர். எனினும், போர் தொடங்கியபோது எவ்வளவு விரைவில் அது முடிந்துவிடு மென்று எதிர்பார்க்கப்பட்டதோ அதற்குப் பத்துமடங்கு அதிக காலம் அது நீடித்திருந்தது. வேரீனிகிங் சமாதான ஏற்பாட்டின்படி[2] (1902ஆம் மேமீ) போயெர்கள் சுயேச்சை நிலைக்குத் தாம் பாராட்டிய உரிமையை விட்டு விடவேண்டியவர்களாயினர். ஆயினும், கூடிய விரைவில் பிரிட்டிஷ் ஐக்கியக் கொடியின்கீழ்[3] அவர்களுக்கு முழுச் சுயாட்சி உரிமைகள் வழங்கப்பெறுமென்று உறுதி கூறப் பட்டது. இப்போரினுல் நேர்ந்த சேதங்களைச் சரிப் படுத்தவும், பண்ணைகளுக்கு வேண்டிய பொருள்களைப்

1. Baggage-trains. 2. Peace of Vereenig 3. Under the Union Jack.

புதிதாக வாங்கித் தரவும், வைரக் கனிகளைத் திறக்கவும் பார்லமென்ட் 1,00,00,000 பவுன் அளித்தது.

சுயாட்சி வழங்கப்பெறு மென்ற வாக்குறுதி 1906-ல் நிறைவேற்றப்பட்டது. சில ஆண்டுகள் கழித்து நான்கு தென் ஆபிரிகா குடியேற்ற நாடுகளும் ஒன்று சேர்ந்து (இரு போயெர் குடியேற்ற நாடுகளும் இரு பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளும்) ஒரு புதிய பேரரசுமாகாண[1] மாயின. ரோட்ஸின் கனவு நிறைவேறியது. (1902-ல் அவர் இறந்து விட்டதால், இந்த முடிவை அவர் காண்பதற்கில்லை.) ஆயினும், ஜேம்ஸன் பாய்ச்சலினாலும் போராலும் தோன்றிய பகைமை இரு மக்களுக்கு மிடையே நல்லுணர்ச்சியையும் நம்பிக்கையையும் சிதைத்துவிட்டதால், இந்த ஐக்கிய நாடு விரைவில் விருத்தியடைய முடியவில்லை.

---

## எழுபத்தைந்தாம் அத்தியாயம்

# தாராள மனப்பான்மை புத்துயிர் பெறல்[2]

## (1903—1914)

§ 327. இணைப்புக்கொள்கைக்கட்சித் துரைத்தனத்தின்[3] வீழ்ச்சி :—1901ஆம் ஜனவரியில் விக்டோரியா அரசியார் இறந்தார். அவரே இங்லண்ட் சரித்திரத்தில் மிக நெடுங் காலம் ஆண்டவர். அவருக்குப்பின் அவர் மகன் ஏழாம் எட்வர்ட் மன்ன ரானார். அடுத்த ஆண்டில் சால்ஸ்பரி பிரபு ஓய்வெடுத்துக்கொள்ள, பால்பர்[4] தலைமை யமைச்ச ரானார். 1900ஆம் நடந்த பொதுத் தேர்தலில் இணைப்புக்கொள்கைக்கட்சித் துரைத்தனத்துக்கு மீண்டும் ஆதரவு கிடைத்தது. வழக்கமாகத் திரும்பும் ஊசல்

1. Dominion. 2. Revival of Liberalism. 3. Unionist Government.
4. Balfour.

தென் ஆபிரிகா போரால் இச் சமயம் தடைபெற்றது. போரின் ஆரம்பத்தில் துரைத்தனத்துக்குப் பெரிய அபகீர்த்தி நேர்ந்திருந்தபோதிலும், 'ஓடையைத் தாண்டும் போது குதிரையை மாற்றுதல் சரியல்ல' என்ற பழமொழி எல்லோருக்கும் நினைவிலிருந்தது. மேலும், அப் போரால் தாராளப் போக்கினரிடையே பிளவேற்பட்டிருந்தது. அவர்களுள் சிலர் போயெர்கள் விஷயமாகத் துரைத்தனம் நடந்துகொண்ட விதத்தை முழுமனதுடன் ஆதரிக்க, வேறு சிலர் முற்றிலும் கண்டித்தனர். போயெர்கள் சார்பாகப் பேசிப் போரே கூடாதென்றவர்களுள் அக் கட்சியின் தலைவரான சர் ஹென்றி காம்பெல்-பானெர்மன்னும்[1], இளைய அங்கத்தினருள் திறமை மிக்கவராகக் காணப்பட்ட லாய்ட் ஜியார்ஜும்[2] முக்கியமானவர்கள். அவர்கள் தங்கள் கொள்கைகளுக்காக அச்சமயம் மிக்க அபக்கியாதி பெற்றனர்.

போர் முடிந்ததும் இணைப்புக்கொள்கையினர் அதிர்ஷ்டம் மாறிவிட்டது. போரை அவர்கள் நடத்திய விதத்தாலும் சமூக நலனுக்கு அவசரமென்று கருதப் பட்ட பல சீர்திருத்தங்களை இயற்ற அவர்கள் ஊக்கங் காட்டாததாலும் பொதுமக்கள் ஆதரவை அவர்கள் இழக்கலாயினர். பிறகு சேம்பர்லின் பேரரசு விஷயமாகக் கொண்டிருந்த ஆர்வத்தினால் ஒரு புதுப் போக்கை மேற்கொள்ள முற்பட்டதால் அவர்களது வீழ்ச்சி துரிதமாயிற்று. பேரரசு மாகாணங்களையும் தாய் நாட்டையும்[3] மேலும் நெருக்கமாகப் பிணைக்கப் பேரரசுத் தனிச்சலுகைத் திட்டமொன்றை[4] அவர் வகுக்கலானார். அதன்படி, வெளிநாடுகளிலிருந்து வரும் பொருள்களைவிடப் பிரிட்டிஷ் பேரரசு நாடுகளிலிருந்து வரும் பொருள்கள் குறைந்த சுங்கவரி

1. Sir Henry Campbell-Bannerman. 2. Lloyd George. 3. The Dominions and the Mother Country. 4. A scheme of Imperial Preference.

கள் கொடுத்து வரலாம். இதனால் வெளிநாட்டுப் பொருள்கள்மீது புதிய வரிகள் ஏற்றவேண்டி வரும். பீல் காலம் தொடங்கிப் பிரிட்டிஷ் வாணிபத்தையும் கப்பல் போக்குவரத்து வியாபாரத்தையும் வளர்த்துக்கொண்டுவந்த கட்டுப்பாடற்ற வாணிபப் போக்கு[1] இதனால் அடியோடு மாற வேண்டியதா யிருந்தது. முதலில், சேம்பர்லின் தானியத்தின்மீதுமட்டும் ஒரு சிறிய வரி போடவேண்டுமென்றார்; ஆயினும், அதற்கும் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டதால் அவர் வைராக்கியங்கொண்டு சுங்கவரித் திட்டம் முழுவதையுமே சீர்திருத்தி யமைத்துத்[2] தம் நாட்டிற்குள்ளேயே வெளிநாட்டுப் பொருள்கள் பிரிட்டிஷ் பொருள்களோடு வியாபாரத்தில் போட்டியிடாதிருக்குமாறு அவைகளுக்குப் 'பாதுகாப்பு'[3] அளிக்கவேண்டுமென்று வற்புறுத்தலானார். அவரது திட்டத்தின் நன்மை தீமைகள் ஒருபுற மிருக்க, அதனால் இணைப்புக்கொள்கையினர் கட்சி அடியோடு கவிழ்ந்துவிட்டது. அக்கட்சியின் முக்கிய அங்கத்தினருள் சிலர் அவர் கூறிய நியாயங்களை ஒப்புக்கொள்ளவில்லை. தாராளக் கொள்கையினரோ போர் விஷயமாகத் தங்களிடையே ஏற்பட்டிருந்த கருத்து வேறுபாடுகளையெல்லாம் மறந்துவிட்டுக் கட்டுப்பாடற்ற வாணிபத்துக்காக அச்சமயம் ஒன்றுசேர்ந்து நின்றனர்.

பால்பர்[4] தமது வெளிநாட்டு அமைச்சர் லான்ஸ்டௌன் பிரபு[5] 'ஆன்டான்ட் கார்டியல்'[6] எனப்பட்ட நேச ஒப்பந்தத்தைச் செய்துமுடிக்கும் வரையில் (கு. 228) பதவியில் ஒட்டிக்கொண்டிருந்தார். ஆயினும், தாராளப் போக்கினர் கட்சி புத்துரம்பெற்றுவருதலை எதுவும் தடுக்கமுடியவில்லை. பார்லமென்ட் கலைக்கப்பட்டு 1906ஆம் ஜனவரியில் பொதுத்தேர்தல் நடந்தபோது

1. Free Trade Policy. 2. A thorough-going Tariff Reform. 3. Protection. 4. Balfour. 5. Lord Lansdowne. 6. "Entente Cordiale."

இணைப்புக்கொள்கையினர் கட்சிக்கு 150 அதிக இடங்கள் இருந்த நிலை மாறித் தாராளப்போக்கினர் கட்சிக்கு 360 அதிக இடங்கள்[1] கிடைத்தன. பிரிட்டிஷ் கட்சிகள் போராட்டத்தில் எந்தக் கட்சியும் அது வரை இவ்வளவு அதிக இடங்களைப் பெற்றதில்லை.

§328. சமூகநலனுக்கான சீர்திருத்தங்கள்:—காம்பெல்-பானெர்மன்[2] திறமைமிக்கவர்களை அமைச்சர்களாகச் சேர்த்து ஒரு அமைச்சர் குழு அமைத்தார். சர் எட்வர்ட் க்ரே[3] வெளிநாட்டு அமைச்சரானார்; ஹால்டேன்[4] போரமைச்சரானார்; க்ளாட்ஸ்டனின் கடைசி அமைச்சில் உள்நாட்டு அமைச்சராக[5] விருந்த ஆஸ்க்வித்[6] என்ற ஓர் இளம் வழக்கறிஞர்[7] கருவூலமன்றத் தலைவர் (சான்செலர் ஆப் தி எக்செக்கர்)[8] ஆனார். வாணிப இலாக்காவின் தலைவராக[9] ஜான் பர்ன்ஸ்[10] நியமிக்கப்பட்டார். இது ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த நியமன மாகும். பார்லமெண்டில் ஒரு புதிய கட்சி தோன்றியுள்ளதென்பதை இது குறிப்பிட்டது. 1893-ல் சமூகநலன் கொள்கைகளுடன் வேலைசெய்து கொண்டிருந்த பல சங்கங்களும்[11] ஒன்றுசேர்ந்து பார்லமெண்ட் தேர்தல்களுக்குப் பிரதிநிதிகளை நிறுத்திவைக்கச் 'சுயேச்சையான தொழிற் கட்சி'[12] என்பதொன்றை அமைத்துக்கொண்டன. தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் சமூகநலன் கொள்கைகளைத்[13] தங்கள் நோக்கங்களாக ஏற்றுக்கொண்டு வந்தன என்பதை நாம் முன்னமே கண்டுள்ளோம் (§321). 1899-ல் அவர்களது தலைச்சங்கமாகிய[14] 'தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் காங்ரெஸ்'[15] 'சுயேச்சையான தொழிற் கட்சி'யின் வேலைகளில் கலந்து

1. A Liberal majority of 360. 2. Campbell-Bannerman. 3. Sir Edward Grey. 4. R. B. Haldane. 5. Home Secretary. 6. H. H. Asquith. 7. Lawyer. 8. Chancellor of the Exchequer. 9. President of the Board of Trade. 10. John Burns. 11. Socialist organisations. 12. Independent Labour Party. 13. Socialism. 14. Central organisation. 15. Trades Union Congress.

கொள்ளத் தீர்மானித்தது. 1900-ம் ஆண்டில் பார்லமென்டில் அவர்கள் பிரதிநிதிகளாக மூன்று நான்கு அங்கத்தினர்களே இருந்தனர். 1906-ம் ஆண்டு நடந்த தேர்தலில் அவர்கள் பிரதிநிதிகளுள் 29 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்தத் தொழிலாளர் அங்கத்தினர்களுள்[1] பெரும்பான்மையோர் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களின் உத்தியோகஸ்தர்கள்; அச்சங்கங்களின் பொருளுதவியால் தேர்தலில் வெற்றியடைந்தவர்கள். அவர்கள் தங்களைச் 'சமூகநலன் கொள்கையினர்'[2] என்று சொல்லிக்கொண்டனரேனும், அவர்களுடைய நோக்கம் சமூகநலனுக்கான சில சீர்திருத்தங்களைச்[3] செய்வதேயன்றிக் கார்ல் மார்க்ஸ்[4] எதிர்பார்த்தபடி முதலாளிகளை வீழ்த்துவதல்ல (§ 321). தாராளப் போக்கினர்க்குப் பார்லமென்டில் இருந்த பெருத்த ஆதரவு அவர்களை இச் சில அங்கத்தினர்களின் ஆதரவை நாடிநிற்கவைக்கவில்லை; எனினும், காம்பெல்-பானெர்மன் தொழிலாளர் கட்சியினரைத் தமது தோழர்களாக மதித்துப் பர்ன்ஸுக்கு ஒரு அமைச்சர் பதவியை அளித்தார்.

குறைந்த எண்ணிக்கையினரா யிருந்தபோதிலும் தொழிலாளர் அங்கத்தினர்களுக்குத் துரைத்தனத்தில் மிகுந்த செல்வாக்கிருந்தது. முன் நூற்றாண்டின் இறுதிப் பத்தின் பிற்பகுதியில்[5] நிதானப்போக்கினர்[6] கட்சியில் தாராளப்போக்குள்ள இணைப்புக்கொள்கையினருக்கு[7] இருந்த செல்வாக்கை இதற்கு ஒப்பிடலாம் (§ 323). உதாரணமாக, புதிய துரைத்தனம் முதலில் கவனித்த விஷயங்களுள் ஒன்று தொழில் தகராறுகள் சட்டம்[8] (1906) ஒன்றியற்றித் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களின் நிலையைப்

---

1. 'Labour Members.' 2. 'Socialists.' 3. Social Reform. 4. Karl Marx. 5. The later 'nineties. 6. Conservatives. 7. Liberal Unionists. 8. *Trade Disputes Act.*

பலப்படுத்தியதேயாம் (கு. 237). அதோடு அது தொழிலாளர்களின் நிலையைச் செவ்வைப்படுத்த வேறு பல சட்டங்களையும் இயற்றிக்கொண்டேயிருந்தது. இதையொட்டியே 1906 முதல் 1914 வரையிலுள்ள காலப் பகுதியை 'மூன்றும் பெரிய சீர்திருத்தக் காலப்பகுதி"[1] எனலும் பொருந்தும். சீர்திருத்த விஷயத்தில் முன் நூற்றாண்டின் ஐந்தாம் பத்தையும் எட்டாம் பத்தையும்[2] இதற்கு ஒப்பிடலாம் (கு. 238). அவற்றுள் சிலவற்றை இங்கே குறிப்பிடுவோம்: மூப்பு உதவிப் பண[3] ஏற்பாடு ஏழை மக்களைக் கிழவயதில் தொழிற்கூடத்து[4] உதவியை நாடாதிருக்கும்படி செய்தது; தொழிலாளர் மாற்றங்கள்[5] எனப்பட்ட ஏற்பாடுகளால் தொழிலாளர்கள் தேவையான முதலாளிகள் வேலையில்லாதிருக்கும் தொழிலாளர்களைப் பற்றிய தகவல்களைப் பெற முடிந்தது; தேசீய நிச்சய பாதுகாப்புத் திட்டம்[6] என்பது தொழிலாளர்களை நோயுற்றிருக்கும்போதும் வேலையற்றிருக்கும்போதும் பாதுகாக்க அமைக்கப்பட்டது. இதற்குச் செலுத்தப்படவேண்டிய கட்டணத்தைத் துரைத்தனம் ஒரு பகுதியாகவும் முதலாளி ஒரு பகுதியாகவும் வேலையாள் ஒரு பகுதியாகவும் செலுத்தினர்.

§ 329. பிரபுக்கள் சபையும் காமன்ஸ் சபையும்[7]:— 1908-ம் ஆண்டின் ஆரம்பத்திலேயே காம்பெல்-பானெர்மன் உடல் நலம் குன்றியதால் அரசியல் வாழ்க்கையினின்றும் விலகி ஓய்வெடுத்துக்கொண்டார். ஆஸ்க்வித் அவருக்குப்பின் தலைமையமைச்சரானார். லாய்ட் ஜியார்ஜ் கருவூலமன்றத் தலைவர் (சான்செலர் ஆப் தி எக்ஸ்செக்கர்) ஆனார். லாய்ட் ஜியார்ஜ் எப்போதும் முற்போக்கான அடிப்படைச் சீர்திருத்த வாதியாகவே இருந்தவர்.

---

1. Third Great Reform Era. 2. The 'forties and the 'seventies. 3. *Old Age Pensions.* 4. Workhouse. 5. *Labour Exchanges.* 6. *A National Insurance Scheme.* 7. Lords *Vs.* Commons.

1909-ல் அவர் தயாரித்த வரவுசெலவுத் திட்டத்தை 'மக்கள் வரவு செலவுத் திட்டம்'[1] என்று அவர் கூறினர். "அது ஒரு சாதாரண அமைதிக்காலத் திட்ட மன்று; ஒரு போர்க்காலத் திட்டம்; ஏழ்மையையும் இழிவான வாழ்க்கையையும் தாக்கி மாற்றுவதற்குவேண்டிய பணத்தைத் திரட்டும் போர்த்திட்டம்" என்றார். 'மூப்பு உதவிப்பண ஏற்பாடு'போன்ற சமூகநலனுக்கான சீர்திருத்தங்களுக்கு அதிக பணம் வேண்டியிருந்ததால், 3000 பவுனுக்கு மேற்பட்ட வருமானங்களுக்குப் பவுனில் 1 ஷி. 2 பெ. ஆக வருமான வரி உயர்த்தப்பட்டது; அதோடு 5000 பவுனுக்கு மேற்பட்ட வருமானங்களுக்கு பவுனில் 6 பெ. அதிகவரியும்[2] விதிக்கப்பட்டது. நல்ல வருமானமுள்ளவர்கள் இதை 'வருமானப் பறிமுதல் வரி'[3] என்று கண்டித்துப் பெருத்த கூக்குரலிட்டனர். ஆகவே, துரைத்தனத்துக்குப் பார்லமெண்டில் அதிக ஓட்டுக்களின் ஆதரவிருந்த போதிலும், வழக்கமாக ஜூன் மாதம் முடிவதற்குள் சட்டமாய்விடும் வரவு செலவுத் திட்டம் நவெம்பர் மாதத்தில்தான் காமன்ஸ் சபையில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

அதன்பிறகு மற்றொரு எதிர்பாராத நிலை ஏற்பட்டது. நெடுங்காலத்திய பிரிட்டிஷ் அரசியல் வழக்கப்படி காமன்ஸ் சபையில் நிறைவேறிவரும் பண மசோதாக்களைப்[4] பிரபுக்கள் சபையினர் மாற்ற முயல்வதில்லை. ஆயினும், இச்சமயம் எதிர்ப்புக் கட்சியினர் இந்த வழக்கத்தின்படி நடந்துகொள்ள மறுத்துவிட்டனர். அந்த வரவு செலவுத் திட்டம் மக்களின் சொத்துரிமைகளைத் தகர்ப்பதாகும்[5] என்றனர். பிரபுக்கள் சபையினர் அதைத் தள்ளிவிட்டனர். துரைத்தனத்தார் தயாரித்த வரவு செலவுத் திட்

---

1. 'The People's Budget.' 2. Super-tax. 3. 'Confiscatory taxation.' 4. 'Money Bill.' 5. An attack on the rights of property.

டத்தை மேல் சபை[1] தள்ளியது பிரிட்டன் சரித்திரத்தில் அதுவே முதல் முறையாகும். இந்த அதி முக்கியமான விஷயத்தை நாட்டு மக்களே தீர்மானிக்கவேண்டுமென்று ஆஸ்க்வித் பார்லமென்டைக் கலைத்துவிட்டார். 1910 ஆம் ஜனவரிமீ நடந்த தேர்தலில் துரைத்தனத்துக்கு 120 அதிக இடங்களே கிடைத்தன. ஆயினும், அவர்கள் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள அதுவே போதும். ஆகவே, வரவு செலவுத் திட்டம் மீண்டும் பிரபுக்கள் சபையின்முன் வந்தபோது (1910 ஆம் ஏப்ரில்மீ—அடுத்த வரவு செலவுத் திட்டமும் அதற்குள் வந்திருக்கவேண்டும்!) அவர்கள் அதை ஒப்புக்கொண்டனர்.

ஆயினும், துரைத்தனத்தார் இவ்விஷயத்தை இதோடு விட்டுவிட விரும்பவில்லை. இந்நிகழ்ச்சி நெடுங்காலமாகத் தாராளப்போக்கினர்க்கும் பிரபுக்கள் சபைக்குமிடையே நடந்துகொண்டிருந்த ஒரு போராட்டத்தின் சிகரமாகக் கருதப்பட்டது. பிரபுக்கள் சபையில் நிதானப்போக்கினர் கட்சிக்கு நிலையாகவே எப்போதும் அதிக ஆதரவு இருந்து கொண்டிருந்தமையால், பொதுத் தேர்தலுக்குப்பின் காமன்ஸ் சபையில் தீர்மையாக விவாதிக்கப்பட்டு அதிக ஆதரவுபெற்று நிறைவேறிய முக்கியமான சட்டங்களையெல்லாம் மிகக் குறைவான அங்கத்தினர்களே ஆஜராயிருக்கும் பிரபுக்கள் சபையில் விவாதமேயின்றி வெகு அசிரத்தையாகத் தள்ளிவிடும் பொறுப்பற்ற வழக்கத்தைப்பற்றித் தாராளப்போக்கினர் குறைகூறலாயினர். ஆகவே, ஆஸ்க்வித் துரைத்தனம் தனது வரவு செலவுத் திட்ட சம்பந்தமாகப் பெற்ற வெற்றியைப் பயன்படுத்திக்கொண்டு நிலையாகவே பிரபுக்கள் சபையின் அதிகாரத்தைக் குறைத்து வைத்துவிட வேண்டுமென்று தீர்மானித்தது. பண்டை அரசியல் முறைமையில் இந்த மாறுதலைப் புகுத்துதல் சம்பந்தமாக

1. Upper Chamber.

ஒரு பெரிய போராட்டம் தொடங்கவிருந்த சமயம் எட்வர்ட் மன்னர் இறந்துவிட்டதால் (1910ஸ் மேமீ) சிறிது காலம் எல்லாம் தணிந்திருந்தது. இருதரத்துத் தலைவர்களும் ஒன்றுகச் சந்தித்து இதைப்பற்றிப் பேசி முடிவு கட்ட முயன்றனர். நவெம்பர் மாதம் வரைக்கும் யாதொரு முடிவுமின்றி அவர்கள் பேச்சு வளர்ந்து பிறகு முறிந்துவிட்டதால், ஆஸ்க்வித் காமன்ஸ் சபையார் நிறைவேற்றியனுப்பும் சட்டங்களை நிராகரித்துவிடப் பிரபுக்கள் சபையார் பெற்றிருந்த அதிகாரத்தை எடுத்துவிடுதல் சம்பந்தமாக நாட்டு மக்கள் கருத்தைத் தெரிந்துகொள்ளுவதற்கு மட்டும் மற்றொரு பொதுத்தேர்தலை நடத்தப்போவதாக அறிவித்தார். (1910 வருஷத்திலேயே நடந்த இரண்டாம் பொதுத்தேர்தலாகும் இது). இதன் விளைவாகவும் தாராளப்போக்கினர்க்கே பழையபடி அதிக இடங்கள் கிடைத்தன. அவர்கள் கொண்டுவந்த 'பார்லமென்ட் மசோதா'[1]வில் பிரபுக்கள் சபையினர் பல திருத்தங்களை[2] இயற்றி அதை உருமாறச் செய்து நாட்டினர் தீர்ப்பைப் புறக்கணிக்க முயன்றனர். காமன்ஸ் சபையார் அத்திருத்தங்களை ஒப்புக்கொள்ள மறுத்து மசோதாவைப் பழைய உருவத்திலேயே மறுபடியும் பிரபுக்கள் சபைக்கு அனுப்பினர். அந்நிலையில், ஐந்தாம் ஜியார்ஜ் மன்னர்,[3] தேர்தல் முடிவால் வெளியான நாட்டு மக்களின் தீர்மானத்தை நிறைவேற்றி வைக்கும் நோக்கத்துடன், பிரபுக்கள் சபையில் கட்சிகளின் நிலையைச் சமன்செய்யப் போதுமான புதிய தாராளப்போக்குப் பிரபுக்களைப்[4] பட்டமளித்து உண்டாக்க ஒப்புக்கொண்டதாக ஆஸ்க்வித் அறிவித்தார். பிரபுக்கள் சபையினர் யோசித்தனர். தங்கள் திருத்தங்களை அவர்கள் வற்புறுத்துவார்களானல், நூற்றுக்கணக்கான புதிய பிரபுக்

1. 'Parliament Bill.' 2. Amendments. 3. George V. 4. Liberal Peers.

களை உண்டாக்கப்போவது நிச்சயம். அதனால் பிரபுக்களின் அந்தஸ்துக்கே பங்கமேற்பட்டு விடும். ஆகவே, வேண்டா வெறுப்பாக அவர்கள் அந்த மசோதாவை ஒப்புக்கொண்டு விட்டதால் அது சட்டமாய்விட்டது (கு. 236).

§330. போராட்டம்:—துரைத்தன வரவு செலவுத் திட்டச் சிக்கலும், மசோதாக்களை நிராகரிக்கப் பிரபுக்கள் சபையினர் பெற்றிருந்த அதிகாரத்தை ஒழித்தலும் இரு பெருங் கிளர்ச்சிகளைக் கிளப்பிவிட்டிருந்த அதே சமயத்தில், பெண்களுக்கு ஓட்டுரிமை[1] வழங்கலைப்பற்றியும் ஒரு மும்முரமான கிளர்ச்சி நாட்டில் தோன்றியிருந்தது. முதலில் அக்கிளர்ச்சி நியாய வரம்புக்குட்பட்ட முறைகளில் பொறுமையுடன் நடந்துவந்தது. ஆயினும், அதைப்பற்றி எவரும் அதிக கவனம் செலுத்தவில்லை. 1905-ல் பான்க்ஹர்ஸ்ட்[2] என்ற பெயர்கொண்ட ஒரு அம்மையாரும் அவரது இரு பெண்களும் 'பெண்கள் சமூகநலன் அரசியல் சங்கம்'[3] என்னும் பெயருடன் ஒரு சங்கத்தை நிறுவித் தீவிரமாகக் கிளர்ச்சிசெய்ய லாயினர். தங்கள் கோரிக்கைகள் நிறைவேறும் வரையில் துரைத்தனத்துக்கேனும் நாட்டினர்க்கேனும் ஒரு கணநேரமும் அமைதி தருவதில்லை யென்று தீர்மானித்து, கடைகளின் சன்னல்களை உடைத்தல், தபால் பெட்டிகளில் நெருப்பிடல், பொதுக் கட்டடங்களைக் கொளுத்தல், காமன்ஸ் சபைக்குள் கூட்டமாகச் செல்லல், நாய்களை மிரட்டும் சாட்டைகளையும் மிளகாய்ப்பொடியையும் கொண்டு அமைச்சர்களைத் தாக்குதல் முதலிய செயல்களில் அவர்கள் ஈடுபட்டனர். இவற்றிற்காக அவர்களைப் பிடித்து விசாரித்து அபராதங்கள் விதித்தால் அவைகளைக் கட்ட மறுத்துவிட்டனர்; சிறைக் கூடங்களுக்கு அனுப்பினால் அங்கு பட்டினிகிடந்து

1. Vote for Women. 2. Mrs. Pankhurst. 3. "The Woman's Social and Political Union."

சண்டித்தனம் பண்ணினர். இக்கிளர்ச்சியால் துரைத்தனத்துக்கு இடர்ப்பாடு அதிகமிருந்த போதிலும், அவர்கள் பெண்கள் கோரிக்கைகளுக்கு 1918 வரையில் இணங்கவில்லை. அவ்வாண்டு பெண்களுக்கும் ஓட்டுரிமை அளிக்கப்பட்டது. பெரும் போரின்போது நாட்டின் நலத்துக்காகப் பெண்கள் சுயநலம் பாராது உழைத்தமையைக் கவனித்தபோது அவர்கள் கோரிக்கை நியாயமானதென்பதை எல்லோரும் உணர்ந்தனர்.

இதற்கிடையே தொழிற் கட்டுப்பாடு இயக்கம் புரட்சிப் போக்கில் திரும்பியது. தொழிலாளர் கட்சி தங்கள் வகுப்பினர்க்கு அதிகமாகச் சாதிக்கவில்லை என்று தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் குறை கூறின. ஆகவே, தொழிலாளர் தலைவர்களுள் இளம் வயதினராகவும் கட்டுக்கடங்காதவர்களாகவு மிருந்த சிலர் கார்ல் மார்க்ஸ் போதித்த சமூகநலன் புரட்சிக்கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று பிரசாரஞ் செய்ய முற்பட்டனர். 1911-ல் இருப்புப்பாதை வேலையாட்களெல்லோரும் ஒரே கட்டுப்பாடாக வேலைநிறுத்தம் செய்தனர். இருப்புப்பாதைக் கம்பெனியார் தங்கள் தொழிலாளர்களின் கூலிகளையோ தொழில் நிபந்தனைகளையோ குறித்து வாதாடத் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களுக்கு உரிமையில்லை என்று கூறியதே அதைத் தூண்டியது. அதன் பிறகு கனிகளில் வேலை செய்திருந்தவர்கள் அனைவரும் வேலைநிறுத்தம் செய்தனர். நாடெங்கும் நாளொன்றுக்கு 5 ஷில்லிங்குக்குக் குறையாத கூலி அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டுமென்பது அவர்கள் கோரிக்கை. பத்து லக்ஷத்துக்கு மேற்பட்ட ஆட்கள் வேலையின்றிச் சோம்பிக்கிடந்தனர். வேறு பல தொழில்களும் இதனால் பாதிக்கப்பட்டன. நாட்டின் நிலக்கரி ஏற்றுமதி வியாபாரம் ஒடுங்கியது. அவ்வொடுக்கத்திலிருந்து அது பழைய நிலைக்கு வரவே முடிய

வில்லை. துரைத்தனம் தலையிட்டு மத்தியஸ்தம் செய்து ஒரு பார்லமெண்ட் சட்டத்தை இயற்றிவைத்த பிறகுதான் அவ் வேலைநிறுத்தம் முடிவுக்கு வந்தது. இந்நிகழ்ச்சிகளால் தொழிற்கட்டுப்பாடு சங்கங்களின் வன்மையும் ஒற்றுமையும் எல்லோருக்கும் தெளிவாக விளங்கின. பலர் மனதில் அச்சமும் புகுந்தது. அவ்வச்சம் 1914-ம் ஆண்டின் ஆரம்பத்தில் அவற்றுள் மிகப் பெரியவையான மூன்று சங்கங்கள் — இருப்புப்பாதைகளில் வேலைசெய்வோர் சங்கமும், கனிகளில் வேலைசெய்வோர் சங்கமும், போக்குவரத்துத் தொழில்களில் வேலைசெய்வோர் சங்கமும் — ஒன்று சேர்ந்து முக்கூட்டுத் தொழிலுறவு[1] ஏற்படுத்திக்கொண்டபோது மேலும் அதிக மாயிற்று. முதலாளிகளை வணங்கச்செய்யத் தங்களது வன்மையை ஒன்று திரட்டவே அவை சேர்ந்தன.

கடைசியாக, அயர்லண்ட் சுயாட்சி விஷயமாகவும் ஒரு சிக்கலான நிலை ஏற்பட்டது. அதனால் அயர்லண்டில் உள்நாட்டுப் போரே மூண்டுவிடும்போ லிருந்தது. 1906-ம் ஆண்டில் தாராளப்போக்கினர் துரைத்தனத்துக்குப் பார்லமெண்டில் இருந்த அதிக இடங்கள்[2] குறையாதிருக்கும் வரையில் ஐரிஷ் கட்சியாரை அவர்கள் மதிக்காதிருக்க முடியும்; ஆயினும், 1910-ம் ஆண்டின் பொதுத்தேர்தலில் அவ்வதிக இடங்கள் 120 ஆய்விட்டதும், அவர்கள் அயர்லண்ட் அங்கத்தினர்களைச் சமாதானப்படுத்திவைத்திருக்க ஏதாவது முயற்சிசெய்ய வேண்டியதாயிற்று. ஆகவே, 1912-ல் மூன்றும் சுயாட்சி மசோதா[3] ஒன்று கொண்டுவரப்பட்டது. அயர்லண்ட் மக்களுள் பெரும்பான்மையோர் சுயாட்சியையே வற்புறுத்திக்கொண்டிருந்தனர்; அல்ஸ்டரிலிருந்த எதிர்ப்புமதக்கொள்கையினர் மட்டும்[4] டப்ளினில்

1. *Triple Industrial Alliance.* 2. Majority. 3. A Third Home Rule Bill. 4. The Protestants of Ulster.

ஏற்படக்கூடிய ஒரு காத்தொலிக் துரைத்தனத்தின்கீழ்த் தாங்கள் எந்நிலையிலும் இருக்க முடியாதென்று கூறினர். அவர்கள் இங்லண்டின் இணைப்புக்கொள்கைக் கட்சியின ரால் ஊக்கப்பட்டுத் துப்பாக்கிகளைத் தருவித்து வைத்துக் கொண்டு தங்களுக்குப் போர்ப்பயிற்சி ஏற்படும்படிப் பழக்கிக்கொள்ள லாயினர். அவர்களைக் கட்டாயப்படுத்தி அத்தகைய ஏற்பாட்டுக்கு இணங்கச் செய்வதென்னும் நிலை தோன்றுமானால் அவர்கள் எதிர்த்துநிற்கத் தயாராயினர். தென் அயர்லண்டின் நாட்டினர் கட்சியினரும்[1] அதற்கு எதிர் முஸ்திப்புக்கள் செய்யலாயினர். அம்மசோதா பிரபுக்கள் சபையினரால் தள்ளிவிடப்பட்டதேனும், புதிய பார்லமெண்ட் சட்டப்படி அவர்கள் அனுமதியின்றியே அது மூன்றுண்டுகளுள் அமுலுக்கு வந்துவிடலாம். அப்படி அது அமுலுக்கு வந்துவிடுமானால் அப்போதே உள்நாட்டுப்போர் தொடங்கிவிடும்போல் தோன்றியது. அந்நாள் நெருக்கத்திலிருக்கும்போது ஜியார்ஜ் மன்னர் இருதரத்தாரின் பிரதிநிதிகளையும் ஒரு கூட்டத்துக்கு அழைத்தார் (1914ஆு ஜூலை மீ). அயர்லண்டில்மட்டும் அப்போது இருதரத்தாரிடையிலும் தோன்றிய மனவேறுபாடு உச்சநிலையி லிருந்தது. தங்கள் பிரதிநிதிகளாகச் சென்றிருந்த தலைவர்கள் எவ்விஷயத்திலேனும் விட்டுக்கொடுப்பார்களானல் அவர்களை நிராகரித்துவிடுவார்கள்போ லிருந்தது. இதைப்பற்றிய கவலை எல்லோர் மனதையும் கலக்கிக்கொண்டிருந்த சமயத்தில்தான் அதைவிடப் பெரிய கலக்கத்தை உண்டாக்கக் கூடிய பெரும் போர் தொடங்கியது.

§ 331. பெரும்போர் மூண்ட விதம் :—பெரும் போரின் காரணங்களை விவரிக்கப் புகுந்தால் இதைவிடப் பெரிய நூலொன்றை எழுதலாம். அக்காரணங்கள் மூன்று தனிப்பட்ட மனத்தாங்கல்களைப் பொறுத்திருந்தன :

1. Nationalists.

முதலாவது, பால்க்கன் நாடுகளில் செல்வாக்குக்காக ஆஸ்ட்ரியாவுக்கும் ருஷ்யாவுக்குமிடையே தோன்றிய போட்டி; இரண்டாவது, வாணிபத்திலும் கடற்படை வன்மையிலும் பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்குமிடையே தோன்றிய போட்டி; மூன்றாவது, ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்குமிடையே நெடுங்காலமாக இருந்த இன வெறுப்பு.[1] இங்கு பிரிட்டன் சம்பந்தப்பட்டவரையில் கவனிக்கவேண்டிய சில முக்கியமான விஷயங்களைமட்டும் கூறுவோம்.

ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்குமிடையே நடந்த போரினால் இரு நாடுகளுக்கும் பெரிய மனக்கசப்பு ஏற்பட்டது. ஒவ்வொன்றும் நட்புநாடுகளைத் தேடித் தனது பலத்தைப் பெருக்கிக்கொள்ள முயன்றது. ஜெர்மனி ஆஸ்ட்ரியாவோடும் இட்டலியோடும் ஒரு முக்கூட்டுறவு[2] செய்துகொண்டது; ப்ரான்ஸ் ருஷ்யாவோடு இருநாட்டுறவொன்று[3] செய்துகொண்டது. இந்த யூரோப்பிய மனஸ்தாபங்களில் சிக்காமல் கண்ணியத்துடன் தனிமையா[4]யிருந்தமைபற்றிப் பிரிட்டன் பெருமைபாராட்டிக்கொண்டது. ஆயினும், அதற்கு ஜெர்மனியிடம் இருந்த கனிவு ப்ரான்ஸிட மில்லை; இதற்குக் காரணம் ஜெர்மானியரும் இங்லிஷ் மக்களும் ஒரே மக்களினத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தமையும், ஈஜிப்ட் விஷயத்தைப்போன்ற பல விஷயங்களில் பிரிட்டனுக்கும் ப்ரான்ஸுக்கும் கருத்துவேறுபாடுகள் இருந்தமையுமே (§ 323). போயர் போரின் தொடக்கத்தில் பிரிட்டிஷ் படைகள் தோல்வியுற்றபோது, பிரிட்டிஷ் பேரரசைப் பார்த்துப் பொறாமைகொண்டிருந்த யூரோப்பிய அரசுகள் பெரிதும் மகிழ்ச்சியுற்றன. அந்த மகிழ்ச்சியில் ஜெர்மனி தலைமை பூண்டது. அச்சமயம் ஜெர்மன் பேரரசர் பிரிட்டிஷ் கடற்படையின் வன்மை

---

1. Race hatred. 2. Triple Alliance. 3. A Dual Alliance.
4. 'Splendid Isolation.'

யொன்றே போயெர்களுக்கு உதவி அனுப்ப முடியாதபடி தம்மைச் செய்துவிட்டது என்றுகூடக் குறிப்பாகக் கூறினார். அப்பேரரசர் இப்போது அதற்குப் போட்டியாகத் தமது கடற்படையைப் பெருக்கிக்கொண்டுவந்தாராதலால், பிரிட்டன் ப்ரான்ஸுடன் நட்பாக இல்லாதிருத்தல் பேதைமை யென்று பல அரசியல் அறிஞர்கள் கருதினர். ஆகவே, பழைய போக்குப்படி ஜெர்மனிக்கு ஆதரவாக இருந்த சால்ஸ்பரி இறந்ததும், அவர் வகித்திருந்த பதவிகளில் முறையே வெளிநாட்டு அமைச்சராகவும் தலைமையமைச்சராகவும் அமர்ந்த லான்ஸ்டௌன் பிரபுவும் பால்பரும் ப்ரான்ஸுடன் ஆன்டான்ட் கார்டியல்[1] என்ற ஒரு ஒப்பந்தத்தைப் பேசி முடிவுகட்டினர். அது ஒரு சட்ட ரீதியான உடன்படிக்கை யல்ல. அது இரு நாடுகளுக்கு மிடையே மனத்தாங்கலை உண்டாக்கிக்கொண்டிருந்த பல முக்கியமான விஷயங்களைப்பற்றிய சிக்கல்களைத் தீர்த்து வைத்ததோடு, இரு நாடுகளுள் எதையேனும் வேறொரு நாடு எதிர்க்குமானால் ஒன்றுக்கொன்று ஆதரவா யிருக்க வேண்டுமென்றும் முடிவு செய்தது. இது இரு கனவான்களுக்கிடையே இருக்கக்கூடிய ஒரு ஒப்பந்தத்தைப்போன்றது.[2] இதே மாதிரியான ஒரு ஒப்பந்தம் சில ஆண்டுகளுக்குப் பிறகு பிரிட்டனுக்கும் ருஷ்யாவுக்கும் (ப்ரான்ஸுடன் நட்புகொண்ட நாடு) எற்பட்டது (கு. 228, 229).

இதே போக்கில்தான் காம்பெல் பானெர்மன்னும் ஆஸ்க்வித்தும் நடத்திய தாராளமனப்பான்மையினர் துரைத்தனமும் சென்றது. அட்மிரல் பிஷர்[3] 'ட்ரெட்நாட்'[4] ('எதற்கும் அஞ்சாதது') என்னும் பெயருடன் ஒரு பெரிய போர்க்கப்பலைக் கட்ட ஒரு திட்டம் வகுத்தார். அதுவரையில் கட்டப்பட்டிருந்த கப்பல்களை யெல்லாம்

1. Entente Cordiale. 2. 'A gentlemen's agreement.' 3. Admiral Fisher. 4. 'Dreadnought.'

வேகத்திலும் குண்டு வீச்சிலும் அது தோற்கடித்துவிடும் என்று கருதப்பட்டது. இனி பிரிட்டனும் ஜெர்மனியும் இவ்விதமான போர்க்கப்பல்களைக் கட்டுவதில் ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொண்டு இறங்கின. போர்க் காரியதரிசியாயிருந்த ஹால்டேன் பிரிட்டிஷ் நிலப்படையைச் சீர்திருத்தி யமைத்தார். யூரோப்பில் ப்ரான்ஸ் படைகளோடு நின்று போரிட அது தயாராக்கப்பட்டது. எனினும், எதிர்பார்க்கப்பட்ட போரைத் துரிதத்தில் மூட்டிவிடத் துரைத்தனம் எதையும் பகிரங்கமாகக் கூறவுமில்லை; செய்யவுமில்லை. மேலும், போர்த்தளவாடங்களைப் பெருக்குவதற்கு அதிக பணம் செலவிடுதலைத் தாராளப் போக்கினருள் பலர் எதிர்த்தனர். பல முறை யூரோப்பில் போர் மூண்டுவிடும்போல் தோன்றியது; ஆயினும், ஒவ்வொரு தரமும் அது வெற்றிகரமாகத் தடுக்கப்பட்டு வந்தது. கடைசியில், அது பற்றி மூண்ட சமயம் அதற்குக் காரணமாயிருந்தது ஒரு சிறு அற்ப நிகழ்ச்சியே. பால்க்கன் நாடுகளிடையே சிறிது காலத்துக்குமுன் நிகழ்ந்த ஒரு போரின் விளைவாக செர்பியா மிக்க பலமடைந்திருந்தது. இது ஆஸ்ட்ரியாவுக்குப் பிடிக்கவில்லை. 1914ஞூ ஜூன்மீ ஆஸ்ட்ரியா சிம்மாசனத்துக்கு வாரிசாயிருந்த ஆர்ச்ட்யூக் ப்ரான்ஸிஸ் பெர்டினண்ட்[1] சராஜீவோ[2] என்னுமிடத்தில் கொலையுண்டார். இதைச் செய்தவர்கள் செர்பியர்கள் என்ற சந்தேகம் பலமாக இருந்ததால் செர்பியா துரைத்தனம் இதற்கு ஈடுசெய்யவேண்டுமென்று ஆஸ்ட்ரியா கண்டிப்பாகக் கேட்டது. ஆஸ்ட்ரியா கேட்டதில் பத்தில் ஒன்பது பங்கைச் செர்பியா ஒப்புக்கொண்டதேனும், மிகுதி ஒரு பங்கையும் ஒப்புக்கொள்ளவில்லையென்று ஆஸ்ட்ரியா அதன்மீது உடனே போர் தொடுத்தது. செர்பியாவிற்குத் துணையாக ருஷ்யா போரில்

1. Archduke Francis Ferdinand. 2. Sarajevo.

கலந்ததும், ஜெர்மனி ஆஸ்ட்ரியாவை ஆதரிக்கவும், ப்ரான்ஸ் ஜெர்மனிக்கு விரோதமாக ருஷ்யாவை ஆதரிக்கவும் போரில் இறங்கின. சில நாட்களுள் யூரோப்பில் பெரும் போர் மூண்டுவிட்டது.

அந்நிலையில் 'பிரிட்டன் செய்யப் போவது என்ன?' என்பது பெருங் கேள்வியாயிற்று. பிரிட்டனில் ப்ரான்ஸ் சார்பில் அதிக பரிவிருந்தது. எனினும், அப்போதைய நிலையில் பிரிட்டன் ப்ரான்ஸுக்குத் துணையாகப் போரில் இறங்கவேண்டு மென்பது ஆன்டான்ட் ஒப்பந்தத்திலு மில்லை. மேலும், அப்போரின் மூல காரணமான பால்க்கன் நாடுகளின் போட்டிப் போராட்டங்களில் பிரிட்டனுக்கு என்ன அக்கிருந்தது?

பிரிட்டன் என்ன செய்யவேண்டு மென்பது இவ் விதம் யோசனையி லிருந்த சமயம், ஜெர்மனி பெல்ஜத்தின் மூலம் பாய்ந்து ப்ரான்ஸைத் தாக்கியது. ஆகவே, நெதர் லண்ட்ஸைப் பாதுகாக்கவும் பழைய உடன்படிக்கைகளின் நிபந்தனைகளை நிலைநாட்டவும் பிரிட்டன் இப்போது இந்த உலகப் போரில் கலந்துகொள்ளவேண்டிய தாயிற்று. 120 ஆண்டுகளுக்குமுன் (§ 243) ப்ரெஞ்சு புரட்சிப் போர் களில் இங்லண்ட் தலையிடவேண்டி யிருந்ததும் இதே காரணங்களுக்காகவே. பிரிட்டிஷ் துரைத்தனம் ஜெர்மன் படைகள் பெல்ஜத்திலிருந்து போய்விடவேண்டுமென்று ஜெர்மனிக்கு ஒரு இறுதிக் கோரிக்கை[1] அனுப்பியபோது நாட்டினர் அனைவருமே துரைத்தனத்தை ஆதரித்தனர். ஜெர்மன் சான்செலர்[2] அப்போது பிரிட்டிஷ் இராயபாரி யிடம் 'ஒரு வெறும் காகிதத் துண்டு'க்காகப்[3] போரில் இறங்குவது பேதைமை யென்றார். பிரிட்டன் இதற்காகப் போரிடத் துணியும் என்று கெய்சரின் துரைத்தனம் எதிர்

1. Ultimatum. 2. The German Chancellor. 3. 'For a mere scrap of paper.'

பார்க்கவில்லை. ஆயினும், அதனுடைய போர் இயந்திரத்தை முடுக்கிவிட்டாயிற்று; இனி அதை நிறுத்த முடியுமா? இறுதிக் கோரிக்கையில் குறிப்பிட்டிருந்த கால வரையறை 1914ஆம் ஆகஸ்டுமீ 4உ நள்ளிரவோடு முடிந்தது.

---

# பத்தாம் பகுதிக்கான குறிப்புக்கள்
## (1867—1914)

## பிரிட்டன் அதிபதிகள்

விக்டோரியா (1837-1901)

ஏழாம் எட்வர்ட் (1901-1910)

ஐந்தாம் ஜியார்ஜ் (1910-1936)

## யூரோப்பிய அதிபதிகளுள் முக்கியமானவர்கள்

ப்ரான்ஸ்: மூன்றாம் நெப்போலியன் (இரண்டாம் பேரரசு, 1852-1870)

மூன்றாம் குடியரசு[1] (1871- )

ஜெர்மனி: முதல் வில்லியம் (1871-1888)

இரண்டாம் வில்லியம் (1888-1918)

### கு. 220. டிஸ்ரேலியும் க்ளாட்ஸ்டனும்: ஒப்பிடல்

| டிஸ்ரேலி | க்ளாட்ஸ்டன் |
|---|---|
| அடிப்படைச் சீர்திருத்தக்காரராகத் தொடங்கி நிதானப் போக்கினர் தலைவரானார். | டோரியாகத் தொடங்கித் தாராளப்போக்கினர் தலைவரானார். |
| வெளிநாட்டு விஷயங்களில் தலையிடும் போக்கை மேற்கொண்டார். | வெளிநாட்டு விஷயங்களில் தலையிடுதலை விரும்பவில்லை. |
| பேரரசு மனப்பான்மையினர்.[2] | பேரரசு விஷயங்களில் ஊக்கமில்லாதவர். |
| துரைத்தனப் பொருள் திட்ட[3] விஷயமாக ஒன்றும் அறியாதவர். | பொருள் திட்ட அமைச்சர்களுள் தலைசிறந்தவர். |

---

1. The Third Republic. 2. An Imperialist. 3. Finance.

| | |
|---|---|
| சட்டங்கள் இயற்றுவதில் ஊக்கமில்லாதவர். | சட்டங்கள் இயற்றுவதில் பேருக்கம் கொண்டவர். |
| எதிர்ப்புக்கட்சி வேலையில் நிபுணர். | எதிர்ப்புக்கட்சி வேலையில் அனுபவ மற்றவர். (இதற்கு மிட்லோத்தியன் பிரசாரம் விலக்கு). |
| நகைச்சுவை மிக்கவர்; பக்குவமாக நடந்துகொள்ளக் கூடியவர்; மக்களியற்கையை நன்குணர்ந்தவர். | நகைச்சுவையற்றவர்; பக்குவமாக நடத்தலை அறியாதவர்; தனி நபர்களை உணர்ந்து திருப்திசெய்யத் தெரியாதவர். |
| குத்தலாகப் பேசுவதிலும் சாமார்த்தியமாகப் பேசுவதிலும் வல்லவர். | சொல்முட்டின்றி உயர்ந்த நோக்கங்களைப் பற்றி மிக்க உணர்ச்சியோடு அரிய சொற்பொழிவுகள் ஆற்றக் கூடியவர். |
| 'கிழக்கு விஷய'த்தில் ருஷ்யாவுக்கு எதிரி. | 'கிழக்கு விஷய'த்தில் துருக்கிக்கு எதிரி. |
| இந்தியா விஷயங்களில் அதிக ஊக்க மெடுத்துக்கொண்டார். | அயர்லண்ட் விஷயங்களில் அதிக ஊக்கமெடுத்துக் கொண்டார். |
| முக்கிய மனப்பான்மை: நாட்டுப் பற்று. | முக்கிய மனப்பான்மை: நேர்மை. |

## கு. 221. க்ளாட்ஸ்டன் சாதித்தவை.

பொருள் திட்ட அமைச்சராக:

வாணிபத்திலும் ஆக்கத்தொழில்களிலும் பிரிட்டனின் ஆதிக்கத்தை ஓங்கவைத்த பீலின் கட்டுப்பாடற்ற வாணிபத் திட்டத்துக்கு முழுவுருவளித்தார் (கு. 201.)

துரைத்தனக் கணக்குகளைத் நேர்மையாகத் தணிக்கை செய்வதிலும் சிக்கனத்திலும் வழிகாட்டியா யிருந்தார்.

வெளிநாட்டு விஷயங்களில்:

'அலபாமா' சிக்கலில் நாடுகள் நடுநிலைமன்றங்கள்[1] மூலமாக அவர்களிடையே தோன்றும் சச்சரவுகளைத் தீர்த்துக்கொள்ளலாம் என்று வழிகாட்டினர்.

இட்டலி சுயேச்சைநிலை விஷயத்திலும், 'கிழக்கு விஷய'த்திலும் அவர் நினைத்தவையே சரி என்பது பின்னர் விளங்கியது.

1. International Arbitration.

(இவ்விரு விஷயங்களிலும் டிஸ்ரேலியின் போக்கும் கருத்துக்களும் தவறுதலானவை என்பது பின்னர் விளங்கியது.)

பார்லமேண்ட் சீர்திருத்தத்தில் :

இரண்டாம் சீர்திருத்தச் சட்டத்தை (1867) இயற்றி வைத்த டிஸ்ரேலியைவிட இவரே அதை உருவாக்கியதில் அதிக வேலை செய்தவர்.

இரகசிய ஓட்டுப்பதிவுச் சட்டத்தை[1] இயற்றிவைத்தார் (1872).

கௌண்டி ஓட்டுரிமைச் சட்டத்தை[2] (1884) இயற்றிவைத்தார். முன்னிரண்டு சீர்திருத்தச் சட்டங்களும் சேர்ந்து செய்ததைவிட இது அதிக ஓட்டர்களை உண்டாக்கியது.

அயர்லண்ட் விஷயமாக :

இவ் விஷயமாக அவர் இருபத்தைந்து ஆண்டுகள் உண்மையாக உழைத்தார். ஆழ்ந்த சிந்தனையின்மேல் அவர் கொண்டு வந்த சுயாட்சித்[3] திட்டம் 1886-ல் நிறைவேறி யிருக்குமானால், அயர்லண்ட் இன்றைக்கும் 'இணைக்கப்பட்ட கிரேட் பிரிட்டன் இராச்சிய'த்தின் பாகமாக இருக்கலாம் என்று கூறலாம்.

## கு. 222. டிஸ்ரேலி சாதித்தவை.

1. தற்காலத்திய நிதானப்போக்கினர் கட்சியை[4] உண்டாக்கினார்; பிரிட்டிஷ் அரசியல் அமைப்பினையும்[5] பேரரசினையும்[6] பாதுகாத்தலும், சமூகநலனுக்கான சீர்திருத்தங்கள் இயற்றலும் அதன் கொள்கைகளாக இருக்குமாறு செய்தார்.

2. பிரிட்டனைக் குடியரசு நாடாக[7] மாற்றிய இரண்டாம் சீர்திருத்தச் சட்டத்தினை இயற்றிவைத்தார்.

3. பேரரசில் ஒரு பெருமை யுணர்ச்சி ஏற்படுமாறு செய்தவர்களுள் இவர் தலைசிறந்தவர்.

4. க்ளாட்ஸ்டன் தமது உணர்ச்சிமிக்க ஆர்வத்தினால் கண்டறிய முடியாத பல விஷயங்களை டிஸ்ரேலி தமது தூர திருஷ்டியாலும் நுண்ணிய அறிவாலும் எளிதில் கண்டுணர்ந்தார்.

---

1. The Ballot Act. 2. County Franchise Act. 3. Home Rule.
4. The modern Conservative Party. 5. The Constitution.
6. The Empire. 7. A democracy.

உ-ம்., தொழிற்கட்டுப்பாடு சங்கங்களின் முக்கியத்தினை உணர்ந்தார்; இந்தியா விஷயங்களைப் புரிந்துகொண்டார்: சூயெஸ் கால்வாயின் அவசியத்தை உணர்ந்தார்; பேரரசு நாடுகளின் இணைப்பமைப்பு[1] சாதிக்கக்கூடியவைகளைக் கண்டுகொண்டார்.

5. வெளிநாட்டு விஷயங்களில் 'முற்போக்கான'[2] மனநிலையுடன் நடந்துகொண்ட பாமர்ஸ்டன் போக்கினை மேற்கொண்டார். 1878-ல் பிரிட்டனைச் சிறிது காலம் யூரோப்பில் தலைமை யிடத்தை வகிக்குமாறு செய்தார்.

## கு. 223. டிஸ்ரேலி அமைச்சு இயற்றிய சமூக நலனுக்கான சீர்திருத்தங்கள் (1874-1880).

தொழிலாளர் வீடுகள் சட்டம்[3] (1875) நகர சபைகளை மக்களின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க மருத்துவ உத்தியோகஸ்தர்களை நியமிக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்தியதோடு, ஆரோக்கியமும் அழகுமற்ற அவர்களது பழைய வீடுகளுக்குப் பதில் தொழிலாளர்களுக்கு ஆரோக்கியமான வீடுகளை நியாயமான குடிக்கூலிக்குக் கட்டிக்கொடுக்கவும் அவைகளுக்கு அதிகாரம் வழங்கியது.

நட்புச் சங்கங்கள் சட்டம்[4] (1875) அச்சங்கங்களைத் துரைத்தனத்தின் மேற்பார்வையின்கீழ்க் கொண்டுவந்து சிக்கனத்தைத் தூண்டியது.

'நட்புச் சங்கங்கள்' தம் அங்கத்தினரிடமிருந்து சொற்ப வாரக் கட்டணங்களைப் பெற்று அவர்கள் நோய்வாய்ப்படும் போது அவர்களுக்குத் தேவையானவைகளைத் தந்தன. அவற்றுள் பல அயோக்கியர்கள் சூதுகளாலும் திறமையற்ற நிருவாகத்தாலும் மிகுந்த ஏழ்மைநிலையிலிருந்தன.

வேலை கொடுப்போர்-வேலை செய்வோர் சட்டம்[5] (1875) 'சூழ்ச்சி செய்தல்'[6] குற்றத்துக்காக ஒறுக்கப்படுதலினின்றும் தொழிற்கட்டுப்பாடு சங்கங்களைப்[7] பாதுகாத்தது.

ஒரு கால் நூற்றாண்டு காலம் வரையில் அது தொழிற் கட்டுப்பாடு சங்க இயக்கத்துக்கு ஒரு பேருரிமைச் சட்டத்தைப் போன்றிருந்தது.[8]

---

1. Imperial Federation. 2. 'Foreign Policy'. 3. Artisans Dwelling Act. 4. The Friendly Societies Act. 5. The Employers and Workmen Act. 6. Conspiracy. 7. Trade Unions. 8. The Magna Charta of Trade Unionism.

பொது நிலங்களுக்கு (சமுதாய நிலங்களுக்கு[1]) வேலியிடல் சட்டம்[2] (1876) நிலம் படைத்தவர்கள் பொது நிலங்களைத் தங்கள் சொத்துக்களோடு சேர்த்துக்கொள்ளுதலைத் தடுத்தது.

இதனுடைய முதல் விளைவுகளுள் ஒன்று லண்டன் கிழக்கு முனைக்கு[3] எப்பிங் காட்டை[4] விளையாட்டு நிலமாக மீத்துக்கொடுத்தமையாம்.

வியாபாரச் சரக்குக் கப்பல்கள் சட்டம்[5] (1876) வியாபாரச் சரக்குகளை ஏற்றிச்செல்லும் கப்பல்களில் தொழில் நிலையை ஒழுங்குபடுத்தியது.

பேராசை கொண்ட சில அயோக்கிய கப்பல் சொந்தக்காரர்கள் பாதுகாப்பு உறுதிப் பணம்[6] எப்படியும் வருமென்ற ஆசையினால் உரமற்ற பழைய கப்பல்களையும் சரக்கேற்றிச் செல்லவிட்டுக்கொண்டிருந்தனர். இதனால் பிரயாணத்தில் அபாயங்கள் நேரப் பல கப்பல் தொழிலாளர்கள்[7] உயிரிழந்தனர். பார்லமென்ட் அங்கத்தினர் சாம்யுவெல் ப்ளிம்சால்[8] என்பவர் இதை அம்பலத்துக்குக் கொண்டுவந்தார். ஒரு கப்பலில் எவ்வளவுக்குச் சாமான்களை ஏற்றலாம் என்பதைக் குறிப்பிட அதன் பக்கத்தில் வரையப்பட்டிருக்கும் கோடு இப்போதும் 'ப்ளிம்சால் குறி'[9] எனப்படுகிறது.

ஆக்கத்தொழிற்சாலைகள் தொழிற்கூடங்கள் சட்டம்[10] (1878) 1833-ல் இயற்றப்பட்ட பிரசித்திபெற்ற சட்டத்துக்குப் (§282) பிறகு வேலை வாங்குதல் சம்பந்தமான விதிகளை ஒழுங்குபடுத்த அப்போதைக்கப்போது இயற்றப்பட்ட பல சட்டங்களின் தொகுப்பு.

## ரு. 224. இடஆட்சிமுறை[11] வளர்ச்சி (1815-1914).

புதிய ஏழைகள் சட்டம்[12] (1834) ஏழைகளுக்கு அளிக்கும் ஆதரவை மேற்பார்வையிடவும் ஏழைகள் வரியை ஏற்படுத்தவும் ஒவ்வோரிடத்திலும் பாதுகாப்பாளர் சபைகளை[13] ஏற்படுத்தியது (§283).

முனிசிபல் கார்ப்போரேஷன் சட்டம்[14] (1835) பழைய 'கார்ப்பொரேஷன்க'ளுக்குப் பதிலாக (இவை தாமே இடங்

---

1. Commons. 2. The Enclosure of Commons Act. 3. East End. 4. Epping Forest. 5. The Merchant Shipping Act. 6. Insurance. 7. Seamen. 8. Samuel Plimsoll. 9. 'The Plimsoll Mark.' 10. The Factory and Workshop Act. 11. Local Government. 12. The New Poor Law. 13. Local Boards of Guardians. 14. The Municipal Corporation Act.

களை நிரப்பிக்கொண்டு ஊழல்கள் மிகுந்திருந்தன) எல்லாப் பட்டணங்களிலும் தேர்ந்தெடுக்கப்பெறும் நகர சபைகளை[1] ஏற்படுத்தியது.

இது 1832-ம் ஆண்டு பார்லமென்ட் சீர்திருத்தச் சட்டத்தின் விளைவு.

கல்விச் சட்டம் (1870) துரைத்தனம் புதிதாகக் கட்டிக்கொண்டுவரும் ஆரம்ப பள்ளிக்கூடங்களைப் பராமரிக்கும் பொறுப்பேற்றுக்கொள்ள ஆங்காங்கே பள்ளிக்கூடச் சபைகளைத் தேர்ந்தெடுக்க ஏற்பாடு செய்தது.

இடஆட்சி சபை[2] (1871) ஏழைகளுக்கு ஆதரவு,[3] நாட்டினர் ஆரோக்கியம்[4], குடியிருப்பு வசதிகளின் அபிவிருத்தி[5], பெரிய பாட்டைகள் முதலியவை விஷயமாகப் பற்பல இடக் குழுவுகளோடு[6] துரைத்தனச் சார்பாகத் தொடர்புவைத்துக்கொள்ள ஏற்படுத்தப்பட்டது.

1919ல் இச்சபையின் வேலைகளுள் பல ஆரோக்கிய அமைச்சர் இலாக்காவிற்கு[7] மாற்றப்பட்டன.

இடஆட்சிமுறைச் சட்டம்[8] (1888) கௌன்டி சபைகளை[9] ஏற்படுத்தியது. நகர சபைகள் பட்டணங்களில் செய்யும் வேலைகளை இவை நாட்டுப்புறப் பிரிவுகளுக்குச்[10] செய்தன. அதுவரையில் பாட்டைகள், ஆரோக்கியம் முதலிய விஷயங்களைக் கௌன்டி அமைதித்தலைவர்கள் கவனித்துக்கொண்டு வந்திருந்தார்கள் (§319).

இந்தச் சட்டத்தின் விளைவாக லண்டன் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட சபையுடன் கூடிய கௌன்டி யாக்கப்பட்டது. இதற்குமுன் அதன் விஷயங்கள் பல இடக்குழுக்களால் கவனிக்கப்பட்டு ஒரே குழப்பத்திலிருந்தன.

## கு. 225. கல்வி வளர்ச்சி (1815-1914).

1833. பள்ளிக்கூடங்கள் கட்ட முதல் துரைத்தனப் பணவுதவி ஏற்பாடு[11].

தம்மிச்சையாகத் தோன்றிய சங்கங்களுக்குப்[12] பணம் கொடுக்கப்பட்டது (கு. 193).

1. Town Councils. 2. Local Government Board. 3. Poor Relief. 4. Public Health, 5. Housing Improvements. 6. Local Bodies. 7. The Ministry for Health. 8. Local Government Act. 9. County Councils. 10. Rural Districts. 11. Government Grant. 12. The Voluntary Societies.

1839. உதவிப்பணம் அதிகரிக்கப்பட்டது; கொடுக்கும் பணம் ஒழுங்காகச் செலவிடப்படுகிறதா என்று கவனிக்கப் பார்வையாளர்[1] நியமிக்கப்பட்டனர்.

உத்தியோக அதிகாரிகள் துரைத்தனம்[2] மெதுவாக வளர்ந்து கொண்டு வருகிறதைக் கவனியுங்கள்.

1861. உதவிப் பணம் மேலும் அதிகரிக்கப்பட்டது. பரிட்சை முடிவுகளையொட்டி உதவிப்பண மளிக்கத் திட்டமாயிற்று.

அதாவது, அதிகாரிகளின் பரிட்சையில் எந்தப் பள்ளிக்கூடத்தில் அதிக பிள்ளைகள் தேறுகிருர்களோ அந்தப் பள்ளிக்கூடம் அதிக உதவிப்பணம் பெற்றது.

ஆயினும், அந்நூற்றண்டின் நடுவில் நாட்டினருள் பாதிக்குக் குறைவானவர்களே படிக்கவும் எழுதவும் தெரிந்திருந்தார்கள்.

1868. பொதுப் பள்ளிக்கூடங்கள் சட்டம்.[3]

ஏற்கெனவே இருந்த ஒன்பது பொதுப் பள்ளிக்கூடங்களுள் ஏழு பள்ளிக்கூடங்களின் அதிகாரிகள் சபைகள் திருத்தியமைக்கப்பட்டன. தற்காலத்திய பொதுப்பள்ளிக்கூடங்கள் திட்டம் நிறுவப்பட்டது. இது பிரிட்டனுக்கே ஒரு தனிச் சிறப்பினை அளிப்பதாகும்.

1870. பார்ஸ்டரின் கல்விச் சட்டம்.[4] இது நாடு முழுமையும் ஆரம்ப கல்வியைப் பரப்பியது.

1880. பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்குச் செல்லுதல் கட்டாயப்படுத்தப்பட்டது.

அதுவரையில் அவ்வாறு செய்யப் போதிய பள்ளிக்கூடங்கள் இல்லை.

1890. ஆரம்ப கல்வி இலவசமாக்கப்பட்டது.

அதுவரையில் பெற்றேர் வாரத்துக்குச் சில பென்னிகள் கொடுத்துவந்தனர்.

1899. கல்வி இலாக்கா[5] ஏற்படுத்தப்பட்டது.

அதுவரையில் கல்வி விஷயங்களைக் கௌன்சிலின் துணைத் தலைவர்[6] கவனித்து வந்தார்.

---

1. Inspectors. 2. Bureaucracy. 3. Public Schools Act. 4. Forster's Education Act. 5. Board of Education. 6. Vice-President of the Council.

1902. பால்பரின் கல்விச் சட்டம்[1] பள்ளிக்கூடச் சபைகளைக்[2] கலைத்துவிட்டுத் துரைத்தனப் பண உதவி பெறும் பள்ளிக்கூடங்களை நகர சபைகளின் அதிகாரத்தின்கீழும் கௌன்டி சபைகளின்கீழும் கொண்டுவந்தது.

மேலும், இச்சட்டம் வேண்டிய இடங்களிலெல்லாம் உயர் தரப் பள்ளிக்கூடங்களைக் கட்ட மேற்கூறிய இடஆட்சிச் சபைகளுக்கு ஊக்க மளித்தது. உயர்தரக் கல்வியால் பயன்பெறக் கூடியவர்களுக்கு அதை அளிக்கவேண்டுமென்பது இதன் நோக்கம். அப்பள்ளிக்கூடங்களில் ஆரம்ப பள்ளிக்கூடங்களிலிருந்து வருபவர்களுக்கும் சில 'இலவச இடங்கள்'[3] ஒதுக்கிவைக்கப் பட்டன.

## கு. 226. அயர்லண்ட் சிக்கலின் காரணங்கள்.

1. சரித்திரம்: பண்டை நாளில் இங்லிஷ் துரைத்தனத்தாரிடம் பட்ட கஷ்டங்களின் நினைவு.

அடிக்கடி நிலங்களைப் பறிமுதல் செய்தமை (§ 248); குற்றச் சட்டங்களும் வாணிபச் சட்டங்களும் (§ 248); காத்தோலிக்கர் விடுதலை விஷயமாக நடந்த 'வஞ்சனை' (§ 250).

2. இனப் பகை: தனி உரிமைகள் பெற்றிருந்த இங்லிஷ் மேல்வகுப்பினருக்கும் கெல்ட் குடியானவர்களுக்கும்.

பண்டைநாட் பறிமுதல்களால் அயர்லண்டில் இவ்விரு இனத்தாருக்குள்ளும் இப்பிளவு ஏற்பட்டது.

3. மதப் பகை: பெரும்பான்மையான மக்கள் காத்தோலிக்கர்; தனி உரிமைகள் பெற்றிருந்த சிறுபான்மையானவர்கள் எதிர்ப்பு மதத்தினர். ஆகவே, எதிர்ப்பு மதத்துக்கும் நிலச் சொந்தத்துக்கும் தொடர்பேற்பட்டது.

இப்பகையினைக் குடியானவர்களிடையே பெருஞ் செல்வாக்கு பெற்றிருந்த காத்தோலிக் குருமார்கள் தூண்டிப் பெருக்கினர்.

4. பொருளாதார கஷ்டங்கள்: பெருகிய மக்கள் கூட்டம் அடிக்கடி கெட்டுப்போகக்கூடிய ஒருணவுப் பயிரை நம்பியிருந்தது.

மற்ற உணவுப் பயிர்களைவிட உருளைக்கிழங்கு ஒரு ஏகராவுக்கு அதிக மக்களுக்கு ஆதர வளிக்கும். அந்த அளவுவரை மக்கள் தொகை பெருகலாம். ஆயினும், இப்பயிர் முன்காலத்தில்

1. Balfour's Education Act. 2. School Boards. 3. "Free places".

அடிக்கடி நோய்பிடித்து அழிந்துவிடுவதுண்டு. மேலும், பயிர்த் தொழிலுக்குப் பதிலாக மக்களுக்கு வேலைகொடுக்கக்கூடிய கைத் தொழில்கள் அங்கில்லை.

5. நிலச் சட்டங்கள் : அநேகமாக நிலங்களின் சொந்தக்காரர்கள் பெரிய மனிதர்கள் ; அவர்கள் வருஷக் குத்தகைக்கு நிலங்களைக் குடியானவர்களுக்குப் பயிரிட விட்டார்கள்.

குடியானவர்களிடையே நிலங்களுக்காக அதிக பரபரப்பிருந்ததால் அவர்கள் குத்தகைப் பணத்தை ஒருவரோடொருவர் போட்டியிட்டு உயர்த்திக்கொண்டே போனார்கள். கடைசியில் அவ்வளவு பெருந் தொகைகளை அவர்களால் கொடுக்க முடியாமல் தவித்து நிலத்துச் சொந்தக்காரர்கள் இட்டது சட்டமாய் நடக்க வேண்டிவந்து அல்லற்பட்டனர். குத்தகைக் காலம் மிகக் குறுகலாக இருந்தமையால் அவர்களால் நிலங்களைப் பண்படுத்தி அவற்றின் வளத்தைப் பெருக்க முடியவில்லை. ஆகவே, அவர்கள் மிக ஏழ்மை நிலைமையிலேயே இருக்கவேண்டியவர்களாயினர். பல சமயங்களில் அவர்கள் பட்டினி கிடப்பதும் உண்டு.

6. உள்ளூரில் வாழாத நிலச் சொந்தக்காரர்கள் : இவர்கள் தங்களுக்கு அயர்லண்டில் கிடைக்கும் குத்தகைப் பணங்களை இங்லண்டில் செலவிட்டனர்.

இதனால் நாட்டின் செல்வம் வறண்டது.

டிஸ்ரேலி அயர்லண்டின் அல்லல்களை மூன்று தொடர்மொழிகளில் சுருக்கிக் கூறினார் : 'பட்டினி கிடக்கும் மக்கள் கூட்டம்; உள்ளூரில் வாழாத உயர்குடிப் பிறப்பினர் ; அந்நியர் மதஸ்தாபனம்.'

## கு. 227. இங்லிஷ் அரசியல் போக்கை அயர்லண்ட் பாதித்த விதம்.

**1829.** காத்தோலிக்கர் விடுதலை வெல்லிங்டன்கீழிருந்த பழைய டோரி கட்சியைக் குலைத்தது (§278).

**1834-38.** ஓகானலுடன் உறவு மெல்போர்ன்கீழிருந்த விக் கட்சியைக் குலைத்தது (§284).

**1846.** தானியச் சட்டங்களை ரத்து செய்தது (அயர்லண்டில் நேர்ந்த உருளைக்கிழங்குப் பஞ்சத்துக்குப் பரிகாரம் தேட இது அவசியமாகக் கருதப்பட்டது) பீலின்கீழிருந்த புதிய டோரி கட்சியைக் குலைத்தது (§287).

**1886.** சுயாட்சித் திட்டம் க்ளாட்ஸ்டன்கீழிருந்த தாராளப் போக்கினர் கட்சியைக் குலைத்தது (§318).

**கு. 228. ப்ரான்ஸுடன் தொடர்பு (1867-1914).**

**1870.** ப்ரான்ஸ்-ஜெர்மனிப் போர்: போரிட்ட இரு நாடுகளையும் க்ளாட்ஸ்டன் நடுநிலை வகித்த பெல்ஜத்தில் போரிடாதபடி ஒப்புக்கொள்ளச் செய்தார்.

**1878-82.** ஈஜிப்டில் இருநாடுகள் கண்காணிப்பு: கடன் கொடுத்திருந்தவர்களுக்கு வட்டியும் முதலும் திரும்பி வருவதற்காகக் கெடிவின் துரைத்தனத்தைப் பிரிட்டனும் ப்ரான்ஸும் சேர்ந்து கண்காணித்தன (§317). அரபி பாஷாவின் கலகத்தினுல் கஷ்டங்கள் பெருகிவந்தபோது ப்ரான்ஸ் விலகிவிட்டதால், பிரிட்டனே அவ்விஷயத்தைக் கவனித்துக் கொள்ளவேண்டியதாயிற்று (§317).

இதனுல் இரு நாடுகளுக்கும் அதிக மனத்தாங்கல் ஏற்பட்டது.

**1898.** பாஷோடா நிகழ்ச்சி: ப்ரான்ஸ் நைல் ஆற்றின் மேல்பாகங்களைக் கைப்பற்ற முயன்று பிறகு விட்டுவிட்டது (§323).

**1903-4.** 'ஆன்டான்ட் கார்டியல்'[1]: இரு நாடுகளின் மனஸ்தாபங்களெல்லாம் நீங்கி இரு நாடுகளும் தம்மை மற்ருெருவர் தாக்கும்போது ஒன்றுக்கொன்று துணைநிற்க வேண்டுமென்று ஒப்புக்கொண்டன (§331).

தென் ஆபிரிகா போரின்போது ஜெர்மனி காட்டிய பகைமை 'கன்னியமாகத் தனித்திருத்த'லின்[2] ஆபத்தைப் பிரிட்டிஷ் அரசியல் அறிஞர்களுக்குத் தெளிவாக எடுத்துக்காட்டியது.

**கு. 229. ருஷ்யாவுடன் தொடர்பு (1867-1914).**

**1871.** ருஷ்யா கருங்கடலில் போர்க்கப்பல்களை வைத்திருக்கக்கூடாது என்று விதித்த பாரிஸ் உடன்படிக்கையின் நிபந்தனைப்படி (§295) இனி அது நடக்கமுடியாதென்று அறிவித்தது. தனியாக நின்று அவ்வுடன்படிக்கையின் நிபந்தனையை வற்புறுத்த முடியாமையால் பிரிட்டன் விட்டுக் கொடுக்கவேண்டியதாயிற்று (லண்டன் மகாநாடு) (§310).

**1877-8.** ருஷ்யா-துருக்கிப் போரில் பிரிட்டிஷ் பொது மக்கள் ருஷ்யாவை ஆதரிக்கக்கூடாதென்று தீவிரமாக

1. "Entente Cordiale". 2. 'Splendid isolation'.

இருந்ததால், டிஸ்ரேலி கான்ஸ்டான்டிநோப்பிலுக்கு ஒரு கப்பற்படையை அனுப்பிவைத்தார். இதனால் சான் ஸ்டீபானோ உடன்படிக்கையைச் செய்துகொள்ளவும், பிறகு பெர்லின் காங்ரெஸில் அதைத் திருத்தியமைத்ததற்கும் சார் ஒப்புக்கொண்டார் (§313).

இம் முயற்சியில் அடைந்த ஏமாற்றத்துக்குப் பரிகாரமாக சார் தமது அதிகாரத்தையும் செல்வாக்கையும் ஏஷியாவில் பரப்பலானார். இதனால் இந்தியாவுக்கு ஆபத்து வந்துவிடுமென்ற பீதி கிளம்பியதால், ஆப்கானிஸ்தானத்தில் பிரிட்டிஷ் செல்வாக்கை நிலை நாட்டுவதற்காக டிஸ்ரேலி முயன்று படுதோல்வியுற்றார் (§ 314).

1907. 'ஆன்டான்ட் கார்டிய'லுக்கு இணையாகப் பிரிட்டன் ப்ரான்ஸின் நட்பு நாடாகிய ருஷ்யாவுடனும் ஒரு சமரச ஏற்பாடு செய்துகொண்டது. அதன்படி சிறப்பாகப் பெர்சியாவைப்பற்றி இருநாடுகளுக்குமிருந்த சில மனஸ்தாபங்கள் களையப்பட்டன (§331).

## கு. 230. ஆபிரிகா ஆராய்ச்சி[1].

19-ம் நூற்றாண்டின் நடு வரையில் ஆபிரிகாவின் உட்பாகங்களைப்பற்றித் தெரிந்தது மிகக் குறைவே. ஆயினும், இந்த 'இருண்ட கண்ட'த்தைப்பற்றி[2] 1850-லிருந்து 1880-க்குள் பல விவரங்கள் தெரியலாயின.

பர்ட்டனும் ஸ்பீக்கும்[3] (1857-60) டாங்கனயிக்கா ஏரியையும் விக்டோரியா நையான்சாவையும் கண்டுபிடித்தனர்.

பேக்கர்[4] (1860–64) ஆல்பர்ட் நையான்சா ஏரியைக் கண்டுபிடித்தார்.

நாச்டிகால்[5] (1869-74) லிபியா பாலைநிலத்தின் மூலம் சாட் ஏரிவரை சென்று பார்த்தார்.

ஷ்வீன்பர்த்[6] (1869-71) நைலாற்றின் மேல்பாகங்களையும் அபிசீனியாவையும் ஆராய்ந்தார்.

டேவிட் லிவிங்ஸ்டன்[7] (1843-73) பெச்சுவானலண்டில் மதப்பிரசாரம் செய்ய ஆரம்பித்து, சாம்பெசி ஆறு நெடுகச் சென்று பார்த்து, விக்டோரியா நீர்வீழ்ச்சியையும் நையாசா ஏரியையும் கண்டுபிடித்து, காங்கோ ஆற்றின் மேல்பாகங்களைப் படத்தில் சேர்த்தார். பிறகு அவரைப்பற்றி யாதொரு தகவலும்

1. The Exploration of Africa. 2. The 'Dark Continent'. 3. Burton and Speke. 4. Baker. 5. Nachtigall. 6. Schweinfurth. 7. David Livingstone.

கிடைக்காததால், அவரைக் கண்டுபிடிக்கப் பத்திரிகைகளின் சொந்தக்காரர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து பணம் போட்டுப் போர் நிருபராகப் பெயரெடுத்திருந்த ஸ்டான்லி[1] என்ற அமெரிக்கரை அனுப்பிவைத்தார்கள். ஆயினும், லிவிங்ஸ்டன் தாய் நாடு திரும்பிவர மறுத்துவிட்டுத் தமது நீக்ரோ சேவர்கள் நடுவில் தங்கியிருந்து இறந்தார்.

ஸ்டான்லி (1870-87) காங்கோ நாட்டை ஆராய்ந்து அதன் விளைபொருள்கள் வாணிபத்துக்கு உதவுமென்பதை அறிவித்தார் (§320).

## கு. 231. சால்ஸ்பரி பிரபு ராபர்ட் செசில்[2] (1830-1903)

(எலிசபெத் அரசிகாலத்து பர்லி பிரபுவின்[3] வழி வந்தவர்.)

டார்பி-டிஸ்ரேலி அமைச்சின் அங்கத்தினராக இருந்தார் (1866-67). சீர்திருத்த மசோதா விஷயமாக விலகினார் (§306).

டிஸ்ரேலி அமைச்சில் முதலில் இந்தியா காரியதரிசி, பிறகு வெளிநாட்டுக் காரியதரிசி (1874-80). பெர்லின் காங்ரெஸுக்குப் பீக்கன்ஸ்பீல்டோடு[4] சென்றார் (1878).

அங்கு 'தப்பான குதிரையை ஆதரித்த'தாகப்[5] பிறகு ஒப்புக்கொண்டார் (§313).

க்ளாட்ஸ்டன் அயர்லண்ட் சுயாட்சி மசோதா விஷயமாக ஆதரவிழந்தபோது, இவர் தலையமைச்சரானார் (1886-1892).

வெளிநாட்டுக் காரியதரிசி வேலையையும் பார்த்தார். 'கண்ணியமிக்க தனிநிலை'க்[6] கொள்கை: ஜெர்மனிக்குமட்டும் பரிவு காட்டினார்.

க்ளாட்ஸ்டனின் இரண்டாவது சுயாட்சி மசோதா தள்ளுபடியானபோது மீண்டும் தலைமையமைச்சரானார் (1895-1902).

மீண்டும் வெளிநாட்டுக் காரியதரிசி வேலையைப் பார்த்தார். வெனிஜுவெல்லா, பஷோடா (§323).

உடல்நலம் குன்றியதால் அரசியல் வாழ்க்கையிலிருந்து விலகி ஓய்வெடுத்துக்கொண்டார் (1902). அடுத்த ஆண்டு உயிர் நீத்தார்.

---

1. Stanley. 2. Robert Cecil, Lord Salisbury. 3. Lord Burghley. 4. Beaconsfield. 5. 'Backed the wrong horse'. 6. Splendid Isolation.

அவரது 'கண்ணியமிக்க தனிநிலை'க் கொள்கை இப்போது பொருந்தவில்லை. அவருக்குப் பின் வெளிநாட்டுக் காரியதரிசியாயிருந்த லான்ஸ்டௌன் பிரபு[1] பிரான்ஸுடன் 'ஆன்டான்ட்' ஒப்பந்தம்[2] செய்துகொண்டார் (§327).

## கு. 232. ஜோசெப் சேம்பர்லின்[3] (1836-1914).

ஆக்கத்தொழிலில் ஈடுபட்டுச் செல்வம் திரட்டியவர்; பர்மிங்காம் நகரத்து லார்ட் மேயர்; பார்லமென்ட் அங்கத்தினர் (அடிப்படைச் சீர்திருத்த வாதி).[4]

க்ளாட்ஸ்டனின் 1880-ம் ஆண்டு அமைச்சில் வாணிப இலாக்காவின் தலைவராக[5] இருந்தார்.

தீவிரமான 'பேரரசுப் போக்கினர்'[6]; 'பேரரசு இணைப்பாட்சிச் சங்க'த்தை[7] நிறுவியவர்களுள் ஒருவர்.

அயர்லண்ட் சுயாட்சி விஷயமாகக் கருத்து வேறுபாடு கொண்டு க்ளாட்ஸ்டனின் கட்சியிலிருந்து விலகித் 'தாராள இணைப்புப் பிரிவின'ரின்[8] தலைவரானார்.

சால்ஸ்பரி பிரபு அமைச்சில் (1895-1902) குடியேற்ற நாடுகள் காரியதரிசியாக இருந்தார்.

லிவெர்ப்பூலில் வெப்பநாடுகளுக்கான மருத்துவத்தைக் கற்பிக்க ஒரு கலாசாலையையும்[9] க்யூவில் வெப்பநாடுகளில் பயிர் செய்தலைப்பற்றி ஆராய ஒரு ஆராய்ச்சிப் பண்ணையையும்[10] ஏற்படுத்தினார். மன்னராணைக் குட்பட்ட குடியேற்றங்களை[11] விருத்தி செய்தார்; மேற்கிந்தியத் தீவுகளோடு பழ வியாபாரம் தொடங்கினார்; நைஜீரியா முதலிய நாடுகளில் இருப்புப்பாதைகள் போட ஏற்பாடு செய்தார், குடியேற்றங்கள் மகாநாடுகளில் தலைமை வகித்தார். 1897, 1902 போயெர்களோடு பிரிட்டன் தொடுத்த போரை நடத்தினார் (§ 326).

தென் ஆபிரிகா போரின் பிறகு சுங்கத் தீர்வைத் திட்டத்தைச் சீர்திருத்தம் (§327) செய்வதற்கான[12] கிளர்ச்சியைத் தொடங்க அமைச்சினின்றும் விலகினார். ஆயினும், அதற்கு 1906-ம் ஆண்டு நடந்த தேர்தலில் சிறிதும் ஆதரவு கிடைக்க

---

1. Lord Lansdowne. 2. The 'Entente' with France. 3. Joseph Chamberlain. 4. Radical M P. 5. President of the Board of Trade. 6. Imperialist. 7. Imperial Federation League. 8. Liberal Unionist. 9. School of Tropical Medicine at Liverpool. 10. Research into Tropical Agriculture at Kew. 11. Crown Colonies. 12. Tariff Reform.

வில்லை (§327). பிறகு உடல்நலம் குன்றியதால் அரசியல் வாழ்க்கையினின்றும் விலகிக்கொண்டார்.

அடிப்படைச் சீர்திருத்தம்—இணைப்பாட்சிக் கொள்கை—போரசுப் போக்கு—சுங்கத் தீர்வைத் திட்டச் சீர்திருத்தம்.

## கு. 233. தென் ஆபிரிகா போரின் போக்கு (1899-1902).

**மூன்று பிரிவுகள்**

1. 1899௵ அக்டோபர்௴ முதல் 1900௵ பெப்ருவரி௴ வரை: தோல்வி. (படைத் தலைவர்: சர் ரெட்வெர்ஸ் புல்லர்[1]).

டிசெம்பர்௴ ஒரே 'இருண்ட வாரத்'தில்[2] மூன்று பிரிட்டிஷ் படைப்பிரிவுகள் முறியடிக்கப்பட்டன: மாகர்ஸ்பான்டீன், ஸ்டார்ம்பர்க், துகேலா ஆற்றங்கரை[3]. பிரிட்டிஷ் படைகள் லேடிஸ்மித், கிம்பெர்லி, மேபெகிங்[4] என்ற இடங்களில் அடைபட்டுவிட்டன.

2. 1900௵ பெப்ருவரி௴ முதல் நவெம்பர்௴ வரை: வெற்றி. (படைத் தலைவர்: ராபர்ட்ஸ் பிரபு[5]).

கிச்செனர்[6] இவருக்குத் துணையாயிருந்த இராணுவ உத்தியோகஸ்தர்கள் குழுவின் தலைவராயிருந்தார்[7]. பேரரசு மாகாணங்கள்[8] அளிப்பதாகக் கூறிய உதவி ஏற்றுக்கொள்ளப்பட்டது லண்டனிலும் நாட்டுப்புறங்களிலும் படையில் சேரத் தம்மிச்சையாக வந்தவர்கள்[9] பட்டாளங்களாகத் திரட்டப்பட்டனர்.

தமக்குப் புதுப் பலமாக வந்த படைகளைக் கொண்டு[10] ராபர்ட்ஸ் எதிரிகளை நேரே எதிர்ப்பதற்குப்பதில் பக்கங்களில் எதிர்த்துச் சூழலானார்.

பெப்ருவரி௴: கிம்பெர்லிக்கு விடுதலை: போயெர்களின் முக்கிய படை (க்ரான்ஜீ[11] என்பவர் கீழிருந்து) பார்டெபர்க்[12] என்னுமிடத்தில் அழிவுற்றது; லேடிஸ்மித்துக்கு விடுதலை.

மார்ச்௴: ப்ளூம்பான்டீன் பிடிபட்டது (ஆரஞ்சு சுயேச்சை நாடு[13] போரினின்றும் விலகியது).

மே௴: மேபெகிங்குக்கு விடுதலை.

1. Sir Redvers Buller. 2. 'Black Week'. 3. Magersfontein, Stormberg, Tugela River. 4. Lady Smith, Kimberley, Mafeking. 5. Lord Roberts. 6. Kitchener. 7. Chief of Staff. 8. The Dominions. 9. Volunteers. 10. Reinforcements. 11. Cronje. 12. Paardeburg. 13. Orange Free State.

ஜூன்மீ: பிரிட்டோரியா[1] பிடிபட்டது. ட்ரான்ஸ்வால குடியரசுத் துரைத்தனத்தின்[2] முடிவு,

நவெம்பர்மீ: ராபர்ட்ஸ் திரும்பினார். கிச்செனர் அவ்வேலையில் அமர்ந்து போரைத் தொடர்ந்து நடத்தினார்.

### 3. 1900௵ நவெம்பர்மீ முதல் 1902௵ மேமீ வரையில்: துப்புரவாக்கல்[3]: (படைத் தலைவர்: கிச்செனர் பிரபு).

அங்குமிங்கும் தனிப்பட்டிருந்த சிறுசிறு படைஞர் கூட்டங்களைத் தாக்கித் துடைக்க நாட்டின் இயற்கை யமைப்பு எளிதில வசதியளிக்கவில்லை. (டி வெட்[4] என்ற ஒரு போயெர் தலைவரைப் பிடிப்பது மிகவும் கடினமாயிருந்ததால், அவரைப் பிரிட்டிஷ் மக்கள் ஒரு வீரராகவே மதிக்கலாயினர்). பண்ணைகளிலிருந்த போயெர்கள் போர்செய்துகொண்டிருந்த போயெர்களுக்கு அதிகமாகத் துணைசெய்துவந்ததால் பிரிட்டிஷார் அப் பண்ணைகளை அழித்துப் படையில் சேராத சாதாரண மக்களையெல்லாம் கூட்டங்களாக ஒன்றுசேர்த்துப் பாசறைகளில்[5] வைத்து உணவளித்தனர். (இதைக் குறிப்பிட்டே, தாராளப் போக்கினர் தலைவர் காம்பெல் பானெர்மன் பிரிட்டிஷ் சேனை 'அநாகரிக முறைக'ளைக் கையாளுகிறதென்று பழித்தார்.)

முடிவில் நீடித்துத் தாங்கமுடியாமல் போயெர்களின் எதிர்ப்பு ஒடுங்கிவிட்டது.

### வீரீனிகிங் உடன்படிக்கை (1902௵ மேமீ).

போயெர்கள் சுயேச்சையான தனிநிலையை இழந்தனர். ஆயினும், பிரிட்டிஷ் பேரரசுக்குள் அவர்கள் சுயாட்சி பெறுவார்கள் என்ற உறுதி அளிக்கப்பெற்றனர்.

## கு. 234. பேரரசு மாகாணங்களுள் பொறுப்பாட்சி[6].

குறிப்பு: 'பொறுப்பாட்சி' என்பது தேர்ந்தெடுக்கப்பட்ட பார்லமென்டுக்குப் பதில்சொல்லக் கட்டுப்பட்டவர்களான அமைச்சர்களால் நடைபெறும் துரைத்தனம். அதில் தாய் நாட்டுத் துரைத்தனத்தின்[7] பிரதிநிதியாக இருப்பவர் கவர்னர் ஜெனரல்[8] ஒருவரே. அவர் பேரரசுத் துரைத்தனத்தில் மன்னர் இருக்கும் நிலையிலிருக்கிறார். பேரரசு மாகாணத்துக்கும் ஒரு தனி நாட்டுக்குமுள்ள வேறுபாடு அம் மாகாணத்துக்குத் தனிப்பட்ட வெளிநாட்டுத் தொடர்பு இல்லை யென்பதேயாம். (கானடாமட்டும

---

1. Pretoria. 2. Transvaal Republican Government. 3. 'Clearing up'. 4. De Wet. 5. Concentration Camps. 6. Responsible Government in the Dominions. 7. Home Government. 8. Governor-General.

வாஷிங்டனில் தம் அமைச்சரொருவரைப் பிரதிநிதியாக வைத்துக் கொண்டிருக்கிறது).

கானடா: நாட்டுப் பிரிவுகள் பிரிட்டிஷ் வட அமெரிக்கா சட்டத்தின்படி[1] (1867) ஆட்டாவாவில்[2] ஒரு இணைப்புத் துரைத்தனத்தை[3] நிறுவிக்கொண்டன.

மற்ற விவரங்களை § 302-ல் காணலாம்.

நியு சீலண்ட்: 1852-ல் ஆறு குடியேற்றங்களும் தத்தம தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகளுடன் தனித்தனி நாட்டுப் பிரிவுகளாய் வெல்லிங்டனில் ஒரு கவர்னரும் ஒரு பார்லமெண்டும் கொண்ட ஒரு தலைமைத்துரைத்தனமும் பெற்றன. 1857-ல் அத்தலைமைத் துரைத்தனம் 'பொறுப்புள்ள' தாயிற்று. 1875-ல் தனிப் பிரிவுகள் மறைந்தன.

1890-1903.—'சமூக நலன் துரைத்தனக் கொள்கை'[4] தலைமை யமைச்சர் செடன்[5] என்பவராலும் தொழிலமைச்சர் ரீவ்ஸ்[6] என்பவராலும் விருத்தியடைந்தது. தொழில் சம்பந்தமாகக் கிளம்பும் சச்சரவுகளைத் தீர்த்து முடிவுகட்டத் துரைத்தனக் கடுநிலை மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. அவற்றின் தீர்ப்புகளுக்கு இருதரத்தாரும் கட்டுப்பட வேண்டும். நிலவரிகளைப் படிப்படியாக ஏற்றிக்கொண்டு போனதால் பெரிய சொத்துக்கள் உடைபட்டன. உள்நாட்டுப் பொருள்களுக்கு மிகுதியான பாதுகாப்பு.[7] வெளியார் குடிபுகல்[8] தடுக்கப்பட்டது. அங்குள்ள மக்களுள் நூற்றில் தொண்ணூறுபேர் நியு சீலண்டில் பிறந்தவர்கள்.

ஆஸ்ட்ரேலியா: புதிய தென் வேல்ஸும் தென் ஆஸ்ட்ரேலியாவும் விக்டோரியாவும் டாஸ்மேனியாவும் 1856-ல் தனித்தனியே பொறுப்பாட்சி அளிக்கப்பெற்றன. 1859-ல் க்வீன்ஸ்லண்டும், 1893-ல் மேற்கு ஆஸ்ட்ரேலியாவும் அதே அந்தஸ்தைப் பெற்றன.

இக் குடியேற்றங்கள் நெடுந் தொலைவுகளால் பிரிந்திருந்தமையால் அவைகளை இணைத்து ஒரு நடுத் துரைத்தனம் ஏற்படுத்தும் எண்ணம் 1890-வரையில் எவர்க்குந் தோன்றவில்லை. எனினும், ஜப்பானியர்கள் பசிபிக் பெருங்கடலில் தமது ஆதிக்கத்தைப் பெருக்குவதைத் தடுக்கவும், குறைந்த கூலிக்கு உழைக்க வரும் வெள்ளைக்காரர்களல்லாதவர்களை நாட்டுக்குள் வராமல் தடுக்கவும் எல்லாக் குடியேற்றங்களும் சேர்ந்து ஏகமனதாகச் சில

1. British North America Act. 2. Ottawa. 3. Federal Government. 4. State Socialism. 5. Seddon. 6. Reeves. 7. High Protection. 8. Immigration.

காரியங்களைச் செய்யவேண்டியதின் அவசியம் நாளடைவில் புலப்பட்டது. (இணைப்பாட்சி அமைப்புக்குப் பெருந்தடையாக[1] இருந்தது புதிய தென் வேல்ஸின் போக்கே. சிட்னி பட்டணத்துக் கப்பல் வியாபாரத்தின் நன்மைக்காக அப்பிரிவுமட்டும் கட்டுப்பாடற்ற வாணிப முறையை[2] ஆதரித்தது. மற்றவை உள்நாட்டுப் பொருள்களுக்குப் பாதுகாப்பு வேண்டுமென்றன.)

1900-ல் குடியாட்சி முறையில் 'ஆஸ்ட்ரேலியா பொது நலத் துரைத்தனம்'[3] ஏற்படுத்தப்பட்டது. அதன் மேல் சபைக்குக் கீழ்ச்சபை இயற்றும் சட்டங்களைத் தள்ளிவிட அதிகாரமில்லை.

தொழிற்கட்சி, தொழிற் கட்டுப்பாடு சங்கங்களின் இணைப்பமைப்போடு மிக்க வன்மை பெற்றது. குறைந்த கூலிக்கு உழைக்க வருபவர்களை நாட்டில் நுழையவிடாது தடுத்து உள்நாட்டுத் தொழிலாளர்களுக்கு அதிக கூலிகள் கிடைக்கும்படி செய்து ஆஸ்ட்ரேலியாவைத் 'தொழிலாளர் சுவர்க்க'மாகச்[4] செய்துவிடவேண்டுமென்பது அதன் நோக்கம்.

தென் ஆபிரிகா: முனைக் குடியேற்ற நாடு[5] 1853-லும், நேட்டால் 1893-லும் பொறுப்பாட்சி பெற்றன. 1906-7-ல் (வீரீனிகிங் உடன்படிக்கைப்படி, கு. 233) பழைய போயெர் குடியரசுகள் சுயாட்சி பெற்றன. தென் ஆப்ரிகா இணைப்பமைப்பைப்பற்றி[6] ரோட்ஸ் கண்ட கனவு நிறைவேற இனித் தடையொன்றுமில்லை (§324). நான்கு குடியேற்றங்களின் பிரதிநிதிகளும் டர்பானில்[7] கூடி (1909) ஒரு அரசமைப்புத் திட்டத்தைத்[8] தயாரித்தார்கள்.

அது நியுசிலண்ட் திட்டத்தைப்போன்றிருந்தது. நான்கு குடியேற்றங்களும் நான்கு அரசாங்கப் பிரிவுகளாயின. முனைப் பட்டணத்தில் (கேப்டௌன்)[9] கூடும் டொமினியன் பார்லமென்டுக்கு[10] அவற்றின் இடத் துரைத்தனங்கள் முழுமையும் அடங்கியவை: முதல் மாகாணத் தலைமை அமைச்சர் பழைய போயெர் தளபதிகளுள் ஒருவரான லூயி போத்தா[11].

## கு. 235. பேரரசுப் போக்கின் வளர்ச்சி (1840-1914).

டராம் பிரபுவின் அறிக்கை (1839, §302): எதிர்காலப் பிரிட்டிஷ் பேரரசுப் போக்கினை வரையறுத்துக் காட்டியது: சுயாட்சி.

---

1. Obstacle to Federation. 2. Free Trade. 3. Commonwealth of Australia. 4. Working-man's Paradise. 5. Cape Colony. 6. Union of South Africa. 7. Durban. 8 Constitution. 9. Cape Town. 10. The Dominion Parliament. 11. Louis Botha.

ஆஸ்ட்ரேலியா குடியேற்றங்களுக்கும் (1856) முனைக் குடியேற்ற நாட்டுக்கும் (1853) நியூ சீலண்டுக்கும் (1857) பிரிட்டிஷ் பார்லமெண்ட் விரைந்து சுயாட்சி நல்கியது அவ்வறிக்கையின் முதல் விளைவு. இப்புதிய பேரரசுப் போக்கு கானடா டொமினியன் (மாகாணம்)[1] அமைப்பில் முழுவுருவெடுத்தது (1867, § 302). கானடாவைத் தாய்நாட்டின் 'மூத்த மகள்' என்பர்.

டிஸ்ரேலி தென் ஆபிரிகா இணைப்பமைப்பு ஒன்று நிறுவ முயன்றார் (1876-80).

அது பலிக்கவில்லை; காரணம், போயெர்களின் எதிர்ப்பு. அவர்கள் தங்கள் நாடு சேர்த்துக்கொள்ளப்படுதலை எதிர்த்துநின்று க்ளாட்ஸ்டன் காலத்தில் மீண்டும் சுயேச்சையுற்றனர் (§ 315).

குடியேற்றங்களைப் பிரிட்டனுடன் மேலும் நெருக்கமாகப் பிணைத்து வைக்கப் பேரரசு இணைப்பமைப்புச் சங்கம் என்பதொன்று[2] (பார்ஸ்டர், சேம்பர்லின், ரோஸ்பெரி முதலியோர் அதன் அங்கத்தினர்) 1884-ல் நிறுவப்பட்டது.

விக்டோரியா ஆட்சியின் முதல் ஜூபிலி[3] கொண்டாட்டத்தின்போது லண்டனுக்கு வந்திருந்த குடியேற்றங்களின் தலைமையமைச்சர்கள் முதல் குடியேற்ற நாடுகள் மகாநாடு[4] கூடினார்கள் (1887).

'பொறுப்பாட்சி'[5] முறையில் தலைமை யமைச்சர்கள் தங்கள் மக்களுக்காகப் பேசும் நிலையில் அமைகின்றார்கள் என்பதைக் கவனிக்கவேண்டும்.

குடியேற்ற நாடுகள் காரியதரிசி ஜோசெப் சேம்பர்லின் (கு. 232) இரண்டாம் குடியேற்ற நாடுகள் மகாநாட்டில் (1897) தலைமை வகித்தார். அவற்றின் தலைமை யமைச்சர்கள் வைர விழா கொண்டாட்டத்துக்கு[6] வந்தார்கள்.

அவர்கள் தத்தம் தனிப்பட்ட சுதந்தர அந்தஸ்தை விட்டுக் கொடுக்க விரும்பாததால் நெருக்கமான இணைப்பமைப்பில் ஊக்கங் காட்டவில்லை.

தென் ஆபிரிகா போரின் ஆபத்தான சமயத்தில் தாய் நாட்டின் ஆதரவுக்காகக் குடியேற்ற நாடுகள் திரண்டு வந்தமை பேரரசின் உறுப்பினரைப் பிணைக்கும் பந்தத்தின் உண்மைத் தன்மையைக் காட்டியது.

---

1. The Dominion of Canada. 2. Imperial Federation League. 3. Jubilee. 4. First Colonial Conference. 5. 'Responsible Government.' 6. Diamond Jubilee.

ஏழாம் எட்வர்ட் மன்னர் முடி சூடிக்கொண்டபோது சேம்பர்லின் தலைமையில் மூன்றாம் குடியேற்ற நாடுகள் மகா நாடு கூடியது (1902).

பேரரசு நாடுகளிடையே சுங்க வரிகளில் ஒன்றுக்கொன்று சலுகைகாட்டிக் கொள்ளும் விஷயமாகச்[1] சேம்பர்லின் தலைமையமைச்சர்களின் கருத்தைத் தெரிந்துகொள்ளப் பார்த்தார். (அடுத்த ஆண்டில் அவர் தமது சுங்கவரிச் சீர்திருத்தத் திட்டங்களைத்[2] தொடங்கினர், § 327); ஆயினும், அவர்கள் தத்தம் நாடுகளின் பாதுகாப்புச் சுங்கங்களை[3] மற்ற பேரரசு நாடுகளுக்குக் கூடக் குறைக்க ஒப்புக்கொள்ளவில்லை.

(ஏழாம் எட்வர்ட் 'எல்லா பிரிட்டிஷ் மக்களுக்கும் மன்னர்'[4] என்னும் பட்டம் பெற்றார்).

முதல் பேரரசு மகாநாடு[5] ஆஸ்க்வித் தலைமையில் கூடியது (1907). (1) மகாநாட்டின் பெயர் மாற்றப்பட்டதையும், (2) அது தனியாகக் கூட்டப்பட்டதையும், (3) தலைமையமைச்சரே அதில் தலைமை வகித்ததையும் கவனிக்கவும்.

வெளிநாடுகளுடன் உறவு சம்பந்தமான விஷயங்களைப்பற்றிப் பேச—சிறப்பாக, ஆன்டான்ட் கார்டியலும் ஜெர்மனியின் புகைந்துகொண்டிருக்கும் பகைமையும்—அது கூட்டப்பட்டது. பேரரசு மாகாணங்களும் பிரிட்டனின் போக்கினல் பாதிக்கப்படுமாதலால் அவற்றைக் கலந்து ஆலோசிக்க வேண்டியது அவசியமாயிற்று.

இரண்டாம் பேரரசு மகாநாடு 1911-ல் ஆஸ்க்வித் தலைமையில் கூடியது.

ஆலோசித்த விஷயம்: பேரரசின் பாதுகாப்புக்காக ஒற்றுமையான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள ஒரு நிலையான சபை ஏற்படுத்தப்பட்டது. பெரும் போர் நேர இருப்பதை எல்லோரும் உணர்ந்தனர்.

ஜெர்மனியிலுள்ள போர்க்கட்சியினர் பிரிட்டிஷ் பேரரசு நாடுகளிடையே உள்ள பந்தத்தின் உறுதியைக் குறைத்து மதிப்பிட்டனர்.

## கு. 236. பார்லிமென்ட் சீர்திருத்தத்தின் வளர்ச்சி (1867—1914).

1872. இரகசியமாக ஓட் பதிவுசெய்தல் சட்டம்[6] (க்ளாட்ஸ்டனின் முதல் அமைச்சில் இயற்றப்பட்டது).

---

1. Imperial Preference. 2. Tariff Reform. 3. Protective Tariffs.
4. 'King of all the Britains.' 5. First Imperial Conference.
6. Ballot Act.

இரகசியமாக ஓட் பதிவாவதற்கு ஏற்பாடானதால் லஞ்சம் கொடுத்தலும் பயமுறுத்தலும் குறைந்தன.

1883. கெட்ட பழக்கங்கள் சட்டம்[1] (க்ளாட்ஸ்டனின் இரண்டாம் அமைச்சு இயற்றியது).

மறைமுகமாக லஞ்சம் கொடுத்தல், வண்டிகள் அமர்த்தல் முதலிய கெட்ட பழக்கங்களுக்கு அபராதங்கள் விதித்துத் தேர்தல் அவரவர் செலவிடக்கூடிய பணத்துக்கும் ஓரளவினை வரையறுத்தது.

1884. கௌன்டி ஓட்டுரிமைச் சட்டம்[2] (க்ளாட்ஸ்டனின் இரண்டாம் அமைச்சு இயற்றியது).

பட்டணங்களிலேனும் நாட்டுப்புறங்களிலேனும் 10 பவுன் அல்லது அதற்குமேல் குடிக்கூலி கொடுத்த வீட்டுக்காரர்களுக் கெல்லாம் ஓட்டுரிமை வழங்கியது. விளைவு: பட்டணங்களிலுள்ள கைத்தொழிலாளர்களுக்கு ஓட்டுரிமை வழங்க 1867-ம் ஆண்டு சட்டம் விதித்த நியதிகளை இது பயிர்த்தொழிலாளர்களுக்கு விதித்தது. (தனிப்பட்ட பார்லமெண்ட் பிரதிநிதித்துவத்துக்குத் தகுதியற்றிருந்த சிறிய பட்டணங்களில் வாழ்ந்த தொழிலாளர்களுக்கும் இது ஓட்டுரிமை வழங்கியது. புதிதாக 20 லக்ஷம் பேர் ஓட்டுரிமை பெற்றனர். மொத்தத்தில் ஓட்டுரிமை பெற்றிருந்தவர்கள் 50 லக்ஷம் பேர்.) (முன் சீர்திருத்தச் சட்டங்கள் இரண்டிலும் மொத்தத்தில் ஓட்டுரிமை பெற்றவர்களைவிட அதிகம் பேர் இதனுல் ஓட்டுரிமை பெற்றனர்.)

1885. புதிய இடப்பங்கீடு சட்டம்[3] (கௌன்டி ஓட்டுரிமைச் சட்டத்தோடு இயற்றப்பட்டது).

15,000 மக்களுக்குக் குறைவாக இருந்த சிறிய பட்டணங்கள் தனிப் பிரதிநிதித்துவம் நீக்கப்பட்டுக் கௌன்டிகளில் சேர்த்து விடப்பட்டன. 50,000-க்குக் குறைந்த மக்கள் கூட்டமுள்ள பட்டணங்கள் ஒரே பிரதிநிதியைத்தான் அனுப்பலாம். இந்த ஏற்பாடுகளால் மீதியான இடங்கள் மிகப் பெரிய பட்டணங்களுக்கு அளிக்கப்பட்டன. லண்டன் 37 அதிக இடங்கள் பெற்றது.

1911. பார்லமெண்ட் சட்டம் (ஆஸ்க்வித் அமைச்சு இயற்றியது.)

பிரபுக்கள் சபையின் ஆதரவின்றியே சட்டமாவதற்காக இது காமன்ஸ் சபையில் தொடர்ச்சியாக மூன்றுதரம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதனுல் ஒரு பார்லமெண்ட் சபையின் ஆயுள்

1. Corrupt Practices Act. 2. County Franchise Act. 3. Redistribution Act.

ஏழு ஆண்டுகளிலிருந்து ஐந்தாண்டுக்குக் குறைக்கப்பட்டது. (பிரபுக்களோடு ஒரு பெரிய போராட்டத்துக்குப் பிறகே சட்டமாயிற்று, § 829.)

1911. அங்கத்தினர்க்குச் சம்பளம் (ஆஸ்க்வித் அமைச்சு இயற்றியது).

இதனால் தொழிலாளர்களும் பார்லமென்ட் அங்கத்தினராக முடிந்தது.

## கு. 237. தொழிற் கட்டுப்பாடு இயக்கத்தின் வளர்ச்சி (1867—1914).

ராபர்ட் ஒவென் தொடங்கிய 'பேரியக்கம்'[1] பலிக்காததால் (§ 288), திறமை வாய்ந்த தொழிலாளர்கள் சங்கங்களோடு மட்டும் இவ்வியக்கம் திருப்தியடையவேண்டியதாயிற்று. அவர்களால்தான் கணிசமான கட்டணங்கள் செலுத்த முடிந்தது. அவற்றிற்குப் பதிலாக அவர்கள் 'நட்புச் சங்கங்க'ளின் நன்மைகளைப்[2] பெற்றார்கள்.

நீதிபதிகள் 'வேலை நிறுத்தஞ் செய்வோம்' என்று கூறலையே பயமுறுத்தல்[3] என்று கருதித் தண்டித்ததாலும், தொழிற்கட்டுப்பாடு சங்கங்கள் தங்கள் அயோக்கிய உத்தியோகஸ்தர்களை நீதிமன்றங்கள்முன் விசாரணைக்குக் கொண்டுவர முடியாதென்று கூறியதாலும் பரபரப்பு வளர்ந்தது.

1871. குற்றச் சட்டத் திருத்தம்[4] (க்ளாட்ஸ்டனின் முதல் அமைச்சு இயற்றியது).

அயோக்கிய உத்தியோகஸ்தர்கள் விஷயமாகத் தொழிற்கட்டுப்பாடு சங்கங்களுக்குப் பாதுகாப்பு அளித்ததோடு 'பயமுறுத்தல்' என்பதைத் தெளிவாக வரையறுத்து விளக்கியது. ஆயினும், அவைகளைச் சதி குழுல் என்னும் குற்றத்துக்காக விசாரணைக்குக் கொண்டு வரலாம்.

1875. வேலையளிப்போர் வேலை செய்வோர் சட்டம்[5] (டிஸ்ரேலி அமைச்சு இயற்றியது).

எதைத் தனி நபர்கள் செய்தால் சட்ட விரோதமாகாதோ அதையே தொழிற் சங்கங்கள் செய்தாலும் சட்ட விரோதமாகாது.

அந் நூற்றுண்டின் ஒன்பதாம் பத்தில் 'சமூகநலன்' கொள்கைகள்[6] தொழிற் கட்டுப்பாடு இயக்கத்தினர் மனத்தைக் கவர்ந்தன—

---

1. Robert Owen's 'Grand National'. 2. Friendly Society Benefits. 3. Intimidation. 4. Criminal Law Amendment. 5. Employers and Workmen Act. 6. Socialism.

சிறப்பாக, 1889-ம் ஆண்டில் கப்பல்துறை வேலையாட்களின் பெரிய வேலை நிறுத்தத்தின் பிறகு (§ 321). திறமையற்ற வேலையாட்களும் தங்கள் உரிமைகளுக்காகப் 'போரிட'க் கட்டுப்பாடு சங்கங்கள்[1] ஏற்படுத்திக்கொண்டனர்.

டாப் வேல் தீர்ப்பு[2] (1901) ஒரு வேலை நிறுத்தம்[3] நடைபெறும் போது வேலையளிப்போர்க்கு ஏற்படும் நஷ்டங்களைத் தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் ஈடுசெய்து தரவேண்டும் என்று கூறியது. இவ்விஷயமாகச் சட்டத்தை உடனே திருத்தி யமைக்கவே தொழிற்கட்சி[4] தோன்றியது. தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் இக் கட்சிக்கு முதுகெலும்பைப் போன்றிருந்தன. இது சம்பந்தமான சட்டத்தை இயற்றிக் கொடுப்பதாகத் தாராளப் போக்கினர்[5] உறுதி கூறியதால்தான் 1906-ல் அவர்களுக்குத் தேர்தலில் அவ்வளவு பெரிய வெற்றி கிடைத்தது (§ 327).

1906. தொழிற் சச்சரவுகள் சட்டம்[6] (காம்பெல்-பானெர்மன் அமைச்சு இயற்றியது).

வேலை நிறுத்தங்களால் ஏற்படும் நஷ்டங்களுக்குத் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களை இனிப் பொறுப்பாளியாகக் கருதக் கூடாது.

ஆஸ்போர்ன் தீர்ப்பு[7] (1909) தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் அரசியல் விஷயங்களுக்காகத் தமது பணத்தைச் செலவிடுதல் (உ - ம்.; பார்லமென்ட் அங்கத்தினர்களை ஆதரித்தல்) சட்ட விரோதமானதென்றது. இத் தீர்ப்பினால் தொழிற் கட்சியின் முக்கிய பொருளாதாரம் வேரறுக்கப்பட்டது. ஆகவே, அவர்கள் துரைத்தனம் சட்டத்தை மாற்றவேண்டுமென்று வற்புறுத்தினர்.

1913. தொழிற்கட்டுப்பாடுச் சங்கச் சட்டம்[8] (ஆஸ்க்வித் அமைச்சு இயற்றியது).

அங்கத்தினருள் பெரும்பான்மையோர் விரும்பினால் தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் அரசியல் விவகாரங்களில் தலையிடலாம். ஆயினும், அவைகளுக்காகும் செலவுக்காக எந்த அங்கத்தினரேனும் பணம் கொடுக்க இயலாதவராகவோ விரும்பாதவராகவோ இருந்தால் அவரைக் கொடுக்கும்படி வற்புறுத்தக் கூடாது.

ஸிண்டிகலிசம்[9] என்பது ஒரு ஆக்கத்தொழிலை அதில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களே கைப்பற்றுவது என்னும் நோக்கமுள்ள

---

1. 'Fighting' Unions. 2. Taff Vale Judgment. 3. A Strike. 4. The Labour Party. 5. The Liberals. 6. The Trade Disputes Act. 7. Osborne Judgment. 8. The Trade Union Act. 9. Syndicalism.

இயக்கம். சிறப்பாக, தென்வேல்ஸ் சுரங்கவேலைக்காரர்களிடையே இதற்கு ஆதரவு அதிக மிருந்தது.

1910 முதல் 1914 வரையில் பல பெரிய வேலை நிறுத்தங்கள் நிகழ்ந்தன. வேலையளிப்போரை வழிக்குக் கொண்டுவர மூன்று மிகப் பெரிய தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் சேர்ந்து ஒரு தொழில் முக்கூட்டுறவினை[1] ஏற்படுத்திக்கொண்டன (§ 330).

## கு. 238. மூன்றும் பெரிய சீர்திருத்தக் காலம் (1906—1913).

1906. தொழிலாளர் நஷ்டஈடுச் சட்டம்[2] 1897-ம் ஆண்டுச் சட்டத்திறல் சில தொழில்களில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களுக்கு மட்டும் அளிக்கப்பட்டிருந்த பாதுகாப்பு எல்லாத் தொழில்களிலும் ஈடுபட்டுள்ளவர்களுக்கு அளிக்கப்பட்டது.

தொழிற் சச்சரவுகள் சட்டம் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களின் நிதிகளுக்குப் பாதுகாப்பளித்தது (கு. 237).

உணவளித்தல் சட்டம்[3] பள்ளிக்கூடங்களுக்குப் பசியோடுவரும் குழந்தைகளுக்கு உணவளிக்கக் கல்வி அதிகாரிகளுக்கு ஆஞ்ஞையிட்டது.

1907. உடல் நலக் கண்காணிப்புச் சட்டம்[4] ஆரம்பப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளின் உடல் நலத்தைக் கவனிக்க ஏற்பாடு செய்தது.

சிறு சொத்துக்கள் சட்டம்[5] கௌண்டி சபைகளுக்குச் சொத்துக்களைக் கட்டாயப்படுத்தி வாங்கி அவற்றைச் சிறு சொத்துக்களாகப் பிரித்துக் கொடுக்க அதிகார மளித்தது.

1908. மூப்பு உதவிப்பணம்[6] ஏற்பாடாயிற்று.

'சிறுவர்கள் உரிமைப் பத்திரம்'[7] சிறுவர்களைக் கெட்ட வழியில போகாதபடி பாதுகாத்தது; குற்றஞ் செய்யும் சிறுவர்களுக்குத் தனி நீதிமன்றங்கள் ஏற்படுத்தியது.

1909. வியர்க்கக் கசக்கி வேலை வாங்கும் தொழில்கள் சட்டம்[8] தொழில் கட்டுப்பாடு சங்கங்கள் நுழைந்து ஒழுங்குபடுத்த முடியாத சில தொழில்களில் கூலிகளையும் தொழிலின் தன்மையையும் அந்தப்படுத்துவதற்குத் தொழிற் சபைகளை[9] ஏற்படுத்தியது.

---

1. A Triple Industrial Alliance. 2. Workmens' Compensation Act. 3. Provision of Meals Act. 4. Medical Inspection Act. 5. Small Holdings Act. 6. Old Age Pensions. 7. 'Children's Charter'. 8. Sweated Industries Act. 9. Trade Boards.

வீடமைப்புப் பட்டண அமைப்புச் சட்டம்[1] ஆரோக்கியமற்ற சேரிகளை[2] அழித்து ஒழுங்கான வீடமைப்புத் திட்டத்தை வகுத்து விருத்தியை நாட இட அதிகாரிகளுக்கு[3] ஆஞ்ஞையிட்டது.

தொழிலாளர் மாற்றங்கள்[4] அமைக்கப்பட்டன.

1910. கடைகளின் வேலை நேரச் சட்டம்[5] கடைகளில் வேலை செய்வோர் எத்தனை மணி நேரம் வேலை செய்ய வேண்டும், எந்த நிலையில் வேலைசெய்ய வேண்டும் என்னும் விஷயங்களை அந்தப் படுத்தியது.

1911. தேசிய நிச்சயபாதுகாப்புச் சட்டம்[6] தொழிலாளர் வகுப்பினர்க்கு ஒரு கட்டாய நிச்சய பாதுகாப்பு ஏற்பாட்டினை ஏற்படுத்தித் தந்தது (§ 328).

பார்லமென்ட் சட்டம் (§ 329) காமன்ஸ் சபையார் நிர்மா வித்து இயற்றி யனுப்பும் சட்டங்களை நிராகரித்துத் தள்ளிவிடப் பிரபுக்கள்சபையாருக்கிருந்த தள்ளிவிடல் அதிகாரத்தினை[7] எடுத்துவிட்டது.

பார்லமென்ட் அங்கத்தினர்களுக்குச் சம்பளம் வழங்கல் ஏற்பாட்டினால் தொழிலாளர்களும் பார்லமென்ட் அங்கத்தினர்க ளாக இருக்க வழியேற்பட்டது.

1912. மூன்றுவது அயர்லண்ட் சுயாட்சி மசோதா[8] காமன்ஸ் சபையில் நிறைவேறியது (§ 330).

1913. தொழிற் கட்டுப்பாடுசங்கச் சட்டம் (கு. 237) அர சியல் விஷயங்களுக்காகத் தமது பணத்தைச் செலவிட அச்சங்கங் களுக்கு அதிகார மளித்தது.

## கு. 239. பிரிட்டிஷ் இந்தியா : VI. மார்லி—மின்டோ சீர் திருத்தங்கள்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் கடைசி பத்தில்[9] இந்தியாவில் தேசியவாதிகள் இயக்கம்[10] தோன்றிப் பேரரசு மாகாணங்களுக்கு[11] அளிக்கப்பட்ட சுயாட்சி நிலையை இந்தி யாவுக்கும் கோரியது.

யூரோப்பிய குடியாட்சி முறை இந்தியாவில் ஒழுங்காக வேலை செய்யப் பெருந் தடைகளா யிருந்தவை : 1. தனிப்பட்ட பல

---

1. Housing and Town-Planning Act. 2. Insanitary slums. 3. Local Authorities. 4. Labour Exchanges. 5. Shop Hours Act. 6. National Insurance Act. 7. The veto. 8. Third Home Rule Bill. 9. The 'nineties. 10. Nationalist Movement. 11. The Dominions.

மக்கள் இனங்கள் ; 2. நூற்றுக் கணக்கான வேறுபட்ட மொழிகள் ; 3. இந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கு மிடையே மதப் போராட்டம் ; 4. சாதிப் பிரிவினை ; 5. பெருங் கூட்டத்தினரான மக்கள் கல்வியறிவில்லா திருத்தல்.

ஆளுதல் சௌகரியத்துக்காகக் கர்சன் பிரபு வங்காளத்தை இருகூறுகப் பிரித்தமை காரணமாகப் (1905) பெருஞ் சிற்றம். கொலையும் குழப்பமும்.

தாராளப் போக்கினர் துரைத்தனம்[1] (1906-14) எவ்வளவு அதிகமான அளவுக்குச் சுயாட்சி வழங்க முடியுமோ அவ்வளவுக்கு வழங்கி அதிருப்தியைத் தணிக்க முயன்றது. 1909-ல் இந்தியா அமைச்சராக (இந்தியா காரியதரிசியாக)[2] இருந்த மார்லி பிரபுவும் வைஸ்ராயாக இருந்த மின்டோ பிரபுவும் இந்தியா துரைத்தன அமைப்பில் சில முக்கியமான மாறுதல்களைப் புகுத்தி அதில் இந்திய மக்களின் அபிப்பிராயமும் நேரில் கலக்கப்படவேண்டியபடி செய்தனர்.

இந்தியா சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சில பிரதிநிதிகள் இருக்கவும், மாகாணச் சட்டசபைகளில் பெரும்பான்மையோர் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய அங்கத்தினர்களாக இருக்கவும் ஏற்பாடாயிற்று. (ஆயினும், அவர்களுக்குப் 'பொறுப்பாட்சி'யில்[3] போல் துரைத்தன நிருவாகத்தைத் தம் ஆணைக்குக் கட்டுப்படுத்த அதிகாரமில்லை). வைஸ்ராயின் நிருவாகசபையிலும் லண்டனிலுள்ள இந்தியா மந்திரி சபையிலும் இந்தியர்கள் சேர்க்கப்பட்டனர்.

ஆயினும், இச் சீர்திருத்தங்கள் இந்தியரது கோரிக்கைகளைத் திருப்திசெய்யவில்லை.

## கு. 240. விஞ்ஞான வளர்ச்சி : மின்சார காலம்.

இந்தக் காலப்பிரிவின் விஞ்ஞான வளர்ச்சி சிறப்பாக மின்சார சக்தியை மக்களுக்குப் பயன்தருமாறு செய்ததில் காணப்படுகிறது.

போக்கு வரவு

1837. தந்தியடித்தல்[4]
1879. தந்தி மூலம் பேசுதல்[5]
1898. கம்பியில்லாத் தந்தி[6]

---

1. The Liberal Government. 2. The Secretary of State for India. 3. 'Responsible Government'. 4. Telegraphy. 5. Telephony. 6. Wireless Telegraphy.

**வெளிச்சம்**

1880. ஆர்க் விளக்குகள்[1] (ஜெனரல் போஸ்டாபீஸிலும் லிவெர்ப்பூல் ஸ்ட்ரீட் ஸ்டேஷனிலும்)

1881. ஆர்க் விளக்குகள் (லண்டனிலும் லிவெர்ப்பூலிலும் தெருக்களில்)

1882. காற்று நுழையாத கண்ணாடிக் குமிழ்[2] கண்டுபிடிக்கப் பட்டு வீடுகளிலும் மின்சார விளக்குகள் மாட்டப்பட்டன

**வண்டி இழுத்தல்**

1884. தரையின்கீழ்: ப்ளாக்பூல் குழாய் டிராம்வே திட்டம்.[3]

1886. அந்தரத்தில்: லீட்ஸ் ட்ராலி ட்ராம்வே திட்டம்.[4]

1900. தரையின்கீழ் முதல் மின்சார இருப்புப் பாதை: லண்டன் சென்ட்ரல்[5]

**மின்சாரத்தால் உட்புற எரிதல்[6] உண்டாக்கல்:**

1891. முதல் மோட்டார் வண்டி

1901. வேண்டியபடி செலுத்திச் செல்லக்கூடிய முதல் புகைக்கூடு.[7]

1903. முதல் மோட்டார் பஸ்

1909. பிரயாணத்துக்குரிய முதல் ஆகாய விமானம் (ப்ளீரியட்[8] சானலைத்[9] தாண்டிப் பறந்தார்)

மின்சாரம் ஒருபுறம் வளர, உறைதலால் குளிர்வித்தல் முறையும்[10] (இது அந் நூற்றாண்டின் ஒன்பதாம் பத்தில் விருத்தி செய்யப்பட்டது) இறைச்சியின் விலையைப் பெரிதும் குறைத்தது. இதோடு 1896-ல் தொடங்கிய மின்சார அலைவீச்சு பற்றிய ஆராய்ச்சி[11] இன்னும் முழுமையும் நிர்ணயிக்கமுடியாத அபிவிருத்திகளைச் செய்துகொண்டு வருகிறது.

---

1. Arc lamps. 2. Vacuum bulb. 3. Conduit Tramway system. 4. Trolley Tramway system. 5. The Central, London. 6. Internal Combustion. 7. Dirigible balloon. 8. Blériot. 9. The Channel. 10. Refrigeration. 11. Investigation of Radio Activity.

## பத்தாம் பகுதியில் பரிக்ஷை வினுக்கள்

## (1867—1914)

1. 'க்ளாட்ஸ்டன் பீலின் உண்மையான அரசியல் சீடர்.' இது உண்மையா ?

2. பாமர்ஸ்டனின் அரசியல் வாழ்க்கையையும் க்ளாட்ஸ்டனின் அரசியல் வாழ்க்கையையும் ஒப்பு நோக்கி எழுதுங்கள்.

3. க்ளாட்ஸ்டனின் முதல் அமைச்சுக் காலத்தில் பார்லமெண்ட் இயற்றிய மூன்று முக்கியமான சட்டங்களின் முக்கியத்துவத்தினை ஆராய்ந்து கூறுங்கள்.

4. க்ளாட்ஸ்டன் அயர்லண்டுக்குச் சுயாட்சி வழங்கத் தீர்மானித்தன் முன் அந்நாட்டு மக்களின் குறைகளை எவ்வாறு நீக்க முயன்ருர் ?

5. வெளிநாட்டு விவகாரங்களில் டிஸ்ரேலியின் போக்கைச் சுருக்கமாக விளக்குங்கள்.

6. 'டிஸ்ரேலி உள்நாட்டு விஷயங்களில் டோரி குடியாட்சியையும் வெளிநாட்டு விஷயங்களில் பேரரசுப் போக்கினையும் ஆதரித்து முன்னுக்கு வந்தார்.' இதை விளக்குங்கள்.

7. உள்நாட்டு விஷயங்களில் அதிக அரசியல் திறமையைக் காட்டியது பீலா டிஸ்ரேலியா ?

8. i உள்நாட்டுச் சீர்திருத்தம். ii வெளிநாட்டு விவகாரங்கள்—இவற்றில் எவர்க்குப் பெருமை அதிகம்? க்ளாட்ஸ்டனுக்கா டிஸ்ரேலிக்கா ?

9. 1818 முதல் 1878 வரையில் 'கிழக்கு விவகார' விஷயமாகப்[1] பிரிட்டனின் மன நிலை என்ன ?

10. நிதானப் போக்கினர் கட்சியின்[2] அபிவிருத்திக்காக டிஸ்ரேலி செய்தவைகளை விளக்குங்கள்.

11. பெர்லினிலிருந்து 'கண்ணியத்துடன் அமைதி'யைக்[3] கொண்டு வந்ததாக டிஸ்ரேலி கூறியது எவ்வளவில் பொருந்தும் ?

12. 1874-ல் நிதானப் போக்கினரும், 1880-ல் தாராளப் போக்கினரும்[4] துரைத்தன அதிகாரம் வகிக்க நேர்ந்ததற்குக் காரணமென்ன ?

---

1. The Eastern Question. 2. The Conservatives. 3. 'Peace with honour'. 4. The Liberals.

13. கார்டனின் மரணத்தில் முடிந்த ஈஜிப்ட் நிகழ்ச்சிகளை விவரித்து எழுதுங்கள்.

14. உள்நாட்டுத் துரைத்தனத்தில் க்ளாட்ஸ்டன் முக்கியமாகச் சாதித்தவைகளைச் சுருக்கி எழுதுங்கள்.

15. காத்தொலிக்கர் விடுதலைக்குப் பின்[1] ஏற்பட்ட அயர்லண்ட் சிக்கல் என்ன? அது 1878-க்குள் எவ்வளவில் தீர்க்கப்பட்டது?

16. வெளிநாடுகள் சம்பந்தமாக க்ளாட்ஸ்டனின் போக்கை விளக்குங்கள்.

17. ஓக்கானெலின் நோக்கங்களையும் முறைகளையும் பார்னெலின் நோக்கங்களோடும் முறைகளோடும் ஒப்பிடுங்கள்.

18. க்ளாட்ஸ்டன் காலத்தில் அயர்லண்ட் சிக்கல் இங்லிஷ் அரசியலை எவ்வாறு பாதித்தது?

19. க்ளாட்ஸ்டன் தமது இரண்டாம் அமைச்சில் அயர்லண்ட் சம்பந்தமாகச் செய்தவற்றை விளக்குங்கள்.

20. நான்காம் வில்லியம், விக்டோரியா காலங்களில் அயர்லண்ட் சுயாட்சி இயக்கம்[2] வளர்ந்தமையை விவரியுங்கள்.

21. 'அமைச்சர் மூலம் அரசர் ஆளுவதற்குப் பதில் இப்போது அரசர் மூலம் அமைச்சர் ஆளுகிறார்.' பத்தொன்பதாம் நூற்றாண்டின் நிகழ்ச்சிகள் இந்நிலைமையை எவ்வாறு உண்டாக்கின?

22. விக்டோரியா காலத்துத் தலை சிறந்த அரசியல் நிபுணர் எவர்? எக்காரணங்களால் அவ்வாறு கருதுகிறீர்கள்?

23. 1815 முதல் 1878 வரை ருஷ்யாமீது பிரிட்டன் அவநம்பிக்கை கொண்டிருந்ததன் காரணமென்ன? இதற்கு உதாரணங்கள் கூறுங்கள்.

24. பத்தொன்பதாம் நூற்றாண்டின் எட்டாம் பத்திலும் ஒன்பதாம் பத்திலும்[3] காணப்பட்ட புதிய பேரரசுப் போக்கினைப்பற்றி[4] உங்களுக்குத் தெரிந்தவற்றை விளக்குங்கள்.

25. ஆபிரிகாவைக் கூறுபோட்டுக்கொள்ளும் போட்டியில்[5] பிரிட்டன் செய்ததென்ன? (ஒரு படத்துடன் விளக்குங்கள்).

26. தென் ஆபிரிகா போர் தொடங்கும் வரையில் க்ரேட் பிரிட்டனுக்கும் தென் ஆபிரிகாவுக்கு மிருந்த தொடர்பினை விளக்குங்கள்.

---

1. Catholic Emancipation. 2. The Home Rule Movement in Ireland. 3. The 'Seventies' and 'Eighties'. 4. The New Imperialism. 5. 'The scramble for Africa.'

27. ‘பொறுப்பாட்சி’[1] என்பதென்ன? கானடாவும் ஆஸ்ட்ரேலியாவும் அதைப்பெற்ற வகையையும் காலத்தையும் குறிப்பிடுங்கள்.

28. 1880 முதல் 1901 வரையில் வெளிநாட்டு விவகாரங்களில் பிரிட்டனின் முக்கிய நோக்கங்களென்ன?

29. விக்டோரியா காலத்து நாவலொன்றில்[2] விவரிக்கப்பட்டிருக்கும் அக்காலத்திய சமூக வாழ்க்கையை வருணியுங்கள்.

30. 1878-க்கு முன் எழுதப்பட்ட எதாவதொரு நாவலில் அக்காலத்திய சரித்திரத்தைப்பற்றி என்ன அறியக் கிடக்கிறது?

31. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்லண்டில் கல்வி சம்பந்தமாக இயற்றப்பட்ட முக்கிய திட்டங்களை விவரியுங்கள்.

32. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொழிற் கட்டுப்பாடு சங்கங்களின்[3] வளர்ச்சியை விவரியுங்கள்.

33. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இட ஆட்சி முறையின்[4] வளர்ச்சியை விவரியுங்கள்.

34. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஓட்டுரிமை சம்பந்தமான சீர்திருத்தங்களை சுருக்கிக் கூறுங்கள்.

35. இங்லண்டில் தொழிற்சாலைகள் சம்பந்தமாக இயற்றப்பட்ட சட்டங்களின் வளர்ச்சியைச் சுருக்கிக் கூறுங்கள்.

36. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரிட்டனின் மனப்பான்மையில் குடியேற்றங்கள் சம்பந்தமாகக் காணப்படும் முக்கிய நிலைகளைக் குறிப்பிடுங்கள்.

37. 1886 முதல் 1892 வரையிலும், 1896 முதல் 1902 வரையிலும் சால்ஸ்பரி பிரபு கவனிக்கவேண்டியிருந்த உள்நாடு, வெளிநாடுகள், குடியேற்றங்கள் சம்பந்தமான முக்கியமான விஷயங்களைக் குறிப்பிடுங்கள். அவற்றுள் ஏதேனும் இரண்டைக் குறித்து அவருடைய கருத்துக்களை விளக்குங்கள்.

38. 1840 முதல் 1902 வரை இங்லண்டுக்கும் ப்ரான்ஸுக்குமிருந்த தொடர்பைச் சுருக்கி எழுதுங்கள்.

39. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்லண்டுக்கும் ருஷ்யாவுக்குமிருந்த தொடர்பைச் சுருக்கி எழுதுங்கள்.

40. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்லண்டுக்கும் துருக்கிக்குமிருந்த தொடர்பைச் சுருக்கி எழுதுங்கள்.

---

1. ‘Responsible Government’. 2. Novel. 3. Trade Unions.
4. Local Government.

41. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்லண்டுக்கும் சீனவுக்குமிருந்த தொடர்பைச் சுருக்கி எழுதுங்கள்.

42. பத்தொன்பதாம் நூற்றாண்டில் போக்கு வரவு வசதிகளில் ஏற்பட்ட அபிவிருத்திகள் சிலவற்றை விவரியுங்கள்.

43. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முடிவில் பிரிட்டிஷ் பேரரசு நாடுகளில் வேறுபட்ட இணைப்பாட்சி அமைப்புக்கள்[1] இருந்ததன் காரணமென்ன ? அவைகளை வருணியுங்கள்.

44. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகாரம் வளர்ந்ததை விவரியுங்கள்.

45. விக்டோரியா அரசியார் ஆட்சி முதலிலும் முடிவிலும் மக்களின் வாழ்க்கை நிலைகளிலும் பொருளாதாரத்திலும் என்ன என்ன முக்கியமான வேறுபாடுகள் காணப்பட்டன ?

46. விக்டோரியா ஆட்சியின் இறுதிக் காலத்தில் யூரோப்பிய விவகாரங்களில் பிரிட்டன் கலக்காமல் தனிப்பட்டிருந்தால் அதற்கு என்ன ஆபத்துக்கள் நேர்ந்தன ?

47. 1900 முதல் 1914 வரையில் மக்களின் வாழ்க்கை நிலையைச் சீர்படுத்தச் சட்டவாயிலாக என்ன முயற்சிகள் செய்யப்பட்டன ?

---

1. Different forms of Federation.

# பின்னுரை[1]

## பெரும் போரும் அதன் பிறகும்
## (1914—1934)

சரித்திரத்தில் சில நிகழ்ச்சிகள் ஒரு கண்டத்தின் நீர் பிரி மேடுகளைப்போல்[2] தனித்தோங்கி நிற்கின்றன : வாழ்க்கையின் வேறுபட்ட பல அம்சங்களையும் நிலைகளையும் பிரித்துக்காட்டும் எல்லைக்கோடுகளாக அவை அமைகின்றன. அத்தகைய நிகழ்ச்சிகளுள் ஒன்று ரோமர் பேரரசுக்குள் அநாகரிக மக்கள் கூட்டங்கள் பெருந்திரளாகப் புகுந்தமை (§6); மற்றொன்று கல்வியின் மறுபிறப்பு[3] (§83); வேறொன்று 1914 முதல் 1918 வரை நிகழ்ந்த உலகப் பெரும் போர்[4]. நாம் அது நடந்த காலத்துக்கு மிகுந்த நெருக்கத்தில் வாழ்வதால், பிரளயத்தைப் போன்ற அந்நிகழ்ச்சியால் மக்கள் வாழ்க்கையின் போக்கில் என்ன பெரும் மாறுதல்கள் ஏற்பட்டனவென்பதைத் தெளிவாக உணர்வது கடினம். ஆகவே, முக்கிய நிகழ்ச்சிகள் சிலவற்றைமட்டுமே இப் பின்னுரையில் நாம் சுருக்கிக் கூறுவோம்.

---

1. Epilogue. 2. Watersheds. 3. The Renaissance.
4. The World War.

ஏழுபத்தாலும் அத்தியாயம்

# பெரும்போர்

## (1914—1918)

§ 332. **1914:** மான்ஸ், ஈப்ரீ, பாக்லண்ட் தீவுகள்[1]:— ஜெர்மனியில் போரை அவாவிய கூட்டத்தினர் பிரிட்டன் தன் உள்நாட்டுச் சச்சரவுகளால் இடர்ப்பட்டுப் போரிட முடியாத நிலையிலிருக்கு மென்று நினைத்தார்கள். இதில் அவர்கள் ஏமாற்ற முற்றனர். அயர்லண்ட் சுயாட்சி மசோதாவினைப் போர் முடிந்ததன்பின்னரே அது நடைமுறையில் வரவேண்டுமென்னும் நிபந்தனையுடன் நிறைவேற்றி வைத்ததால் அயர்லண்ட் சிக்கல் ஒருவாறு தள்ளி வைக்கப்பட்டது. போர் முடிந்ததும் அல்ஸ்ட்டரின்[2] ஆக்ஷேபனைகளுக்குப் பரிகாரந் தேட வழியேற்படலாம். தொழிற் கட்டுப்பாடு சங்கங்கள் கிளப்பியிருந்த போராட்டங்களும், பெண்கள் ஓட்டுரிமை சம்பந்தமான கிளர்ச்சிகளும் தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டன. பேரரசுக்காகப் போரிடப் பேரரசு மாகாணங்களும் இந்தியாவும் முனைந்து நின்றன.

இப்போர் அவசியம் நேர்ந்தாகவேண்டியதாயின், அப்போது நேர்ந்ததே பிரிட்டனுக்கு மிகவும் நல்லது. முதலாவதாக, பிரிட்டனின் கடற்படை அப்போதுதான் புதுப்பயிற்சிகள் முடிந்து போர் முஸ்திப்பு மாறாதிருந்தது. இரண்டாவதாக, போர் மூண்ட மறுநாள் பாங்க் விடுமுறை நாளாக இருந்ததால், மேலும் இரு நாட்கள் பாங்குகளை

1. Mons, Ypres, The Falklands. 2. Ulster.

மூடிவைத்து மக்களிடைப் பீதியால் ஏற்படக்கூடிய குழப்பத்தைத் துரைத்தனம் நீக்க முடிந்தது. வியாழக் கிழமைக்குள் புதிய நோட்டுக்களை அச்சடித்துவிட்டனர். பார்லமென்டும் பொன் நாணயங்களுக்குப் பதில் அந்த நோட்டுக்களே இனிச் செலவாணியிலிருக்குமெனச் சட்ட மியற்றிவிட்டது. மூன்றாவதாக, கிச்செனர் பிரபு ஓய்வு விடுமுறையில் அப்போது இங்லண்டிலிருந்ததால் அவரை உடனே போரமைச்சராக்கித் துரைத்தனம் மக்களிடையே நம்பிக்கையை உண்டாக்கியது. வன்மைக்கும் திறமைக் கும் அவர் நிரம்பப் புகழ்பெற்றிருந்தார். அப்போர் குறைந்தது மூன்றாண்டுகளேனும் நீளும் என்று அவர் கூறி யது மக்களுக்குக் கவலையை உண்டாக்கிய போதிலும், புதுப் படைகளுக்கு ஆட்கள் தேவையென்று அவர் அழைத்தபோது கணக்கற்றவர்கள் உற்சாகத்துடன் திரண்டு வந்தனர்.

இதற்குள் பிரிட்டிஷ் அவசரப்படை[1] சந்தடி செய்யா மலும் விரைவாகவும் சானெலைக் கடந்து ப்ரெஞ்சு போர் முனையின் இடது பக்கத்தில் சேர்ந்தது. எனினும், பெல் ஜத்தில் ஏராளமான ஜெர்மன் படைகள் நெடுந்தூரத் துக்குப் பரவி யிருந்ததால், நேசப்படைகளின்[2] இடது போர்முனையிலிருந்தவர்கள் அவசரமாகப் பின்வாங்க வேண்டியதாயிற்று: அவ்விதம் செய்யாதிருந்தால் அவர்கள் ஜெர்மானியரால் சூழப்பட்டு அழிந்திருப்பர். ஜெர்மானி யர்களால் அப்போது 'இகழ்ச்சிக்குரிய சிறிய பிரிட்டிஷ் படை'[3] என்று கேவலமாகப் பாவிக்கப்பட்ட அப்படை மான்ஸிலிருந்து பின்வாங்கியபோது[4] பல இடர்ப்பாடுகளையும் தாங்கி மிக ஒழுங்கான முறையில் திரும்பியது. அது போர்

1. The British Expeditionary Force. 2. The Allied Forces. 3. 'The contemptible little British army'. 4. The Retreat from Mons.

முனையில் வெற்றிபெறுவதைவிட மிகச் சிறப்பான இராணுவ முயற்சி என்று கருதப்படுகிறது.

நேசப்படைகள் மார்ன்[1] ஆற்றங்கரையில் திரும்பித் தாக்கினதன் பயனாக எதிரிகள் ஏயின்[2] ஆற்றங்கரை வரையில் பின்வாங்கினர். அங்கு அவர்கள் பதுங்கல் கிடங்குகள்[3] தோண்டிக்கொண்டு விரைவிலேயே ஸ்விட்சர்லண்ட் எல்லையிலிருந்து இங்லிஷ் சானெல்வரைக்கும் ஒரு தொடர்ச்சியான போர்முனையை அமைத்துக்கொண்டனர். 1914ஆம் முடிவதற்குள் பிரிட்டிஷார் தங்களது மூலத் தலங்களாக[4] உபயோகப்படுத்திக்கொண்டிருந்த சானெல் துறைமுகங்களைக் கைப்பற்றும் முயற்சியில் ஜெர்மானியர் மும்முரமாக ஈடுபடலாயினர். நெடுநாள் ஈப்ரீயைப்[5] பாது காத்துக்கொண்டிருந்த பிரிட்டிஷ் படை அநேகமாக அழிவுற்றது. ஆயினும், அதனிடத்தை நிரப்ப மூலப்படைகள் தயாராயிருந்தன.

இதற்குள் ப்ரான்ஸின்மீது செலுத்தப்படும் தாக்குதலின் வேகத்தைக் குறைக்க ருஷ்யா கிழக்கு ப்ரஷ்ஷியாவுக்குள் படையெடுத்துச் செல்ல முயன்றது. ஆயினும், அவர்கள் ஹின்டென்பர்க்கினால்[6] டானென்பர்க்[7] போரில் முறியடிக்கப்பட்டுப் பின்வாங்கினர். அதற்கப்பால் அவர்கள் ஜெர்மனியில் நுழைய முடியவில்லை. மேற்கு முனையில் போலவே கிழக்கு முனையிலும் அப்போது பதுங்கல் கிடங்குகள் போர்[8] தொடங்கியது.

கடல்வெடிகளும் நீர்மூழ்கிக் கப்பல்களும்[9] பிரிட்டிஷ் படையின் வன்மையைக் குறைத்துத் தங்கள் கடற்படையின் வன்மையிருந்த நிலைக்குக் கொண்டுவரும் வரையில் ஜெர்மன் துரைத்தனத்தார் தங்கள் கடற்படையின் பெரும்

1. The Marne. 2. The Aisne. 3. Trenches. 4. Bases.
5. Ypres. 6. Hindenburg. 7. Tannenburg. 8. Trench Warfare.
9. Sea mines and submarines.

பகுதியைத் துறைமுகத்திலேயே வைத்திருக்கத் தீர்மானித்திருந்தனர். கடல்வெடிகள் எங்கும் கூட்டங் கூட்டமாக மிதக்கவிட்டிருந்தபடியால் ஜெர்மன் கடற்படையை நெருக்கமாக வளைத்துக்கொண்டு அடைத்துவைக்கப் பிரிட்டிஷ் கடற்படையால் முடியவில்லை. ஆகவே, அது ஸ்காப்பா[1]விலிருந்துகொண்டு எதிரிகள் கப்பல்கள் எப்போது வெளிவரும் என்று காத்திருந்தது. பல ஜெர்மன் போர்க்கப்பல்கள் போர் தொடங்கியபோது நெடுந்தொலைவி லிருந்தன. அவற்றுள் இரண்டு கான்ஸ்டான்டிநோப்பிலை எப்படியோ அடைந்துவிட்டபடியால் துருக்கியும் ஜெர்மனியுடன் சேர்ந்து போரில் நுழையத் தலைப்பட்டது (1914ஆ நவெம்பர்மீ). வேறு நான்கு ஜெர்மன் போர்க்கப்பல்கள் பசிபிக் பெருங்கடலில் இருந்துகொண்டு சில்லியிலிருக்கும் காரொனெல்[2] என்னுமிடத்துக்கருகில் ஒரு சிறு பிரிட்டிஷ் கடற்படைத் தொகுதியை[3] எதிர்த்து அழித்துவிட்டன. ஆயினும், ஒரு மாதத்தில் அவை பாக்லண்ட் தீவுக[4]ளுக்கருகில் மற்றொரு கடற்போரில் அழிவுற்றன. அவ்வாண்டு முடிவதற்குள் பெருங்கடற் பரப்பெங்கும் ஜெர்மன் கொடி மறைந்தது. அதுமுதல் நேசநாடுகளே கடற்பரப்பில் ஆதிக்கம் பெற்றிருந்ததால் அவர்கள் போக்குவரவுக்குத் தடையொன்றும் ஏற்படவில்லை.

§333. 1915: பதுங்கல் கிடங்குகள் போர்—காலிப்போலி[5]—கட்சி இணைப்புத்துரைத்தனம்[6] :—இவ்வாண்டு மேற்கு யூரோப்பியப் போர் முனையில் பதுங்கல் கிடங்குப் பாதுகாப்புக்கள் முட்கம்பிச் சிக்கல் வேலிகளாலும்[7] இயந்திரப் பீரங்கிகளாலும்[8] பலப்படுத்தப்பட்டன. அவற்

1. Scapa. 2. Coronel (Chili). 3. A British Squadron. 4. The Falkland Islands. 5. Gallipoli. 6. Coalition Government. 7. Barbed-wire entanglements. 8. Machine-guns.

ருல் இருதரப்பிலும் மாண்டவர் தொகையும் காயம்பட்டவர் தொகையும்[1] அதிகமாயினவே தவிர, நஷ்டத்துக்கேற்ற லாபம் கிடைக்கவில்லை. எறிவெடிகளும்[2] எறிபொறிகளும்[3] விஷவாயுவும்கூட உபயோகிக்கப்பட்டன. போரில் ஈடுபட்டிருந்த நாடுகளின் ஆக்கத்தொழில் முயற்சிகளனைத்தும் போருக்குவேண்டிய பொருள்களைத் தயாரிப்பதில் திருப்பப்பட்டன.

நேசநாடுகள்[4] மேற்கு யூரோப்பிய முனையில் மும்முரமாகத் தாக்குதல் உசிதமா, அல்லது எதிரிக்குப் பலம் குறைவாகவுள்ள துருக்கி பால்கன் முனைகளில் தாக்குதல் உசிதமா என்னும் விஷயமாகப் பெருத்த விவாதம் நடந்தது. தளபதிகள் முன்னதை ஆதரித்தனர்; அரசியல் ஞானிகள் பின்னதை ஆதரித்தனர். இந்தக் கருத்து வேறுபாட்டின் பலன் அவ்வாண்டு கால்லிப்போலியில் வெட்டவெளிச்சமாயிற்று. ருஷ்யாவுக்கு ஆதரவளிக்கத் துருக்கியை ஒடுக்கும் நோக்கத்துடன் ஒரு முயற்சி செய்யப்பட்டது. ஆயினும், அம்முயற்சிக்கு வேண்டிய படைகளையும் தளவாடங்களையும் தாராளமாக அனுப்பப் போர்க்காரியாலயம் தயங்கியதால் அது வீணாயிற்று. ஆகவே, கால்லிப்போலி தீபகற்பத்தில் இறங்கிய படை அங்கிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. அப்போது நிகழ்ந்த சில வீரச் செயல்கள் (இவை சிறப்பாக ஆஸ்ட்ரலேஷியா படைகள் செய்தவை) இணையற்றவைகளெனச் சரித்திரப் பிரசித்தி பெற்றன. துருக்கியின் மாகாணங்களுள் ஒன்றாயிருந்த மெசொப்பொட்டேமியாவைத் தாக்கச் சென்ற இங்கிலிஷ்-இந்தியப் படையும் குட்-அல்-அமாரா[5] என்னுமிடத்தில் சரணடைய வேண்டியதாயிற்று. நேசநாடுகளுக்கு நேர்ந்த இவ்விரு தோல்விகளும் ஜெர்மனி பக்கம்

1. Casualties. 2. Grenades. 3. Mortars. 4. The Allies.
5. Kut-al-Amara.

சேர்ந்துகொள்ள பல்கேரியாவுக்குத் தைரிய மூட்டின; நேச நாடுகளோடு சேர்ந்துகொள்ளத் தயாராயிருந்த க்ரீஸூம் நடுநிலை வகிக்கத் தீர்மானித்தது.

ஆஸ்ட்ரியாவைத் தாக்க ருஷ்யா முயன்றபோது ஜெர்மன் படைகள் ஒரு எதிர்த்தாக்குதலை நிகழ்த்தி ருஷ்யாவுக்குள்ளேயே பதுங்கல் கிடங்குகள் தோண்டிக் கொண்டு நிலைத்துவிட்டன. அவை மேலும் முன்னேறிச் செல்லாததன் காரணம் அச்சமயம் இட்டலி ஆஸ்ட்ரியா மீது போர் தொடங்கியதேயாம். பெரும்பான்மையாக இட்டாலியர் வாழ்ந்துகொண்டிருந்த ஆஸ்ட்ரியா மாகாணங்கள் சிலவற்றைக் கைப்பற்றிக்கொள்வதே இதன் நோக்கம். ஆயினும், நேசநாடுகளுக்கு இதனால் ஏற்படக்கூடிய அனுகூலம், எதிரிகள் பெர்லின்-பாக்டாட் இருப்புப்பாதையின் மூலம் துருக்கிப் போரரசோடு தங்களுக்கிருக்கவேண்டிய போக்குவரவுத் தொடர்பினைக் காப்பாற்றச் செர்பியாமீது படையெடுத்துச் சென்று அங்கு நிலைத்துவிட்டதால் பயனற்றுப்போயிற்று.

அவ்வாண்டு முடிவில் போர் முயற்சிக்கான ஏற்பாடுகளில் இரு முக்கிய மாறுதல்கள் பிரிட்டனில் ஏற்பட்டன. முதலாவதாக, நிதானப்போக்கினர் பலர் ஆஸ்க்வித் துரைத்தனத்தில் சேர்ந்தனர். ஆகவே, போர் முடியும் வரையில் பிரிட்டனின் துரைத்தனம் மூன்று கட்சிகளின் பிரதிநிதிகளும் கூடிய ஒரு கட்சிஇணைப்புத் துரைத்தனமாயிருந்தது.[1] இரண்டாவதாக, படைத்தலைமை[2] சர் ஜான் ப்றெஞ்சை[3] விட்டு சர் டக்லஸ் ஹேய்க்குக்கு[4] மாறியது.

§ 334. **1916:** சோம் ஆறு[5]—ஜட்லண்ட்[6]—லாயிட் ஜியார்ஜ்[7]:—இப்போது தக்க வயதுள்ள எல்லா ஆண்களும்

1. A Coalition Government. 2. The Chief Command. 3. Sir John French. 4. Sir Douglas Haig. 5. The Somme. 6. Jutland. 7. Lloyd George.

போர்ச்சேவைக்குக் கட்டாயம் தயாராகவேண்டுமென்னும் விதி ஏற்பட்டது. அவ்வாண்டு முடிவதற்குள் நாட்டினர் அனைவரும் நேராகவோ மறைமுகமாகவோ போர்த் தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். ஆண்களைப் போர்முனைகளுக்கு அனுப்பப் பெண்கள் அதுவரை ஆண்களே பார்த்துக்கொண்டிருந்த வெடிகுண்டுகள் செய்யும் தொழிற்சாலைகளில் வேலைசெய்தல், டிராம் வண்டிகளில் டிக்கெட்டு கொடுத்தல், தபால்கள் கொண்டு கொடுத்தல், லாரிகளை ஓட்டல், பாங்குகளில் வேலை செய்தல் முதலிய பல வேலைகளையும் தாங்களே செய்ய முன்வந்தனர்.

இப்போரின் முக்கிய கடல் நிகழ்ச்சி மேமீ 31வ நடைபெற்றது. ஜெர்மன் கப்பற்படை பிரிட்டிஷ் பெரும் போர்க் கப்பல்கள் தொகுதி[1]யொன்றுடன் ஜட்லண்டுக்கருகில் போரிட நேர்ந்தது. இரண்டு பிரிட்டிஷ் கப்பல்கள் விரைவில் மூழ்கின; ஆயினும், ஜெர்மன் கப்பற்படைத் தலைவர் தமது படைகளை வேகமாகச் செலுத்திச் சென்று மூடுபனியிலும் இருட்டிலும் மறைந்து தமது கடல் வெடிக் கூட்டங்களின்[2] பாதுகாப்புக்குள் பதுங்கிக் கொண்டார். பெரிய பிரிட்டிஷ் கப்பற்படையொன்று அவ்விடத்தை நோக்கி அதிவேகமாக வந்துகொண்டிருந்ததே அதற்குக் காரணம். அட்மிரல் ஜெல்லிக்கோ[3] தமது பெரிய போர்க்கப்பல்களைக் கடல்வெடிகளுக்கும் நீர்மூழ்கிகளுக்கும் பலியாக்க விரும்பாததால் ஸ்காப்பாவுக்குத் திரும்பிவிட்டார். ஜெர்மானியருக்கு ஏற்பட்ட நஷ்டம் குறைவே; ஆயினும், அவர்களது பெருங்கடற் கப்பற்படை[4] அப்போர் முடியும்வரைத் துறையைவிட்டு வெளிவரத் துணியவில்லை.

---

1. The British battle cruiser squadron. 2. Minefields. 3. Admiral Jellicoe. 4. High Seas Fleet.

இங்லண்டின்மீது ஜெப்பெலின்கள்[1] ஆகாயத்திலிருந்து தாக்கின. அப்போது அதிக சேதம் விளைந்தபோதிலும், ஜெர்மானியர்கள் எதிர்பார்த்தபடி மக்கள் பீதியடைந்துவிடவில்லை. செப்டெம்பர் மாதம் அவற்றுள் பல அழிக்கப்பட்டதால் அவற்றின் தாக்குதல்கள் குறைந்துகொண்டே வந்தன. அப்போது அயர்லண்டில் ஒரு கலகம் கிளம்பியது. சின்பீன்[2] ("எமக்கே") என்னும் பெயர்கொண்டிருந்த அயர்லண்ட் குடியரசுக் கட்சியார் பிரிட்டிஷ் துரைத்தனம் அப்போது போர்முயற்சியில் மூழ்கிருக்கும் சந்தர்ப்பத்தைத் தம் சுயநன்மைக்குப் பயன்படுத்திக்கொள்ள முயன்றனர். அவர்களை அடக்கி வைக்க ப்ரான்ஸில் அவசரமாக வேண்டியிருந்த சில படைகள் உடனே அயர்லண்டுக்கு அழைத்துக்கொள்ளப் பட்டன.

மேலும், இவ்வருஷம், துரைத்தனம் போரை மும்முரமாக நடத்தவில்லை என்ற காரணத்தினால், ஆஸ்க்வித்துக்குப் பதில் லாயிட் ஜியார்ஜ் கட்சியிணைப்பு அமைச்சின்[3] தலைவரானார்.

§ 335. 1917: நீர்மூழ்கிக் கப்பல்கள்—அமெரிகா—ஜெருசேலெம் :—1917-ம் ஆண்டின் தொடக்கத்தில் ஜெர்மன் துரைத்தனம் நீர்மூழ்கிக் கப்பல்களைக்கொண்டு பிரிட்டிஷ் துறைமுகங்களை அடைக்கத்[4] தீவிரமாக முயன்றது. பிரிட்டிஷ் துறைமுகங்களிலிருந்தோ அவைகளை நோக்கியோ செல்லும் எல்லாக் கப்பல்களையும், அவை எந்த நாட்டைச் சேர்ந்தவைகளாக இருந்தபோதிலும், மூழ்கடிக்கப் போவதாக அவர்கள் அறிவித்தனர். இதனால் பிரிட்டன் பட்டினிகிடக்க நேரிடலாம். அமெரிகா ஐக்கிய நாடுகளும் இதனால் பாதிக்கப்படலாம். ஆயினும், அமெரிகா

1. Zeppelins. 2. Sinn Fein ("ourselves alone.") 3. The Coalition Ministry. 4. Submarine blockade.

போருக்குத் தயாராவதன்முன் ஜெர்மானியர் போரை வென்றுவிடலாமென்று நினைத்தனர். சிறிது காலம் ஜெர்மானியர் நினைத்தபடியே எல்லாம் முடியும்போல் தோன்றியது. அவர்கள் அநேகங் கப்பல்களை மூழ்கடித்துவிட்டனர். பிரிட்டனில் உணவுப் பங்கீடு[1] அவசியமாயிற்று. ஆயினும், உணவுப் பொருள்களைப் பெருக்கவும் புதுக் கப்பல்கள் கட்டவும் பெரு முயற்சிகள் செய்யப்பட்டன. நீர் மூழ்கிக் கப்பல்களை அழிக்கப் பல நூதனமான முறைகள் கையாளப்பட்டன. இம்முயற்சிகளின் பலனாக நாடு இலையுதிர் காலத்துக்குள் ஆபத்தினின்றும் தப்பியது.

அமெரிகா ஐக்கிய நாடுகள் துரைத்தனம் நடு யூரோப்பிய வல்லரசுகளின்மீது எதிர்பார்த்தபடியே போர் தொடுத்தது. ஆயினும், இதனால் நேசநாட்டினருக்கு ஏற்பட்டிருக்கவேண்டிய புதுப்பலம் ருஷ்யாவின் நடத்தையால் சிறிதுகாலம் பயன்தரவில்லை. இப்போரினால் அந்நாட்டில் ஏழைமக்களுக்கு ஏற்பட்ட துன்பங்கள் தாங்க முடியாதனவா யிருந்தமையால், சாரின் கட்டற்ற துரைத்தனத்துக்கு விரோதமாக நெடுங்காலமாகவே இரகசியத்தில் வேலைசெய்துகொண்டு வந்திருந்த புரட்சிக் கூட்டங்கள் அப்போது முன்னுக்குவந்து நாட்டில் திடுமென ஒரு புரட்சியை உண்டாக்கின. சார் முடியை இழந்தார். போல்ஷேவிக்ஸ்[2] எனப்பட்ட ஒருவகைப் பொதுவுடைமைக் கொள்கையினர்[3] துரைத்தன அதிகாரம் பெற்றனர். அவர்கள் தங்களது சொந்த அரசியல் சமூக நலன் கொள்கைகளின்படி ருஷ்யாவைத் திருத்தியமைப்பதற்காக முதலில் போரை நிறுத்திக்கொண்டனர்.

மேற்குப் போர்முனையில் நிகழ்த்தப்பட்ட பல எதிர்ப்புக்கள் வீணாயின. அப்போது அம்முயற்சிகளால் எதிரியின் பலம் ஒடுங்கிக்கொண்டு வந்ததெனக் கருதப்

1. Rationing. 2. Bolsheviks. 3. The Communists.

பட்டது ; உண்மையில் அவற்றால் நேசநாடுகளுக்கே அதிக சேதமேற்பட்டது. அவ்விருண்ட ஆண்டின் முடிவில் ஒரு சிறு வெற்றி கிடைத்தது. அலென்பி[1] துருக்கியரிடமிருந்து பாலெஸ்தீனைப் பிடித்தார். ஆயினும், ஜெருசெலெம் எங்கே, பெர்லின் எங்கே !

§ 336. **1918:** படுதோல்வி — வெற்றி — போர் நிறுத்தம் :—நேசநாடுகள் (முக்கியமாக பிரிட்டிஷ் கடற்படையின் உதவியால்) நடுயூரோப்பிய நாடுகளுக்குப் பூட்டியிருந்த பொருளாதார அடைப்பு[2] அவர்களுக்குப் போரை நடத்துவதிலும் சாதாரண வாழ்க்கையிலும் பல இன்னல்களை உண்டாக்கியிருந்தமையால், போரைத் தொடர்ந்து நடத்துவதற்கான பல முக்கியமான பொருள்கள் அவர்களுக்குக் குறைந்துகொண்டே வந்தன. ஆகவே, 1918-ம் ஆண்டு பிறந்ததும் அவர்கள் போரை விரைந்து மும்முரமாக நடத்தி அமெரிகப் படைகள் மேற்கு முனையை அடைவதற்குள் அதை முடித்துவிடத் தீர்மானித்தனர். ருஷ்யா உடைந்து வீழ்ந்ததால் அவர்கள் முழு பலத்தையும் மேற்கு முனைக்கே அனுப்பிவைக்க முடிந்தது. அப்போது அவர்களது படைத்தலைவராக இருந்த லூடென்டார்ப்[3] அதுவரை கையாளப்படாத சில புதுப் போர்முறைகளை வகுத்து வைத்துக்கொண்டு அவைகளைக் கையாளத் தயாராயிருந்தார்.

நேசநாடுகள் நேர இருப்பதை ஒருவாறு உணர்ந்து பாரிஸில் ஒரு கூட்டுப் போர்ச்சபையினை நிறுவித் தங்கள் பாதுகாப்பு முயற்சிகளை மேலும் பலப்படுத்தினர். ஆயினும், எதிரிகளின் தாக்குதல் தொடங்கியதும் அதன் வேகத்தையும் வன்மையையும் நேசப்படைகள் தாங்கி நிற்க முடியவில்லை. ஒரு பிரிட்டிஷ் படை பூராவும் அழிந்தது ; போர்முனை மைல்கள் கணக்காகப் பின்வாங்கிக்

1. Allenby. 2. Economic blockade. 3. Ludendorff.

கொண்டே வந்தது ; ஏராளமான போர்த்தளவாடங்க ளோடு பத்தாயிரக் கணக்கில் போர்க் கைதிகளும் எதிரிகள் கையில் சிக்கினர். போர்முனையில் ஏற்படும் உடைப்புகளை அடைக்கவும் படைவீரர்களும் போர்த்தளவாடங்களும் சேதமுறுதலைக் குறைக்கவும் பகீரதப் பிரயத்தனங்கள் செய்யப்பட்டன. எனினும், மீண்டும் ஜெர்மானியர் முன்னேறி வந்து மார்ன் ஆற்றங்கரையை அடைந்துவிட் டனர். பாரிஸ் நகரத்துக்கு மறுபடியும் ஆபத்து ஏற்பட்டு விட்டது. அந்த ஆபத்தான நிலையில் இரு முயற்சிகளால் நேசநாட்டினர் தங்களைக் காப்பாற்றிக்கொண்டனர். தங்கள் படைகளனைத்துக்கும் மார்ஷல் போஷ்[1] என்பவரைத் தலைவராக்கினர்; அமெரிகப் படைகளின் வருகையைத் துரிதப்படுத்தினர். செல்வத்திலும் மக்கள் எண்ணிக்கையிலும் ஏராளமான பலம்பெற்றிருந்த ஒரு புதிய எதிரி தங்களை இனிப் போர்முனையில் தாக்கப்போவதை அறிந்ததும், நெடுநாள் போர்செய்து அலுத்திருந்த ஜெர்மானியர் பெரிதும் ஏக்கங்கொண்டனர். ஆகஸ்டுமீ நூற்றுக் கணக்கான டாங்குகளின் தாக்குதலைத்தொடர்ந்து பிரிட்டிஷ் படைக்கு ஒரு சிறப்பான வெற்றி கிடைத்தது. ப்ரெஞ்சு படைகளும் அமெரிகப் படைகளும் பிரிட்டிஷ் படைகளும் ஒன்றுசேர்ந்து செப்டெம்பர் மாதம் முழுமையும் எதிரிகளைப் பின்வாங்கும்படி தாக்கிக்கொண்டே சென்றன. இதற்குள் பல்கேரியாவும் துருக்கியும் ஒடுங்கி விட்டன. சலோனிக்காவிலிருந்து நிகழ்த்திய ஒரு தாக்குதலின் பலனாகச் செர்பியா மீட்கப்பட்டது. இதனால் ஆஸ்ட்ரியா இரு பக்கங்களிலும் தாக்குதலுக்கு உள்ளானதால் மேலும் எதிர்த்து நிற்கமுடியவில்லை.

ஜெர்மனியில் மக்கள் நெடுங்காலமாகப் பட்டிருந்த துன்பங்கள் காரணமாகப் புரட்சிக் கலவரங்கள் கிளம்பின.

1. Marshal Foch.

போர்க்குக் கிளம்பும்படி கப்பற்படைக்கு ஆஞ்ஞை பிறந்ததும் அதனால் அவர்கள் அழிவது திண்ணமென்பதை உணர்ந்து கப்பற்படைவீரர்கள் அவ்வாஞ்ஞையை நிறைவேற்ற மறுத்துவிட்டனர். கெய்செர் ஹாலண்டுக்கு ஓடிவிட்டார். அவர் முடியிழந்ததும் ஜெர்மனியின் மற்ற சிற்றரசர்கள் அனைவரும் அதிகார மிழந்தனர். தற்காலிகமாக அங்கு ஒரு குடியரசு ஏற்படுத்தப்பட்டு அது நவெம்பர்மீ 11ஆ காலை 11 மணிக்குப் போரை நிறுத்த ஒப்புக்கொண்டது.

---

## எழுபத்தேழாம் அத்தியாயம்

# போரின் அறுவடை

## (1919—1922)

§ **337.** சமாதான உடன்படிக்கைகள் :—**1919**-ம் ஆண்டின் முற்பகுதியில் பாரிஸ் நகரத்தில் நடைபெற்ற சமாதான மகாநாடு[1] மிகவும் விசித்திரமானது. நேசநாடுகளின் போர் நோக்கங்கள் என ப்ரெசிடெண்ட் வில்சன்[2] வெளியிட்ட "பதினான்கு கருத்துக்க"ளை[3] (கு. 242) அடிப்படையாகக்கொண்டே சமாதான ஏற்பாடு நடைபெறுமென்னும் நம்பிக்கையுடன் ஜெர்மானியர் போர் நிறுத்தத்துக்கு உடன்பட்டனர். இந்தக் 'கருத்துக்கள்' பலவிதமான பொருள்களுக்கு இடந்தந்தன. நேசநாடுகளிடையேகூட, அவற்றின் பொருளைப்பற்றிப் பலவகைப்பட்ட கருத்து வேறுபாடுகள் இருந்ததால், அவற்றைப் பற்றி ஒற்றுமையான அபிப்பிராயந் திரண்டு வருதல் மிகவும் கடினமாய்விட்டது. ஆயினும், யூரோப்பிய நடுநாடு

---

1. Peace Conference. 2. President Wilson. 3. 'Fourteen Points.'

கள் மீண்டும் போரைத் துவக்க முடியாத நிலையில் மிகவும் நலிந்து இருந்தபடியால், அவை வெற்றிபெற்றோர் சொன்ன நிபந்தனைகளை அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டியவர்களாயின. அவற்றைப்பற்றி விவாதிக்கவும் அவைகளுக்கு உரிமை யளிக்கப்படவில்லை. நேச வல்லரசுகள் தாங்கள் தீர்மானித்து வைத்திருந்த நிபந்தனைகளைக் கேட்டுக்கொள்ளவே அவற்றின் பிரதிநிதிகளை அழைத்தனர்.

மகாநாட்டுக்கு முப்பத்தேழு துரைத்தனங்களின் பிரதிநிதிகள் வந்திருந்தபோதிலும், 'பெரியவர்கள் நால்வ' ரின்[1]—ப்ரெஸிடெண்ட் வில்சன், மெஸியர் க்ளெமென்சு, மிஸ்டர் லாயிட் ஜியார்ஜ், ஸின்யா ஆர்லாண்டோ[2]— அந்தரங்க கூட்டங்களிலேயே முக்கியமான விஷயங்களெல்லாம் தீர்மானிக்கப்பட்டன. அவர்களிடையிலும் சில விஷயங்களைப்பற்றித் தீவிரமான கருத்துவேறுபாடுக ளிருந்தன; உதாரணமாக, ஏட்ரியாடிக் கடலின் கிழக்குக்கரைப் பாகம் இட்டலிக்குச் சேரவேண்டியதா, செர்பியாவுக்குச் சேரவேண்டியதா என்பதொன்று. மேலும், இந்நான்கு அரசியல் அறிஞர்களும் போராவேசங்களால் கிளரப்பட்டிருந்த நாட்டுப்பற்று நிறைந்த குடியரசுகளின் ஆஞ்ஞைக்குக் கட்டுப்பட்டவர்களாக இருந்ததும் விஷயங்களை நேர்மையான முறைகளில் விவாதித்து விவேகமுள்ள முடிவுகளையடைவதற்கு இடைஞ்சலா யிருந்தது.

ப்ரெஸிடெண்ட் வில்சன் தாம் குடியாட்சித் தத்துவங்களைப்பற்றி வெளியிட்டிருந்த உயரிய கருத்துக்களாலும், போரினால் அதிகமாக மெலிவுறாத வளமிக்க ஐக்கிய நாடுகளின் அதிபர் என்ற காரணத்தாலும் யூரோப்பில் பெருமதிப்பு பெற்றிருந்தார். ஆகவே, அவர் தமது சர்வ தேச

1. The Big Four. 2. President Wilson, M. Clemenceau, Mr. Lloyd George, Signor Orlando.

கூட்டுச் சங்கத்[1] திட்டமே—எதிர்காலத்தில் போர் நேராதபடித் தடுக்கக்கூடிய ஒரு சர்வ தேச ஏற்பாடு—மகாநாட்டில் முதன்மையாக எடுத்துக்கொள்ளப்படவேண்டும் என்று கூறியபோது எல்லோரும் அதற்கு இணங்கவேண்டியவர்களாயினர். இதனால் இந்தச் சர்வதேச கூட்டுச் சங்கத்தின் ஒப்பந்தமே[2] எதிரிகளோடு கையொப்பமிடப்பட்ட ஒவ்வொரு உடன்படிக்கையிலும்[3] முதல் பாகமாக அமைந்தது (கு. 243).

மகாநாட்டில் மிகுந்த செல்வாக்கு படைத்திருந்தவர் பெருங்கிழவரான ப்ரெஞ்சு அரசியல் அறிஞர் க்ளெமென்சுவே. வெற்றி பெற்றோர் விதிக்கும் நிபந்தனைகள் ஜெர்மனி மீண்டும் தலையெடுத்து ப்ரான்ஸ்மீது மறுபடியும் படையெடுத்துவர முடியாதபடி இருக்கவேண்டுமென்று அவர் கண்டிப்பாகக் கூறினர். ஜெர்மனியில் குடியரசு ஏற்பட்டுவிட்டால் வெற்றிபெற்ற நேசநாடுகள் அதைப் பரிவுடன் நோக்கும் என்று ஜெர்மானியர் நினைத்தனர். ஆயினும், அவர்களுக்கு மிகக் கடினமான நிபந்தனைகளே விதிக்கப்பட்டன. அவர்கள் ஆல்ஸாஸ் லொரேனை ப்ரான்ஸுக்குத் திருப்பிக்கொடுத்துவிடவேண்டியவர்களாயினர்; புதிதாக ஏற்பட்ட போலண்ட் குடியரசுக்கு (கு. 244) ப்ரஷ்ஷியாவின் பெரும்பாகம் அளிக்கப்பட்டது. போரால் ஏற்பட்ட நஷ்டங்களுக்கெல்லாம் ஜெர்மானியரே பொறுப்பாளர் என்று தீர்மானிக்கப்பட்டு ஏராளமான நஷ்டஈடு அவர்களிடமிருந்து வசூல்செய்வதற்கு ஏற்பாடாயிற்று. இந்த நஷ்டஈடுத் தொகை மிகப் பெரிதாக இருந்ததால் அதை நிர்ணயிக்க ஒரு தனி ஆராய்வுக்குழு[4] ஏற்படுத்தப்பட்டது. ஜெர்மானியரது போர்க்கப்பல்கள் எல்லாமும் வியாபாரக்கப்பல்கள் பலவும் பறிமுதல் செய்யப்பட்டன.

---

1. League of Nations. 2. The Covenant of the League of Nations.
3. Treaty. 4. A Special Commission.

நாட்டுப் பாதுகாப்புக்கு எவ்வளவு குறைந்த நிலப்படையும் கடற்படையும் தேவையோ அவைகளைத்தான் அவர்கள் இனி வைத்துக்கொள்ளலாம். ஆகாய விமானங்களும் நீர் மூழ்கிக் கப்பல்களும் அவர்கள் வைத்துக்கொள்ளக்கூடாது. ஜெர்மானியர் முணுமுணுப்புக்கள் காதில் வாங்கிக்கொள்ளப்படவில்லை. வெர்சாயியில்[1] (1919ஹு ஜூன்மீ) நிலைக்கண்ணாடிகள் கூடத்தில்[2] தடபுடலாகக் கூட்டப்பட்ட மகாநாட்டுக் கூட்டத்தில் போரிட்ட நாடுகளின் பிரதிநிதிகள் சமாதான உடன்படிக்கையில் கையொப்பமிட்டார்கள்.

அடுத்தபடியாக ஏற்பட்ட உடன்படிக்கைகளின்படி ஆஸ்ட்ரியா-ஹங்கரி பேரரசு முழுமையும் கூறுபோடப்பட்டது; உதாரணமாக, ஒரு பாகம் புதிய ஹங்கரி, செக்கோஸ்லோவாக்கியா[3] என்னும் குடியரசுகளாக மாறியது; ஒரு பாகம் செர்பியாவோடு சேர்ந்து யூகோஸ்லாவியா[4] இராச்சியமாயிற்று. துருக்கிப் பேரரசும் துண்டிக்கப்பட்டது. அதன் எல்லைப்புற மாகாணங்கள் பிரிட்டன் ப்ரான்ஸ் நாடுகளின் பாதுகாப்பின்கீழ்த் தனிப்பட்ட நாடுகளாயின.

§338. பிரிட்டன் அமைதி நிலைக்குத் திரும்பியது:—போர் நிறுத்தமானதும் பிரிட்டனில் ஒரு பொதுத் தேர்தல் நடைபெற்றது. போரை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டுவந்த கூட்டுக்கட்சிகள் அமைச்சுக்கே[5] சமாதான ஏற்பாடு செய்தல், பழையபடி நாட்டினர் வாழ்க்கையைத் திருத்தியமைத்தல் ஆகிய இரு முக்கிய பொறுப்புக்களும் அளிக்கப்பெறல் வேண்டுமென லாயிட் ஜியார்ஜ் கூறினர். அவரது கூட்டுக்கட்சிகள் அமைச்சின் கொள்கைகளாவன: (1) கெய்செரைத் தூக்கிலிட்டு, நீதியற்ற முறைகளில் போர் நடத்திய மற்றவர்களையும் தண்டிக்க வேண்டும்; (2)

---

1. Versailles. 2. Hall of Mirrors. 3. Czecho-Slovakia.
4. Yugo-Slavia. 5. The Coalition Ministry.

போரின் செலவின் பெரும்பாகத்தினை ஜெர்மனியிடமிருந்து வசூலிக்க வேண்டும்; (3) பிரிட்டனை 'வீரர்கள் வாழ்வதற்கேற்ற நாடாக' மாற்றவேண்டும். நாட்டினர் அக்கொள்கைகளை அங்கீகரித்ததற்கு அடையாளமாகத் தேர்தலில் கூட்டுக்கட்சிகள் அமைச்சுக்கு மிக அதிக இடங்கள் கிடைத்தன. தொழிற்கட்சி அவ்வமைச்சில் சேர மறுத்துவிட்டது; ஆஸ்க்வித் தலைமையிலிருந்த பல தாராளப் போக்கினரும் எதிர்ப்புக்கட்சியாகவே இருந்தனர். ஆயினும், புதிய காமன்ஸ் சபையில் இவ்விரு எதிர்ப்புக் கட்சியினரும் முறையே 63, 27 இடங்களைத்தான் பெற்றனர். தாராளப் போக்கினர்க்குள் ஏற்பட்ட பிளவு அக்கட்சியை நிலையாகவே ஒடுக்கிவிட்டது. ஆகவே, 'எதிர்ப்புக்கட்சி' என்னும் பட்டம் தொழிற்கட்சிக்கே உரியதாயிற்று.

கூட்டுக்கட்சிகள் அமைச்சின் திட்டம் வெற்றிகரமாக நிறைவேறவில்லை. ஹாலண்ட் துரைத்தனம் கெய்சரை ஒப்படைக்க மறுத்துவிட்டது; நேச நாடுகளும் அதைக் கட்டாயப்படுத்த முயலவில்லை. போரின் செலவை ஜெர்மனியிடமிருந்து வசூலிக்கும் முயற்சி பலிக்கவில்லை. (இதன் விவரங்களைப் பின்னே கூறுவோம், § 344). பிரிட்டனின் வாழ்க்கை நிலையையும் அதிகமாகத் திருத்தியமைக்க முடியவில்லை. லக்ஷக்கணக்கில் படையில் சேர்ந்திருந்தவர்கள் தங்கள் பழைய தொழில்களுக்குத் திரும்பியதும் நாடெங்கும் வாழ்க்கை நிலையில் பல இடர்ப்பாடுகளும் குழப்பங்களும் மனத்தாங்கல்களும் தோன்றின. வீடுகளில்லாமல் பலர் தவித்தனர். புது வீடுகள் கட்டிக் கொடுக்கத் துரைத்தனம் செய்த சிறு முயற்சியால் அவர்களுக்கு அதிக ஆதாரவு ஏற்படவில்லை. போரின்போது நித்திய வாழ்க்கைக்குரிய செலவுகள் இரட்டித்திருந்தன; போர் முடிந்து அமைதியேற்பட்ட காலத்திலும் அவை

ஏறிக்கொண்டே யிருந்தன. வியாபாரத்தில் திடுமென மந்த மேற்பட்டது. அதனால் போர்ச் சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டு வீடுதிரும்பியவர்களுக்கு வேலையகப்படுதல் கடினமாய்விட்டது. நாட்டு மக்களிடையே கல்வியை விருத்திசெய்வதற்கு வேண்டிய பணத்தைத் தேடிக் கொடுக்கத் துரைத்தனத்தால் முடியவில்லை.

ஆகவே, நாடெங்கும் ஏமாற்றமும் அதிருப்தியும் பரவித் தொழிற் சச்சரவுகளாக வெளிப்பட்டன. போரின்போது ஆக்கத்தொழில்களுக்கு ஆட்கள் கிடைப்பது அரிதாயிருந்தபடியால், இருந்த ஆட்கள் அதற்கு முன் எப்போதும் கிடைக்காத அதிக கூலிகளைப் பெறமுடிந்தது; இதனால், தொழிற்கட்டுப்பாடு சங்கங்கள் பெரிதும் பலப்பட்டிருந்தன. இந்த நிலையில் தொழிலாளர்கள் தங்களுக்குப் போர்ச்சமயத்தில் கிடைத்திருந்த அதிக கூலிகளைக் குறைப்பதற்கு இடந்தாக்கூடாதென் றிருந்தனர். வேலை கொடுப்போர் அவைகளை விரைவிலேயே அமைதிக் கால மட்டத்துக்குக் குறைத்துவிடவேண்டுமென் றிருந்தனர். கூலி சம்பந்தமான போராட்டம் முதலில் நிலக்கரிக்கனிகளில் கிளம்பியது. கனிகளில் வேலைசெய்வோர் அதிக கூலிகளும் குறைந்த வேலைநேரமும் கோரியதோடு, கனிகளை நாட்டினரின் பொதுச்சொத்துக்களாக[1] ஆக்கிவிட வேண்டுமென்றனர். சிலகாலம் பேச்சுக்கள் நிகழ்ந்தபின், தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளைப் பெறுவதற்காக வேலை நிறுத்தம் செய்யப்போவதாக அறிவித்தனர்; தொழில் முக்கூட்டுறவின்[2] மற்ற அங்கத்தினர்களும் (§ 330) அவர்களை ஆதரிக்கப்போவதாக மிரட்டினர். கடைசி தருணத்தில் துரைத்தனம் தலையிட்டு இவ்விஷயத்தை ஆராய்வதற்காக ஒரு ராயல் கமிஷனை[3] நியமித்து

1. Nationalisation of the mines. 2. The Industrial Triple Alliance.
3. A Royal Commission.

வேலை நிறுத்தம் நிகழாதபடி நிறுத்திவைத்தது. அந்த ஆராய்வுக் குழுவில் இருதாரத்துப் பிரதிநிதிகளும் இருந்தனர். அதற்கு நீதிபதி சான்கி[1] தலைமை வகித்தார். பல வாரங்கள் விசாரணைக்குப்பின் ஆராய்வுக் குழுவினருள் பெரும்பான்மையோர் ஓரளவுக்குக் கூலி அதிகமாக்கப்பட வேண்டுமென்றும், கனிகளை அரசாங்கம் வாங்கிவிட வேண்டுமென்றும் சிபார்சு செய்தனர். இவை கனிகளில் வேலை செய்யும் ஆட்களுக்குத் திருப்தியளித்ததால் அவர்கள் வேலைநிறுத்தம் செய்யவில்லை. பிறகு இருப்புப் பாதைத் தொழிலாளர்கள் கிளம்பினர். போரின்போது அவர்கள் இரட்டைக்கூலி வாங்கிக்கொண்டிருந்தனர். துரைத்தனம் இப்போது அதைக் குறைக்கத் தீர்மானித்தது. (போர்ச்சமயத்தில் துரைத்தனமே இருப்புப் பாதைகளைக் கண்காணித்து வந்தது.) இதில் தொழிலாளர்கள் மிரட்டலோடு நிற்கவில்லை; வேலை நிறுத்தமே செய்துவிட்டனர். ஒருவாரத்துக்குமேல் நாட்டில் போக்குவரவு தடைப்பட்டிருந்தது. முடிவில் அவர்கள் கோரியவை பெரும்பான்மையும் அளிக்கப்பட்டன.

§ **339.** பேரரசின் 'ஒடுக்கப்பட்ட நாடுகள்'[2] :—போரின் முக்கிய காரணங்களுள் ஒன்றாகிய நாட்டுணர்ச்சி[3] அதனால் மேலும் வளர்ந்தது. யூரோப்பிலும் ஏஷியாவிலும் பிரிட்டிஷ் பொதுநலப் பேரரசிலும் புதிய 'நாட்டரசாங்கங்கள்'[4] தோன்றின. 'மகள் நாடுகள்'[5] சுதந்தரம் பெற்ற நாடுகள் என்பதற்கு அறிகுறியாக அவை சமாதான மகாநாடுகளுக்குத் தத்தம் பிரதிநிதிகளை யனுப்பியதோடு, சர்வதேசக் கூட்டுச் சங்கத்திலும்[6] தனிப்பட்ட அங்கத்தினர்களாகச் சேர்ந்தன. பிரிட்டன் இச் சுதந்தர வளர்ச்சியை மகிழ்ச்சி

---

1. Justice Sankey. 2. The "Suppressed Nationalities" of the Empire. 3. National feeling. 4. National-states. 5. 'Daughter Nations'. 6. League of Nations

யுடன் ஏற்றுக்கொண்டது. ஆயினும், பேரரசின் வேறு சில பாகங்களில் போர் முடிந்த உடனே ஆங்காங்குள்ள மக்களின் நாட்டுணர்ச்சி காரணமாகவே தீவிரமான சச்சரவுகள் கிளைத்தன.

அயர்லண்டில் பழைய 'நாட்டினர்' (நாஷனலிஸ்ட்) கட்சியினர் 1918-ம் ஆண்டு நடந்த பார்லமென்ட் தேர்தலில் 'சின்பீன்' கூட்டத்தினரால் எங்கும் தோற்கடிக்கப்பட்டனர் (§ 334). அப்போது தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் வெஸ்ட்மின்ஸ்டர் பார்லமென்டுக்கு வாராமல் டப்ளினில் சுயேச்சையாக ஒரு தனித் துரைத்தனத்தை ஏற்படுத்திக்கொண்டனர். இத் துணிச்சலான செயலுக்குப் பிறகு பழைய துரைத்தனத்தின் உத்தியோகஸ்தர்களும் போலீஸ்காரர்களும் போர்வீரர்களும் கொலை செய்யப்பட்டனர். பிரிட்டிஷ் துரைத்தனம் 'சின்பீன்' கூட்டம் கலைக்கப்பட்டதாக அறிவித்து அதன் தலைவர்களைக் கைது செய்தது. இரண்டாண்டுகள் படுகொலைகளும் அடக்குமுறைத் தண்டனைகளும் நாட்டைச் சின்னபின்னமாக்கிய பிறகு, கூட்டுக்கட்சியினர் அமைச்சு க்ளாட்ஸ்டன் எண்ணியதைவிட (§ 318) அதிக சுதந்தரங்களோடு கூடிய சுயாட்சியை[1] அயர்லண்டுக்கு வழங்கி ஒரு சட்டமியற்றியது. ஆயினும், ஐரிஷ் மக்களின் மனம் மிகுதியும் புண்பட்டிருந்தமையால் ஒரு தனிப்பட்ட சுதந்தர அந்தஸ்தோடு கூடிய குடியரசைத் தவிர வேறு எதையும் ஒப்புக்கொள்ள சின்பீன் மறுத்துவிட்டது. 1921-ம் ஆண்டு நடுவரைக்கும் கொலைகளும் ஒறுத்தல் முறைகளும் தாண்டவமாடின. அப்போது பேரரசு மாகாணங்களின் சுதந்தரத்தோடு அயர்லண்ட் ஒரு சுயேச்சை நாடாக[2] இருக்க வேண்டுமென்று இருதரத்தாரும் ஒப்புக்கொண்டனர். (அதில் வடகிழக்குப் பாகம் மட்டும் சேரவில்லை; அங்குள்

1. Home Rule. 2. Free State.

ளவர்கள் சொந்தமாக வேறொரு துரைத்தனத்தை ஏற்கெனவே ஏற்படுத்திக்கொண்டனர்). அமிதவாதிகள்[1] சிலர் எந்த ஏற்பாட்டையும் எதிர்த்தனர். ஆயினும், அவர்களையடக்கியாளவேண்டியது இனி டப்ளினில் ஏற்பட்ட ஐரிஷ் துரைத்தனத்தின் பொறுப்பாய்விட்டது. இன்னும் சில ஆண்டுகள் படுகொலைகளும் கொலைத்தண்டனைகளும் நிகழ்ந்து அயர்லண்ட் முடிவில் அமைதியுற்றது.

'இந்தியர்கள் அதற்குத் தகுதியாக்கப்பட்டவுடன்' பேரரசு மாகாணப் பதவியினை[2] இந்தியாவுக்கு அளிப்பதாக பிரிட்டிஷ் துரைத்தனம் வாக்குறுதி தந்திருந்தது. 1917 ல் செம்ஸ்பர்ட் பிரபு[3] வைஸ்ராயாக இருந்தபோது இந்தியா காரியதரிசி மான்டகு[4] இங்கு வந்திருந்து எல்லாரோடும் கலந்தாலோசித்து வெளியிட்ட மான்டகு-செம்ஸ்பர்ட் அறிக்கை 1919-ல் பார்லமென்ட் சட்டமாயிற்று. அது இந்தியாவில் ஒரு இரட்டையாட்சித் திட்டத்தை[5] ஏற்படுத்தியது. அதன்படி, மாகாணங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபைகளுக்குப் பதில்சொல்லக்கூடிய இந்திய அமைச்சர்கள் வசம் கல்வி, சுகாதாரம் முதலிய விஷயங்கள் ஒப்படைக்கப்பட்டன; பண வருவாய், அமைதியை நிலைநிறுத்தல் முதலியவை துரைத்தனத்தார் நியமிக்கும் உத்தியோகஸ்தர்களின் பார்வையில் நிறுத்திவைக்கப்பட்டன. இந்திய அரசியல் வாதிகள்[6] இத்துடன் திருப்தியடையவில்லையாதலால், 1929-ல் மீண்டும் நிலையை ஆராய சர் ஜான் சைமன்[7] தலைமையில் ஒரு ராயல் கமிஷன்[8] இந்தியாவுக்கு வந்தது. அதன் அறிக்கையும் இந்திய அரசியல் வாதிகளுக்குத் திருப்தியளிக்கவில்லை. பிறகு லண்டனில் எல்லாக் கட்சியினரின் பிரதிநிதிகளும்

---

1. Extremists. 2. Dominion Status. 3. Lord Chelmsford. 4. Montagu. 5. Dyarchy. 6. Indian politicians. 7. Sir John Simon. 8. Royal Commission.

வட்டமேஜை மகாநாடுகள்[1] கூடிப் பேசினர். அவற்றின் விளைவாக 1935-ல் இயற்றப்பட்ட இந்தியா துரைத்தனச் சீர்திருத்தச் சட்டமே இப்போதும் அமுலி லுள்ளது. அச்சட்டத்தின்படி மாகாணங்கள் சுயாட்சி பெற்றன; சுதேச மன்னர்களும் ஒரு இணைப்பாட்சித் திட்டத்தில்[2] சேருவதாக இருந்தால், ஒரு நடு இணைப்புத்துரைத்தனத் துக்கும்[3] அது திட்டம் வகுத்திருக்கிறது. இதுவரையில் அவர்கள் அவ்வமைப்பில் சேராததால், நடுத்துரைத்தனம்[4] 1919-ல் அமைத்தபடியே இருக்கிறது. மற்ற பேரரசு மாகாணங்களுக்குத் துரைத்தனத்தை அமைத்துத்தந்த சட்டங்களுக்கும் இந்தியா துரைத்தன அமைப்புச் சட்டத் துக்கும் ஒரு முக்கிய வேறுபாடுள்ளது. இந்தியாவின் வெளிநாட்டு விவகாரங்களை வைஸ்ராயே நேராகக் கவனித் துக்கொள்ளுகிறார்; மேலும், இங்கு வைஸ்ராய்க்கும் மாகாண கவர்னர்களுக்கும் அவசரமான சந்தர்ப்பங்களில் செலுத்த மிக விரிந்த அதிகாரங்கள் கொடுக்கப்பட் டுள்ளன.

போர் நடந்திருந்த சமயத்தில் பிரிட்டிஷ் துரைத் தனம் ஈஜிப்ட்டை ஒரு பாதுகாப்பு நாடாக்கி[5], அதை எதிரி களின் ஆக்கிரமிப்பினின்றும் காக்க அங்கு பலத்த இரா ணுவ ஏற்பாடுகள் செய்துவைத்திருந்தது. அமைதி யேற் பட்டதும் ஈஜிப்ட் நாட்டினர் பிரிட்டிஷ் அதிகாரத்தினின் றும் விடுதலைபெறத் தீவிரமாக அவாவியதால், 1922-ல் வெளியான ஒரு அறிக்கைப்படி ஈஜிப்ட் நியாயவரம்புக் குட்பட்ட ஒரு மன்னரசாக்கப்பட்டது.[6] அதற்கு முழு சுயேச்சை சூயெஸ் கால்வாயைக் கண்காணிப்பதிலும், அயல் நாட்டார் பாதுகாப்பிலும், சூடான் துரைத்தனத்திலும்

1. Round Table Conferences. 2. Federation. 3. A Federal Government at the Centre. 4. Central Government. 5. A Protectorate. 6. A constitutional monarchy.

மட்டும் வழங்கப்படவில்லை. இவை பிரிட்டிஷார் பொறுப்பில் நிறுத்திவைத்துக்கொள்ளப்பட்டன. அமிதவாதிகள் கூட்டமொன்று ஈஜிப்ட்டுக்கு முழுச் சுதந்தரம் வேண்டுமென்று கிளர்ச்சி செய்யலாயிற்று. அதன் கிளர்ச்சியின் விளைவாகச் சில பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் கொலையுண்டனர். ஒரு சமயம் இக் கட்சி பொதுத்தேர்தலில் அதிக இடங்களைப் பெற்றபோது, சட்ட ரீதியான துரைத்தனம் சிறிதுகாலம் தள்ளிவைக்கப்பட்டது. பிறகு நிலை ஒருவாறு தணிந்தது.

§ **340.** புதிய அரசியல் அமைப்புக்கள்:—போரின் விளைவாக அரசியல் துறையிலும் சமூக வாழ்விலும் பிரிட்டனில் ஏற்பட்ட சில மாறுதல்களை இதுவரைக் கவனித்தோம். மற்ற யூரோப்பிய நாடுகளிலோ பெரும் புரட்சிகளே தோன்றின.

ருஷ்யப் புரட்சியின்போது (**1917,** § **335**) லெனின்[1] தலைமையில் தோன்றிய சமூகஆட்சிக் கொள்கையினர்க்கு (கம்யூனிஸ்டுகள்)[2] விரோதமாகக் கெரென்ஸ்கியின்[3] தலைமையிலிருந்த மிதவாதிகளை நேசநாடுகள் சப்பைகட்டி நிறுத்திவைக்க முயன்றனர். கம்யூனிஸ்டுகள் கார்ல் மார்க்ஸ்[4] வருணித்த பூலோக சுவர்க்கத்தை ('தொழிலாளர்களின் சர்வாதிகாரம்'[5]) (§ **321**) ஏற்படுத்திக்கொள்வதற்காக ஜெர்மனியுடன் உடனே சமாதானம் செய்துகொள்ளவேண்டுமென்றனர். இந்தக் கட்சிகளிடையே நிகழ்ந்த உள்நாட்டுப் போராட்டம் பெரும் போர் முடிந்த பிறகும் நெடுநாள் நீடித்திருந்தது. சிறிது காலம் நேசநாடுகள் 'சிவப்பு'க் கட்சிக்கு விரோதமாக 'வெள்ளை'க்கட்சியை ஆதரித்துக் கொண்டு வந்தன. முடிவில் 'சிவப்பு'க்கட்சியே வெற்றியடைந்தது. எதிர்ப்பினை அடக்க அவர்கள் மிகப் பயங்

1. Lenin. 2. The Communists. 3. Kerensky. 4. Karl Marx.
5. The 'dictatorship of the proletariat.'

கரமான முறைகளைக் கையாண்டனர். அவர்கள் ஏற்படுத்திய அரசியல் திட்டம் 'சோஷியலிஸ்ட் சோவியெட் குடியரசுகளின் இணைப்புத் துரைத்தனம்'[1] எனப்பட்டது. அது ஒரு புரட்சிகரமான புதிய அரசியல் சமூகப் பொருளாதார திட்டம். 'பால்ஷெவிசம்'[2] எனப்பட்ட இதைப் பழைய நாகரிகம் படைத்த நாடுகள் 120 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய 'ஜாக்கொபினிச'த்துக்குச்[3] சமானமாகக் கருதி (§ 245) அஞ்சினர். 'ஜாக்கொபின்' கொள்கையினரைப் போலவே 'பால்ஷெவிஸ்ட்' கொள்கையினரும் முதலில் உலகமுழுவதையும் தமது கொள்கைக்குத் திருப்ப முயன்றார்களாயினும் நாளடைவில் அந்நோக்கத்தை விட்டுவிட வேண்டியவர்களாயினர். அதனால், அவர்களுக்கு விரோதமான உணர்ச்சியும் தணிந்து வந்தது. அவர்களுடைய புரட்சிகரமான பெருந் திட்டங்களின் உயர்வினையோ தாழ்வினையோபற்றித் தீர்மையாக முடிவு கட்டுவதற்கு இன்னும் நெடுங்கால மாகவேண்டும்.

அக்கொள்கைகள் சிறிது காலம் ருஷ்யாவுக்கு வெளியிலும் பலரைக் கவர்ந்தன. ஜெர்மனியிலும் ஆஸ்ட்ரியாவிலும் ஹங்கரியிலும் சாதாரணமான பார்லமெண்ட் துரைத்தனத்தைக் கொண்ட குடியரசுகள் ஏற்படுவதன் முன் உள்நாட்டுக் குழப்பங்கள் தோன்றின. துருக்கி, யூகோஸ்லாவியா, போலண்ட், இட்டலி, ஸ்பெயின், ஜெர்மனி, ஆஸ்ட்ரியா ஆகிய நாடுகளில் பார்லமெண்ட் துரைத்தனங்கள் சர்வாதிகாரிகளுக்கு இடங்கொடுத்துவிட்டன. அவற்றுள் இட்டலியிலும் துருக்கியிலும் ஏற்பட்ட சர்வாதிகாரங்கள்[4] முக்கியமாகக் குறிப்பிடத் தக்கன.

இட்டலியில் போரின் விளைவாக மக்களின் நித்திய வாழ்க்கை சீர்மாறிக் கிடந்தது. வேலையில்லாத் திண்டாட்

1. Union of Socialist Soviet Republics. 2. 'Bolshevism.'
3. Jacobinism. 4. Dictatorships.

டம், அரைப்பட்டினி, இரட்டித்த விலைகள், அதிக வரிகள் முதலிய சீர்கேடுகள் அங்குப் பெருகியிருந்தன. முதல் இல்லாமல் வியாபாரங்கள் ஒடுங்கியிருந்தன. தொழிலாளர் சச்சரவுகள் அடிதடிச் சண்டைகளிலும் முடிந்தன. படையேந்திய கட்சிக்கூட்டங்கள் உள்நாட்டுப் போரில் இறங்கத் தயாராயிருந்தன. துரைத்தனம் இந் நிலையை மாற்ற வன்மையற் றிருந்தது. 1921ஆம் அக்டோபர்மீ கம்யூனிஸ்ட் கொள்கைகளை எதிர்த்து நின்ற பாஷிஸ்டீ[1] என்ற கட்சியொன்று நேப்பிளில் கூடி ரோமின்மீது படையெடுத்துவந்து அதிகாரத்தைப் பலாத்காரமாகக் கைப்பற்றிக்கொண்டது. அவர்களது தலைவர் சீன்யா முசொலீனி[2] தலைமை அமைச்சர் பதவியி லமர்ந்து வன்மைமிக்க ஒரு துரைத்தனத்தை அமைத்தார். இட்டலியின் பார்லமென்டோடு கூடிய மன்னரசு ஒரு பொம்மையர சாக்கப்பட்டது. இட்டலி மக்கள் தங்கள் 'சுதந்தர'த்தை இழந்தபோதிலும் திறமையும் ஒழுங்கும் நிறைந்த ஒரு ஆட்சியின் நன்மைகளைப் பெறலாயினர்.

துருக்கியிலும் இதைப்போன்று எதிர்பாராத ஒரு மாறுதல் ஏற்பட்டது. சேவ்ர் உடன்படிக்கையின்படி[3] (1920) துருக்கி தன் எல்லைக்கு அப்பாற்பட்ட மாகாணங்களை யிழந்ததோடு ஏஷியா மைனரின் ஒரு பாகத்தையும் இழந்தது. ஆயினும், அவ்வுடன்படிக்கைப்படி க்ரீஸுக்குக் கொடுக்கப்பட்ட ஸ்மர்னுவில்[4] ஒரு கிரேக்கப்படை வந்திறங்கியதும், துருக்கி மக்களிடையே நாட்டுப்பற்றினை அடிப்படையாகக்கொண்ட ஒரு கிளர்ச்சி தோன்றியது. முஸ்டாபா கெமால்[5] என்ற ஒரு புரட்சித் தலைவரின் கீழ் ஒன்றுதிரண்டு சென்று அவர்கள் கிரேக்கர்களை முறியடித்ததோடு, துருக்கியில் ஒரு புதிய குடியரசுத் துரைத்

1. Fascisti. 2. Signor Mussolini. 3. Treaty of Sevres.
4. Smyrna. 5. Mustapha Kemal.

தனத்தை ஏற்படுத்திச் சமாதான நிபந்தனைகளைப்பற்றி மறு ஆலோசனை செய்ய நேச நாடுகளை வற்புறுத்தினர். இதன் விளைவாக ஏற்பட்ட லோசான் உடன்படிக்கைப்படி[1] (1923) அங்கோராவைத் தலைநகராகக் கொண்டு கெமாலின் தலைமையில் நடைபெற்ற துருக்கி குடியரசு ஏஷியா மைனர் முழுமையினையும் தன் ஆட்சியின்கீழ் நிறுத்திக் கொண்டது. அதுமுதல் கெமாலின் தலைமையில் துருக்கி ஒரு புதிய வன்மைமிக்க முற்போக்கான நாடாக மாறி விட்டது.

இந்த க்ரீஸ்-துருக்கித் தகராறு இங்லண்டில் கூட்டுக் கட்சித் துரைத்தனத்தின் வீழ்ச்சிக்குக் காரண மாயிற்று. நாம் முன்னரே கண்டுள்ளபடி அத்துரைத்தனத்தைப் பற்றி எல்லோரும் ஏமாற்றமுற்றிருந்தனர். லாயிட் ஜியார்ஜ் ஏஷியா மைனரில் கிரேக்கருக்கு ஆதரவு காட்ட வேண்டுமென்று கூறியபோது, நிதானப்போக்கினர்[2] கட்சிகளின்கூட்டைக்[3] கலைத்துவிட்டுப் பிரிந்து பழையபடி ஒரு தனிக்கட்சியாக நிற்கத் தீர்மானித்தனர். அடுத்த பொதுத்தேர்தலில் (1922ஆ நவெம்பர்மீ) நிதானப் போக்கினர்க்கே அதிக இடங்கள் கிடைத்ததால் போனர் லா[4] தலைமையமைச்ச ரானார்.

---

## எழுபத்தெட்டாம் அத்தியாயம்

# பின் விளைவு[5]

## (1923—1934)

§ 341. முதல் தொழிற்கட்சித் துரைத்தனம்[6] :—லாயிட் ஜியார்ஜின் கூட்டுக்கட்சிகள் துரைத்தனம் (அதிற் பெரும்

1. Treaty of Lausanne. 2. Conservatives. 3. Coalition.
4. Bonar Law. 5. The Aftermath. 6. Labour Government.

பகுதியினர் நிதானப்போக்கினர்) கலந்ததும் எதிர்ப்புக் கட்சி மூன்று தனிப்பட்ட பிரிவுகளைக் கொண்டதாயிற்று: ராம்சே மாக்டானல்ட்[1] தலைமையிலிருந்த தொழிற்கட்சி; லாயிட் ஜியார்ஜ் தலைமையிலிருந்த 'தேசிய தாராளப் போக்கினர்'[2]; ஆஸ்க்வித் தலைமையிலிருந்த 'தனிநிலைத் தாராளப்போக்கினர்'[3]. (ஆஸ்க்வித் பிறகு ஆக்ஸ்பர்ட் ஏர்ல் ஆனார்.) அடுத்த ஆண்டே போனர் லா உடல் நலம் குன்றித் தலைமையமைச்சர் பதவியை விட்டுவிட்டார். அடுத்தபடி அப்பதவியில் அமர்ந்தவர் ஸ்டான்லி பால்ட்வின்.[4] நிதானப்போக்கினர் கட்சியில் அனுபவமும் புகழும் நிறைந்த கர்சன் பிரபு இருந்தபோதிலும் அவரை விட்டு, அதிகமாகப் பிரக்கியாதி பெற்றிராத ஒரு அரசியல் அறிஞரைத் தலைமை அமைச்சராக்கவேண்டியிருந்தது இனி தலைமையமைச்சர் பதவியைப் பெறக்கூடியவர் அநேகமாகப் பிரபுக்கள் சபையின் அங்கத்தினராக இருக்கமுடியாது என்பதைக் குறிப்பிடுகிறது.

நிதானப்போக்கினருள் பலர் இறக்குமதிச் சரக்குகளின்மீது சுங்க வரிகளை விதித்துப் பிரிட்டிஷ் ஆக்கத் தொழில்களை ஆதரிக்கவேண்டுமென்னும் சுங்கவரிச் சீர்திருத்தப் போக்கினை[5] இன்னும் மேற்கொண்டிருந்தனர். இப்போக்கினை மாற்றுவதற்காகப் பால்ட்வின் பார்லமென்டைக் கலைத்து நாட்டினர் ஆதரவை நாடினார். கட்டுப்பாடற்ற வாணிபத்தை[6] மீண்டும் நிலைநாட்டப்போவதாகக் கூறியது இருபது ஆண்டுகளுக்குமுன்போல இப்போதும் (§ 327) நிதானப்போக்கினருக்கு ஆபத்தாக முடிந்தது. அவர்கள் 90 இடங்களை இழந்தனர்; அவற்றுள் தொழிற்கட்சியினர் 50 இடங்களைப் பெற்றனர். எதிர்ப்புக் கட்சிகளெல்லாம் இந்த வரி விதிப்பு விஷயத்தில் ஒன்று

1. Ramsay Macdonald. 2. National Liberals. 3. Independent Liberals. 4. Stanley Baldwin. 5. Tariff Reform. 6. Free Trade.

சேர்ந்து துரைத்தனத்துக்கு விரோதமாக ஓட் கொடுத்ததால் அத் துரைத்தனம் கலைந்தது. அப்போது எதிர்ப்புக் கட்சியில் மிகப் பெருங் கூட்டமாயிருந்த தொழிலாளர் கட்சியின் தலைவர் ராம்சே மாக்டானல்டை மன்னர் அழைத்து அமைச்சு அமைக்கச் சொன்னார். இருபது ஆண்டுகளுக்கு முன்னர்தான் மிகச் சில அங்கத்தினர்களுடன் தொடங்கிய தொழிற் கட்சி இதற்குள் (§ 328) நாட்டின் துரைத்தனத்தையே ஏற்று நடத்தும் பொறுப்பைப் பெற்றது.

ஆயினும், அது பதவியிலிருந்த போதிலும் தனி அதிகாரம் செலுத்தக்கூடிய நிலையிலில்லை. தாராளப்போக்கினர் கூட்டங்களின் ஆதரவு அதற்கு அவசியமாக இருந்தது. ஆகவே, அது சமூக வாழ்க்கை சம்பந்தமான சீர்திருத்தமெதுவும் செய்ய முடியவில்லை. ஆயினும், அதுவரை அமைச்சர் வேலை செய்தறியாதவர்கள் ஒழுங்காகவும் தீர்மையாகவும் துரைத்தனத்தை நடத்துவது பலருக்கு வியப்பைத் தந்தது; சிறப்பாக, தலைமையமைச்சர் வெளிநாடுகள் சம்பந்தமான விஷயங்களைக் கவனித்தமை. ஆயினும், அவர்கள் நெடுங்காலம் பதவியிலில்லை; அவ்வாண்டு முடிவதற்குள் ருஷ்ய பால்ஷெவிக்குகளோடு அவர்கள் தொடர்புவைத்துக்கொண்டிருந்தார்கள் என்ற சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. அதனால் மாக்டானல்ட் பார்லமென்டைக் கலைத்துவிட்டு மறுதேர்தல் ஏற்படுத்தினார் (மூவாண்டுகளுள் நான்காவது தேர்தல்!). அதில் நிதானப்போக்கினர்க்குத் தாராளப்போக்கினருக்கும் தொழிற் கட்சியாருக்கும் சேர்ந்து கிடைத்த இடங்களைவிட மிக அதிக இடங்கள் கிடைத்தன.

§ 342. மொத்தவேலைகள் நிறுத்தம்[1].—போர் முடிந்ததிலிருந்து முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கு[2]

1. The General Strike. 2. 'Capital' and 'Labour'.

மிடையே புகைந்துகொண்டிருந்த மனத்தாங்கல்கள் பால்ட்வின் இரண்டாம் அமைச்சுக் காலத்தில் (1924-1929) அனல் வீசி எரிய ஆரம்பித்தன. சான்கி ஆராய்வுக் குழுவினரின் சிபார்சுகளைத் துரைத்தனம் நிறைவேற்றி வைக்கவில்லை என்று கனிகளில் வேலைசெய்வோர் குறைகூறிக்கொண்டிருந்தனர் (§ 338). ஆயினும், தொல்லைக்கு முக்கிய காரணம் வேறு. போரின் பிறகு பிரிட்டிஷ் நிலக்கரி அதிகமாக வேண்டப்படவில்லை. மற்ற நாடுகளிலும் நிலக்கரி முன்னைவிட அதிகமாக எடுக்கப்பட்டதும், நிலக்கரிக்குப் பதில் எண்ணெய் எரிபொருளாக உபயோகிக்கப்பட்டு வந்ததுமே இதற்குக் காரணம். தொழிலாளர்களனைவரும் (சிறப்பாகக் கனிகளில் வேலைசெய்வோர்) தங்கள் பிழைப்புக்கான தொழில்களில் தங்களுக்கு ஏதாவது ஒருவகையான அக்கு ஏற்படுமானால் தங்கள் நிலை சீர்படுமென்றும், அவ்விதமான மேம்பாடு போரின் விளைவாகத் தங்களுக்கு ஏற்படலாமென்றும் நினைத்துக்கொண்டிருந்தனர். ஆயினும், அங்கிலையில் கூலிகளை ஏற்றமுடியாதென்று கனிகளின் சொந்தக்காரர்கள் கூறிவிட்டனர். கனிகளை நாட்டின் சொத்தாக்கிவிட்டால் ஆட்கள் அதிக கூலி பெற முடியுமென்று தொழிலாளர் கூறினர். இந்தத் தகராறுகள் காரணமாக 1920-21-ல் இரண்டு பெரிய வேலைநிறுத்தங்கள் நிகழ்ந்தன. ஆயினும், அவற்றால் நிலை மேலும் கேவலமாய்விட்டதே தவிர எவ்வித நன்மையும் ஏற்படவில்லை. பிரிட்டனிலிருந்து நிலக்கரி வாங்கிக்கொண்டிருந்த வெளிநாட்டினர் அதை வேறு இடங்களிலிருந்து தருவித்துக் கொள்ளலாயினர்.

அடுத்த சில ஆண்டுகள் தொழிற்கட்டுப்பாடு இயக்கத்துக்கு மிகவும் தொல்லையான காலமாயிருந்தன. வியாபாரம் சுருங்கியது; கூலிகள் மேலும் குறைக்கப்பட்டன; வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியது; தொழிற் கட்டுப்

பாடு சங்கங்களின் அங்கத்தினர் தொகை விழுந்தது. தொழிலாளர் தலைவர்கள் வேலைநிறுத்தத்தால் லாபமேற்படாதது கண்டு அரசியல் துறையில் ஆதிக்கம் பெற்றுத் தங்கள் கூட்டத்தினர்க்கு நன்மை தேட முயன்றனர். அவர்கள் பெரு முயற்சியின் காரணமாகத் தொழிலாளர் கட்சி 1924-ல் அமைச்சு நிறுவியது. ஆயினும், இந்த மாக்டானல்ட் அமைச்சு தொழிலாளர்களுக்கு அதிகமாக ஒன்றும் சாதித்துவிட முடியவில்லை யென்பதையும், விரைவிலேயே பதவியை விட்டு விலகவேண்டியதாயிற்று என்பதையும் நாம் முன்னமே கண்டோம் (§ 341). 1925-ல் மற்றொரு இக்கட்டான நிலை யேற்பட்டது. பால்ட்வின் அமைச்சு 1917 முதல் துரைத்தனம் கனிகளின்மீது செலுத்திக்கொண்டிருந்த அதிகாரத்தைத் திடுமென விட்டுவிட்டது. இதனால் கனித் தொழிலாளர்களின் வருமானம் மேலும் குறைந்துவிடும்போல் தோன்றியதால், அவர்கள் புதிய ஏற்பாடு ஒன்று செய்து முடிக்கப்படும்வரையில் தங்களுக்கு ஏதாவது உதவிப்பணம்[1] வழங்கப்பட வேண்டுமென்று கேட்டனர். துரைத்தனம் முதலில் முடியாதென்று கூறி, பிறகு மற்ற முக்கியமான தொழிற்கட்டுப்பாடு சங்கங்களும் 'பரிவுகாட்டும் வேலைநிறுத்தங்கள்'[2] ஏற்பாடு செய்தபோது இணங்கியது.

தொழிலாளர்கள் மொத்தத்தில் வேலைநிறுத்தம் செய்து துரைத்தனத்தினையும் வேலை அளிப்போரையும் தங்கள் கோரிக்கைகளுக்கு இணங்கவைக்கும் முறையைப் பற்றி யூரோப்பிய நாடுகளில் சமூகநலன் கொள்கையினர்[3] நெடுங்காலமாகவே விவாதித்துக்கொண்டு வந்திருந்தனர். இவ்வியக்கத்தின் தொடக்கத்தில் இதைக் கையாளப் பார்த்த ராபர்ட் ஓவெனின் முயற்சி எவ்வாறு வீணாயிற்று என்பதை நாம் முன்னரே அறிந்துள்ளோம் (§ 288).

1. Subsidy. 2. Sympathetic strikes. 3. Socialists.

பொதுவில் பிரிட்டிஷ் தொழிற் கட்டுப்பாடு சங்கத்தினர்களுக்கு இத்தகைய 'புரட்சிகரமான'[1] முறைகளில் அதிக பிடித்தமில்லாதிருந்த போதிலும், நிலக்கரி உதவிப்பணத்தைப்[2] பெற்றதில் அவர்கள் அடைந்த வெற்றி அவர்கள் மனப்பான்மையை மாற்றியது. 1926ஆம் மேமீ 1உ உதவிப் பணத்திற்கு ஏற்பட்டிருந்த காலவரையறை முடிந்ததும், கனித் தொழிலாளர்களுக்கு அது மீண்டும் அளிக்கப்படாவிட்டால், மொத்தவேலைகள் நிறுத்த மொன்று திட்டஞ்செய்து அவர்களை ஆதரிக்கப்போவதாக அச்சங்கங்கள் மிரட்டின. துரைத்தனம் அம்மிரட்டலுக்கு இணங்காதிருந்தது அவர்களுக்கு வியப்பைத் தந்தபோதிலும், அவர்கள் திட்டம்போட்டபடியே வேலைகள்நிறுத்தம்செய்தனர். வேலைகள்நிறுத்தம் ஒரு வாரம் நீடித்திருந்து பிறகு குலைந்துவிட்டது. இதற்கு நான்கு காரணங்களைக் கூறலாம். முதலாவதாக, துரைத்தனம் இந்த வேலைகள்நிறுத்தத்தை எதிர்பார்த்து அச்சமயத்தில் நாடுமுழுமையிலும் நித்திய வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் கிடைக்குமாறு முன்னதாகவே ஒரு அவசரகால ஏற்பாட்டினைச்[3] செய்துவைத்திருந்தது. இரண்டாவதாக, இவ் வேலைகள் நிறுத்தத்தால் மிகுதியாக அல்லற்படவேண்டியிருந்தவர்கள் நாட்டினருள் பெரும்பான்மையினரான வேலைகள்நிறுத்தம் செய்திருந்த தொழிலாளர்களும் அவர்கள் குடும்பத்தினருமே. மூன்றாவதாக, இருப்புப்பாதைப் போக்குவரவு நின்றுவிட்டதால் ஏற்பட்ட கஷ்டத்தைத் தற்காலிகமாகப் பாட்டைகளில் லாரிகளை ஓட்டிச்செல்ல முன்வந்தவர்களின் முயற்சிகள் பெரிதும் குறைத்துவிட்டன. நான்காவதாக, தொழிற்கட்டுப்பாடு சங்கங்களின் தலைவர்கள் உண்மையில் புரட்சிமனப்பான்மை கொண்டவர்களல்ல

---

1. Revolutionary. 2. Coal subsidy. 3. Emergency system.

ராதலின், அவ் வேலைகள்நிறுத்தம் சட்ட விரோதமானது என்பதை உணர்ந்ததும் திகிலடைந்தனர்.

துரைத்தனத்தார் தமது வெற்றியைத் தொடர்ந்து ஒரு புதிய தொழிற்கட்டுப்பாடு சட்டம் (1927) இயற்றி வைத்தனர். அது பரிவுகாட்டும் வேலைநிறுத்தங்கள் செய்து சமூகத்தினை இணங்கும்படி கட்டாயப்படுத்துவது சட்டவிரோத மென்றது. பார்லமென்ட் அங்கத்தினர் களைத் தொழிற்கட்டுப்பாடு சங்கங்கள் ஆதரிப்பதற்கும் அது தடைகள் ஏற்படுத்தியது. ஆயினும், அம் மொத்த வேலைகள் நிறுத்தத்தினால் ஆக்கத்தொழில்களும் வாணிப மும் அடைந்த நஷ்டத்தினை அச்சட்டம் எவ்வகையிலும் ஈடுசெய்ய முடியவில்லை. ஆகவே, நாட்டினர்க்குள் வேலை யில்லாத் திண்டாட்டம் மேலும் அதிகரித்தது.

§ **343.** சர்வதேசங்கள் கூட்டுச்சங்கமும் படைகளைக் குறைத்தலும்:—நாட்டுப்பற்றினின்றும் எழுந்த உணர்ச்சி களே பெரும்போருக்குக் காரணமாயிருந்தபடியால், அவை அதனால் மேலும் தீவிரமாயின; ஆயினும், நாடுக ளனைத்தும் எவ்வகையிலேனும் 'ஒன்று சேர்ந்து' எதிர் காலத்தில் போர்கள் நேராதபடி தடுக்கவேண்டுமென் பதையும் அவை உணரலாயின. உயிர்களையும் பொருள் களையும் அழிக்கவல்ல சாதனங்கள் நாளுக்கு நாள் பெருகி வரும் நிலையில் மற்றொரு பெரும்போர் மூளுமானால் யூரோப்பிய நாகரிகம் தலையெடுக்க முடியாதென்பது வெளிப்படையாயிற்று. ஜினிவாவில் சர்வதேச கூட்டுச் சங்கம் ஏற்படுத்தப்பட்டபோதிலும், சோவியெட் ருஷ்யா, ஐக்கிய நாடுகள் போன்ற மிகப் பெரிய நாடுகள் அதில் சேரவில்லை. மேலும், அதன் கட்டளைகளின்படி நடக்க எந்த நாடேனும் மறுக்குமானால், அதைக் கட்டாயப் படுத்தச் சங்கத்துக்கு யாதொரு சாதனமு மில்லை. அமைதி நிலைத்திருக்குமென்று உறுதிப்படுத்தப் பல முயற்சிகள்

செய்யப்பட்டன. 'போரை முடிக்க வந்த அந்தப் போ'ரின்பிறகுகூட ஒவ்வொரு நாடும் தங்களுக்குப் பெருஞ் சுமையாக ஏராளமான படைகளைத் திரட்டிவைத் துக்கொண்டிருத்தல் அவசியமில்லை யாதலால், அவை களைக் குறைக்க முயலுதல் மேற்கூறிய முயற்சிகளுள் முக்கியமானதொன்று யிருத்தல்வேண்டும். வெற்றிபெற்ற நாடுகள் வெர்சாயி உடன்படிக்கையிலேயே, ஜெர்மனியின் படைப் பலத்தைக் கலைத்தல்[1] மற்றெல்லா நாடுகளின் படைப் பலங்களையும் குறைத்தலுக்கு ஏதுவாகுமென்று கூறி யிருந்ததால், அம்முயற்சி கட்டாயமாகச் செய்யப்பட வேண்டியதே.

கடற்படைகள் விஷயமாக ஏதோ கொஞ்சம் சாதிக் கப்பட்டது. வாஷிங்ட்டன் மகாநாட்டில்[2] (1922) மூன்று முக்கியமான கடலரசுகளும்[3] தங்கள் பெரும் போர்க் கப்பல்களின் தொகையையும் பருமனையும் குறைத்துக் கொள்ள ஒப்புக்கொண்டன. அதே விதமாகச் சிறிய போர்க்கப்பல்களின் தொகையையும் பருமனையும் குறைக் கச் செய்த மற்றொரு முயற்சி (ஜினிவா மகாநாடு[4], 1927) பலிக்கவில்லையாயினும், 1930-ல் நடந்த லண்டன் மகா நாட்டில்[5] அது சம்பந்தமாகச் சில தீர்மானங்கள் நிறை வேறின. எனினும், நிலப்படைகளையும் ஆகாயப்படைகளை யும் குறைக்கச்செய்த முயற்சியொன்றும் பலிக்கவில்லை. பெரும்படைகள் வைத்திருக்கும் நாடுகள் பத்திரமாக இருக்க முடியாதென்பதை இப் பெரும்போர் விளக்கிக் காட்டியபோதிலும், படைகளைக் குறைத்துத் தத்தம் பலத் தைக் குறைத்துக்கொள்ள எவையும் ஒப்புக்கொள்ளவில்லை. அமைதியை நிலைநாட்ட விரும்பியவர்கள் படைப்பலமற்ற சர்வதேசங்கள் கூட்டுச்சங்கம் உலகத்திலுள்ள மக்களுக்கு

1. Disarmament. 2. Washington Conference. 3. Naval Powers.
4. Geneva Conference. 5. London Conference.

ஒரு பத்திர உணர்ச்சியை உண்டாக்கித்தா வன்மை யற்றிருந்த தென்பதை உணர்ந்து சங்க ஒப்பந்தத்தை விட வேறு ஏதாவதொரு வன்மையை அதற்குத் தர வேண்டுமென்று முயன்றனர். ஆயினும், அம்முயற்சிகள் சம்பந்தமாக நிகழ்ந்த பேச்சுக்களும் கூட்டங்களும் இவ் விஷயம் எவ்வளவு சிக்கலானதென்பதையே மேலும் மேலும் விளக்கிக் காட்டின. உதாரணமாக, எண்ணிக்கை யைக் குறைப்பதென்றால், கட்டாயப்படுத்தித் திரட்டப் படும் பழக்கங்குறைந்த படைகளைவிட நன்றாய்ப் பண்ணுறுத்தப்பட்ட படைகள் மேல்; செலவைக் குறைப்பதென்றால், வேண்டியபோது கட்டாயப்படுத்தித் திரட்டப்படும் படைகளுக்குவிட நிலையாகப் பண்ணுறுத்தி வைக்கப்பட்டிருக்கும் படைகளுக்குச் செலவு அதிக மாகும். மேலும், அயல்நாடுகளின் ஆக்கிரமிப்புக்குப் பலியாகும் நாடுகளைப் பாதுகாக்க ஒன்றுதிரண்டு போர் புரிய ஒப்புக்கொள்ளப் பல நாடுகள் விரும்பவில்லை; ஏனென்றால், போர்புரியும் நாடுகளுள் எது உண்மையில் ஆக்கிரமித்தது என்பதைத் தீர்மானித்தல் மிகவும் கடினம்.

எனினும், சுகாதாரப் பாதுகாப்புக்கள், குற்றங்கள், தொழில் நிலைமைகள் முதலிய சம்பந்தமாக எல்லா நாட் டினரும் ஒத்துழைத்தல் என்னும் பழக்கம் வளர்ந்து கொண்டு வந்ததால், அவ்விதம் அத்துறைகளில் ஒத் துழைத்தல் மூலம் நாட்டினரிடையே ஒற்றுமையுணர்ச்சி யைப் பெருக்கச் சிறிது வாய்ப்பு ஏற்பட்டது. மேலும், தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளமுடியாத நிலையிலிருக் கும் சில நாடுகளைச் சர்வதேசக் கூட்டுச்சங்கத்தின் மேற் பார்வையின்கீழ்க் கவனித்துக்கொள்ளச் சில வல்லரசுகள் சங்கத்தின் ஒப்படை ஆணைகளைப்[1] பெற்று அவ்வாணைகளைச் செலுத்திக்கொண்டு வருகின்றன. அதோடு ஹேக்[2]

1. 'Mandates'. 2. The Hague.

என்னு மிடத்தில் நிறுவப்பட்டுள்ள நாடுகள் நீதிமன்றத்தின்[1] தீர்ப்புக்களை நாடுகளிடையே தோன்றும் கருத்து வேறுபாடுகள் சம்பந்தமான வழக்குகளில் இதுவரை எல்லோரும் ஒப்புக்கொண்டு வந்திருக்கின்றனர்.

§ **344.** போர்க் கடன்களும் போர் நஷ்ட ஈடுகளும்[2] :—போர்க் கடன்களையும் நஷ்ட ஈடுகளையும் செலுத்தல் நாடுகளின் வளத்தையும் அவைகளிடையே நல்லுணர்ச்சி வளர்தலையும் தடுத்தது. போரின்போது அநேகமாக எல்லா நேசநாடுகளும் ஐக்கிய நாடுகளிடமிருந்து கடன் வாங்கவேண்டியிருந்தது. அவற்றுள் பிரிட்டன் தனக்காகவும் மற்ற நேசநாடுகளுக்காகவும் சேர்த்துக் கடன்வாங்கியிருந்தது. இத்தகைய கடன்களைக் கொடுத்தல் மிகவும் கடினம். ஏனென்றால், கடன் வாங்கியது பணமல்ல; போர்த் தளவாடங்களும் போரை நடத்தும்போது தேவையாயிருந்த மற்ற பொருள்களுமே. ஆயினும், தன் சொந்த ஆக்கத்தொழில்களைப் பாதிக்கக்கூடிய பொருள்கள் வாயிலாக எந்த நாடும் தனக்குச் சேரவேண்டிய கடனைத் திருப்பிப்பெற்றுக்கொள்ள இசையாது. பிரிட்டன் தனக்குச் சேரவேண்டிய கடனை நெடு நாட்களுக்கு முன்னமே தள்ளிவிட்டது; ஆயினும், அமெரிகாவுடன் இக்கடன் சம்பந்தமாகத் திருப்திகரமான ஏற்பாடொன்றும் தான் செய்துகொள்ள முடியவில்லை.

ஜெர்மனியிடமிருந்து போர் நஷ்டஈடு வசூலித்தல் சம்பந்தமாகவும் இதைப் போன்ற கஷ்டமே ஏற்பட்டது. வெற்றி பெற்ற நாடுகளைவிடப் போரினால் ஜெர்மனி அதிகமாகச் சோர்வடைந்திருந்த போதிலும், போரின் செலவு முழுமையினையும் அதனால் ஈடுகட்டிக் கொடுக்க முடியுமென்று எல்லோரும் முதலில் நம்பி யிருந்தனர். ஆகவே,

---

1. Court of International Justice. 2. War Debts and Reparations.

1923-ல் போர் நஷ்டஈடுப் பணத்தைக் கொடுக்குமாறு ஜெர்மன் துரைத்தனத்தைக் கட்டாயப்படுத்த ப்ரான்ஸ் ரூஹ்ர் நிலக்கரிக்கனிப் பிரதேசத்தைப்[1] படையெடுத்துச் சென்று கைப்பற்றிக்கொண்டது. ஆயினும், இதனால் எதிர்பார்த்த பலனொன்றுங் கிடைக்காமல், ஜெர்மனியின் பொருளாதார நிலைக்குப் பெரும் பங்கமேற்பட்டதோடு உலகப் பொது நிலையிலும் சீர்கேடுகள் விளைந்தன. ஆகவே, பழைய நேசநாடுகள் தங்களுக்கு ஜெர்மனி தரவேண்டிய போர் நஷ்ட ஈடுப் பணம் வந்தால்தான் அமெரிகாவுக்குத் தாங்கள் கொடுக்கவேண்டிய கடனைத் தீர்க்க முடியுமென்று கூறிவிட்டன. இதனால் நஷ்டஈடு கொடுத்தலைப்பற்றி ஜெர்மனியின் உண்மை நிலையினை ஆராய்ந்து வருவதற்காக ஐக்கிய நாடுகள் துரைத்தனம் கர்னல் டாஸ்[2] என்பவர் தலைமையில் ஒரு ஆராய்வுக் குழுவினை அனுப்பி வைத்தது. டாஸ் திட்டம் (1924)[3] நஷ்டஈடு விகிதங்களைக் குறைத்தது. ஆயினும், அவற்றையும் ஜெர்மனி தரமுடியாத நிலையிலிருந்தது. ஐந்து ஆண்டுகள் கழித்து மற்றொரு ஆராய்வுக் குழு அவற்றை மேலும் குறைத்தது. இந்த யங் திட்டத்தையும்[4] (1929) ப்ரெசிடென்ட் ஹூவர்[5] 1931ல் தள்ளிவைக்கவேண்டியதாயிற்று.

§ 345. சர்வதேசங்கள் கூட்டுச்சங்கம் முறிந்தது :— 1932ஆு பெப்ருவரிமீ நெடுநாளாக எதிர்பார்க்கப்பட்ட படைகளைக் கலைத்தல் மகாநாடு[6] கூடியது. அதற்கு அடிப்படையான வேலைகளைச் சுமார் பத்தாண்டுகளாக ஒரு 'தயாரித்தல் குழு'[7] செய்துகொண்டிருந்தது. ஆயினும், அம்மகாநாடு அதிகமாக எதையும் சாதிக்கப் போவதில்லை என்பதற்குச் சில அறிகுறிகள் முன்னரே தோன்றலாயின.

---

1. Ruhr coalfields. 2. Colonel Dawes. 3. Dawes Scheme.
4. Young Plan. 5. President Hoover. 6. Disarmament Conference.
7. 'A Preparatory Commission'.

ஜப்பான் புதிய நாடுகளைக் கவரும் முயற்சியை இன்னும் கைவிடாமல், சென்ற பன்னிரண்டு மாதங்களில் சீனர்களின் கூக்குரல்களை அசட்டைசெய்து மன்சூரியாவைக் கைப்பற்றிக்கொண்டுவந்தது. மகாநாட்டில் பல யோசனைகள் விவாதத்துக்கு வந்தன. சோவியெட் ருஷ்யா எல்லா நாடுகளின் படைகளனைத்தையும் உடனே கலைத்துவிட வேண்டுமென்றது. ப்ரான்ஸ் சங்கம் தன் அதிகாரத்தின் கீழ் நாடுகளுக்கெல்லாம் பொதுவான ஒரு 'போலீஸ் படை'யினை[1] வைத்திருக்கவேண்டு மென்றது. இந்த யோசனைகளையெல்லாம் அப்படியே ஏற்றுக்கொள்ளப் பல தடைகளிருந்தன. கடைசியில் ஆங்காங்கே நாடுகளிடையே 'இட ஒப்பந்தங்கள்'[2] செய்துகொள்வதென்ற முடிவு ஏற்பட்டது: ஜெர்மனிக்கும் போலண்டுக்கு மிடையே, பால்க்கன் நாடுகளுக்கு இடையே, ப்ரான்ஸுக்கும் ருஷ்யாவுக்கு மிடையே. மேலும், ஜெர்மானியர் வெர்சாயி உடன்படிக்கை அவர்களை மிகக் கேவலமான நிலையில் வைத்துவிட்டது என்று நெடுங்காலமாகவே மனம் புழுங்கியிருந்தனர். இந்த உணர்ச்சியே அடால்ப் ஹிட்லரின்[3] தலைமையின்கீழ் நாட்டுச் சமூகநலன் கட்சி[4] தோன்றுவதற்கு இடந் தந்தது. அவர்கள் 1933-ல் படைகளைக் கலைத்தல் மகாநாடு கூடியிருந்த சமயத்திலே திடுமென ஜெர்மனியில் அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டனர். ஜெர்மன் குடியரசு கவிழ்ந்துவிட்டது. புதிதாகத் தோன்றிய 'மூன்றுவது ரைக்'[5] துரைத்தனம் யூதர்களையும் பொதுவுடைமைக் கொள்கையினரையும்[6] ஒறுத்துத்[7] தங்கள் சர்வாதிகாரத்தை[8] எதிர்க்கக்கூடிய தொழிற்கட்டுப்பாடு சங்கங்களையும் அரசியல் கட்சிகளையும் மதப்பிரசார

1. 'Police Force'. 2. 'Regional pacts'. 3. Adolf Hitler.
4. National Socialist Party. 5. The 'Third Reich'. 6. Communists.
7. Persecuted. 8. Dictatorial power.

சபைகளையும் கலைத்துவிட்டது. மேலும், அது மீண்டும் நாட்டிற்குப் பழையபடி படைகளைத் திரட்டி வைத்துக் கொள்ளப் போவதாகவும் அறிவித்தது. மற்ற நாடுகள் இதை ஆக்ஷேபித்தபோது ஜெர்மன் துரைத்தனம் சர்வ தேசங்கள் கூட்டுச்சங்கத்தினின்றும் விலகிக்கொண்டது.

ஜப்பான் விஷயமும் இவ்விதமே ஆயிற்று. அதற்கும் சைனாவுக்குமிடையே தோன்றிய தகராறு சம்பந்தமாக ஆராய்ந்துகொண்டுவரச் சங்கம் லிட்டன் ஆராய்வுக் குழுவினை[1] அனுப்பியது. அக்குழு ஜப்பான் செய்தது தவறென்று அறிக்கை வெளியிட்டதும், ஜப்பான் சங்கத்தினின்றும் விலகிக்கொண்டது. அது மன்ச்சூரியாவை 'மன்சுக்கூவோ'[2] என்னும் பெயருடன் தன் போரசில் சேர்த்துக்கொண்டபோது சங்கம் ஒன்றும் செய்யமுடியாது பார்த்துக்கொண்டிருக்கவேண்டியதாயிற்று.

§ 346. பொருளாதார சிக்கல்கள் :—1930-ல் உலக முழுமையும் எப்பொழுதும் காணாத ஒரு வியாபார மந்தம்[3] ஏற்பட்டது. அதனால் எங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் தோன்றிச் சொல்லமுடியாத இன்னல்கள் நேர்ந்தன. இதற்குக் காரணங்கள் முக்கியமாக இரண்டு. முதலாவதாக, பெரும் போர் அநேகமாகக் கடன்வாங்கி நடத்தப்பட்டது; அப்போது ஏறிக்கொண்டு வந்த அளவுகடந்த கடன் சுமையை (பிரிட்டன் மட்டும் 1917–18-ல் நாள்தோறும் 70,00,000 பவுன் செலவிட்டது) எப்போதாவது திருப்பிக் கொடுத்துக் குறைக்கவேண்டும். இரண்டாவதாக, ஆக்கப்படும் பொருள்கள் எங்கும் பண்டமாற்றல் முறையில் வெளியேற்ற முடியாதபடி அவ்வளவு அதிகமாக உண்டாக்கப்பட்டு வந்தன. அதோடு ஒவ்வொரு நாட்டிலும் தம் நாட்டுத் தொழில்கள் ஓங்கத் தம்நாட்டுப் பொருள்

1. Lytton Commission. 2. Manchukuo. 3. Trade slump.

களே வாங்கப்படல் வேண்டும், வெளிநாட்டுப் பொருள் களின் போட்டி கூடாது என்னும் தேசிய பொருளாதார உணர்ச்சி[1] வளரலாயிற்று.

இந்தப் பொருளாதார 'பனிப் புசல்'[2] நாட்டைத் தாக்கிய சமயம் இரண்டாவது தொழிற்கட்சி அமைச்சு பதவி வகித்திருந்தது. அங்கிலேயில் அதன் செலவுகளுக்கு வேண்டிய பொருள்களனைத்தையும் பெறுதல் அதற்கு இயலாமற் போய்விடும்போல் தோன்றியதால், தலைமையமைச்சரும் (ராம்சே மாக்டானல்ட்) கருவூல மன்றத் தலைவரும் (சான்செலர் அப் தி ஏக்செக்கர் பிலிப் ஸ்னோடென்[3]) இந்த இக்கட்டான நிலையைச் சம்மாளிக்கச் செலவுகளை அதிகமாகக் குறைத்து வரிகளை ஏற்றவேண்டுமென்றனர். வேலையில்லாதவர்களுக்குக் கொடுத்துக்கொண்டுவந்த உதவிப்பணத்தைக் குறைப்பது தமக்கு நியாயமாகத் தோன்றவில்லையென்று கூறிச் சில அமைச்சர்கள் தங்கள் பதவிகளை ராஜீநாமா செய்துவிட்டனர். அவர்கள் இடங்களில் நிதானப்போக்கினரும் தாராளப்போக்கினரும் நியமிக்கப்பட்டதால் அத்துரைத்தனம் தொழிற் கட்சியைச் சேர்ந்த தலைமையமைச்சரைக் கொண்ட ஒரு தேசீய துரைத்தன[4]மாயிற்று. கட்டுப்பாடற்ற வியாபாரப் போக்கை மாற்றிப் பிரிட்டனில் ஆக்கப்படும் பொருள்கள் பிரிட்டனிலேனும் விலையாகும்படி வெளிநாட்டு இறக்குமதிப் பொருள்களின்மீது தீர்வைகளும் கட்டுப்பாடுகளும் விதிக்கப்பட்டன. வரிச்சுமையும் (உலகில் வேறெந்த நாட்டிலும் அவ்வளவு அதிகமான வரிகளில்லை) மேலும் அதிகமாக்கப்பட்டது. இத்தகைய முயற்சிகளால் ஓராண்டுக்குள் நிலைமை சம்மாளிக்கப்பட்டுவிட்டது. மீண்டும் நாடு மெதுவாக வளமையை நாடிச்செல்ல லாயது.

---

1. Economic nationalism. 2. 'Economic blizzard.' 3. Philip Snowden. 4. National Government.

§ **347.** பிரிட்டனில் போரின் விளைவாகச் சமூக நலத்திலும் பொருளாதார அமைப்பிலும் ஏற்பட்ட மாறுதல்கள் :— நாட்டினரின் வாழ்க்கையில் மெதுவாக நேரவிருந்த பல மாறுதல்கள் போரினால் விரைவில் நேர்ந்தன. விக்டோரியா அரசியார் ஆண்ட காலத்தில் நாட்டின் வளம் பெரும்பான்மையும் பெருவாரியாக ஆக்கப்பட்ட நெசவு நிலக்கரி இரும்புப் பொருள்களின் ஏற்றுமதியைப் பொறுத்திருந்தது. இவ்விஷயங்களில் மற்ற நாடுகளும் பிரிட்டனுக்கு இணையாக வந்துகொண்டிருந்தன என்பதை நாம் முன்னமே கண்டோம் (§ **320**). தங்களது இளம் ஆக்கத்தொழில்கள்[1] பிரிட்டனின் போட்டியால் அழிந்துவிடாதபடி அவை நாளுக்குநாள் தக்க பாதுகாப்புக்கள் ஏற்படுத்திக் கொண்டுவந்தன. போரின்போது ஏற்பட்ட இக்கட்டான நிலையில் இந்தத் தேசிய பொருளாதார உணர்ச்சி உரம் பெற்று வளர்ந்தது. எரிபொருளாக எண்ணெயும் நீர் வீழ்ச்சிகளிலிருந்து உண்டாக்கப்பெறும் மின்சாரமும் அதிகமாக உபயோகத்தில் வரவர நிலக்கரிக் கனிகளின் சிறப்பு குறைந்துவிட்டது. ஆகவே, பிரிட்டன் கட்டுப்பாடற்ற வாணிப முறையை விட்டுவிடவேண்டியதாயிற்று. அதனால் இனி பிரிட்டனுக்கு ஆக்க மேற்படாது. (ஏனென்றால், இறக்குமதி செய்துகொள்ள முடியாத நாடு ஏற்றுமதி செய்ய முடியாது). இனி அது வெளிநாட்டுப் போட்டியினின்றும் உள்நாட்டு வியாபாரத்தைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டியதே முறைமை.

இதனால் ஏற்றுமதி வியாபாரத்தால் முன்னர்த் தழைத்திருந்த ஆக்கத்தொழில்களில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியது. அதிர்ஷ்டவசமாக, போருக்குமுன் ஏற்படுத்தப்பட்டிருந்த தொழிலாளர் நிச்சயப் பாதுகாப்புத் திட்டம்[2] வேலை போனவர்களைப் பட்டினியினின்றும்

1. Nascent industries. 2. Industrial Insurance Scheme.

காத்தது (§ 328). ஆயினும், அதன் நிதிகள் நாளுக்கு நாள் குறைந்தன. முதலில் செய்த ஏற்பாட்டின்படி சந்தாத் தொகை செலவுக்குப் போதுமானதா யிருந்தது; போரின்பிறகு வேலையில்லாதவர்களின் தொகை நூற்றுக்கு 5-லிருந்து 15 ஆக ஆய்விட்டபடியால், அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய உதவிப்பணத்தின் பெரும் பகுதியைத் துரைத்தனத்தாரிடமிருந்து கடனாகப் பெறவேண்டி யிருந்தது. வேலையில்லாதவர்களுக்குக் கொடுக்கப்படும் இந்த உதவி[1] சாதாரண வழக்கில் 'பிச்சை'[2] என்று கூறப் படுகிறது. தற்காலத்திய புதிய ஆக்கத்தொழிற் புரட்சிக்குப் பலியாகும் இந்த ஏழைகளுக்குச் செய்யும் உதவியை இவ்வாறு கூறுதல் நேர்மை யல்ல. எனினும், வேலை போனவர்களுக்கு மீண்டும் வேலை கிடைத்தல் நாளுக்கு நாள் அரியதாய்விடும்போலிருக்கிறது; இதனால் அவர்கள் தங்கள் வேலைத் திறனையும் சுறுசுறுப்பான பழக்கங்களை யும் வேலையில் ஊக்கத்தையும் இழந்துவிடவும் நேரும்.

பொருள்களை நயமாக உண்டாக்கினால் இழந்த ஏற்று மதி வியாபாரத்தின் ஒரு பகுதியை நாடு மீண்டும் பெற லாம். ஆயினும், இதனால் அநேகமாகக் கூலிகளைக் குறைக்கவேண்டிவரும். நாட்டு மக்கள் அனைவருக்கும் இது விருப்பமில்லை. தொழிற் கட்டுப்பாடு சங்கங்களுக்கு இன்னும் செல்வாக்கு அதிகமாகத்தான் இருக்கிறது. அவற்றின் நீடித்த போராட்டத்தின் பயனாகப் பெறப் பட்ட அனுகூலங்களைக் குறைக்க ஒப்புக்கொள்வது ஒரு பெருந் துரோகமென்று அவை கருதுகின்றன. மேலும், நாட்டினருள் எல்லா வகுப்பினரும் போரின் போது ஒற்றுமையுணர்ச்சியுடன் எந்நிலையிலும் ஒன்றாக இருந்து சகிக்கவும் தியாகஞ்செய்யவும் பழக்கப்பட்டு விட்டபடியால், வேலை அளிப்போர்க்கும் தங்களின்கீழ்

1. Unemployment Relief. 2. 'The Dole.'

வேலை செய்பவர்களின் கூலிகளைக் குறைக்க மனம் வர வில்லை. மொத்தத்தில் பதினைந்து லக்ஷம் வேலை போனவர்களை வைத்து ஆதரிப்பதற்காகத் தங்கள் வரிச்சுமையை ஏற்றுக்கொள்ளப் பிரிட்டிஷ் மக்கள் தயாராக இருக்கின்றனரே ஒழிய நாட்டினரின் நித்திய வாழ்க்கைச் செலவு[1] களைக் குறைத்துக்கொள்ளத் தயாராயில்லை.

மற்றொரு விஷயமும் இங்கு கவனிக்கவேண்டியதாகும். போரின்போது பொதுப்பணம் மிகவும் தாராளமாகச் செலவழிக்கப்பட்டபடியால் எப்போதுமில்லாத சுகபோகங்களை அனுபவிப்பது பலருக்கும் சாத்தியமாயிற்று. அதேவிதமாகவே போரின்பிறகும் அவர்கள் வாழ்ந்துகொண்டிருக்க லாயினர். ஒவ்வொரு பிரிட்டனும் சராசரியாகப் பதினான்கு நாட்களுள் ஐந்து நாட்கள் ஏதாவது ஒரு வேடிக்கைக் காட்சிக்குப் போக முடிகிறது என்பதை அவர்களின் பாட்டன்மார் கேள்விப்பட்டால் திகிலடைந்துவிடுவார்கள். மேலும், மோட்டார் வண்டிப் பயணமும் கம்பியில்லாத ஒலிபெருக்கிகளும் மிகவும் ஏழ்மை நிலையிலுள்ளவர்களுக்குத் தவிர மற்றவர்களுக்குப் பலவகையான பொழுதுபோக்குகளையும் விநோத அனுபவங்களையும் எளிதில் பெறுவதற்கான வசதிகளைத் தத்தம் வகையில் அளித்துவருகின்றன.

இம்மாறுதல்களால் ஏற்பட்ட ஒரு முக்கியமான விளைவு பிரிட்டனில் மக்கள் கூட்டம் வடக்கிலிருந்து பழையபடி தெற்கு நோக்கிப் பரவத் தொடங்கியுள்ளதேயாம். நிலக்கரி, இரும்பு, கப்பல்கள் கட்டுதல் முதலிய கனத்த தொழில்களையும்[2] லான்கஷைர் யார்க்ஷைர் நெசவாலைகளையும் நம்பி இனித் தொழிலாளர்கள் கூட்டங்கள் அங்குப் பெருந்திரளாக நெருங்கி இருப்பதற்கில்லை. தற்காலம் தழைத்துவரும் தொழில்கள் நிலக்கரிக் கனிகளுக்கு

1. National standard of living. 2. 'Heavy industries.'

அருகிலிருக்கவேண்டிய அவசியமில்லை. லண்டனுக்கு அருகிலேயே அவைகளுக்குக் குறைந்த வாடகை, அழகான சூழல், நயமான மின்சார சக்தி, ஏராளமான போக்கு வரவுச் சாதனங்கள் முதலிய வசதிகள் கிடைக்கின்றன. (லண்டன் நகரம் உலக வியாபாரத்தில் இன்னும் முதன்மை யான இடத்தை இழக்கவில்லை).

ஆகவே, இரு பொருளாதார சகாப்தங்களுக்கு இடையிலுள்ள இடைக்காலத்தின் கஷ்டங்களைப் பிரிட்டிஷ் மக்கள் தற்போது அனுபவித்துக்கொண்டிருந்த போதிலும், எதிர்காலத்தை நோக்கி அவர்கள் அதைரியப் படவேண்டியதில்லை. புதிய தலைமுறையார் மாறுபட்ட நிலைகளுக்குத் தங்களைச் சரிப்படுத்திக்கொள்வார்கள். 1931-ல் ஏற்பட்ட பொருளாதார சங்கடத்தைச் சமாளிக்க நாட்டினர் காட்டிய திடசித்தம் உலகத்தினர் பாராட்டுதலைப் பெற்றது.

---

## எழுபத்தோன்பதாம் அத்தியாயம்

# நம் காலம்

## (1936—1939)

§ 348. அரச குடும்பத்தில் ஒரு நிகழ்ச்சி: வாரிசு வரிசையில் ஒரு மாறுதல் :—பிரிட்டிஷ் மன்னரசின் ஆயிரக் கணக்கான ஆண்டுகளின் வரலாற்றில் எப்போதும் நிகழாத ஒரு புதுமையான நிகழ்ச்சி 1936-ம் ஆண்டின் இறுதியில் நிகழ்ந்தது. 1935-ம் ஆண்டு கோடையில் ஐந்தாம் ஜியார்ஜ்மன்ன ராட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவு கொண்டாடப்பட்டபோது நாட்டினர் அவர் பால் தாங்கள் கொண்டிருந்த பெருமதிப்பைப் பெருமை யுணர்ச்சியுடன் வெளியிட்டனர் ; அவர் சாதாரண மக்களை

உருவகப்படுத்தியதாகப் பெயரெடுத்தார். ஆகவே, அடுத்த ஜெனவரி மாதத்திலேயே அவர் காலஞ்சென்றமை இங்லிஷ் பேசும் மக்களனைவரையும் துக்கத்தி லாழ்த்தியது. புதிய மன்னர் எட்டாம் எட்வர்ட் மன்னர்களுக்கு மக்களைப் பற்றியும் அவர்கள் விவகாரங்களைப் பற்றியும் சாதாரணமாக இருக்கக்கூடிய அனுபவத்தைவிடப் பன்மடங்கு அதிகமான அனுபவத்தைப் பெற்றவராக இருந்தார். ஆகவே, அவர் காலத்தில் சட்ட வரம்புக்குட்பட்ட மன்னுட்சியில் பல அரிய மாறுதல்களும் அபிவிருத்திகளும் ஏற்படலாமென்று எல்லோரும் எதிர்பார்த்தனர்.

ஆயினும், எதிர்பார்த்தபடி நிகழ்ச்சிகள் நேரவில்லை. இருமுறை விவாக ரத்து செய்துகொண்ட சிம்ப்சன் என்ற பெயர்கொண்ட ஒரு அமெரிக மாதினை அவர் மணக்க விரும்பினர். (1935-ல் ராம்சே மாக்டானல்ட் ஓய்வெடுத்துக் கொண்டபிறகு தலைமை அமைச்சரான) பால்ட்வின் அக்கலியாணத்தினல் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றி மன்னருக்கு அந்தரங்கமாக எச்சரிக்கை செய்தார். மன்னர் தாம் விரும்பிய மாது அரசியாக இல்லாமல் தம் மனைவியாகமட்டும் இருக்கமுடியுமா என்று கேட்டார். பால்ட்வின் தமது சகாக்களையும் எதிர்ப்புக்கட்சியின் தலைவர்களையும் கலந்தாலோசித்து அதற்கு ஒரு தனிப் பார்லமென்ட் சட்டம் இயற்றியாகவேண்டுமென்றும், அவ்விதம் செய்யத் தமது துரைத்தனத்துக்கேனும் எதிர்ப்புக் கட்சியினர்க்கேனும் விருப்பமில்லையென்றும் கூறினர்.

விவரங்கள் தெரிந்ததும் சில நாட்கள் இவ்விஷயத்தைப்பற்றித் தீவிரமான விவாதம் நடந்தது. ஜனநாயகம் வளுத்துள்ள இக்காலத்தில் ஒரு மன்னர் தாம் விரும்பும் எவரையேனும் மணம்புரிந்துகொள்ளச் சுயேச்சை பெறவேண்டுமென்றனர் சிலர். ஆயினும், அத்தகைய விவாகத்தால் பிரிட்டிஷ் பேரரசின் அமைப்பிலேயே மாறுதல்கள்

ஏற்படலாமென்று தோன்றியது. பேரரசு மாகாணங்கள் சிம்ப்சன் மாதைப் பிரிட்டனின் அரசியாக ஒப்புக்கொள்ள மாட்டாவாதலால் பிரிட்டிஷ் பேரரசே கலைந்துவிடும் போல் தோன்றியது. ஆகவே, அரசர் பேரரசுக்குத் தாம் இயற்றவேண்டிய கடமைக்காகத் தமது சொந்த இன்பத்தை விட்டுவிடவேண்டு மென்ற நிலை யேற்பட்டது. அரசர் அதற்கிசைய முடியாமல் டிசெம்பர்மீ 10உ முடியையும் பட்டத்தையும் துறந்துவிட்டார். இதற்கெனத் தயாரிக்கப்பட்ட ஒரு பத்திரத்தில் கையொப்பமிட்டு விட்டுத் தாம் காதலித்த மாதின் துணையின்றித் தம்மால் அரச பாரத்தைத் தாங்கமுடியா தென்று ஒலி பெருக்கி மூலமாக எல்லோருக்கும் அறிவித்தார். அவர் தம்பி யார்க் ட்யூக் ஆரும் ஜியார்ஜ்மன்ன ரானார்.

§ 349. திருப்திசெய்ய வழிதேடல்[1] :—புதிய மன்னர் முடிசூடிக்கொண்டதும் பால்ட்வின் ஓய்வெடுத்துக் கொண்டு ஏர்ல் பட்டத்துடன் பிரபுக்கள் சபையில் இடம் பெற்றார். விக்டோரியா காலத்தில் புகழ்பெற்றிருந்த ஜோசெப் சேம்பர்லினின் கடைசி மகன் நெவில் சேம்பர் லின்[2] தலைமையமைச்ச ரானார். அவர் யூரோப்பிய நாடு களிடையே திருப்தியுண்டாக்க முயல்வதையே தமது முதல் கடமையாகக் கொண்டார். மற்றொரு பெரும் போர் நேருமானால் யூரோப்பிய நாகரிகமே முற்றிலும் அழிந்து விடும்போல் தோன்றியதால், ஏதாவதொரு வகையில் அவைகளிடையே திருப்தி நிலைத்திருக்கச் செய்வது அவசிய மாயிற்று. சென்ற போரில் வெற்றி யடைந்த நாட்டினரும் அவர்களது அரசியல் அறிஞர்களும் வெர் சாயி உடன்படிக்கையின் நிபந்தனைகள் சம்பந்தமாகவும் அவைகளை நடைமுறைக்குக் கொண்டுவரும் முறைகளிலும் வருந்தத்தக்க பெருந் தவறுகளை இழைத்திருந்தனர்.

1. The Search for Appeasement. 2. Neville Chamberlain.

அவற்றிற்காக அவர்கள் இப்போது படைப்பலத்தைப் பெருக்கிக்கொள்ள நாளுக்குநாள் தாங்கமுடியாதபடி வளர்ந்துவரும் வரிச்சுமை, கடும் பகைமை, பயம், கவலை முதலிய கடினமான பிராயச்சித்தங்களை அனுபவிக்க வேண்டியவ ராயினர். சென்ற பெரும் போரினை மூட்டிய நாட்டுப்பற்றுக் காரணமான ஆவேசங்கள்[1] மீண்டும் மக்களிடையே குரோதம், கொடூரம், கயமை, மடைமை முதலிய துர்க்குணங்களைத் தலையெடுத்துத் தாண்டவ மாடச் செய்தன.

மற்றொரு பெரும்போர் மூள்வதற்கு முதல் அறிகுறி யாயிருந்தது சர்வதேசங்கள் கூட்டுச்சங்கத்தின் ஒடுக்கம். இட்டலியும் ஜெர்மனியையும் ஜப்பானையும் பின்பற்றிச் சங்கத்தினின்றும் விலகிக்கொண்டது. இதற்குக் காரணம் இட்டலி அபிஸீனியாவைக் கைப்பற்றியதே யாம். சங்கத்தின் அங்கமாகிய ஒரு நாடு மற்றொரு அங்கமாகிய நாட்டினைத் தாக்குதலை அது பார்த்துக்கொண்டிருக்க முடியாது. ஆகவே, சங்க ஒப்பந்தத்தில் கூறப்பட்டிருந்த 'அபராதங்களை'[2] விதித்து இந்த ஆக்கிரமிப்பைத் தடுக்கச் சங்கம் முயன்றது. ஆயினும், இதனால் ஒரு பயனும் ஏற்படவில்லை. படைப்பலத்தை உபயோகித்துப் போர் முஸ்திப்புக்குத் தேவையான எண்ணெய் முதலிய பொருள்களை இட்டலி தருவித்துக்கொள்ள முடியாதபடி செய்திருக்கலாம். ஆயினும், அதனால் அநேகமாகக் கட்டாயம் போர் மூண்டுவிடலாம். பிரிட்டனும் ப்ரான்ஸூம் அவ்வளவு தூரம் செல்ல விரும்பவில்லை. சங்கம் எதையும் சாதிக்க வன்மையற்றதா யிருந்ததென்பது இதனால் வெட்ட வெளிச்சமாய்விட்டது. மற்ற நாடுகள் தன்மீது 'அபராதங்களை' விதிக்க முயன்றதால் இட்டலி அவற்றின்மீது குரோதம் பாராட்டலாயது.

1. Nationalist passions. 2. 'Sanctions.'

1936-ம் ஆண்டின் வசந்த காலத்தில் 'ஒருமித்த பாது காப்பு'[1] இலக்ஷியத்துக்கு மற்றொரு பங்க மேற்பட்டது. வெர்சாயி உடன்படிக்கைப்படிப் படைகள் நுழையக் கூடாதென்று தீர்மானிக்கப்பட்டிருந்த ரைன்லண்டுக்குள்[2] யாதொரு எச்சரிக்கையுமின்றி ஜெர்மன் படைகள் நுழைந் தன. இவ்விதமாக 'உடன்படிக்கைகளை மாற்றிக்கொள் ளும்' முறை கண்டிக்கப்படவேண்டுமென்று ப்ரான்ஸும் போலண்டும் கருதின. ஆயினும், பிரிட்டனின் ஆதர வின்றி எதையும் செய்வதற்கில்லை. பிரிட்டனிலோ பெரும்பான்மையோர் ஜெர்மானியர்களுக்குத் தம் சொந்த நாட்டை அவர்களுக்கு இஷ்டமானபடி வைத்திருக்க உரிமையுண்டென்று கருதலாயினர். ஹெர் ஹிட்லர்[3] அதுமுதல் தமது நிலப்படைகளையும் ஆகாயப்படைகளை யும் பெருக்க லானார்.

அடுத்தபடியாக நிலைமை மேலும் கேவலமாய்க் கொண்டு வந்தது. அவ்வாண்டின் கோடைகாலத்தில் ஸ்பெயின் குடியரசில் படைப்பலங்கொண்ட ஒரு புரட்சி யேற்பட்டது. அதற்கு இட்டலியின் பாஷிஸ்ட் துரைத் தனம்[4] முன்னேற்பாடு செய்து தந்தது. சில மாதங்களுள் ருஷ்யாவுக்கு வெளியே 'பால்ஷெவிக்' கொள்கைகள்[5] பரவாதபடி தடுக்க ஜெர்மனியும் இட்டலியும் ஒரு 'காமின் டெர்ன் எதிர் ஒப்பந்தம்'[6] செய்துகொண்டன. இனி யூரோப்பிய நாகரிகம் ஒரு 'ரோம்-பெர்லின் அச்'சின்மீது[7] சுழலவேண்டுமென அவை தீர்மானித்துக்கொண்டன. ஸ்பெயின் புரட்சிக்காரர்களுக்குத் துணைபுரிந்துகொண்டி ருந்த இட்டலி ஆகாயவிமானங்களும் நீர்மூழ்கிக்கப்பல் களும் பிரிட்டன் வியாபாரத்தில் தலையிடுவதில்லை என்ற

---

1. 'Collective security.' 2. The Rhineland. 3. Herr Hitler.
4. Fascist Government. 5. Bolshevism. 6. 'Anti-Comintern Pact.' 7. 'Rome-Berlin Axis'.

உறுதிமொழிக்கு விரோதமாகப் பல சமயங்களில் பிரிட்டிஷ் கப்பல்களைத் தாக்கின. அச்சமயங்களிலெல்லாம் போர் மூண்டுவிடும்போல் தோன்றியது. 1938-ம் ஆண்டின் முதலில் அப்போது வெளிநாட்டு அமைச்சராக இருந்த ஆன்தொனி ஈடன்[1] ராஜீநாமா செய்துவிட்டார். அவர் இட்டலி தன் உறுதிமொழிகளின்படி நடக்குமென்ற நிச்சயமில்லாதிருக்கும் நிலையில் அவைகளை ஒப்புக் கொள்ளுதல் சரியல்லவென்றார்.

பிறகு ஜப்பான் துரைத்தனத்தில் முழு ஆதிக்கம் பெற்றுப் போராவேசங்கொண்டிருந்த பேரரசுக் கொள்கையினர் சைனாவைத் தாக்கினர். அப்போது பிரிட்டிஷாருக்குச் சொந்தமாயிருந்த ஏராளமான பொருள்களும் சொத்துக்களும் நாசமாயின. ஏனென்றால், ஜப்பானியர்கள் நாகரிகப் போர்மரபுகளையெல்லாம் காற்றில் பறக்கவிட்டுவிட்டு எவர் பாதுகாப்புமற்று எல்லோருக்கும் பொது வாசஸ்தலங்களாக இருந்த பட்டணங்களின்மீது[2] கூட அப்போது ஆகாயவிமானங்களைக் கொண்டு வெடிகுண்டுகளை வீசி அட்டூழியஞ் செய்தனர். ஆயினும், அப்போது யூரோப்பில் போர் மேகங்கள் கிளம்பிக் கொண்டிருந்ததால், பிரிட்டிஷ் துரைத்தனம் ஜப்பானியர் செய்கையைக் கண்டித்ததோடுநின்று மேல் நடவடிக்கையொன்றும் எடுத்துக்கொள்ள முடியாத நிலையிலிருந்தது.

பாலெஸ்தீனிலும் அடிக்கடி தொந்தரவு ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அந்நாட்டின் துரைத்தனத்தைக் கவனித்துக்கொள்ளப் பிரிட்டன் சர்வதேசங்கள் கூட்டுச் சங்கத்தின் ஒப்படை ஆணையினை[3] ஒப்புக்கொண்டிருந்தது. ஆயினும், முன் போர் நடந்துகொண்டிருந்தபோது அந்நாட்டினை அரபியர்களுக்கும் யூதர்களுக்கும் கொடுக்கப் போவதாக இருவகையான உறுதிமொழி கூறப்பட்டிருந்த

1. Anthony Eden. 2. Open towns. 3. 'Mandate.'

தால், இந்த ஆணையைச் செலுத்துவதில் பல இடர்ப்பாடு கள் தோன்றின. நாட்டைக் கூறுபோட்டு இருதாத்தாருக் கும் கொடுத்துவிடுவதென்றும் ஒரு யோசனை யிருந்தது; ஆயினும், அவர்களின் பிரதிநிதிகளை ஒரு முடிவுக்கு வரும் படி லண்டனில் கூட்டிவைத்தபோது அவர்கள் எம்முடி வுக்கும் வராமல் கலைந்துவிட்டனர். ஆகவே, பிரிட்டிஷ் துரைத்தனம் தானே ஒரு முடிவுக்கு வரவேண்டிய தாயிற்று. அதுவும் அவர்களுக்குத் திருப்தியளிக்கவில்லை.

1937-ல் அயர்லண்ட் சச்சரவு முடிவுக்கு வந்தது ஒரு திருப்திகரமான நிகழ்ச்சியே. அவ்வாண்டு ஜூன் மாதம் 'டைல்'[1] என்ற ஐரிஷ் மக்கள் பிரதிநிதிகள் சபை ஒரு புதிய அரசியலை அமைத்துக்கொண்டது. அதுமுதல் அந்நாடு 'ஐர்'[2] என்ற பெயருடன் அநேகமாக ஒரு தனி நாடாகவே பிரிந்துவிட்டது. பிரிட்டனோடு அது எப்போதும் நட்பு நிலை பாராட்டவேண்டு மென்ற ஒரு நிபந்தனைமட்டும் அதற்கு விதிக்கப்பட்டது. பிரிட்டனுக்கும் 'ஐர்'க்கும் ஒரு வியாபார ஒப்பந்தம் ஏற்பட்டதோடு கடற்கரை யோரம் அதுவரை பிரிட்டிஷ் படைகளின் காவலிலிருந்த இராணுவஸ்தலங்களும் அவைகளைப் பிரிட்டனின் பகைவர் கள் உபயோகிக்கும்படி விடக்கூடாதென்னும் நிபந்தனை யுடன் 'ஐர்' துரைத்தனத்துக்குச் சொந்தமாக்கப்பட்டன.

§ 350. செப்டெம்பர் சிக்கல்[3] :—ஜெர்மனியின் படைப் பலத்தை ஹெர் ஹிட்லர் நன்றாகப் பெருக்கிக்கொண்டு விட்டபடியால், போர் தொடுக்கப்போவதாக கூறிக் கொண்டே அவர் பல காரியங்களைச் சாதித்துக்கொண் டார். ஆயினும், வெர்சாயி உடன்படிக்கை பிடுங்கிவிட்ட ஜெர்மனியின் ஆபிரிகா குடியேற்ற நாடுகளைமட்டும் அவ ருடைய சேனைகள் மீட்கமுடியாத நிலையி லிருந்தன. அந்நாடுகளை ஜெர்மனிக்குத் திருப்பிக் கொடுத்துவிடுதலே

1. The Dail. 2. 'Eire.' 3. The September crisis.

நியாயம் என்று பிரிட்டனில் பலர் கருதியபோதிலும், 'ஆரியர்களல்லாத' யூதர்களை ஜெர்மனி நடத்திய மாதிரியைப் பார்த்தபோது, ஆரியர்களல்லாத ஆபிரிகா மக்களை அவர்கள் வசம் ஒப்படைப்பது தகுதியல்லவென்று தோன்றியது. பிரிட்டிஷ் கப்பல் படையின் கடலாதிக்கம் நிலைத்திருக்கும்வரை அவற்றை ஹிட்லரால் படைப்பலங் கொண்டு மீட்டுக்கொள்ள முடியாது.

நடு யூரோப்பில்மட்டும் ஜெர்மன் துரைத்தனம் இட்டது சட்டமா யிருந்தது. ஆஸ்ட்ரியா நாடு ஜெர்மன் ரைக்கில்[1] சேர்ந்துவிடவேண்டுமென்று கூறியவர்களை ஆஸ்ட்ரியா குடியாசு ஒறுத்தது என்று கூறி ஹிட்லர் ஜெர்மன் படைகளைத் திடுமென ஆஸ்ட்ரியாவுக்குள் அனுப்பி அந்நாட்டைச் சேர்த்துக்கொண்டார். போர்ப்பயமே அவருக்கு எங்குமே பெருந்துணையாக வாய்த்தது. சைனுவிலும் ஸ்பெயினிலும்கூட முழு நகரங்கள் அழிக்கப்பட்டதோடு போரை நாடாத பல்லாயிரக் கணக்கான மக்கள் ஆகாயத் தாக்குதல்களால் உயிரையும் அங்கங்களையும் இழந்து கொண்டு வந்தனர். ஆயினும், அங்கு நடந்துகொண்டிருந்தவை யூரோப்பில் போர் மூளுமானுல் சில நாட்களுள் நேரக்கூடிய அழிவுக்கும் விபத்துகளுக்கும் இணையாகமாட்டா. பிரிட்டன் பாதுகாப்புக்கும் எதிர்ப்புக்கும் சிறிதும் தயாராகவில்லை. பிரிட்டனின் படைப்பலத்தைப் பெருக்க விரைவாக முயற்சிகள் செய்யப்பட்டன. எனினும், அவ்வாண்டு (1938) முடிவதற்குள் ஜெர்மனி மற்ருெரு குடியரசினை விழுங்கிவிட்டது.

செக்கோ-ஸ்லோவாக்கியா[2]வின் சூடேட்டென்-ஜெர்மன் குடிகள்[3] செக் மக்கள்[4] தங்களுக்குத் துரைத்தனத்தில் போதிய பதவிகளைக் கொடுப்பதில்லையென்று குறை

1. The Reich. 2. Czecho-Slovakia. 3. The Sudetan-German citizens. 4. The Czechs.

கூறி ஜெர்மனியின் ஆதரவை நாடினார்கள். ஹெர் ஹிட்லர் முதலில் அவர்கள் ஒழுங்காக நடத்தப்படவேண்டுமென்றார்; பிறகு அவர்களுக்குச் சுயாட்சி வேண்டுமென்றார்; பிறகு அவர்கள் ஜெர்மனியில் சேர்ந்துவிடவேண்டுமென்றார். எல்லாம் சில வாரங்களுள். இது ஒரு ஆபத்தான நிலை. ஒருடன்படிக்கையின்படி செக்கோ-ஸ்லோவாக்கியா தாக்கப்படுமானால் ப்ரான்ஸ் அதற்கு உதவிபுரியவேண்டும்; ப்ரான்ஸ் ஒரு பெரும்போரில் சிக்கும்போது பிரிட்டன் தனியே நிற்க முடியாது. போர் மூண்டுவிடும்போல் தோன்றிய இந்த இக்கட்டான நிலையில் பிரிட்டிஷ் துரைத்தனத்தின் முயற்சியால் ஜெர்மனி, இட்டலி, ப்ரான்ஸ், பிரிட்டன் பிரதிநிதிகள் மியூனிக்கில்[1] கூடிப்பேசி, செக்கோ-ஸ்லோவாக்கியா சூடேட்டென் நாட்டைச்[2] சில நாட்களுள் ஜெர்மனியோடு சேர்த்துவிடவேண்டுமென்று தீர்மானித்தனர். இந்தக் கூட்டத்திலிருந்து சேம்பர்லின் திரும்பியபோது அவரை 'அமைதியைக் காத்த வீரர்' என்று எல்லோரும் புகழ்ந்தனர். ஆயினும், போர் மூளவேண்டிய நாள் சிறிதுதான் தள்ளிவைக்கப்பட்டதென்ற உணர்ச்சி எல்லோர் மனதிலும் இருந்ததால், முன்னைவிடப் பன்மடங்கு மும்முரத்துடன் போர் முஸ்திப்புக்கள் செய்யப்பட்டன. இரண்டொரு மாதங்களுள் ஜெர்மனியிலுள்ள யூதர்கள் மீண்டும் ஒறுக்கப்பட்டனர்.[3] அவர்கள் தங்களுக்கு இருந்த சொல்ப சொத்துக்களையும் வெளியே எடுத்துச் செல்லலாகாதெனக் கூறப்பட்டதால், ஜெர்மனியிலிருந்து அநாதைகளாக வெளியேறி மற்ற நாடுகளில் தஞ்சம் புகுந்த யூதர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகரித்ததோடு, அவர்களுக்கு இடமும் வேலையும் கொடுத்து ஆதரிக்கவேண்டிய பாரமும் அந்நாடுகளுக்கு ஏற்பட்டது.

1. Munich. 2. Sudetenland. 3. Persecuted.

§ 351. திருப்திசெய்தல் போக்குக்கு ஆபத்து:— 1939ஆ முதலில் சேம்பர்லின் ரோமுக்குச் சென்றார். அபிசீனியா விஷயமாக பிரிட்டனுக்கும் இட்டலிக்கும் ஏற்பட்ட மனஸ்தாபத்தை நீக்கிப் பழையபடி நூற்றாண்டுகளாக இரு நாடுகளுக்கு மிடையிலிருந்த நட்பினைப் புதுப்பித்துக்கொள்ள அவர் விரும்பினார். ஸ்பெயினில் பார்செலோனா[1] கலகக்காரர்கள் வசமாய்விட்டபடியால் அங்கு நடந்துகொண்டிருந்த உள்நாட்டுப் போரும் முடிந்து விடும்போல் தோன்றியது இதற்கு அனுகூலமா யிருக்கும் போ லிருந்தது.

ஆயினும், திருப்திசெய்தல் போக்குக்கு யூரோப்பில் விரைவிலேயே மற்றோர் அதிர்ச்சி தோன்றியது. மியூனிக்கில் 1938ஆ செப்டெம்பர் மாதம் நிகழ்ந்த ஒப்பந்தத்தின்போது ஹிட்லர் தமது ரைக்கில் செக் மக்களுக்கு இடமில்லை என்று கூறிய போதிலும் (ஜெர்மானியர்களைத் தவிர மற்றவர்களைக் கட்டியாள அவருக்கு விருப்பமில்லை யென்றார்), ஆறுமாதங்கள் சென்றதும் அவர் செக்கோஸ்லோவாக்கியா குடியரசின் மீதிபாகத்தின்மீதும் படையெடுத்துச் சென்று அந்நாட்டைத் தமது ரைக்கின் 'பாதுகாப்'பில்[2] வைத்துக்கொண்டார். உடனே செக் மக்களின் படைகளைப் பிடுங்கிக்கொண்டு அவர்களுடைய கனிகள், ஆலைகள், ஆக்கத்தொழிற்சாலைகள், போர்த் தளவாடங்கள் அனைத்தையும் ஜெர்மனிக்குச் சேர்த்துக் கொண்டார். நாகரிக உலக முழுமையும் இந்த ஆக்கிரமிப்பைக் கேட்டுச் சீற்றங்கொண்டது. சுதந்தரத்தை விரும்பிய நாடுகள் சர்வதேசங்களின் கூட்டுச்சங்கத்தை விட மேலும் வன்மையான ஒரு 'ஒருமித்த பாதுகாப்பு'[3] முறையை அமைத்துக்கொள்ள முயன்றன. ஜெர்மனியின் அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் அமைதியோடு வாழவேண்டு

1. Barcelona. 2. Protection of Reich. 3. Collective security.

மென்றால் அவர்கள் ஜெர்மனியைவிடப் படைப்பலம் அதிகமாகக் கொண்டவர்களாக இருத்தல் வேண்டுமென் பதைப் பிரிட்டிஷ் துரைத்தனம் உணரலாயிற்று. துரைத் தனம் தீர்மானிக்குமானால் நாட்டினர் எத்தகைய தியாகத் திக்கும் தயாராக இருப்பதாக அறிவித்தனர். இனி யூரோப்பிய விஷயங்களில் தனிப்பட்ட நிலையை[1] நாடியிருத் தல் முடியாத காரியம். ஆகவே, போலண்டுடன் உடனே ஒரு நெருங்கிய ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டது. ருஷ்யாவுடனும் துருக்கியுடனும் அதேவிதமான ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ளப் பேச்சுக்கள் தொடங்கப்பட் டன. ருமேனியாவும் க்ரீஸும் தாக்கப்படுமானால் அவர்களுக்கு உதவிபுரிவதாகவும் வாக்களிக்கப்பட்டது. போர்ச் சேவைகளுக்கு வேண்டிய ஆட்கள் விரைவாகவும் மும்முரமாகவும் திரட்டப்பட்டனர். சிறு நாடுகளைப் பிரிட் டன் பெரு நாடுகளின் ஆக்கிரமிப்பினின்றும் காப்பாற்ற வேண்டுமானால், நாட்டு மக்க ளனைவருக்கும் கட்டாய போர்ப்பயிற்சி அளித்தாகவேண்டு மென்பது எல்லோரா லும் உணரப்பட்டது. இதற்குரிய தியாகங்களைச் செய்ய அனைவரும் ஒப்புக்கொண்டனர்.

நாட்டின் படைகளில் எல்லா வகுப்பினரும் ஒன்று சேர்ந்து பழகவேண்டிய கட்டாய மேற்பட்டதால், நாட் டின் சமூக வாழ்வில் ஒரு பெரிய மாறுதல் ஏற்படலாம். அதோடு, போர்ப் பயிற்சிகளில் அனைவரும் தூய காற் றுடன் வெட்டவெளிகளில் ஒரு ஆறுமாதகாலமேனும் அன்றாடம் பழகவேண்டிய கட்டாய மேற்பட்டதால், நாட்டினரின் தேகநிலையும் வளமுறலாம். இவ்வனுகூலங்க ளெல்லாம் இந்த இக்கட்டான நிலை மாறியதும் நாட்டினர் வாழ்க்கையில் காணப்பெறலா மென எதிர்பார்க்கப் பட்டன.

1. Isolation.

# பின்னுரைக்கான குறிப்புக்கள்

## (1914—1934)

கு. 241. பெரும் போரில் பிரிட்டன் பங்கு.

யூரோப்பில் :

1. மேற்குமுனையின் இடது சிறகாக இருந்தது (முக்கியமாகச் சானெல் துறைமுகங்களின் பாதுகாப்புக்காக). புதிய சேனைகள் பயிற்சி பெற்று வரவர அம்முனையின் பெரும் பகுதியை ப்ரெஞ்சுக்காரர் பொறுப்பிலிருந்து வாங்கிக்கொண்டது.

2. ப்ரெஞ்சுக்காரரோடு சேர்ந்து சாலோனிக்காவில்[1] சேனையொன்று வைத்திருந்தது.

3. கான்ஸ்டான்டிநோபில்மீது படையெடுத்துச் செல்ல கால்லிப்போலி தீபகற்பத்தில் ப்ரெஞ்சுக்காரரோடு சேர்ந்து ஒரு சேனையை இறக்கியது. (இம்முயற்சி பலிக்கவில்லை.)

4. காப்பொரெட்டோ[2] தோல்வியின் பிறகு இட்டாலியரைப் பலப்படுத்த ப்ரெஞ்சுக்காரரோடு சேர்ந்து ஒரு சேனையை அனுப்பியது.

ஏஷியாவில் :

1. டைக்ரிஸ் ஆற்றின்மூலம் பாக்டாட்மீது படையெழுச்சி (குட் அல் அமாராவில்[3] தடுக்கப்பட்டது).

2. பாலஸ்தீன்மீது படையெழுச்சி.

ஆபிரிகாவில் :

பெரும்பாலும் தென் ஆபிரிகாவிலிருந்து பெறப்பட்ட சேனைகளைக்கொண்டு ஜெர்மன் குடியேற்ற நாடுகள் படையெடுக்கப்பட்டன.

கடல்மீது :

1. போர் ஆரம்பத்தில் வெளிக்கடல்களிலிருந்த ஒரே ஜெர்மன் போர்க்கப்பல் தொகுதி பாக்லண்ட் தீவுகளுக்[4]

1. Salonica. 2. Caporetto. 3. Kut-al-Amara. 4. Falkland Isles.

கருகில் அழிக்கப்பட்டது (§332). வியாபாரக் கப்பல்களைத் தாக்குவதற்கென்று தனிமையாகத் திரிந்துகொண்டிருந்த இதர ஜெர்மன் போர்க்கப்பல்கள் அனைத்தும் அழிக்கப்பட்டன.

2. கப்பல்படையால் கையாளப்பட்ட அடைப்பு முறை[1] நாளடைவில் ஜெர்மன் மக்களை மெதுவாகப் பட்டினிக்கு ஆளாக்கியது. இதுவே அவர்கள் முயற்சிகளின் முறிவுக்கு முக்கிய காரணம்.

ஜெர்மானியரின் பெருங்கடற் கப்பல் தொகுதி[2] ஜட்லண்ட் கப்பல் போருக்குப்[3] பின் (மேமீ, 1916) துறைமுகத்தைவிட்டு வெளியே வரவேயில்லை. (எனினும் இந்தக் கப்பல் போர் ஜெர்மனிக்கே வெற்றி யளித்தது என்று அவர்கள் ஜம்பம் பேசினார்கள்.)

3. எதிரிகளின் நீர்மூழ்கிக் கப்பல்கள் பல கடலடியில் பதுங்கி யிருந்தபோதிலும் அமெரிகர் படை அட்லான்டிக் பெருங் கடலைக் கடந்து பத்திரமாகக் கொண்டுவரப்பட்டது.

## கு. 242. ப்ரெசிடென்ட் வில்சனின் 'பதினான்கு குறிப்புக்கள்'.[4]

போரின் நோக்கங்களைப்பற்றி வில்சன் வெளியிட்ட அறிக்கை (ஜெனவரிமீ, 1918) நவெம்பரில் போர் நிறுத்த உடன்பாட்டுப் பத்திரம் கையொப்பமானபோது சமாதானத்துக்கு அடிப்படையாக இருதரத்தாராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. அதன் சுருக்கம் பின்வருமாறு :

1. இனி இரகசிய இராஜ தந்திரம் கூடாது.

எனினும், சமாதான நிபந்தனைகளைப்பற்றிய பேச்சு மூடிய அறைகளில் அந்தரங்கமாகத்தான்[5] நடந்தது.

2. கடல் எல்லோர்க்கும் பொது.

இது போரில் கலக்காது நடுநிலை வகித்திருக்கும் நாடுகளிலிருந்து எதிரிக்குப் பயன்படுமாறுசெல்லும் பண்டங்களைக் கைப்பற்ற பிரிட்டிஷார் பாராட்டிய உரிமையினைத் தகர்க்கவே கூறியதாகும். இந்த உரிமை நெடுங்காலமாகவே பல போராட்டங்களுக்குக் காரணமாயிருந்தது (§ 251, 264). உடன்படிக்கைகளில் இது

1. The naval blockade. 2. German High Seas Fleet. 3. Battle of Jutland. 4. 'Fourteen Points.' 5. Behind closed doors.

குறிப்பிடப்படவில்லை. எனினும், ஐக்கிய நாடுகள் மட்டும், எதிர் காலத்தில் பிரிட்டிஷ் கப்பற்படை போர்ச் சமயங்களில் தமது வியாபாரப் போக்குவரத்துக்கு இடைஞ்சலாக அவ்வுரிமையினைப் பாராட்டாவண்ணம் அதைப்போன்ற ஒரு வன்மைமிக்க கடற்படையைத் திரட்டிக்கொண்டன.

3. பொருளாதாரத் தடைகள் நீக்கப்படவேண்டும்.

இத்தடைகள் இப்போது முன்னைவிட அதிகமாகவும் வன்மைமிக்கவைகளாகவு மிருக்கின்றன.

4. போர்த் தளவாடங்கள் மிகக் குறைவான அளவுக்குக் குறைக்கப்படவேண்டும்.

இவையும் இப்போது முன்னைவிடப் பெருகியுள்ளன. (கிரேட் பிரிட்டனின் போர்த்தளவாடங்கள்மட்டும் இன்னும் பெருகவில்லை.)

5. குடியேற்ற நாடுகள் சம்பந்தமான உரிமைகள் பாரபக்ஷமில்லாத நேர்மையான முறையில் மாற்றி வரையறுக்கப் பெறல்வேண்டும். அங்கு வாழும் மக்களின் நலன்களும் அவற்றின்மீது உரிமைகொண்டாடும் துரைத்தனங்களின் பாத்தியதைகளும் சமமாகக் கவனிக்கப்படவேண்டும்.

ஜெர்மனியின் குடியேற்றங்கள் அநேகமாகப் பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் வந்தன.

6. ருஷ்யா தான் தீர்மானித்துக்கொள்ளும் அரசியல் சமூக அமைப்புக்களுடன் யாதொரு தடையுமின்றி மற்ற நாடுகளின் மனமார்ந்த ஒத்தாசையுடன் வளம்பெறச் சந்தர்ப்பமளிக்கப் பெறல்வேண்டும்.

சோவியட் ருஷ்யாவுடன் நேசநாடுகள் போர்தொடுத்து அதைப் பொருளாதார விலக்கினால்[1] இன்னலுறச் செய்தன.

7. பெல்ஜத்திலிருந்த படைகளைக் காலிசெய்து அதைத் தன் பழைய துரைத்தனத்துக்கு அளித்துவிடவேண்டும்.

8. ஆல்சாஸ் லோரேனை[2] ப்ரான்ஸூக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவதோடு, ப்ரான்ஸ் நாடுகள் எங்குமுள்ள படைகளைக் காலிசெய்துவிடவேண்டும்.

1. Economic boycott. 2. Alsace-Lorraine.

திருப்பிக் கொடுத்துவிடுவதென்பதில், போரின்போது ஏற்பட்ட சேதங்களுக்கு நஷ்டஈடு தருதலோடு அதாவது, அதன் செல்வு முழுமையும் தாங்குதல்—காயம்பட்டவர்களுக்கும் கைம்பெண்களானவர்களுக்கும் உபகாரச் சம்பள மளித்தலும் அடங்கியதாகப் பின்னர்க் கூறப்பட்டது.

9. இட்டலியின் எல்லைகள் திரும்பவும் தீர்மானிக்கப் பெறல் வேண்டும்.

எட்ரியாடிக் கடலின் கிழக்குக் கரையோரமுள்ள பாகங்களில் இட்டலியும் யூகோஸ்லாவியாவும் கொண்டாடிய பாத்தியதைகளால் இரு நாடுகளுக்கும் பகை மூண்டது.

10. ஆஸ்ட்ரியா-ஹங்கரிக்குக் கீழ்ப்பட்டிருந்த வேறு மக்கள் சுயேச்சை பெற்ற தனிநாடுகளாக்கப் பெறல் வேண்டும்.

இதன் விளைவாகவே செக்கோஸ்லோவாக்கியா, யூகோஸ்லாவியா நாடுகள் உண்டாயின.

11. பால்கன் நாடுகளின் எல்லைகள் சரித்திர சம்பந்தமாகத் தீர்மானிக்கப் பெறல் வேண்டும்.

12. ஆட்டொமன் பேரரசில்[1] துருக்கியரல்லாதவர்களாகவுள்ளவர்கள் தனித்தனியே சுயேச்சையுடன் வளம் பெற வாய்ப்பு பெறவேண்டும்.

13. போலிஷ் மக்களுக்கெனச் சுயேச்சை பெற்ற ஒரு தனி நாடு ஏற்படுத்தப்படவேண்டும். அதன் மக்கள் சந்தேகமற்ற போலிஷ்மக்களாக இருக்கவேண்டும். அதற்குத் தொந்தரவின்றிக் கடலையடைய வாய்ப்பு ஏற்படுத்தித் தரவேண்டும்.

போலண்டுக்குக் கடலையடைய ஏற்படுத்தித் தரப்பட்ட வழி[2] ஜெர்மனியைத் துண்டித்துவிட்டதோடு ஜெர்மானியர் வாழும் பாகங்களையும் வேறுபடுத்திவிட்டதாக ஜெர்மானியர் முறையிட்டனர்.

14. ஒரு ஒப்பந்த ஏற்பாட்டின்கீழ் நாடுகளின் பொதுச்சங்கமொன்று அமைக்கப்பெறல் வேண்டும். அதன்மூலம் அவற்றின் அரசியல் தனிநிலைகள்[3] ஒன்றுக்கொன்று அளிக்கும் வாக்குறுதிகளால்[4] பாதுகாக்கப் பெறல் வேண்டும்.

---

1. Ottoman Empire. 2. The 'Corridor.' 3. Political independence. 4. Mutual guarantees.

## கு. 243. சர்வதேசங்கள் சங்கத்தின் ஒப்பந்தப் பத்திரம்[1].

இது வெர்சாயி சமாதான உடன்படிக்கையின் முதல் பாகம். மற்ற பகை நாடுகளோடு செய்துகொண்ட உடன் படிக்கைகளிலும் இது முதல்பாக மாயிற்று.

இதன் தொடக்கம் பின்வருமாறு :

நாடுகளிடையே ஒற்றுமையும் அமைதியும் பத்திரமும் வளருவதற்காகப் போரை நாடாது ஒன்றோடொன்று நேர்மையாகவும் கண்ணியமாகவும் வெளிப்படையாகவும் உறவாடவேண்டுமென்னும் நோக்கத்துடன் இதில் கையொப்பமிட்டுள்ள நாடுகள் சர்வதேச நாடுகள் சங்கத்தின் இந்த ஒப்பந்தப் பத்திரத்தை ஏற்றுக் கொள்கின்றன.

பிறகு சேர்தல், விலகல், சங்க அமைப்பு சம்பந்தமான விதிகள் தொடர்கின்றன. சங்கத்துக்கு ஒரு ஆலோசனை சபை (கௌன்சில்), பிரதிநிதிகள் சபை (அசெம்ளி), காரியாலயம் (செக்ரிடேரியட்)[2] அமைக்கப்பட்டன. ஆலோசனை சபையில் (கௌன்சிலில்) ப்ரான்ஸும் கிரேட் பிரிட்டனும் இட்டலியும் ஜப்பானும் ஐக்கிய நாடுகளும் எப்போதும் இடம்பெற்றிருக்கவேண்டும். மேலும், நான்கு அங்கத்தினர்கள் அப்போதைக்கப்போது பிரதிநிதிகள் சபையிலிருந்து (அசெம்ளி) ஆலோசனை சபைக்குத் தேர்ந்தெடுக்கப் பெறல் வேண்டும். குறிப்பிட்ட சில விஷயங்களில் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் ஆலோசனை சபையும் பிரதிநிதிகள் சபையும் ஏகோபித்த தீர்மானங்களையே செய்ய வேண்டும். சங்கம் ஜினிவாவில்[3] நிலைபெற்றிருக்க வேண்டும். படைகளைக் குறைக்க ஆலோசனை சபை திட்டங்கள் வகுக்க வேண்டும். பத்தாண்டுகளுக்கு ஒரு முறை அவை திருத்தியமைக்கப் பெறல் வேண்டும்.

பிறகு போரை விளைவிக்கக்கூடிய சச்சரவுகள் சம்பந்தமான சில விதிகள் காணப்படுகின்றன.

**10.** சங்கத்தின் அங்கத்தினர்களாக உள்ள எல்லா நாடுகளின் தற்காலிக ஆட்சி வரம்பினையும் அரசியல் சுயேச்சை நிலையினையும் அங்கத்தினர்கள் மதித்து நிலைக்கப்பண்ணுவதாக ஒப்புக் கொள்ளுகின்றனர்.

---

1. The Covenant of the League of Nations. 2. Secretariat.
3. Geneva.

# புதிய பேரரசும் பழைய பேரரசும்



12. அங்கநாடுகளிடையே போரை விளைவிக்கக்கூடிய ஏதேனுமொரு தகராறு ஏற்படுமானால் அவை அதைச் சங்க ஆலோசனை சபையின் விசாரணைக்கும் நடுநிலைத் தீர்ப்புக்கும்[1] கொண்டுவர வேண்டும். அப்படியும் போர்செய்யவேண்டிய அவசியமேற்படுமானால், ஆலோசனை சபையின் அறிக்கையின் மீது நடுநிலையாளரின் தீர்ப்பு[2] வெளியான மூன்று மாதங்களுக்குள் போர் தொடங்குவதில்லை என்று அங்க நாடுகள் ஒப்புக்கொள்ளுகின்றன.

16. அங்க நாடுகளுள் ஏதேனும் ஒன்று இந்த ஒப்பந்தத்துக்கு மாறாகப் போர் தொடுக்குமானால், அந்நடத்தையாலேயே அது சங்கத்தின் மற்ற எல்லா அங்கநாடுகள்மீதும் போர் தொடுத்ததாகக் கருதப்படவேண்டும். ஆகவே, அவை அதனுடன் எல்லா வியாபார, பொருளாதாரத் தொடர்புகளையும் துண்டித்துவிட்டு அதை ஒறுக்க இதன் மூலம் ஒப்புக்கொள்ளுகின்றன. இத்தகைய நிலைகள் ஏற்படும்போது சங்கத்தின் ஒப்பந்தங்களைப் பாதுகாக்கும் பொருட்டு அதன் ஆலோசனை சபை எல்லா அங்க நாடுகளின் துரைத்தனங்களுக்கும் அவை தனித்தனியே எவ்விதமான நில, கடல், ஆகாயப் படைகளைத் திரட்டிக் கொடுக்கவேண்டுமென்று கூறவேண்டும்.

யூரோப் விஷயங்களில் தலையிடும் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளுதல் அமெரிக மக்களுக்குப் பிடிக்கவில்லை. அதனால் சிக்கலான கூட்டுறவு ஒப்பந்தங்கள் ஏற்படலாம் என்று அவர்கள் அஞ்சினார்கள். மேலும், இந்த ஒப்பந்த விதிகளின்படி யூரோப்பிய நாடுகள் மன்ரோ கொள்கைக்கு[3] மாறாக (§ 273) அமெரிக குடியரசுகளின் விஷயங்களிலும் தலையிட நேரலாம் என்பது அவர்களுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஆகவே, ஐக்கிய நாடுகள் துரைத்தனத்தின் காங்ரெஸ் ஒப்பந்தப் பத்திரத்தை அங்கீகரிக்க மறுத்து மொத்த உடன்படிக்கையையும் நிராகரித்துவிட்டுச் சில ஆண்டுகளுக்குப்பின் ஜெர்மனியுடன் ஒரு தனிச் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டது.

20. சென்ற போரின் விளைவாக அதற்குமுன் அவைகளை ஆண்டுகொண்டிருந்த நாடுகளின் ஆட்சியினை இழந்த குடியேற்றங்களும் மற்ற நிலப்பிரிவுகளும், அவை தற்கால உலகப் போட்டியில் தாமே சமாளித்து நிற்கக்கூடிய நிலையினை இன்னும் எய்தாத காரணத்தினால், அத்தகைய மக்களின் நலத்தையும் அபிவிருத்தியையும் பாதுகாத்துத் தூண்டவேண்டியது நாகரிகத்தின் தெய்விகப் பொறுப்புக்களில் ஒன்றென்பதைக் கருதி, அப்பொறுப்பினை ஏந்தி

1. Arbitration. 2. Award. 3. Monroe Doctrine.

நிறைவேற்றுவதற்குரிய பந்தோபஸ்துக்களும் ஒப்பந்தத்தில் காணப்பெறல் வேண்டும்.

இந்த விதியின்கீழ் ப்ரான்ஸ் சிரியாவைக் கவனித்துக் கொள்ளவும், பிரிட்டன் பாலெஸ்தீனையும் ஈராக்கையும் கவனித்துக்கொள்ளவும் 'ஒப்படை ஆணைகள்'[1] பெற்றன. (ஈராக் இப்போது சுயேச்சை பெற்ற தனி நாடாக இருக்கின்றது.)

23-ம் விதி சமூக நலனையும் பொருளாதாரத்தையும் பொறுத்ததாகும். சங்கத்தின் அங்க நாடுகள் தொழிலாளர் நிலைமையினை அங்கப்படுத்துவதோடு நோய்களைப் பரவச் செய்யாமல் தடுக்கவும் துணைபுரியவேண்டும். போர்த் தளவாடங்கள், நச்சு மருந்துகள் சம்பந்தமான வியாபாரங்களைச் சங்கம் மேற்பார்வை யிடவேண்டும்.

**கு. 244. உடன்படிக்கைகள் திருத்திய நாடுகளின் அமைப்புக்களுள் முக்கியமானவை[2].**

உடன்படிக்கைகள் :

ஜெர்மனியுடன் வெர்சாயி[3] உடன்படிக்கை (1919ஆ, ஜூன் மீ);

ஆஸ்ட்ரியாவுடன் செண்ட் ஜெர்மேன்[4] உடன்படிக்கை (1919ஆ, செப்டம்பர் மீ) ;

பல்கேரியாவுடன் நியுயில்லி[5] உடன்படிக்கை (1919ஆ, நவெம்பர் மீ) ;

ஹங்கரியுடன் ட்ரியனன்[6] உடன்படிக்கை (1920ஆ, ஜூன் மீ) ;

துருக்கியுடன் லோசான்[7] உடன்படிக்கை (1923ஆ ஜூலை மீ) ;

இது சேவ்ர்[8] உடன்படிக்கைக்குப் பதிலாக ஏற்பட்டது (1920ஆ, ஆகஸ்டு மீ).

ஆல்சாஸ்-லோரேன்[9] ஜெர்மனியில் ப்ரான்ஸுக்குக் கொடுக்கப்பட்டது.

---

1. 'Mandates.' 2. Principal Territorial Arrangements in the Treaties. 3. Versailles. 4. St. Germain. 5. Neuilly. 6. Trianon. 7. Lausanne. 8. Sevres. 9. Alsace-Lorraine.

இரண்டு நூற்றுண்டுகளாக இப்பிரிவுகளைப்பற்றி இருநாடுகளும் சச்சரவிட்டன.

போலண்ட் குடியரசு ருஷ்யா, ப்ரஷ்யா, ஆஸ்ட்ரியா நாடுகளின் பாகங்களிலிருந்து பிரித்துத் திரட்டி அமைக்கப் பட்டது.

முன்னொரு காலத்தில் போலண்ட் ஒரு பெரிய நாடாக இருந்தது. பதினெட்டாம் நூற்றுண்டில் சூழ்ந்திருந்த வல்லரசுகளால் பங்கிட்டுக்கொள்ளப்பட்டது.

செக்கோ-ஸ்லோவாக்கியா குடியரசு ஆஸ்ட்ரியா ஹங்கரி நாடுகளின் பாகங்களிலிருந்து பிரித்துத் திரட்டி அமைக்கப் பட்டது.

பதினேழாம் நூற்றுண்டில் ஹாப்ஸ்பர்க் அரச குலத்தினர் கைப்பற்றிக்கொண்ட வரையில் பொஹிமியா ஒரு தனி இராச்சியமாக இருந்தது.

பொதுவாக யூகோ-ஸ்லாவியா எனப்படும் சேர்பர், க்ரோட்டர், ஸ்லோவீனியர் இராச்சியத்தில்[1] செர்பியாவும் மான்டிநீக்ரோவும் தென்ஸ்லாவ் மக்கள் வாழும் ஆஸ்ட்ரியா-ஹங்கரி மாகாணங்களும் அடங்கின.

ஹங்கரி ஒரு தனிப்பட்ட குடியரசாயிற்று.

ருமேனியாவுடன் ஹங்கரியிலிருந்து பிரிக்கப்பட்ட ட்ரான்சில்வேனியா சேர்க்கப்பட்டது (அதில் வாழ்பவர்கள் பெரும்பாலும் ருமேனியர்களே).

பால்டிக் கடற்கரைக் குடியரசுகளான எஸ்டோனியா, லாட்வியா, லித்துவேனியா, பின்லண்ட் சுயேச்சை பெற்றன.

அவை ஸ்வீடனிடமிருந்து ருஷ்யாவால் கைப்பற்றப் பெற்றவையேனும் தனிப்பட்ட மக்களின் நாடுகளாகக் கருதப்பட்டன.

## கு. 245. போரை நிறுத்தக்கூடிய அமைப்பை வன்மையாக்கச் செய்த முயற்சிகள்.

சர்வ தேசங்கள் சங்க ஒப்பந்தத்தால் ஏற்பட்ட அமைப்பு போதிய பாதுகாப்பினை அளிக்கக்கூடிய அளவு திர்மையுள்ளதாக இல்லை.

1. The Kingdom of Serbs, Croats, and Slovenes.

1. வேறெக்கில் நாடுகள் நடுநிலை மன்றம்[1]: இது நாடுகளிடையே இருக்கவேண்டிய தொடர்பினைப்பற்றிய சட்டங்களில் வல்லுநரான பல நாட்டுச் சட்ட நிபுணர்கள் கொண்டது.

இதுவரை சட்ட சம்பந்தமாக அது அளித்துள்ள தீர்ப்புக்கள் எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வகையில் அதன் வேலை பெரிதும் பயன்படுகிறது. ஆயினும், அதன் தீர்ப்பை நாடுதல் நாடுகளின் விருப்பத்தை யொட்டியதே; நாட வேண்டுமென்ற கட்டாய மொன்றுமில்லை.

2. ஒருவருக்கொருவர் உறுதி கூறிக்கொள்ளும் உடன்படிக்கை முயற்சி[2] (1923). இவ்வுடன்படிக்கையில் கையொப்பமிடுபவர்கள் வலிய சண்டைக்குப் போவதில்லை என்றும் தங்களுள் யாரேனும் வேறு யாராலாவது வலிய சண்டைக்கு இழுக்கப்பட்டால் அவர்களுக்கு எல்லோரும் துணைபுரிய வேண்டுமென்றும் உறுதி கூறும்படி செய்ய ஒரு முயற்சி இருந்தது.

'வலிய சண்டைக்கு இழுக்கப்படுதல்'[3] என்பதென்ன? சண்டையிடுவோரெல்லாம் தாங்கள் வலிய சண்டைக்கு இழுக்கப்பட்டதாகவே கூறுகின்றனர். 1914-ல் ஜெர்மனி பெல்ஜம்மீது தற்காப்புக்காகவே படையெடுத்ததாகக் கூறியது. தெளிவில்லாத இந்நிலைகளில் போரில் இறங்க ஒப்புக்கொள்ளப் பிரிட்டன் மறுத்தது. 1924-ம் ஆண்டில் பதவி வகித்த தொழிற்கட்சித் துரைத்தனம் இத்தகைய உடன்படிக்கை ஒன்று செய்துகொள்வதை ஒப்புக்கொள்ளாததால் இம்முயற்சி பலிக்கவில்லை.

3. ஜினிவா ஒப்பந்த முயற்சி[4] (1924). சர்வதேசசங்கள் சங்கத்தின் அங்கத்தினர் அனைவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு பொது நடுநிலைத் தீர்ப்பு ஏற்பாட்டை அமைக்க ஒரு முயற்சி இருந்தது.

கிரேட் பிரிட்டன் இதற்கும் கட்டுப்பட ஒப்பவில்லை யாதலால் இதுவும் பலிக்கவில்லை. இதைத் தள்ளிவிட்டது ஸிதானப் போக்கினர் துரைத்தனம் (1925).

4. லோக்கார்னோ உடன்படிக்கைகள்[5] (1925). இவற்றின்படி ஜெர்மனியும் அதைச் சூழ்ந்த நாடுகளும் எல்லைகளைப்

1. International Arbitration. 2. Draft Treaty of Mutual Guarantee.
3. 'Aggression.' 4. Geneva Protocol. 5. Treaties of Locarno.

பொருத்த கருத்து வேறுபாடுகளை நடுநிலைத் தீர்ப்புக்கு உட்படுத்திச் சரிப்படுத்திக் கொள்வதாக ஒப்புக் கொண்டன.

பிரிட்டனும் இட்டலியும் மேற்கு எல்லைக்கு உறுதியளித்தன; அதாவது, உடன்படிக்கைப்படி ப்ரான்ஸேனும் ஜெர்மனியேனும் நடக்கத் தவறினல் அவர்கள்மீது இராணுவ நடவடிக்கைகள் எடுத்து அவைகளை உடன்படிக்கையின் நிபந்தனைகளுக்குக் கட்டுப்படுமாறு செய்ய ஒப்புக்கொண்டன. இது கவலைக்கிடமான ஒரு பொறுப்பே; சிறப்பாக, ப்ரான்ஸ் படைப்பலம் மிகுந்தும் ஜெர்மனி படைப்பலமின்றியும் இருந்த நிலையில். ஆயினும், ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் நட்பை யுண்டாக்க இது ஒரு சிறந்த வழியாயிற்று. மேலும், இதனுல்தான் ஜெர்மனி சர்வதேசங்கள் சபையின் அங்கத்தினர்களுள் ஒன்ருயிற்று.

5. கெல்லாக் ஒப்பந்தம்[1] (1919). இது அமெரிகா ஐக்கிய நாடுகளின் முயற்சியால் நடந்தது. இதன்படி முக்கியமான நாடுகளெல்லாம் (ருஷ்யாவும் ஐக்கிய நாடுகளும் உள்பட) தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளப் போரை நாடாது எப்போதும் தங்களுக்குள் ஏற்படும் வேறுபாடுகளையெல்லாம் நடுநிலைத் தீர்ப்புக்கு விட்டுச் சரிப்படுத்திக்கொள்ளுவதென ஒன்றுக்கொன்று உறுதி கூறிக் கொண்டன.

ஆயினும், இதில் கையொப்பமிட்ட நாடுகள் பல முக்கியமான விதிவிலக்குகளை[2] ஏற்படுத்திக்கொண்டுதான் கையொப்பமிட ஒப்புக்கொண்டன. உதாரணமாக, நாட்டினரின் கௌரவத்தைப்[3] பாதிக்கும் விஷயங்களை நடுநிலைத் தீர்ப்புக்கு உட்படுத்துவதில்லை; இவ்வொப்பந்தம் மன்ரோ கொள்கைக்கு[4] முரணுக எதையும் பாதிக்கலாகாது என்பது ஐக்கியநாடுகளின் பிடிவாதம். (உண்மையில், இவ் வொப்பந்தம் கையொப்பமாய்க்கொண்டிருந்த அதே சமயத்தில் சங்கத்தின் அங்கமாயிருந்த நிக்காராகுவா நாட்டில் அமெரிகர் படைகள் போரிட்டுக்கொண்டிருந்தன. மேலும், அதே சமயத்தில்தான் ஐக்கியநாடுகள் துரைத்தனம் கடற்படைகளைப் பெருக்கிக்கொள்ள பெரிய திட்டமொன்றை வகுக்கத் தொடங்கியிருந்தது. ஒப்பந்தத்தில் அவர்களுக்கு எவ்வளவு நம்பிக்கை இருந்தது என்பதை இது காட்டுகிறது).

---

1. The Kellogg Pact. 2. Reservations. 3. 'National Honour.'
4. Monroe Doctrine.

கு, 246. போருக்குப்பின் பிரிட்டிஷ் நாடுகளின் பொதுநலப் பேரரசு[1].

'பேரரசு மாகாண அந்தஸ்து'[2] என்பது அரசியலில் முழச் சுயேச்சையினைக் குறிப்பதாகக் கருதப்பட்டபோதிலும், நாளுக்கு நாள் பொருளாதார ஒற்றுமையை[3] நாடும் போக்கு வளர்ந்து கொண்டு வருகிறது.

1919. பேரரசு மாகாணங்கள் சர்வதேசங்கள் சங்கத்தில் தனிப்பட்ட அங்கங்களாயின. 1927-ல் கானடாவின் பிரதிநிதி ஆலோசனை சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1921. பேரரசு மகாநாடு[4] (லாய்ட் ஜியார்ஜ் தலைமையில் கூடியது) கீழ்க் கண்டவாறு தீர்மானித்தது : 1. எவ்வித மான இணைப்பமைப்பும் வேண்டியதில்லை. முன்போலவே அப்போதைக் கப்போது மகாநாடுகள் நடைபெற வேண்டும். 2. பசிபிக் பெருங்கடலில் நாடுகளின் கடல் வன்மையைப்பற்றி[5] விவாதித்தது. (இவ்விவாதம் ஆஸ்ட்ரேலியா, கானடா, ஜப்பான், ஐக்கிய நாடுகள்—இவற்றின் கடல் வன்மையைப் பொறுத்தது.)

இதன் விளைவாக, 1902-ல் இங்லண்டுக்கும் ஜப்பானுக்கும் ஏற்பட்டிருந்த கடல்வன்மை உடன்படிக்கை[6] 1922-ல் மீண்டும் புதப்பிக்கப்பட்டது. 1922-ல வாஷிங்ட்டனில் நடைபெற்ற கடல் வன்மை மகாநாடு[7] பிரிட்டனும் அமெரிகாவும் ஜப்பானும் 5; 5: 3 என்ற விகிதத்தில் பெரும் போர்க்கப்பல்களை வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஒப்புக்கொண்டது.

1922. சானுக் நிகழ்ச்சி[8]. ஏஷியா மைனரிலுள்ள க்ரேக்கர்களைத் துருக்கியர் விரட்டி யடித்ததைத் தடுக்கப் பிரிட்டனுக்குத் துணைக்கு வரும்படி லாய்ட் ஜியார்ஜ் பேரரசின் மாகாணங்களை அழைத்தபோது (§340), தென் ஆபிரிகாவும் கானடாவும் அதற்கு ஆக்ஷேபித்தன.

இதனல் முன்னல் கலந்துகொள்ளாமல் போர்தொடங்கிவிட்டுப் பிறகு அதில் சேரும்படி அழைத்தலை அவர்கள் விரும்பவில்லை என்பது வெளியாயிற்று.

1923. ஹாலிபட் மீன்பிடிந்தல் உடன்படிக்கை[9].—இது ஐக்கிய நாடுகளுக்கும் கானடாவுக்கும் ஏற்பட்ட சில

1. The British Commonwealth of Nations. 2. Dominion Status.
3. Economic Unity. 4. Imperial Conference. 5. Naval Power.
6. Naval Treaty. 7. Naval Conference. 8. Chanaq Incident.
9. Halibut Fisheries Treaty.

தகராறுகளை முடிவு கட்டியது. இரு நாடுகளின் துரைத்தனங்களும் இதைத் தாமே பேசி முடித்துக் கொண்டன. வாஷிங்டனிலுள்ள பிரிட்டிஷ் ராயபாரி[1] இந்த உடன்படிக்கையில் அங்கீகாரக் கையெழுத்து இடுவதைக் கானடா தடுத்துவிட்டது.

லோக்கார்னோ உடன்படிக்கை கையொப்பமானபோது (1925) (கு. 245) பிரிட்டன் கொடுத்த உறுதியில் பேரரசு மாகாணங்கள் சம்பந்தப்படவில்லை எனக் குறிப்பிடப்பட்டது.

1924 முதல் சில பேரரசு மாகாணங்கள் வேற்றுநாடுகளின் தலைநகரங்களில் தத்தம் பிரதிநிதிகளை வைத்துக்கொள்ளுகின்றன; உ-ம், ஐரிஷ் சுயேச்சை நாடு வாஷிங்டனிலும் பாரிஸிலும் தன் பிரதிநிதிகளை வைத்துள்ளது; கானடா வாஷிங்டனிலும் பாரிஸிலும் டோக்கியோவிலும் தன் பிரதிநிதிகளை வைத்துள்ளது.

1926. பேரரசு மகாநாடு (பால்ட்வின் தலைமையில் கூடியது) 'பேரரசு மாகாண அந்தஸ்து' யாதென்பதை விவாதித்தது. ஜெனரல் ஹெர்ட்ஜாக்[2] தலைமையிலிருந்த தென் ஆபிரிகா துரைத்தனம் தனிப்பட்ட சுயேச்சை பெற்ற நாட்டந்தஸ்தினைத் தாம் கொண்டிருப்பதாகக் கூற விரும்பியதே இது அவசரமாகக் கூட்ட நேர்ந்ததன் காரணம். பால்பர் தலைமையில் ஆராய்வுக்குழு வொன்று நியமிக்கப்பட்டது, அக்குழுவின் அறிக்கையே வெஸ்ட்மினிஸ்டர் சட்ட[3]மாயிற்று (1931). இதன்படி பேரரசு மாகாணங்களின் சம அந்தஸ்து வற்புறுத்தப்பட்டது.

"பேரரசு மாகாணங்கள் பிரிட்டிஷ் பேரரசுக்குள் சுயேச்சை பெற்ற நாடுகள். அவை சம அந்தஸ்து பெற்றவை. பிரிட்டிஷ் நாடுகளின் பொதுநலப் பேரரசு அமைப்பின் தம்மிச்சையாகச் சேர்ந்துள்ள அங்கங்களாகவும் மன்னருக்குப் பணிவு பூண்டவைகளாகவும் அவை ஒற்றுமைப்பட்டிருந்த போதிலும், தத்தம் உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்களில் அவை எவ்வகையிலும் ஒன்றுக்கொன்று அடங்கவேண்டியவையல்ல."

கவர்னர் ஜெனரல் அரசரின் கடமைகளைச் செலுத்துவார். அவர் பிரிட்டிஷ் துரைத்தனத்தாரால் நியமிக்கப்படவேண்டியவரல்லர்.

உ-ம்., 1930-ல் மன்னர் ஆஸ்ட்ரேலியா துரைத்தனத்தின் யோசனையின்மேல் சர் ஈசாக் ஈசாக்ஸ்[4] என்ற ஒரு ஆஸ்ட்ரேலியரை ஆஸ்ட்ரேலியா கவர்னர் ஜெனரலாக்கினர். அயர்லண்டிலும் இதே முறையைக் கையாண்டனர்.

1. The British Ambassador, 2. General Hertzog. 3. Statute of Westminster. 4. Sir Isaac Isaacs.

பேரரசு மாகாணச் சட்டமெதையும் பிரிட்டிஷ் துரைத்தனமும் பார்லமென்டும் நீக்கிவைக்க முடியாது.

1926. ஒரு மாகாணங்கள் காரியாலயம்[1] ஏற்படுத்தப் பட்டது. இது குடியேற்றங்கள் காரியாலயத்தினின்றும் வேறுபட்டது.

பின் கூறிய காரியாலயம் மன்னரின் குடியேற்றங்கள்[3] விஷயங்களைக் கவனித்துக்கொண்டது. முற் கூறியது வெளிநாடுகள் காரியாலயத்தைப்போல்[4] தொடர்புவைத்துக்கொள்ளும் காரியாலயமே.[5]

1931. பேரரசு மகாநாடு (மாக்டானல்ட் தலைமையில்) உலகப் பொருளாதார சங்கடத்துக்குக் காரணமான அமெரிக வியாபார மந்தத்தின் பிறகு கூடியது. பேரரசுக்குள் வியாபாரத்தைத் தூண்டி மாகாணங்களின் நிலையைச் செவ்வைப்படுத்த முயன்றது.

சிறப்பாக, தன்னிடமிருந்த அதிக கோதுமையைப் பிரிட்டன் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கானடா கேட்டது.

ஆயினும், பிரிட்டனின் தொழிற்கட்சித் துரைத்தனம் அப்போது கருவூலமன்றத் தலைமையிலிருந்த ஸ்னோடென்[6] யோசனையைக் கேட்டுக் கட்டுப்பாடற்ற வாணிபத்தைக் கைவிட மறுத்தது. ஆகவே, மாகாணங்களின் சரக்குகளுக்கு மட்டும் குறைந்த வரிகள் விதிப்பதை அது ஒப்புக்கொள்ளவில்லை.

1932. பேரரசின் பொருளாதார மகாநாடு[7] (கானடா தலைமையமைச்சர் பென்னெட்டின்[8] தலைமையில்) ஆட்டாவாவில்[9] கூடியது. இதற்குள் பிரிட்டனில் தேசிய துரைத்தனம்[10] ஏற்பட்டிருந்தது (§ 344). ஆகவே, பிரிட்டனின் பிரதிநிதிகள் (பால்ட்வின் தலைமையில்) சலுகைச் சுங்கத் திட்டங்களைத்[11] தாராளமாக அமைத்துத் தந்தனர். மாகாணங்கள் தங்கள் ஆக்கத்தொழில்களைப் பிரிட்டனின் போட்டியினின்றும் பாதுகாக்க மிக்க ஊக்கமாக இருந்த போதிலும் பேரரசினுக்குள் ஒற்றுமைக்கும் பண்டமாற்றலுக்கும் அடிகோலப்பட்டது.

---

1. Dominions Office. 2. Colonial Office. 3. Crown Colonies.
4. Foreign Office. 5. Negotiating Department. 6. Snowden.
7. Imperial Economic Conference. 8. Bennett. 9. Ottawa.
10. National Government. 11. Preferences.

அயர்லண்டுடன் ஏற்பட்ட ஒரு தகராறு காரணமாக இதற்குத் தடங்கல் தோன்றியது. இந்தத் தகராறு ஐரிஷ் மக்களிடமிருந்து வரவேண்டிய வட்டித்தொகை சம்பந்தமாக ஏற்பட்டது. இரு நாடுகளும் ஒன்று மற்றொன்றின் சரக்குகளின் மீது தனித்தீர்வைகள் விதித்துக்கொண்டன. இவற்றால் பிரிட்டனுக்குக் கெடுதல், அயர்லண்டுக்கு அழிவு. ஆயினும், டிவலேரா, ஐரிஷ் குடியரசின் தலைமை யமைச்சர்[1], வெளிநாட்டு வாணிபத்தை எதிர்பார்க்காது அயர்லண்டைத் தன்னளவிலேயே பொருள்வளம் பெற்றதாகச் செய்து விடலாமென்று நம்புகிறார்.

## கு. 247. போருக்குப்பின் இயற்றப்பட்ட சட்டங்கள்.

**1918.** பார்லமென்ட் சீர்திருத்தச் சட்டம்[2] இருபத்தொன்றுக்கு மேற்பட்ட வயதுள்ள ஆண்மக்கள் அனைவருக்கும் முப்பதுக்கு மேற்பட்ட வயதுள்ள பெண்மக்கள் அனைவருக்கும் ஓட்டுரிமை அளித்தது.

இதனால் ஓட்டுரிமையுள்ள ஆண்மக்களின் தொகை 1,30,00,000 மும், ஓட்டுரிமையுள்ள பெண்மக்களின் தொகை 90,00,000 மும் ஆயின. பெண்கள் பார்லமென்ட் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பெறலாம். முதல் முதலாகப் பார்லமென்ட் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற பெண் லேடி ஆஸ்டர்[3] (1919).

**1926.** மின்சாரமளித்தல் சட்டம்[4] நாடெங்கும் மின்சாரமளித்தற்கான ஒரு திட்டத்தை வகுக்க ஒரு மின்சார சபையை[5] ஏற்படுத்தியது.

போருக்குப்பின் ஏற்பட்ட பல பிரிட்டிஷ் திட்டங்களைப்போல இதுவும், தனிப்பட்ட நபர்களின் முதலைக்கொண்டு நடைபெற்ற போதிலும், பொதுமக்கள் நன்மையை முன்னிட்டு இது துரைத்தனத்தின் மேல்பார்வையைப் பெற்றிருந்தது.

**1927.** தொழில் தகராறுகள் சட்டம்[6] (§342-ஐப் பார்க்க).

தியானப் புத்தகத் திருத்தம்.[7] 'ஹைசர்ச்'[8] கொள்கையினர் (கு. 216) கருத்துக்களுக்கிணங்க 'கான்வொகேஷன்'[9] சில ஆண்டுகளாகவே பொதுத் தியானத்தில் சில விருப்ப மாறுதல்களைச்[10] செய்துகொடுத்துக்கொண்டிருந்தது. 1927-ல் மேற்சொன்ன விருப்பமாறுதல்களோடு கூடியிருந்த தியான புத்தகத்தைப் பார்ல

---

1. Premier. 2. Reform Act. 3. Lady Astor. 4. Electricity (Supply) Act. 5. Electricity Board. 6. Trade Disputes Act. 7. Prayer Book Revision. 8. 'High Church.' 9. Convocation. 10. Option changes.

மென்ட் தள்ளிவிட்டது. (உள்நாட்டுப் போர்[1] நடந்த சமயத்தி லிருந்தது போலவே இது இப்போதும் எதிர்ப்புமதப்போக்கினை யுடையதாகவே இருந்தது). 1928-ல் சிறிது திருத்தி யமைக்கப் பட்ட மற்றொரு தியான புத்தகமும் தள்ளிவிடப்பட்டது.

1928. சம ஓட்டுரிமைச் சட்டம்[2] பெண்களுக்கும் ஆண் களுக்குப் போலவே ஓட்டுரிமை வழங்கியது.

பிரிட்டிஷ் குடியரசு அமைப்பு முழுவளர்ச்சி யுற்றது. சில பத்திரிகாசிரியர்கள் இதைக் 'குட்டிகள் ஓட்'[3] என்று பரிகசித் தனர். இதனுல் ஓட்டுரிமையுள்ள ஆண்களின் தொகை 1,50,00,000 மும். ஓட்டுரிமையுள்ள பெண்களின் தொகை 1,30,00,000 மும் ஆயின.

1931. வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம்[4] (கு. 246-ஐப் பார்க்க).

---

1. Civil War. 2. Equal Franchise Act. 3. 'The Flapper Vote.' 4. Statute of Westminster.

# பின்னுரைக்கான பரிக்ஷை வினாக்கள்

## (1914—1934)

1. உலகப்போரில் ப்ரான்ஸும் பெல்ஜமும் தவிர மற்ற போர் முனைகளில் பிரிட்டனின் இராணுவ நடவடிக்கைகளை விவரியுங்கள்.

2. நெப்போலியனோடு செய்த போரின் முடிவில் பிரிட்டிஷ் பேரரசுக்கிருந்த மதிப்பையும் செல்வாக்கையும் உலகப் போரின் முடிவில் அதற்கிருந்தவைகளோடு ஒப்பிடுங்கள்.

3. உலகப் போரைக் கடல் வன்மை எவ்விதம் பாதித்தது?

4. 1. நாட்டுப்புறங்களிலுள்ள தொழிலாளர்கள், 2. பட்டணங்களிலுள்ள தொழிலாளர்கள் 1900-லிருந்ததைவிட இப்போது நன்றாயிருக்கிறார்களா?

5. உலகப் போரில் கடல் வன்மை சாதித்ததென்ன?

6. இப்போரில் நடு வல்லரசுகள் ஏன் தோற்றன?

7. வெர்சாயி உடன்படிக்கையின் திட்டங்களைக் கூறுங்கள்.

8. 1922-வரை லாய்ட் ஜியார்ஜின் வாழ்க்கை வரலாற்றை வரையுங்கள்.

9. 1914-க்குப் பின் அயர்லண்டிலும் ஈஜிப்டிலும் இந்தியாவிலும் நாட்டுணர்ச்சி வளர்ந்த விதத்தை ஒப்பிடுங்கள்.

10. 'பேரரசு மாகாண அந்தஸ்து' என்பதென்ன? 1914-க்குப் பின் எப்படி இத்தொடர்மொழியின் பொருள் பெருகியுள்ளது?

11. விக்டோரியா காலத்தில் வளத்தை யுண்டாக்கிய கட்டுப்பாடற்ற வாணிப முறைக்குப் பிரிட்டன் திரும்பியதன் காரணமென்ன?

12. பிரிட்டனின் சமூக வாழ்க்கையைப் போர் எவ்விதம் பாதித்தது?

13. மற்றொரு யூரோப்பிய போர் நேராத வண்ணம் பாதுகாப்புக்கள் தேட என்ன முயற்சிகள் செய்யப்பட்டன?

14. சமாதான உடன்படிக்கைகளில் 'பதினான்கு குறிப்புக்க'ளுள் எவை எவ்வளவில் இடங்கொண்டன?

15. போரினால் பிரிட்டிஷ் பேரரசு எவ்வாறு பாதிக்கப்பட்டது?

16. சர்வ தேசங்கள் சங்கம் தான் எந்த நோக்கங்களுக்காக ஏற்படுத்தப்பட்டதோ அவற்றை எவ்வளவில் நிறைவேற்றியது?



---

